# ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*







பேராசிரியர் தன் நூல்களுக்களித்த

# முன்னுரைகள்

## தொகுப்பு



பேராசிரியர் தன் நூல்களுக்களித்த

# முன்னுரைகள்

## தொகுப்பு

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இத்தொகுப்பில் பேராசிரியர் முனைவர் ந.சுப்பு ரெட்டியார்
அவர்களின் 76 சிறந்த நூல்களின் முன்னுரைகள் தொகுக்கப்பட்டுள்ளன.
ஒவ்வொரு நூலும் ரெட்டியாரின் பன்முக ஞானத்தின் பிரதிபலிப்பாகத்
திகழ்வது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு முன்னுரையிலும் அந்தந்த
நூலின் உட்பொருளின் சுருக்கத்தைத் தருகிற
பாங்கு நூலை வாசிக்கும் ஆர்வத்தை அதிகரிக்கிறது
என்பதே இந்நூலின் பெரு வெற்றியாகும்.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939835-2-2




eBOOK ~ மின் நூல்

# KR Srinivasa Iyengar
(Father of Indian Writing in English)

Shri KR Srinivasa Iyengar was an Acharya in the great Indian tradition. After teaching in Valvettiturai (Sri Lanka), Belgaum and Bagalkot, he moved to Andhra University, Waltair, Andhra Pradesh in 1947 as Professor of English, and was Vice-Chancellor during 1966-1968. Elected Vice-President, Sashitya Akademi in 1969, he retired as acting President in 1978. Recipient of the Sahitya Akademi Award, the BC Roy Award and the Kalidas Nag Award, he was elected Fellow of the Sahitya Akademi in 1985. Widely traveled in India and abroad, he was visiting Professor of English at the University of Leeds in 1959, and received the Doctor of Letters, *honoris causa,* from Sri Venkateswara and Andhra Universities.

Dr Iyengar was a scholar and prolific writer. His works include the standard biographies of Sri Aurobindo, and the Mother of Sri Aurobindo Ashram and the critical studies of Lytton strachey, GM Hopkins, Shakespeare and Francois Mauriac. Some of his learned articles have been collected in the *The Adventure of Criticism, Mainly Academic, Dawn to Greater Dawn and Two Cheers for the Commonwealth*. His authoritative and comprehensive *Indian Writing in English* reveals his strivings as the founder of a new discipline in Indian letters. He made his mark as a translator too and has rendered into English Basaveswara, Tiruvalluvar and Tirumoolar. His translaltion of Valmiki's *Sundara Kanda* has been published as *The Epic Beautiful.*

It was in the seventies that Prof Iyengar turned to writing serious poetry. Apart from anthologies of short poems like *Tryst with the Divine*, he also wrote the epics *Sitayana, Sati Sapthakam* and the *Bhagavata*-inspired *Krishna Geetam*.

**கலைமாமணி ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன், எம்.ஏ.,**
***ஆசிரியர் 'கவிதை உறவு' இலக்கிய மாத இதழ்***

**சென்னை**
**27 ஜூன் 2019**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

# அணிந்துரை

எந்த நூலாக இருந்தாலும் நூலின் உட்பொருளோடு இன்றியமையாத மூன்று (கூறுகள்) உரைகள் நூலை அணி செய்வது இயல்பு. எழுதியவர் தாம் என்ன எழுதியிருக்கிறோம் என்பது குறித்து அறிமுக உரையாகச் சில செய்திகளை நம்மோடு பகிர்ந்து கொள்வார். அதற்கு முன்னுரை (Preface) என்று பெயர்.

இரண்டாவதாக, நூலின் சிறப்பை அறிஞர் ஒருவர் ஆய்ந்தறிந்து அதில் தாம் ரசித்ததைப் பாராட்டி நூலின் வாசிப்பைத் தூண்டுவார். நூலுக்கும் தம் பங்குக்குப் பாராட்டுரையால் அணிசேர்ப்பார். அது அணிந்துரை (Foreward) எனப்படும். நூல் வெளியான பிறகு இதழ்களிலும், ஊடகங்களிலும், நண்பர்களின் கடிதங்களிலும் பெறப்படுகிற கருத்து மதிப்புரை (Review) என்பதாக அமையும்.

இந்த மூன்று உரைகளும்தான் எந்த நூலையும் முழுமையடையச் செய்கின்றன. முன்னுரையில் நூலாசிரியர் தாம் குறிப்பிட்ட அந்த நூலை எழுதுவதற்கான காரணம், நூலுக்கான அனுபவங்கள், செய்திகள் யாவும் எங்கிருந்து கிடைத்தன, தமது இலக்கு என்ன என்பதை விவரிக்க எதிர்ப்பார்க்கப்படுவார். நூலுக்குள் நுழைவதற்கு முன் எந்த வாசகனும் முன்னுரையையும், அணிந்துரையையும் வாசித்து வாசித்துவிடுவான் என்பதாலேயே அவை மிகவும் இன்றியமையாதவையாகிவிடும்.

அணிந்துரைகளின் தொகுப்பைக் கேள்விப்பட்டிருக்கிறோம். அதுபோல மதிப்புரைகளும் தொகுப்பாக மட்டுமல்ல அடுத்தடுத்த பதிப்புகளிலும் வெளிவரக்கூடும். ஆனால் முன்னுரைகளே ஒரு முழுமையான தொகுப்பாக வெளிவருவதை நான் இப்போதுதான் கேள்விப்படுகிறேன். முன்னுரைகளுக்கான எதிர்ப்பார்ப்பை சுருக்கமாகவும், சுவையாகவும் சொல்வது கூட ஒருவகையான திறமைதான் என்று சொல்ல வேண்டும். வாசிக்கும் ஆர்வத்தைத் தூண்டுகிற சுவையான முன்னுரை கூட திரைப்படங்கள் வெளிவருவதற்கு முன்னால் வருகிற முன்படக்காட்சி (Teaser) என்றும் கொள்ளலாம்.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

நான் பெரிதும் மதிக்கிற பேராசிரியர் முனைவர் ந.சுப்பு ரெட்டியார் அவர்கள் மிகச் சிறந்த தமிழறிஞர். படித்தவர். படித்துத்தந்தவர் என்பதோடு படைத்தும் சிறந்தவாராகத் தமிழுக்குப் பெருந்தொண்டாற்றியவர். அவரது பன்முக ஆற்றல் கண்டு பெரிதுவந்து வியக்கிற பல்லோரில் நானும் ஒருவன். திருப்பதி வேங்கடவன் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர், பண்பாளர்.

எளிய வேளாண் குடியில் பிறந்து தம் முயற்சியால் பயின்று பேராசிரியராக உயர்ந்து பல்வேறு பல்கலைக் கழகங்களில் சிறப்புநிலை பேராசிரியராகத் திகழ்ந்தவர். படிப்பாளர், படைப்பாளர், பேச்சாளர் என்ற ஆற்றல்களோடு 'நல்ல' என்னும் அடைமொழியும் பெற்றவர். ஏறத்தாழ 136 நூல்களைப் படைத்த பெருமைக்குரியவர்.

அவர் எழுதியவற்றுள் சிறந்த சில நூல்களைத் தேர்ந்து அவற்றிற்கு அவர் தந்த அழகிய முன்னுரைகளை அவரது அன்புத் திருமகனார் பேராசிரியர் சு.இராமலிங்கம் அவர்கள் நூலாகத் திரட்டித் தந்திருப்பது தந்தையின் நூல்களின் கணக்கை அதிகரிக்க அல்ல; அவரது படைப்பின் கனத்தைப் புலப்படுத்தவே எனலாம்.

அவரவர் எச்சத்தால் காணப்படும் என்று வள்ளுவன் கூறும் தகைமையைத் தம் தந்தையிடம் கண்டதைத் தமையன் நூலாகத் தந்திருப்பதில் மகன் தந்தைக்காற்றிய உதவி மட்டுமல்ல; தமிழுக்காற்றியுள்ள நன்றியாகவும் கருதிப் பாராட்டத் தோன்றுகிறது.

இத்தொகுப்பில் போராசிரியர் முனைவர் ந.சுப்பு ரெட்டியார் அவர்களின் 76 சிறந்த நூல்களின் முன்னுரைகள் தொகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு நூலும் ரெட்டியாரின் பன்முக ஞானத்தின் பிரதிபலிப்பாகத் திகழ்வது குறிப்பிடத்தக்கது. தமிழ், இலக்கியம், ஆன்மிகம், அறிவியல், இளைஞர்நலம், போற்றுதற்குரிய பெரியோர்தம் பெருமை, சமூகப் பிரச்னை, பயணம் என்று போராசிரியர் தாம் பெற்றுத் தன்னுள் போற்றிப் பெருக்கி வைத்துள்ள பேரறிவுப் பெட்டகம் நிரம்பி வழிகிறது. ஒவ்வொரு முன்னுரையிலும் அந்தந்த நூலின் உட்பொருளின் சுருக்கத்தைத் தருகிற பாங்கு நூலை வாசிக்கும் ஆர்வத்தை அதிகரிக்கிறது என்பதே இந்நூலின் பெரு வெற்றியாகும்.

எந்த நூலை வாங்கினாலும் ஒருமுறை அதைப்படித்துவிடுவது என்கிற பேரார்வம் தம்மிடம் இருப்பதாகப் பெருமையுறும் பேராசிரியர் "நூல்களை முழுமையாகப் படித்து முடித்த பின் தாம் பெற்ற ஆங்கிலக் கல்வி, அதற்கான செலவு, காலம் குறித்து நோக்கின் அதன் விளைவாகப் பெற்ற அறிவு மிகக் குறைவாக இருப்பதாகக் கருதுவதாகவும், ஆங்கிலம் பயில்வதற்குச் செலவழித்த காலத்தைத் தமிழுக்குச் செலவழித்திருப்பேயானால் எவ்வளவோ புலமையை அடைந்திருக்கலாம்" என்று குறிப்பிடுகிறார்.

பொதுவாக இலக்கியத்தில் ஒரு சுவையையும் குறிப்பாகச் சங்க இலக்கியத்தில் ஒரு விருப்பத்தையும் ஊட்டிவிட்டால் எவரும் அவற்றை விரும்பிப் படிப்பார்கள் என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று என்றும் அவர் அழுத்தமாகச் சொல்கிறார். ‘‘அதன் விளைவாகவே தாம் படித்து அனுபவித்த பாக்களில் சிலவற்றை அவ்வப்போது சிறு சிறு கட்டுரைகளாக எழுதிப் போட்டிருந்தேன்’’ என்கிறார். அவற்றின் தொகுப்பே அவரது நூல்கள் என்றால் அந்நூல்களின் முன்னுரைகளே இத்தொகுப்பு.

‘‘அறிவியல் பயிற்றும் முறை’’ என்று ஒரு நூல். ‘‘பயிற்றிப் பல கல்விதந்து இந்தப் பாரை உயர்த்திட வேண்டும்’’ என்ற பாரதியின் பாட்டுவரிகளோடு தொடங்கும் முன்னுரையில்,

‘‘எந்த மொழியிலும் அதன் வாயிலாகப் பொருள்களை விளக்க முயன்றாலன்றிப் புதிய கலைகட்கு வேண்டிய சொற்களும், தொடர்மொழிகளும் அமைவதில்லை’’ என்று குறிப்பிடும் பேராசிரியர் தமிழ் பயிற்றும்முறை எனும் நூலில் புதிய சொற்களை உருவாக்குதல் குறித்த தமது கருத்தை அழுத்தமாகப் பதிவு செய்கிறார். ஒன்பது ஆண்டுகள் உயர்நிலைப்பள்ளியில் தலைமை ஆசிரியராக இருந்தபோது அறிவியல் பயிற்றுவித்தலும், பத்து ஆண்டுகள் பயிற்சிக் கல்லூரியில் பெற்ற அனுபவமும் தமக்குப் பெரிதும் உதவியதாகவும் குறிப்பிடுகிறார் அவர்.

‘இல்லறநெறி’ என்ற நூலின் முன்னுரையில் மணவாழ்வு என்பது இருவர் இணைந்து இன்பம் துய்ப்பதற்கானது என்பதற்கப்பால் ‘‘திருமண வாழ்வினை பெற்றோர்கள் சிறப்புறத் துய்ப்பதனால் பல பெரிய கடமைகள் தாமாக நிறைவேறுகின்றன. மானிட இனம் வாழையடி வாழையாக வளர்ச்சியுறுகிறது’’ என்று வாழ்வியல் நெறி புகட்டுகிறார். 50 கடிதங்கள் வாயிலாக இல்லறம் காணும் நம்பி, நங்கையர்க்கு அவர் வழங்கிய அறிவுரையே இந்நூல்.

தமிழை எவ்வாறு பயிற்றுவிக்க வேண்டும் என்பதறகாக ஒரு நூல் தந்துள்ள பேராசிரியர் அவர்கள் அந்நூலில் தம் முன்னுரையில் தம் விடையினைச் சுருக்கமாகப் பதிவு செய்துள்ளார். இலக்கிய நூல்கள் என்ற வகைப்பாட்டில் கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, முத்தொள்ளாயிர விளக்கம், கம்பனில் மக்கள் குரல், தமிழ் இலக்கியங்களில் அறம் நீதி முறைமை, இலக்கிய வகையின் வளர்ச்சியும், இக்கால இலக்கியங்களும், வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள் போன்றவையும்,

சமகால இலக்கியங்களில் புதுவை(மை)க் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் ஒரு கண்ணோட்டம், பாரதீயம், குயில்பாட்டு ஒரு மதிப்பீடு, வாழும் கவிஞர்கள், பாவேந்தரின் பாட்டுத்திறன், கவிமணியின் தமிழ்ப்பணி ஒரு மதிப்பீடு, பாண்டவர்பூமி ஒருமதிப்பீடு போன்ற நூல்களும், சமய நூல்களின் வரிசையில் ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், வடநாட்டுத் திருப்பதிகள்,

சோழநாட்டுத் திருப்பதிகள்—1, சோழநாட்டுத் திருப்பதிகள்—2, வைணவ உரைவளம், ஆழ்வார்கள் ஆரா அமுது, சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம், அண்ணல் அனுமன், பட்டினத்தடிகள், இராமலிங்க அடிகள், மூவர் தேவாரம், வைணவ புராணங்கள் போன்ற நூல்களும்,

பொதுவகை நூல்களில் பல்சுவை விருந்து, கல்வி உளவியல், இளைஞர் தொலைக்காட்சி, போன்ற சில நூல்களும், பேராசிரியரின் அமெரிக்கப் பயணமும் அடங்கும். ஒவ்வொரு நூலுக்கும் அவர் தந்துள்ள முன்னுரைகளை வாசிக்கும்போது நமக்கு நூலையும் வாங்கிப் படிக்க வேண்டும் என்கிற பேரார்வம் பிறக்கும்.

பேராசிரியர் தம் நூல்களுக்குத் தாம் வழங்கியுள்ள முன்னுரைகளில் அந்நூல்களுக்கு தாம் பெற்ற அணிந்துரைகளை அகமகிழ்ந்து எழுதிய பேராசிரியர்கள், நீதியரசர்கள், அருளாளர்கள், கல்வியாளர்கள், நண்பர்கள், அலுவலர்கள் எல்லோருக்கும் தக்க இடங்களில் தம் நன்றியறிதலைப் புலப்படுத்தியுள்ளார்.

பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் அவர்களின் முன்னுரைகளைத் தொகுத்தளித்திருப்பதன் மூலம் அவரது திருமகனார் பேராசிரியர் சு.இராமலிங்கம் அவர்கள் வள்ளுவன் பாடினாற்போல் ‘தந்தைக்கு ஆற்றிய உதவி’யாக மட்டுமல்ல பாரதி பாடியவண்ணம் ‘இம்மாநிலம் பயனுறப்’ பகுத்துத் தந்ததாகவும் எனக்குப்படுகிறது.

இலக்கியக் குவியலாகப் பொலியும் இந்நூல் போற்றுதற்குரியது, பாராட்டிற்குரியது. படைத்த தந்தையையும், நம்மோடு பகிர்ந்து கொள்ளும் திருமகனாரையும் நான் வணங்கி மகிழ்கிறேன். நெஞ்சமினிக்க வாழ்த்தியும் நிறைகிறேன். பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் அவர்களின் புகழ் நூறாண்டுதாண்டி நாடோறும் பரந்து பரவி ஆயிரமாயிரம் ஆண்டுகள் பொலிந்து சிறக்கப் பிரார்த்திக்கிறேன்.

என்றும் அன்புடன்,

ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன்

# பதிப்புரை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார் அவர்கள் எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று, ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர். பல பல்கலைக் கழகங்களில் சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி, நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர். பல ஆய்வாளர்களை உருவாக்கியவர். வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர். 136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016) 108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும் மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது. பேராசிரியரின் நூற்றாண்டில் (2015-2016) நூற்றாண்டுக்குழு தமிழகமெங்கும் நடத்திய 108 நிகழ்வுகள் அகில இந்திய சாதனையாக அங்கீகரிக்கப் பெற்றுள்ளன. நூற்றாண்டில் பேராசிரியரின் தமிழ்த்திறத்தையும், அறிவுநுட்பத்தையும் வெளிக்கொணரும் பொருட்டு பன்னிரெண்டு நூட்கள் வெளியிடப்பெற்றன. அவரது 100 நூல்கள், இந்திய அரசு நல்கிய ISBN எண்களுடன், மின் நூல்களாக மாற்றப்பெற்று http://tinyurla.com/y7n2z8pe என்ற இணைதளத்தில் அனைவரும் பதிவிறக்கம் செய்யும் வகையில் அமைக்கப்பெற்றுள்ளன.

பேராசிரியரின் படைப்பான "*கவிஞர் வாலியின் இராமாநுஜ காவியம் - ஒரு மதிப்பீடு*" எனும் நூலை பேராசிரியரின் நூற்றாண்டிற்குப் பின்பும் (102வது), இராமாநுஜரின் ஆயிரமாண்டிற்குப் பின்பும் (1002வது), நூற்றாண்டுக்குழு 2018ல் வெளியிட்டது.

பேராசிரியரின் நூட்களை அடித்தளமாக்கொண்டு சுமார் 15 முதுகலைப்பட்ட மாணாக்கர்கள், ஆய்வியல் நிறைஞர்கள் மற்றும் முனைவர் பட்ட ஆய்வாளர்கள் பல்வேறு பல்கலைக் கழகங்களில் ஆய்வு மேற்கொண்டு வருகின்றனர். இவ்வாய்வாளர்களை ஊக்குவிக்கும் நோக்கில், ந சுப்பு ரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை NSR100 Kamatchi Ammal Fellowship மற்றும் NSR100 Research Fellowship வழங்கி வருகின்றது.

பேராசிரியர் தம் நூல்களுக்குத்தளித்த முன்னுரைகள் மிகவும் சிறப்பு வாய்ந்தவை. நூலின் சுருக்கம், நூல்கள் எழுதப்பெற்ற காரணங்கள், எழுதிய பின்பு கிடைத்த அநுபவங்கள், பிறர் மூலமாக கிடைக்கப் பெற்ற உதவிகள், ஊக்கங்கள், தடைகள், நூலின் மூலமாக மாணாக்கர்கட்கும், ஆசிரியர்கட்கும், ஆராய்ச்சியாளர்கட்கும் கிடைக்கும் பயன்கள் ஆகியவற்றை தன்னகத்தே கொண்டு விளங்குகின்றன இம்முன்னுரைகள். ஆராய்ச்சியாளர்கள் மற்றும் பிற தமிழறிஞர்கள் பயன்பெறும் நோக்கத்துடன், சில முன்னுரைகள் தெரிவு செய்யப்பெற்று தொகுத்து இந்நூலில் வழங்கப்பெற்றுள்ளன. இம்முன்னுரைகள் படிப்போரை அக மகிழ்விக்கும் என நம்புகிறோம்.

நூற்றாண்டுக்குழு

# முன்னுரைகள்
## உள்ளடக்கம்

| 045 | | பாட்டுத் திறன் |
|---|---|---|
| 046 | 1989 | நினைவுக் குமிழிகள் - 2 |
| 047 | | நினைவுக் குமிழிகள் - 3 |
| 048 | | சடகோபன் செந்தமிழ் |
| 049 | 1990 | நினைவுக் குமிழிகள் - 4 |
| 050 | 1991 | புதுவை(மை)க்கவிஞர்<br>சுப்பிரமணிய பாரதியார்<br>ஒரு கண்ணோட்டம் |
| 051 | 1992 | பரகாலன் பைந்தமிழ் |
| 052 | 1993 | வாய்மொழியும் வாசகமும் |
| 053 | 1994 | அர்த்த பஞ்சகம் |
| 054 | | நவவித சம்பந்தம் |
| 055 | 1997 | இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும் |
| 056 | 1998 | வாழும் கவிஞர்கள் |
| 057 | 1999 | நீங்காத நினைவுகள் - 1 |
| 058 | 2001 | பாவேந்தரின் பாட்டுத்திறன் |
| 059 | | தந்தை பெரியார் சிந்தனைகள் |
| 060 | | சைவசித்தாந்தம் - ஓர் அறிமுகம் |
| 061 | | தாயுமானவர் |
| 062 | | சைவமும் தமிழும் |
| 063 | | அறிவியல் நோக்கில்<br>இலக்கியம், சமயம், தத்துவம் |
| 064 | 2002 | கவிமணியின் தமிழ்ப் பணி<br>ஒரு மதிப்பீடு |
| 065 | | பாண்டவர் பூமி<br>ஒரு மதிப்பீடு |
| 066 | | பல்சுவை விருந்து |
| 067 | | பாண்டியன் பரிசு<br>ஒரு மதிப்பீடு |
| 068 | | தமிழில் அறிவியல் செல்வம் |
| 069 | 2003 | அண்ணல் அநுமன் |
| 070 | | பட்டினத்தடிகள் |
| 071 | | இராமலிங்க அடிகள் |
| 072 | | மூவர் தேவாரம் –புதிய பார்வை |
| 073 | | வைணவ புராணங்கள் |
| 074 | 2004 | வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள் |
| 075 | | காஞ்சி பிரதிவாதி பயங்கரம்<br>அண்ணங்கராச்சாரிய சுவாமிகள் |
| 076 | | என் அமெரிக்கப்பயணம் |

# கவிஞன் உள்ளம்

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

**பி.ஸ்ரீ. தன் முன்னுரையில்: (1949ல்)**
“புரட்சிகரமான மாறுதல்களிலும் பொற்சரடுபோல் சங்ககாலத் தமிழ்ப் பண்பு ஊடுருவிக்கிடக்கும் என்பதையும் சுட்டிக்காட்டுகிறார்.
இந்த ஆசிரியரின் தமிழ் நடை காலத்திற்கு இசைந்து வளர்ந்து வரும் நடைதான். வளரும் தமிழில் மலரும் இலக்கியத்திற்கு உரிய நடை.”


ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939835-4-6


eBOOK ~ மின் நூல்



## ஆக்கியோன் முகவுரை.

1941-ம் ஆண்டு ஜூன் திங்கள் பள்ளித்தலைமை ஆசிரியன் பதவியை ஏற்றவுடன் யான் செய்ய வேண்டிய பல வேலைகளில் பள்ளி நூல் நிலயத்தை நிறுவ வேண்டியதும் ஒன்றாக இருந்தது. புதிய பள்ளியாதலால், ஆராய்ந்து எல்லாவித நூல்களையும் வாங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஏற்படவே, கவிஞர் பாரதியார் நூல்களையும் வாங்கினேன்.

எந்த நூல்களை வாங்கினாலும் ஒரு முறை அவற்றைப் படித்து விடுவது என்ற வழக்கத்தை யான் மேற்கொண்டிருக்கிறேன். ஆகவே, பாரதியார் நூல்களை முழுவதும் படிக்கத் தொடங்கினேன். அதற்கு முன்னதாகவே பாரதியாரின் பாடல்களில் சிலவற்றைக் கேட்டிருக்கிறேன். என்றாலும், அவரது நூல்கள் முழுவதையும் படிக்கும் பேறு அப்போதுதான் கிடைத்தது. அதற்கு முன்னர் யான் தமிழ் நூல்களை ஆசையாகப் படித்ததில்லை. ஆங்கிலக் கல்வியில் ஆழ்ந்திருந்ததாலும், விஞ்ஞானம், கணிதம் போன்ற துறைகளில் ஆர்வமிக்கிருந்ததாலும் தமிழை நன்கு படிக்கும் வாய்ப்பு கிடைக்கவே இல்லை.

பாரதியாரைப் படிக்கும் போது அவரது சுயசரிதையைக் கூறும் பாடல்கள் எனது உள்ளத்தைத் தொட்டன; அவை எனது வாழ்க்கையையும் போக்கையும் மாற்றி விட்டன என்று சொன்னாலும் பொருந்தும். இக்கால ஆங்கிலக் கல்வியைக் கற்போரைப் பற்றிக் கூறும்,

> "கணிதம் பன்னிரண் டாண்டு பயில்வர், பின்
> கார்கொள் வானிலோர் மீனிலை தேர்ந்திலார்;
> அணிசெய் காவிய மாயிரங் கற்கினும்
> ஆழ்ந்தி ருக்கும் கவியுளம் காண்கிலார்;

வினைக ளும்பொரு ளாலும் பிதற்றுவார்;
வாழு நாட்டிற் பொருள் கெடல் கேட்டிலார்;
துணியு மாயிரஞ் சாத்திர நாமங்கள்
சொல்லு வாரெட் டுணைப்பயன் கண்டிலார் ”

என்ற கவிதை யான் பெற்ற கல்வியைப் பற்றி நினைக்கும்படி செய்தது. சிந்தித்துப் பார்த்தேன். செலவு செய்த பணத்தையும், காலத்தையும் நோக்க, யான் அடைந்த அறிவு மிகக் குறைவாகவே இருந்ததைக் கண்டேன். ஆங்கிலம் பயில்வதற்குச் செலவழித்த காலத்தைத் தமிழுக்குச் செலவு செய்திருப்பேனேயானால், எவ்வளவோ புலமையை அடைந்திருக்கலாம் என எண்ணினேன். ஆசிரியர் பணியில் இருந்து கொண்டே தமிழ் நூல்களைப் பயிலலாம் என்ற அமைதி கொண்டேன். பாரதியாரின்

'கம்ப னென்றொரு மானிடன் வாழ்ந்ததும்,
காளி தாசன் கவிதைபு னைந்ததும்,
உம்பர் வானத்துக் கோளையு மீனையு
மோர்ந்த ளந்ததோர் பாஸ்கரன் மாட்சியும்,
நம்ப ருந்திற லோடொரு பாணினி
ஞால மீதில் லக்கணங் கண்டதும்,
இம்பர் வாழ்வி னிறுதிகண் டுண்மையின்
இயல்பு ணர்த்திய சங்கர னேற்றமும்,

சேரன் தம்பி சிலம்பை யிசைத்ததும்
தெய்வ வள்ளுவன் வான்மறை செய்ததும்,
பாரில் நல்லிசைப் பாண்டிய சோழர்கள்
பார ளித்ததும் தர்மம் வளர்த்ததும்,

பேர ருட்சுடர் வாள்கொண் டசோகனர்
பிழை பட்டது புவித்தலங் காத்தும்
வீரர் வாழ்ந்த மிலேச்சர்தந் தீயகோல்
வீழ்த்தி வென்ற சிவாஜியின் வெற்றியும்,

அன்ன யாவும றிந்திலர் பாரதத்
தாங்கி லம்பயில் பள்ளியுட் போகுநர்"

என்ற பாக்கள் என்னைத் தமிழ்ப் படிக்கத் தூண்டின. கடந்த எழாண்டுகளாகவே, ஒழிந்த நேரங்களில், யான் தமிழ் இலக்கியங்களை முறையாகப் படித்து வருகிறேன்.

காவியப் போக்கிலும் கருத்து வளத்திலும் கம்பன் எனது மனதைக் கவர்ந்ததுபோல் வேறு யாரும் கவரவில்லை. இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம் இராஜ நடையில் கம்பீரமாகச் செல்லுவதை அறிந்தேன். "நவில் தொறும் நூல் நயம்போலும்" என்ற உண்மையை வள்ளுவனிடத்தில்தான் காணமுடிந்தது. ஓதற்கெளிதாயும் உணர்தற்கரிதாயுமிருப்பதை திருக்குறளில் தான் கண்டேன்.

பிற்காலத்து இலக்கியங்கள் உயர்வு நவிற்சியணிகள் செறிந்து சிந்தனைக்கு விருந்தாக இருந்தன. பிறகு சங்க இலக்கியங்கள்மீது எனது நாட்டம் சென்றது. தமிழ்மொழியின் உண்மை இயல்பையும், அதன் பெருமையையும், பழந்தமிழர்களின் சீரிய வாழ்க்கை முறைகளையும், சங்க இலக்கியங்களில்தாம் காண முடியும். சீரிய தமிழ்த்தாய் எழில்களெல்லாம் திரண்டிருக்கும் மங்கைப் பருவத்துடன், ஒரு அரசிளங் குமரிபோல், அரியாசனத்தில் திருவோலக்கம் கொண்டிருக்கும் காட்சியைச் சங்கஇலக்கியங்களில்தாம் பார்க்கலாம். சங்க இலக்கியங்களைப் பயின்று வருவதில் உள்ள இடர்ப்பாடுகள் ஆசிரியர் துணையின்றிப் பயில்வார்க்குத்

தாம் தெரியும். சில பாக்களைப் பயின்று அவற்றின் நுட்பங்களையும் உள்ளுறைப் பொருள்களையும் திருப்தியாக அறிந்துகொள்வதற்குப் பல மணி நேரம் செலவு செய்திருக்கிறேன். பலாப் பழத்தை உரித்து அவற்றின் சுளைகளை எடுப்பதுபோன்ற சிரமம் இருந்தாலும், ஒவ்வொரு பாடலும் ஒரு படித் தேனாகவே இனித்ததை அறிந்தேன். பாக்களைப் படித்துப் பொருள் உணர்வதில் உள்ள சங்கடங்களை எண்ணிப் பார்த்தால், தமிழ் இலக்கியத்தைக் கண்டு மக்கள் 'தென்னலிராமன் பூனை' போன்று மிரளுவதன் உண்மையைத் தெரிந்தேன். புலி பயத்தைவிடக் கிலி பயந்தான் பெரும்பாலோரை மிரளும்படி செய்கிறது என்பதையும் அறிந்தேன்.

பொதுவாக இலக்கியத்தில் ஒரு சுவையையும் சிறப்பாகச் சங்க இலக்கியத்தில் ஒரு விருப்பத்தையும் ஊட்டிவிட்டால் எவரும் அவற்றை விரும்பிப் படிப்பார்கள் என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. அந்த எண்ணமே இந்த நூல் தோன்றக் காரணம். பொதுவாகச் சங்க இலக்கியப் பாடல்கள் எல்லாம் நயமாகத் தான் இருக்கின்றன. யான் படித்து அனுபவிக்கும் பாக்களில் சிலவற்றை அவ்வப்போது சிறு சிறு கட்டுரைகளாக எழுதிப்போட்டிருந்தேன். ஒழிந்த நேரங்களில் எனது சோதர ஆசிரியர்களுக்கு அவற்றைப் படித்துக்காட்டுவதுண்டு; எல்லோருமே அவற்றை நன்கு அனுபவித்தார்கள் என்றே சொல்ல வேண்டும். பத்திரிகைக்கு அனுப்பினால் பலருக்குப் பயனாக இருக்கும் என்று கூறினார்கள். அவ்வாறே யான் "காலச்சக்கர"த்திற்கு அனுப்பிவைத்தேன். இந்நூலில் உள்ள கட்டுரைகளில் பத்துக் கட்டுரைகள் காலச்சக்கரத்தில் வெளிவந்தவை.

தமிழ் இலக்கியப் பூப்பு விரிந்து கிடப்பதற்கேற்ப, தமிழில் இலக்கியத்திறன் ஆய்வு (Literary Criticism) நூல்களே இல்லை எனலாம். ஆங்கில இலக்கிய நூல்களைப் படிப்போர் உல

கில் பெருகுவதற்குக் காரணம் அம்மொழியில் அபரிமிதமாகத் தோன்றும் திறன் ஆய்வு நூல்களே. இத்துறையில் புதிய நூல்கள் அதிகம் தோன்றினால், தமிழ் இலக்கிய நூல்களைப் பயில்வோரின் தொகையும் அதிகமாகும் என்ற திடமான நம்பிக்கை எனக்கு உண்டு. ஆங்கிலம் அறிந்த தமிழறிஞர்கள் இத்துறையில் ஆக்க வேலை செய்தால், தமிழ் மொழி வளம் அடைந்து, மங்கல வாழ்வைத் துறந்திருக்கும் தமிழ்த்தாய் பண்டுபோல் பேரழகு வாய்ந்தவளாக விளங்குவாள் என்பதற்கையமில்லை. இந்நூல் ஓரளவு இத்துறையில் தொண்டு செய்யும் என்னும் நம்பிக்கை உடையேன். படிப்போர்க்கு இலக்கிய உணர்வைத் தரும் என்ற உறுதியும் எனக்கு உண்டு.

நான் எழுத்தாளர் உலகத்திற்குப் புதியவன். தக்க முன்னுரை உதவி என்னைப் பிறருக்கு அறிமுகம் செய்து வைத்த திருவாளர் **பி. ஸ்ரீ.** அவர்கட்கும், எனது நூலைப் பதிப்பிக்க முன் வந்த கலைவளர்ச்சிப் பதிப்பகத்தார்க்கும், உயர்ந்த முறையில் விரைவில் அச்சிட்டுத் தந்த ஜனோபகார அச்சகத்தார்க்கும் எனது உளமார்ந்த நன்றி.

**துறையூர்.**
14–1–49

**ந. சுப்பு ரெட்டியார்.**

# அறிவியல் பயிற்றும் முறை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

மாணாக்கர்களிடையே, இக்காலத்தில்
மிகவும் வேண்டப்பெறும் 'அறிவியல் மனப்பான்மை'யை
உற்சாகத்துடன் உருவாக்கும் பொருட்டு
யாக்கப்பெற்ற நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-938927-1-8




eBOOK ~ மின் நூல்

# திருத்திய (இரண்டாம்) பதிப்பு

இன்றுஆக நாளையே ஆக இனிச்சிறிது
நின்றுஆக நின்அருள்என் பாலதே ; நன்றாக
நான்உன்னை அன்றிஇலேன் கண்டாய் ; நாரணனே !
நீஎன்னை அன்றி இலை."[1]

—திருமழிசையாழ்வார்

பதின்மூன்றாண்டுகட்குப் பிறகு இந்நூல் வடவேங்கடத்து ஏழுமலையான் திருவடிவாரத்திலிருந்து புதிய வடிவில் புதிய கோலத்துடன் பெருமித நடை போட்டுக்கொண்டு தமிழகத்தில் உலா வருகின்றது. நூலின் அடிப்படைக் கருத்துக்களில் அதிக மாற்றம் இல்லையாயினும் சில இடங்களில் புதிய கருத்துக்கள் நுழைக்கப்பெற்றுள்ளன. நடையிலும் அடிக்குறிப்புக்களிலும் நூல் திருத்தம் அடைந்துள்ளது. கலைச்சொற்களில் அதிக மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. தமிழ்க் கலைக் களஞ்சியத்திலுள்ள கலைச்சொற்களும், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் (திருநெல்வேலி) 1959-இல் வெளியிட்ட கலைச்சொற்களும், ஜி. ஆர். தாமோதரன் குழுவினரால் தொகுக்கப்பெற்றுத் தமிழக அரசினரால் வெளியிடப்பெற்றுள்ள (1962) கலைச்சொற்களும் இப் பதிப்பில் இடம் பெற்றுள்ளன.

திருத்திப் பெருக்கிய பதிப்பு வெளிவருவதற்கு என் முயற்சியை நிறைவேற்றி வைத்த "பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலின்"[2] திருவடிகளை நினைந்து போற்றுகின்றேன். "எம்பெருமான் பொன்மலையில் ஏதேனும் ஆவேனே"[3] என்று குலசேகராழ்வார் விரும்பியவாறு தமிழ்நாட்டெல்லையிலிருந்துகொண்டு தொடர்ந்து தமிழ்ப் பணியாற்றுவதற்கும், யான் எதிர்பாராத நலன்களையெல்லாம் எனக்கு நல்கி, என் உடல் நலத்தையும் மனவளத்தையும் வளர்த்துக் குன்றாது பாதுகாக்கும் "குன்றம் ஏந்திக் குளிர் மழை காத்தவன்"[4] திருவடிகளை வாழ்த்தி வணங்குகிறேன்.

திருப்பதி,
மார்ச்சு 20, 1971

ந. சுப்பு ரெட்டியார்

---

1. நான்முகன் திருவந்தாதி—7
2. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்—3
3. பெருமாள் திருமொழி 4 : 10
4. திருவாய்மொழி 3:3:3

# முதற்பதிப்பின் நூல்முகம்

தெளிவுறவே அறிந்திடுதல், தெளிவுதர
மொழிந்திடுதல், சிந்திப் பார்க்கே
களிவளர உள்ளத்தில் ஆனந்தக்
கனவுபல காட்டல், கண்ணீர்த்
துளிவரவுள் ளுருக்குதல்இங் கிவைஎல்லாம்
நீயருளும் தொழில்கள் அன்றோ?
ஒளிவளரும் தமிழ்வாணீ ! அடியனேற்கு
இவையனைத்தும் உதவு வாயே. [1]

—பாரதி

பயிற்றிப் பலகல்வி தந்து—இந்தப்
பாரை உயர்த்திட வேண்டும்'' [2]

என்ற பாரதியாரின் 'கல்வித் திட்டத்தை' நிறைவேற்ற வேண்டுமானால் தாய் மொழியிலேயே எல்லாப் பாடங்களையும் கற்பித்தல் வேண்டும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும்கூடத் தாய்மொழி வாயிலாகவே கற்பிக்கும் நிலை ஏற்பட்டால்தான் எத்தனையோ விதங்களில் வீணாகப்போகும் ஆற்றல்கள் சரியான முறையில் பயன்படும். தாய் மொழியிலும் வட மொழியிலும் உள்ள சமயக்கருத்துக்களையும் அம் மொழியிலுள்ள கல்வெட்டுக்கள் போன்றவற்றையும்கூட ஆங்கிலத்தில் படிப்பதுதான் சிறப்பு என்று கருதும் குறுகிய எண்ணமும் நீங்கும். இராஜாஜி அவர்கள் சொல்லுவது போல, [3] பலர் கலைச்சொல் பிரச்சினையையும் போதனுமொழிப் பிரச்சினையையும் ஒன்று சேர்த்துக் "குட்டையைக் குழப்பி"ப் போதனுமொழிப் பிரச்சினையை என்றும் தீராத பிரச்சினை போல் காட்டுகின்றனர். மக்கள் நலனையும் நாட்டு நலனையும் அடிப்படை நோக்கமாகக் கொண்டு, தங்கள் போக்கே சரி என்று வக்கீல் வாதம் செய்யாது, தெளிவாகவும் விரைவாகவும் பொருளறிவு பெறுவதற்கு வழி காண்பதில் பரிவுடனும் இதயத் தூய்மையுடனும் ஒத்துழைத்தால் அனைத்தும் சீர்படும்.

ஆங்கில மொழியை இன்று உலகமனைத்தும் புகழ்ந்து பாராட்டுவதற்கு மில்ட்டனும் ஷேக்ஸ்பியரும் படைத்துள்ள இலக்கியங்கள் மட்டும் காரணமன்று. உலகிலுள்ள கலைகளனைத்தும் அம்மொழியில் யாவரும் உணரக்கூடிய முறையில் வெளியிடப்பெற்றிருப்பதுதான் அம்மொழியின் உயர்வுக்குக் காரணமாகும். அது போலவே, தமிழ்

1. பாரதியார் : பாஞ்சாலி சபதம்—154
2. பாரதியார் கவிதைகள்—முரசு, 30
3. கல்கி-செப்டம்பர் 23-ஆம் தேதி இதழ் (1956)

மொழி சிறப்புடன் மிளிர்வதற்குக் கம்பனும் வள்ளுவனும் இளங்கோவும் ஏனையோரும் செய்துள்ள இலக்கியங்கள் மட்டிலும் போதா.

> "புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
> பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;
> மெத்த வளருது மேற்கே—அந்த
> மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை" [4]

என்ற குறை தமிழுக்கிருத்தல் கூடாது. இவையனைத்தும் புறநானூற்றுக் காலத்திலேயே தமிழில் இருந்தன என்று 'பழங்கதையையே' அடிக்கடி சொல்லி மகிழ்வதால் யாதொரு பயனும் இல்லை. கல்லூரிகளில் தாய்மொழி வாயிலாகக் கல்வி பயிற்றப் பெற்றால்தான் இவையனைத்தும் தமிழில் தோன்றுவதற்கு வாய்ப்புக்கள் அமையும். அப்பொழுதுதான் பிற நாட்டுச் சாத்திரங்கள் அனைத்தையும் தமிழில் மொழி பெயர்க்கவும் முடியும்.

தமிழில் எல்லாக் கலைகளையும் எழுதவும் விளக்கவும் முடியும் என்பதைச் சிலர் இன்னும் ஒப்புக்கொள்வதில்லை. இவர்கள் தமிழ் மொழியில் எல்லாவற்றிற்கும் தக்க கலைச்சொற்கள் இல்லாத காரணத்தால் இவ்வாறு எண்ணுகின்றனர். எந்த மொழியிலும் அதன் வாயிலாகப் பொருள்களை விளக்க முயன்றாலன்றிப் புதிய கலைகட்கு வேண்டிய சொற்களும் தொடர் மொழிகளும் அமைவதில்லை. பொருள்களை எடுத்துக்கொண்டு விளக்க முயன்றால் இவை தாமாக அமைந்து விடும். இவ்வாறே மேற்புல மொழிகளனைத்திலும் கலைச்சொற்கள் உண்டாகி, அம்மொழிகள் வளர்ச்சியடைந்து வருகின்றன. கலைச் சொற்களை உண்டாக்கிக்கொண்டு தாய்மொழியில் கற்பித்தல் தொடங்க வேண்டும் என்று நினைப்பது, நீந்தக் கற்றுக்கொண்ட பிறகு நீரில் இறங்க வேண்டும் என்று எண்ணுவது போலாகும். செயலில் இறங்கினால்தான் அனைத்தும் சீர்படும். இலக்கிய இலக்கண வளமும் சொற்களஞ்சியப் பேறும் பெற்றுள்ள தமிழ் மொழியின் நீர்மையை அறிந்து, பிற கலைகளைத் தமிழ் மொழியில் வடித்துத் தரும் பணியில் ஈடுபடுவோர்கள்தாம் 'தமிழ் மொழி அனைத்திற்கும் வளைந்து கொடுக்கும்' என்ற உண்மையை அறிவர். அப்பொழுதுதான் 'சொல்லும் திறமை தமிழ்மொழிக்கில்லை' என்ற குறையும் நீங்கும். தமிழ் மொழியும் வளர்ந்து மேலும் வளம் பெறும்.

ஐந்தாண்டுத் திட்டங்களில் எவ்வளவோ பெருந்தொகைகள் பல துறைகளுக்கும் செலவழிக்கப்பெறுகின்றன. ஒவ்வொரு கலைத்துறையிலும் மண்டல மொழிகளில் பல நிலைகளிலும் வெளிவரும் நல்ல நூல்கட்கு மூன்று ஆயிரம், ஐயாயிரம் ரூபாய்கள் பரிசளிக்கும் திட்டத்தை அரசினர் மேற்கொண்டால் பல நூல்கள் உருவாகி வெளிவரும். அவற்றுள் சிறந்தவற்றுக்குப் பரிசுகள் நல்கி, அரசினரோ பல்கலைக்

4. பாரதியார் கவிதைகள் : தமிழ்த்தாய்

மொழி சிறப்புடன் மிளிர்வதற்குக் கம்பனும் வள்ளுவனும் இளங்கோ வும் ஏனையோரும் செய்துள்ள இலக்கியங்கள் மட்டிலும் போதா.

> "புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
> பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;
> மெத்த வளருது மேற்கே—அந்த
> மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை" [4]

என்ற குறை தமிழுக்கிருத்தல் கூடாது. இவையனைத்தும் புற நானூற்றுக் காலத்திலேயே தமிழில் இருந்தன என்று 'பழங்கதை யையே' அடிக்கடி சொல்லி மகிழ்வதால் யாதொரு பயனும் இல்லை. கல்லூரிகளில் தாய்மொழி வாயிலாகக் கல்வி பயிற்றப் பெற்றால்தான் இவையனைத்தும் தமிழில் தோன்றுவதற்கு வாய்ப்புக்கள் அமையும். அப்பொழுதுதான் பிற நாட்டுச் சாத்திரங்கள் அனைத்தையும் தமிழில் மொழி பெயர்க்கவும் முடியும்.

தமிழில் எல்லாக் கலைகளையும் எழுதவும் விளக்கவும் முடியும் என்பதைச் சிலர் இன்னும் ஒப்புக்கொள்வதில்லை. இவர்கள் தமிழ் மொழியில் எல்லாவற்றிற்கும் தக்க கலைச்சொற்கள் இல்லாத காரணத்தால் இவ்வாறு எண்ணுகின்றனர். எந்த மொழியிலும் அதன் வாயிலாகப் பொருள்களை விளக்க முயன்றாலன்றிப் புதிய கலைகட்கு வேண்டிய சொற்களும் தொடர் மொழிகளும் அமைவதில்லை. பொருள் களை எடுத்துக்கொண்டு விளக்க முயன்றால் இவை தாமாக அமைந்து விடும். இவ்வாறே மேற்புல மொழிகளனைத்திலும் கலைச்சொற்கள் உண்டாகி, அம்மொழிகள் வளர்ச்சியடைந்து வருகின்றன. கலைச் சொற்களை உண்டாக்கிக்கொண்டு தாய்மொழியில் கற்பித்தல் தொடங்க வேண்டும் என்று நினைப்பது, நீந்தக் கற்றுக்கொண்ட பிறகு நீரில் இறங்க வேண்டும் என்று எண்ணுவது போலாகும். செயலில் இறங்கினால்தான் அனைத்தும் சீர்படும். இலக்கிய இலக்கண வளமும் சொற்களஞ்சியப் பேறும் பெற்றுள்ள தமிழ் மொழியின் நீர்மையை அறிந்து, பிற கலைகளைத் தமிழ் மொழியில் வடித்துத் தரும் பணியில் ஈடுபடுவோர்கள்தாம் 'தமிழ் மொழி அனைத்திற்கும் வளைந்து கொடுக்கும்' என்ற உண்மையை அறிவர். அப்பொழுதுதான் 'சொல்லும் திறமை தமிழ்மொழிக்கில்லை' என்ற குறையும் நீங்கும். தமிழ் மொழியும் வளர்ந்து மேலும் வளம் பெறும்.

ஐந்தாண்டுத் திட்டங்களில் எவ்வளவோ பெருந்தொகைகள் பல துறைகளுக்கும் செலவழிக்கப்பெறுகின்றன. ஒவ்வொரு கலைத்துறை யிலும் மண்டல மொழிகளில் பல நிலைகளிலும் வெளிவரும் நல்ல நூல் கட்கு மூன்று ஆயிரம், ஐயாயிரம் ரூபாய்கள் பரிசளிக்கும் திட்டத்தை அரசினர் மேற்கொண்டால் பல நூல்கள் உருவாகி வெளிவரும். அவற்றுள் சிறந்தவற்றுக்குப் பரிசுகள் நல்கி, அரசினரோ பல்கலைக்

4. பாரதியார் கவிதைகள் : தமிழ்த்தாய்

கழகங்களோ வெளியிட்டு,அவற்றின் துணைக்கொண்டு செயலில் இறங்கலாம். நாளடைவில் பல குழுக்களை நிறுவி, நூல்கள் எழுதியவர்களையும் குழுவில் உறுப்பினர்களாகச்செய்து, கலைச் சொற்களை அறுதியிடுவதில் வெற்றியும் பெறலாம். இவ்வாறு திட்டமிட்டுப் பணியாற்றினால்தான் அனைத்தும் விரைவாகவும் திறனுடனும் சீர்பட்டு நடைமுறைக்கு வரும்.

இந்நூல் அறிவியல் பயிற்றும் முறையைக் கூறுவது. சென்ற பிப்ரவரித் திங்களில் (1956) நடைபெற்ற சென்னைப் பல்கலைக் கழகக் கல்வி ஆலோசனைக் குழு (Academic Council) வின் கூட்டத்தில் பி. டி. தேர்வுக்குரிய விருப்பப் பாடங்களைத் தாய் மொழியில் கற்பிக்கலாம் என்று தீர்மானிக்கப் பெற்றது. அந்தத் தீர்மானத்தையொட்டி நடைமுறையாண்டில் சில பயிற்சிக் கல்லூரிகளில் விருப்பப் பாடங்கள் தாய்மொழியில் கற்பிக்கப்பெற்று வருகின்றன. அக் கல்லூரிகளில் பயிற்சி பெறும் மாணக்கர்கட்குப் பயன்படலாம் என்றும், ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளிலுள்ளவர்கட்கும் மேற்கோள் நூலாக உதவக் கூடும் என்றும் நம்பியே இந்நூலை எழுதத் துணிந்தேன். எழுதி முடிப்பதற்கு எட்டுத் திங்கள்கள் ஆயின. பயிற்சிக் கல்லூரி மாணக்கர்கட்குப் பயன்படும் நிலையில் அறிவியல் பயிற்றும் முறை பற்றித் தமிழில் எழுதப்பெற்று வெளியிடப்பெறும் முதல் நூல் இதுவேயாகும்.

ஒன்பது ஆண்டுகள் உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியனாக இருந்தபொழுது அறிவியல் பாடத்தை எல்லா வகுப்புகட்கும் கற்பித்த அநுபவத்தைக் கொண்டும், நேரில் அறிந்த பல செய்திகளைக் கொண்டும், ஏழு ஆண்டுகள் பயிற்சிக் கல்லூரியில் பெற்ற நேரநுபவத்தைக் கொண்டும், இந்நூல் ஆக்கப் பெற்றுள்ளது. இதில் குறிப்பிடப்பெற்றுள்ள பல்வேறு செய்திகளும் வெறும் ஏட்டுச் சுரைக்காய் அன்று. அனைத்தும் நடைமுறையில் மேற்கொள்ளக் கூடியவை; அநுபவத்தால் அறிந்தவை.

நூல் பதினைந்து இயல்களாகப் பிரிக்கப்பெற்றுள்ளது. முதல் இயலில் பள்ளிகளில் அறிவியல் பயிற்ற வேண்டிய இன்றியமையாமையும், இரண்டாம் இயலில் அது பயிற்றப்பெறுவதன் நோக்கங்களும் ஆராயப்பெற்றுள்ளன. மூன்றாவது, நான்காவது இயல்களில் முறையே அறிவியல் பாடத்திற்குரிய பொருள் அறுதியீடு, அறுதியிடப் பெற்றவற்றைப் பல்வேறு முறையில் பாடத்திட்டமாக அமைத்தல் ஆகியவை கூறப்பெற்றுள்ளன. ஐந்தாவது இயலில் அறிவியல் பாடத்திற்கே சிறப்பானதும், அறிவியல் துறையிலிருந்தே தோன்றியதுமான 'அறிவியல் முறை' பற்றி விரிவாக விளக்கப்பெற்றுள்ளது. ஆறாவது, ஏழாவது இயல்களில் அறிவியல் பயிற்றுவதற்கு மேற்கொள்ளப்பெறும் பல்வேறு முறைகள் சுருக்கமாகக் கூறப்பெற்றுள்ளன. ஒன்பதாவது, பத்தாவது இயல்களில் முறையே

ஆய்வகம் அமைத்தல், ஆய்வகத்துள்ள துணைக்கருவிகள், துணைக கருவிகளைப் பாதுகாக்கும் முறைகள் ஆகியவை விளக்கமாகக் கூறப் பெற்றுள்ளன. பதினொன்றாவது, பன்னிரண்டாவது இயல்களில் அறிவியல் பாடத்தைச் சுவையுடன் பயிற்றும் வழிகளும் சாதனங்களும் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன. பதின்மூன்றாவது இயல் அறிவியலைப் பிற பாடங்களுடன் பொருத்திப் பயிற்றலை விளக்குகின்றது. பதினான்காவது இயல் அறிவியல் பாடத்தில் மேற்கொள்ளப் பெறும் பழைய முறை - புதிய முறைத்தேர்வுகளை எடுத்துரைக் கின்றது. பதினைந்தாவது இயலில் அறிவியல் ஆசிரியர்கட்குத் தேவையான நடைமுறைக் குறிப்புக்கள் தரப்பெற்றுள்ளன. நூலின் இறுதியில் நூலில் மேற்கொள்ளப்பெற்றுள்ள கலைச் சொற்கள், மேற்கோள் நூல்களின் பட்டியல் பொருட்குறிப்பு அகராதி மாதிரிப் பாடக்குறிப்புக்கள் ஆகியவை பின்னிணைப்புக்களாக அமைந்துள்ளன. "கலைச்சொற்கள்' ஆங்கிலத்தில் படிக்கும் முறை கள் பற்றிய பல்வேறு கருத்துக்களைத் தமிழில் அமைத்துக் கோடலுக்கும்' 'மேற்கோள் நூல்கள்' இந்நூலைப் படிப்போரை மேலும் படிப்பில் ஊக்குவதற்கும், பொருட்குறிப்பு அகராதி பல செய்திகளை விரும்பியவாறு தொகுத்தறிவதற்கும், 'மாதிரிப் பாடக் குறிப்புக்கள்' பயிற்சிக் கல்லூரி, பயிற்சிப் பள்ளி ஆகியவற்றில் பயிற்சி பெறும் இளம் ஆசிரியர்கட்குத் துணையாக இருப்பதற்கும் என்றே சேர்க்கப் பெற்றுள்ளன. 1938-இலும் 1947-இலும் அரசினரால் வெளி யிடப்பெற்றுள்ள கலைச்சொற்கள் அப்படியே எடுத்துக்கொள்ளப் பெற்றுள்ளன; சில புதிய சொற்கள் ஆக்கப்பெற்றும் மேற்கொள்ளப் பெற்றுமுள்ளன. இச்சொற்கள் யாவும் சரியான முறையில் ஒரு நிலை யாக்கப் பெற்றுள்ளன என்று சொல்வதற்கில்லை. நடைமுறையில் இவை இன்னும் திருத்தம் பெற வேண்டியவை. அடுத்த பதிப்பில் இவை இன்னும் நன்கு சீர்பெறும்.

இன்று பள்ளிகளில் பெரும்பாலும் பாட நூல்களின் துணைக் கொண்டே அறிவியல் கற்பிக்கப்பெறுகின்றது. மாணுக்கர்களைத் தலைக்கு ஒரு பத்தியாகப் படிக்கச் சொல்லி, அதிலுள்ள பொருள் விளக்கப்பெறுகின்றது. பள்ளிகளில் துணைக்கருவிகள் மனநிறைவு கொள்ளும் வகையில் இல்லை; அவை இருந்தாலும் ஆசிரியர்கள் அவற்றைக் கையாளுவதும் இல்லை. பாடநூல், சீமைச் சுண்ணும்புக் கட்டி, கரும்பலகை ஆகிய மூன்றைக்கொண்டே — சில சமயம் பின் னிரண்டும் இல்லாமலேயே—'சகல காரியங்களையும்' ஆசிரியர்கள் முடித்து விடுகின்றனர்! "வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்ற பழ மொழிக் கிணங்க இந்நூலில் கூறப்பெற்றுள்ள சில வழிகளை அறிவியல் பயிற்றும் ஆசிரியர்கள் மேற்கொண்டால் மாணுக்கர்கள் அறிவியலை உற்சாகமாகக் கற்பதுடன், அவர்களிடம் இக்காலத்தில் மிகவும் வேண்டப் பெறும் 'அறிவியல் மனப்பான்மை'யும் அமையும்.

இந்நூல் உருவாகிக்கொண்டிருக்கும் பொழுது பிரதி சரியாக அமைவதற்குப் பல விதமான யோசனைகளைக் கூறியவர் என் கெழுதகை நண்பர் உயர்திரு. **சா. கணேசன்** அவர்கள்; தமிழில் எல்லாக் கலைகளையும் வடித்துத் தந்து தமிழ்ப்பணி ஆற்ற வேண்டும் என்று துடித்து நிற்கும் உயர்குணச் செம்மல்; பல்கலைகளிலும் அநுபவம் மிக்கு பல்வேறு கலைஞர்களிடமும் 'சுவையாக' உரையாடும் பண்புடையாளர். 'செய்வன திருந்தச் செய்' என்ற பழமொழியின் உயிர்நாடியை இவரிடம்தாம் காணல் வேண்டும். கலைச்சொற்களை ஆக்கும் பொழுது அவர்களிடம் மேற்கொண்ட 'விவாதம்' பல அருமையான கலைச்சொற்களைப் பிறப்பித்துள்ளன, இவ்வாறு எனக்குப் பல விதங்களில் உதவி புரிந்த இப்பெரியாருக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

இந்நூலைச் செவ்விய முறையில் பதிப்பித்து அழகுற ஆக்கிக் கற்போர் கரங்களில் கவினுறப் பொலியச் செய்த **பழநியப்பச் சகோதரர்கள்** அவர்கட்கு என் நன்றியறிதலைத் தெரிவிக்கின்றேன்.

ஆண்டவன் திருவருட்பெருக்கை எண்ணி எண்ணி ஒவ்வொருவரும் தத்தமக்கு இயலக்கூடியவற்றை அவன் திருவடிகளில் சமர்ப்பித்து மகிழ்கின்றனர். ஆண்டவனிடமிருந்து உலகோர் பெறும் திருவருட்பயனுக்கு உலகினர் காணிக்கையாகச் சமர்ப்பிக்கும் பொருள்கள் சிறிதும் ஈடாகா. அவை அவர்களின் பக்திக்கும் மரியாதைக்கும் அறிகுறிகளேயன்றி வேறொன்றும் இல்லை. வள்ளல் டாக்டர் **அழகப்பர்** அவர்கள் தமிழ் நாட்டிற்கும் தமிழ் மக்கட்கும் செய்த, செய்து வருகின்ற நற்பணியை மனித எண்ணத்தில் அடங்கக்கூடிய அளவைகளால் அளந்தறியவொண்ணாது. பல கலைக்கூடங்களை நிறுவி, பல கலைகளை வளர்க்கும் 'உண்மைச் செல்வர்' அவர்; அறிவும் ஆற்றலும் அத்தனைக்கும் மேலாகத் "தனக்கென்று, ஒன்றேனும் உள்ளாப்" பண்பாடும் நிறைந்த மேதை. அத்தகைய பெரியார் நிறுவியுள்ள கலைக்கூடம் ஒன்றில் பணியாற்றும் சிறியேன் அவர்கள்பால் கொண்டுள்ள பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் அறிகுறியாக இந்நூலை அவர்கள் திருவடிகட்கு அன்புப் படையலாக்குகின்றேன். கல்லூரி மாணாக்கர்கட்கெனத் தமிழில் முதன் முதலாக வெளிவரும் முதல் நூலை பல கல்லூரிகளைத் தோற்றுவித்து வளர்த்துவரும் அப்பெரியார் அவர்களின் திருவடிகட்குப் படையலாக்குவதைக்காட்டிலும் பொருத்தமானது வேறொன்றும் உண்டோ ?

எனக்குள்ள பலவகையான குறைகளால் இந்நூலில் பலவித குறைபாடுகள் ஏற்பட்டிருத்தல் கூடும். சில கருத்து வேறுபாடுகளும் இருக்கலாம். அவற்றை அன்பர்கள் பொறுத்தருள்வார்களாக. நூலை அன்பர்கள் ஊன்றி நோக்கிக் குறைபாடுகளையும் கருத்து வேறுபாடுகளையும் தெரிவிப்பார்களாயின் அடுத்த பதிப்பில் அவற்றைத் திருத்திக்

*கொள்வேன். இந் நூலை எழுதி வெளியிடுவதற்கு யான் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றி வைத்த எல்லாம் வல்ல திருவருளை வழுத்தி வணங்குகின்றேன்.*

> **"குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்
> கற்றறிந்த மாந்தர் கடன்"**

*அழகப்பா பயிற்சிக் கல்லூரி*
*காரைக்குடி,*
*ஏப்ரல் 1, 1957,*

**இங்ஙனம்,**
**ந. சுப்பு ரெட்டியார்**

# தமிழ் பயிற்றும் முறை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

தாய்மொழிப் பயிற்சியைத்தவிர அத்துடன் தொடர்பாக
இருக்கவேண்டிய நவீன முறைகள் பற்றிய பல செய்திகள்
ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளிலும், ஆசிரியர் பயிற்சிப்
பள்ளிகளிலும் பயிலும் மாணாக்கர்கட்கு பெரிதும்
பயன்படும் வகையில் தமிழில் முதலில்
வெளிவந்த மாபெரும் பயிற்சி நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939270-6-9

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

நாடிப் புலங்கள் உழுவார் கரமும் நயவுரைகள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவும் செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும் உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலே! உன் பாதம் அடைக்கலமே.*

—தேசிக விநாயகம் பிள்ளை

**தா**ய் மொழியின் இன்றியமையாமையை எல்லாத் துறைகளிலுள்ளவர்களும் உணர்ந்து வருகின்றனர். மக்கட்சியில் தாய் மொழி பெரும்பங்கு கொள்ளவேண்டிய சிறந்ததொரு கருவியாகும். கோனாட்சியின் நோக்கம் வேறு; குடியாட்சியின் நோக்கம் வேறு. கோனாட்சியில் ஆள்வோர் தம் ஆணையைக் குடிமக்களிடம் அடையச் செய்வது; குடியாட்சியில் மக்கள் தம் விருப்பத்தை ஆள்வோர் அறியச் செய்வது. இதற்கு மக்கள் அறிந்த மொழிதான் தக்கதொரு கருவியாக இருக்க முடியும். எனவே, அனைவரும் தாய் மொழியில் தெளிவாகப் பேசவும் எழுதவும் ஆற்றல் பெறவேண்டும் என்பதைக் கூறவா வேண்டும்? இதை முக்கிய நோக்கமாகக்கொண்டு தொடக்க, இடை, உயர்நிலைப்பள்ளிகளில் பணியாற்றும் தாய்மொழி ஆசிரியர்கள் மொழியைக் கற்பிக்கவேண்டும்; தாய் மொழியிலேயே எல்லாப் பாடங்களும் கற்பிக்கப்பெறவேண்டியதாயிருத்தலின் பிறபாட ஆசிரியர்களும் இந் நோக்கத்தை நினைவில் வைத்துக்கொண்டு பணியாற்றவேண்டும்.

இப் புத்தகம் 'தமிழ் பயிற்றும் முறை'யைக் கூறுவது. உளவியல் உண்மைகளை அடிப்படையாகக்கொண்டு மேற்புல அறிஞர்கள் எத்தனையோ பயிற்று முறைகளைக் கண்டறிந்துள்ளனர். அவற்றையெல்லாம் மொழியின் மரபு கெடாது எந்தெந்த அளவில் நந்தமிழ் மொழியைக் கற்பிப்பதில் மேற்கொள்ளலாம் என்பதை ஓரளவு ஆராய்ந்துள்ளேன். பொதுவாக எல்லா ஆசிரியர்களும், சிறப்பாகத்

---

* மலரும் மாலையும்.

தமிழாசிரியர்களும், கல்வித் துறையில் பணியாற்றும் பிறரும், பொதுமக்களும் சிந்திக்கவேண்டிய பல கருத்துக்கள் இதில் குறிப்பிடப்பெற்றுள்ளன. இவையே முடிந்த முடிபென்று அறுதியிட்டு உரைத்தேனில்லை. அவசியம் ஏற்படில் மாற்றங்கள் செய்துகொள்ளலாம்; செய்து கொள்ளத்தான் வேண்டும். தாய்மொழியறிவு செம்மையாக வாய்த்தால்தான் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்போருக்கும் நாட்டு மக்களுக்கும் இடையில் நல்ல தொடர்பு ஏற்படும்; மேலும் அரசியல் போக்கை மக்கள் நன்குணரவும், தங்கள் விருப்பத்தை அரசினருக்குப் புலப்படுத்திக்கொள்ளவும் இயலும். சுருங்கக் கூறின், தாய்மொழியின் வளந்தான் அரசினருக்கும் மக்கட்கும் நேரடியான தொடர்பை உண்டாக்க முடியும்.

தாய்மொழியை எல்லோரும் எளிதில் கற்றுக்கொள்ளலாமே; பிறந்த சில ஆண்டுகளில் குழந்தை, தான் வாழும் சூழ்நிலையில் பெற்றோர், உற்றோர், உறவினர் சமூகம் ஆகியோரின் மூலமாகத் தாய்மொழியை மிக விரைவாகக் கற்றுக்கொள்வதிலிருந்து இவ்வுண்மை தெளிவாகுமே; இவ்வளவு எளிதாகக் கற்கக்கூடிய தாய்மொழியைக் கற்பித்தற்கு இவ்வளவு 'ஆர்ப்பாட்டம்' தேவையில்லையே என்று சிலர் கருதலாம்; உண்மையாகப் பலர் அவ்வாறுதான் கருதுகின்றனர். ஒரு குழந்தையோ அல்லது படிக்காது வளர்ந்தவரோ தம் அன்றாடத் தேவைக்காகக் கற்கும் நிலைவேறு; பல நூற்றாண்டுகளாகப் பண்பட்டு இலக்கிய இலக்கண வளம் படைத்த மொழியை அறிவியல் நிலையில் வைத்துக் கற்பது வேறு என்பதை, எண்ணிப் பார்க்கும் அனைவரும் எளிதில் உணர்வர். உளவியல் உண்மைகள் பலவற்றைக் கண்டறிந்த பிறகு இஃது இன்னும் தெளிவாகப் புலனாகியுள்ளது.

நீண்ட நாட்களாகவே நவீன முறையில் தமிழ் கற்பிப்பதைப்பற்றி ஒரு புத்தகம் எழுதி வெளியிட எண்ணியிருந்தேன். ஒன்பது ஆண்டுகள் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியனாக இருந்தபொழுது நேரில் கவனித்த பல்வேறு

அனுபவங்களைக்கொண்டும், எட்டு ஆண்டுகள் பி. டி. மாணுக்கர்கட்குத் தமிழ் கற்பிப்பதைப்பற்றிப் போதித்துவந்த அனுபவத்தைக்கொண்டும் இப்புத்தகம் எழுதப் பெற்-றுள்ளது. எழுதி முடிக்க இரண்டாண்டுகள் ஆயின. இப் புத்தகத்தில் குறிப்பிட்டுள்ள பல கருத்துக்களையும் நன்கு சிந்தித்து நடைமுறையில் செயலுக்குக் கொண்டுவந்தால் மாணுக்கர்களிடம் தமிழ்மொழி யறிவு நன்முறையில் அமைவது உறுதி என்று எண்ணுகின்றேன் ; நம்பிக்கையும் கொள்கின்றேன். முறைகளைக் கூறுவது எளிது ; அவற்றை நடைமுறைக்குக் கொண்டுவந்து வெற்றி காண்பது மொழி கற்பிக்கும் ஆசிரியர்கள் மேற்கொள்ளும் முயற்சியையும், அவர்களின் திறனையும், ஈடுபாட்டையும் பொறுத்துள்ளது.

இப் புத்தகம் பதினறு அத்தியாயங்களாகப் பிரிக்கப்-பெற்றுள்ளது. முதல் அத்தியாயத்தில் தமிழ் கற்பிப்பதன் நோக்கங்கள் ஓரளவு விரிவாக ஆராயப்பெற்றிருக்-கின்றன. இரண்டாவது அத்தியாயத்தில் இந் நோக்கங்கள் நடைமுறையில் நிறைவேறுவதற்கான பாடத்திட்டங்கள்-பற்றியும் நடைமுறையிலுள்ள தொடக்க, இடை, உயர்-நிலைகளிலுள்ள பாடத்திட்டங்கள் பற்றியும் விளக்கம் தரப்பெற்றுள்ளது. நமது மாநிலத்திலுள்ள உயர்நிலைப் பள்ளிகளில் கல்வி பெறும் மாணுக்கர்கள் பயிலவேண்டிய மொழிகள்பற்றியும் விளக்கம் கொடுக்கப்பெற்றிருக்கின்றது. மூன்றிலிருந்து ஆறு முடியவுள்ள அத்தியாயங்களில் பயிற்று-வதற்கு மேற்கொள்ளப்பெறும் பல்வேறு முறைகளைப்பற்றிய விதிகளும் விவரங்களும் தரப்பெற்றிருப்பதுடன் தமிழ்மொழி பயிற்றுங்கால் அவற்றை எவ்வெவ்வாறு கையாளலாம் என்பதும் விளக்கப்பெற்றிருக்கின்றது. ஏழிலிருந்து பன்னி-ரண்டு முடியவுள்ள அத்தியாயங்களில் மேற்கூறப்பெற்ற விதிகள் முதலியவற்றைத் தமிழாசிரியர்கள் நடைமுறையில் எவ்வெவ்வாறு கையாளலாம் என்று எடுத்துக்காட்டுக்-களுடன் விளக்கப் பெற்றிருக்கின்றது. இவை யாவும் முடிந்த முடிபுகள் என்று எவரும் நினைத்தல் வேண்டா. இவற்றை நடைமுறையில் கொண்டுவரும்பொழுதுதான் உண்மை-யான சங்கடங்கள் தென்படும். முறைகளையும் அவற்றிற்

கேற்ப மாற்றியமைத்துக் கொள்ளவும் நேரிடும். பதின்-மூன்ருவது அத்தியாயத்தில் மாணுக்கர்களிடம் நல்ல கையெழுத்து அமைவதுபற்றியும் அவர்கள் எழுத்து வேலை-களில் காணக்கூடிய பிழைகள்பற்றியும் அவற்றைத் தவிர்ப்பதுபற்றியும் சில கருத்துக்கள் தெரிவிக்கப் பெற்-றிருக்கின்றன. பதினுன்காவது அத்தியாயத்தில் தமிழாசி-ரியர்கள் தம் பணியைத் திறமையுடன் ஆற்றுவதற்கு வகுத்துக்கொள்ளவேண்டிய திட்டங்கள்பற்றியும் பாடக் குறிப்புக்களின் இன்றியமையாமைபற்றியும் எடுத்துக்-காட்டுக்களுடன் விளக்கப் பெற்றிருக்கின்றது. பதினைந்-தாவது அத்தியாயத்தில் பள்ளியில் பயன்பட்டு வரும் புத்த-கங்களின் வகைகளையும் நல்ல புத்தகங்களின் இயல்புகளை யும் பற்றிய கருத்துக்களும் துணைப்பாடப் புத்தகங்களைப் பயிற்றும் முறைகளும் நூலகப் படிப்பை மேற்கொள்ளும் வழிகளும் ஓரளவு விளக்கப்பெற்றுள்ளன. நவீன முறை-களைக் கையாண்டு கற்பிப்பதனுல் தமிழ்மொழி கற்பதன் நோக்கங்களையொட்டி மாணுக்கர் பெறும் மொழியறிவையும் இலக்கிய அறிவையும் நவீன அளவியல் முறைகளைக்-கொண்டே அளப்பது இன்றியமையாதது. சரியான அளவு கோலைக்கொண்டு அளந்தால்தான் உண்மையான நிலை புலனுகும். உளவியற்கலை வளர்ச்சியின் விளைவாக கல்வித்துறை அளவியல் குறித்து விரிவான நூல்ஒன்றைத் தமிழில் எழுத எண்ணியுள்ளேன். அளவியல்பற்றிய எல்லாக் கருத்துக்களும் அதில் தொகுத்துக் கூறப்பெறும்.

புத்தகத்தின் இறுதியில் இப் புத்தகத்தில் மேற்கொண்ட கலைச்சொற்களும் புத்தகம் எழுதப் பயன்பெற்ற நூல்களின் பெயர்களும் பொருட் குறிப்பு அகராதியும் பின்னிணைப்-புக்களாகச் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. கலைச் சொற்கள் ஆங்கிலத்தில் படிக்கும் பயிற்று முறைகளைத் தமிழ்மொழி-யில் அமைத்துக் கோடலுக்கும், மேற்கோள் நூல்கள் இப் புத்தகத்தைப் படிப்போரை மேலும் படிப்பில்செலுத்துவதற்கும், பொருட் குறிப்புப் அகராதி பல செய்தி-களை அவரவர் விரும்புகிறவண்ணம் தொகுத்தறிவதற்கும்

எனக்குள்ள பலவகையான குறைகளால் இப் புத்தகத்தில் பலவித குறைபாடுகள் ஏற்பட்டிருத்தல் கூடும். சில கருத்து வேறுபாடுகளும் இருக்கலாம். அவற்றை அன்பர்கள் பொறுத்தருளுமாறு வேண்டுகின்றேன். புத்தகத்தை அன்பர்கள் ஊன்றிப் படித்துக் குறைபாடுகளையும் கருத்து வேறுபாடுகளையும் தெரிவிப்பார்களாயின் அடுத்த பதிப்பில் அவற்றைத் திருத்திக்கொள்வேன். இப் புத்தகத்தை எழுதி வெளியிடுவதற்கு யான் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றிவைத்த எல்லாம் வல்ல திருவருளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

"குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்"

அழகப்பா பயிற்சிக் கல்லூரி
காரைக்குடி
அக்டோபர் 1, 1957.

ந. சுப்பு ரெட்டியார்

# திருந்திய (இரண்டாம்) பதிப்பு

நூலின் அடிப்படைக் கருத்துக்களில் அதிகமாற்றம் ஒன்றும் இல்லை. கலைச்சொற்களிலும் இயல் அமைப்புக்-களிலும் மாற்றம் செய்யப்பெற்றுள்ளது. நடையிலும் அடிக்குறிப்புக்களிலும் திருத்தம் செய்யப்பெற்றுள்ளது. நூலின் உடலில் இடையிடையே சில ஆங்கிலச் சொற்கள் விளக்கத்திற்காக நுழைக்கப்பெற்றுள்ளன.

இந்தப்பதிப்பினை என் அரிய நண்பர் பேராசிரியர் எஸ். திருவேங்கடாச்சாரியார் அவர்களின் ஆங்கில முன்னுரை அணிசெய்கின்றது. பேராசிரியர் ஆச்சாரியார் அவர்-களுடன் பதினான்கு ஆண்டுகள் நெருங்கிப் பழகியுள்ளேன்; பத்து ஆண்டுகள் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக்கல்லூரியில் அவருடன் சேர்ந்துப் பணியாற்றியுள்ளேன். இருபத்தைந்து ஆண்டுகட்குமேல் கல்வித்துறையில் பல நிலைகளில் பணியாற்றிஅனுபவம் பெற்ற என் நண்பர் இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற மேனாடுகளில் பல கல்வி நிலையங்களைப் பார்வையிட்டுக் கல்விபற்றிய பல கருத்துக்களை அறிந்தவர். வடமொழிப் புலமை மிக்கவர்; தமிழிலும் நல்ல பயிற்சி-யுடையவர். எந்தப் பிரச்சினையையும் நுணுகியறிந்து தெளிவாகப்பிறர்க்கு உணர்த்தும் பெற்றியர். ஆங்கிலத்திலும் அருந்தமிழிலும் 'கேட்டார் பிணிக்கும் தகையராய்க் கேளாரும் வேட்ப மொழியும்' சொல்வன்மை வாய்ந்தவர். பல நூல்களின் ஆசிரியர்; சிறந்த ஆய்வாளர். இத்தகைய என்கெழுதகை நண்பர் இந்த நூலுக்கு ஆங்கில முன்னுரை வழங்கியமைக்கு என் உளங்கனிந்த நன்று என்றும் உரியது.

இத் திருந்திய பதிப்பு வெளிவருவதற்கு என் முயற்சியை நிறைவேற்றி வைத்த 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலின்' திருவடிகளை நினைந்து போற்று கின்றேன்.

திருப்பதி
15-3-64

ந. சுப்பு ரெட்டியார்.

# கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

கலிங்கத்துப் பரணியை நன்கு ஆராய்ந்து ஆங்காங்குள்ள
நயங்களை எல்லாம் பேராசிரியர் ஈண்டு அழகுபட எடுத்துக்
காட்டியிருக்கிறார். 'கடை திறப்பின் உட்பொருள்' என்ற பகுதியில்
பேராசிரியர் காட்டியிருக்கும் கருத்து
மிகவும் பாராட்டுதற்குரியது.

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939353-8-5




eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

'கலிங்கத்துப் பரணி ஆராய்ச்சி' என்ற இச்சிறு நூல் புலவர்க்கே உரியது என்று பொதுமக்கள் மருள வேண்டாம். பொதுமக்களுக் கென்றே எண்ணி எழுதப்பெற்றது இது. பொதுமக்களும் இலக்கியங் களைத் திறனுயும் நோக்குடன் படிக்க வேண்டும் என்பது எனது ஆசை. அம்முறையில் இந்நூல் வழிகாட்டியாக அமையுமாஞல், அதுவே யான் பெற்ற பேறு; எனது முயற்சியின் பயன்.

இந்நூலில் ஒன்பது கட்டுரைகள் அடங்கி யுள்ளன. அவற்றில் ஆறு, நூலை ஆறு வித கோணத்திலிருந்து பார்ப்பவை; நூல் முழுவதும் செல்லக்கூடிய பார்வைகள் அவை. கற்களாலும் சுண்ணத்தாலும் எழுப்பிய மாளிகையைப் பலவித கண்ணேட்டத்தால் பார்ப்பதுபோல சொற்களாலும் சுவைப் பொருள்களாலும் எழுப்பப்பெற்ற காவிய மாளிகையைப் பல்வேறு நிலையிலிருந்து நோக்கி அனுபவித்தேன். இப்பார்வைகள் மூல நூலைப் படித்துச் சுவைக்க விரும்புவார்க்கு ஓரளவு துணை யாக இருக்கும் என்று கருதுகின்றேன்.

இந்நூலை எங்கள் கணேசன் அவர்கட்குச் சமர்ப்பணம் செய்துள்ளேன். திரு. கணேசன் அவர்கள் புலவர்கட்குப் புலவர்; தலைவர்கட்குத் தலைவர்; தொண்டர்கட்குத் தொண்டர். அவர் 'அலாதி' மனிதர். அனைத்தையும் அப்பர் பெருமானுக்கே அர்ப்பணம் செய்து வாழ்வைத்

தூய்மையாக்கிக் கொண்டு வாழ்ந்த — பெரிய புராணத் தொண்டர் — அப்பூதியடிகள் போலவே, அனைத்தையும் கம்பனுக்கென்றே உரிமையாக்கித் தம் வாழ்வைத் தூய்மையாக்கிக் கொண்டு வாழ்பவர் திரு. கணேசன். கம்பன் காவியத்தைத் துணைக் கொண்டு பாமரமக்கள்மீதும் இலக்கிய வானத்தைக் கவியச்செய்துகொண்டு வருபவர். அவருக்குச் சமர்ப்பணம் செய்வதே பல்லாற்றானும் பொருத்தம் என்று கருதினேன்; அவ்வாறே செய்தும் உள்ளேன்.

எங்கள் ராய. சொ. அவர்கள் இலக்கியச் செல்வர்; தமிழ் இலக்கியங்களின் எல்லைகளை யெல்லாம் கண்ட மேதை; வரையாது வழங்கும் வள்ளல். பண்டைக் காலத்தில் அரசர்கள் ஆண்டு தோறும் 'துலாபாரம்' ஏறுவார்களாம். அன்று தன்னைக் காண வருபவர்கட்குப் பொன்னும் வெள்ளியும் மணிகளும் அள்ளி அள்ளி வழங்கப் பெறுமாம். எங்கள் ராய. சொ. அவர்கள் சனிக் கிழமை தோறும் 'இலக்கியத் துலாபாரம்' ஏறுவார். அப்பொழுதெல்லாம் எங்கட்கு நல்ல வேட்டை! நாங்கள் பல்வேறு இலக்கியச் செல்வங்களை செவியாரப் பருகுவோம். இந்த இலக்கிய தானம் சுமார் நான்காண்டுகளாகக் காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்திலிருந்து நடைபெற்று வருகிறது. இங்ஙனம் 'இலக்கிய வள்ளலாக' வாழ்பவர்கள் என்மீது காட்டிவரும் அளவற்ற அன்பின் காரணமாக முன்னுரை அருளி எனக்கு ஆசிகூறி என் நூலையும் சிறப்பித்துள்ளார்கள். அப்பெரியாருக்கு என் உளங் கனிந்த நன்றி.

திரு. வி. ஆர். எம். செட்டியார் அவர்கள் நல்ல இலக்கியச் சுவைஞர்; சிறந்த பதிப்பாளர். காரைக்குடி ஸ்டார் பிரசுரத்தின் அதிபர். அவர் என் நூலை முற்றும் நோக்கிப் பாராட்டுரை வழங்கினமைக்கு என் இதயம் நிறைந்த நன்றி.

இந் நூலிலுள்ள கட்டுரைகளில் ஐந்து 'தினமணிச் சுடரில்' வெளிவந்தவை. அவற்றை வெளியிட்டுக்கொள்ள இசைவுதந்த அப் பத்திரிகை ஆசிரியருக்கு என் நன்றி. காரைக்குடி செல்விப் பதிப்பகத்தார் இந் நூலை அழகுறப் பதிப்பித்து, வெளியிட்டு, கற்போர் கரங்களில் கவின்பெறச் செய்தமைக்கு என் இதயம் நிறைந்த நன்றி.

யான் மேற்கொண்டுள்ள இலக்கியத் தொண்டில் வெற்றி காண்பதற்கு உறுதுணையாக நிற்கும் எல்லாம் வல்ல இறைவனுக்கு என் வணக்கங்கள்.

காரைக்குடி }
30–3–57 }

ந. சுப்பு ரெட்டியார்

# அணுவின் ஆக்கம்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

அணு அறிவைப்பற்றிய அரிய கருத்துக்களைச்
சாதாரண மக்களும் புரிந்துகொள்ளக்கூடிய
முறையில் இந்நூல் எழுதப்பெற்றுள்ளது.
புதிய புதிய அறிவியல் சொற்களைக்
கையாண்டிருப்பது தமிழுக்குப் புதியதொரு வளத்தைக்
கொடுக்கின்றது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939430-9-0

eBOOK ~ மின் நூல்



# நூல்முகம்

இடையின்றி அணுக்களெலாம் சுழலுமென
இயல்நூலார் இசைத்தல் கேட்டோம் ;
இடையின்றிக் கதிர்களெலாம் சுழலுமென
வானூலார் இயம்பு கின்றார் ;
இடையின்றித் தொழில்புரிதல் உலகினிடைப்
பொருட்கெல்லாம் இயற்கை யாயின்,
இடையின்றிக் கலைமகளே ! நினதருளில்
எனதுள்ளம் இயங்கொ ணாதோ ?

—பாரதியார்

'மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது' என்ற பழமொழியை அறியாதவர்கள் இல்லை. இந்தப் பழமொழி அணுவிற்கு முற்றிலும் பொருந்தும். கடந்த இரண்டாம் உலகப் பெரும் போருக்குப் பிறகு 'அணு' என்ற சொல்லை உச்சரிக்காதவர்களே இல்லை. கல்வியறிவு சிறிதும் இல்லாது குக்கிராமங்களில் வாழும் பாமரர்களும் 'அணுகுண்டின் திருவிளையாடல்களைப்பற்றிப் பேசுகின்றனர். சிறுவர் பத்திரிகைகளும் அணுகுண்டினைப்பற்றி முழங்குகின்றன. மேலை நாட்டிலும் கீழை நாட்டிலும் அணுவின் அடிப்படையில் சில சமயங்களே எழுந்துள்ளன. சமணமதம் பேசுவதும் அணுக் கொள்கையைத்தான். மணிமேகலை என்ற நூலில்,

எல்லை இல் பொருள்களில் எங்கும்எப் பொழுதும்
புல்லிக் கிடந்து புலப்படு கின்ற
வரம்புஇல் அறிவன் இறை; நூற் பொருள்கள் ஐந்து
உரம்தரு உயிரொடு, ஒருநால் வகைஅணு
அவ்வணு உற்றும், கண்டும் உணர்ந்திட,
பெய்வகை கூடிப் பிரிவதும் செய்யும்;
நிலம்,நீர், தீ,காற்று எனநால் வகையின
மலை,மரம், உடம்புஎனத் திரள்வதும் செய்யும்;
வெவ்வேறு ஆகி விரிவதும் செய்யும்;
அவ்வகை அறிவது உயிர்எனப் படுமே'.[1]

என்று ஆசீவக வாதி தன் சமயத்தை எடுத்துரைப்பதைக் காண்கின்றோம். நியாய மதம், வைசேடிக மதம் என்பவையும் அணுக் கொள்கையையே பேசுகின்றன. வைசேடிக மதத் தலைவராகிய கண்ணடர் 'அணு விழுங்கியார்' என்றே வழங்கப்பெறுகின்றார். மேலை நாட்டில் டெமாக்கிரிட்டஸ், எபிகுயூரியஸ், லூக்ரீஷியஸ் என்பவர்களும் இக்கொள்கையினரே. இன்று உலக சமாதானமும், ஆக்கவேலைகளும் அணுவின் அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன என்பதை அனைவரும் அறிவர். ஐ. நா. சபையும் அணு பற்றிய பிரச்சினைகளில்தான் அதிகக் கவனம் செலுத்தி வருகின்றது.

கடந்த இரண்டாம் உலகப் பெரும்போரில் அணு குண்டினால் உலகம் அடைந்த கேட்டினை நாம் நன்கு அறிவோம். ஹிரோஷிமா, நாகஸாகி என்ற நகர்களில் வாழும் ஜப்பானிய மக்கள் மிக நன்றாக அறிவார்கள். இனி இத்தகைய கேடு உலகிற்கு ஏற்படக்கூடாது என்று அருளுள்ளம் படைத்த அறிஞர்கள் நெஞ்சம் கவல்கின்றனர். அணுவினை ஆக்கத்திற்கு மட்டிலுந்தான் பயன் படுத்த வேண்டும் என்று விழைகின்றனர். அணுவாற்றலை எந்தெந்தவகைகளில் ஆக்கவேலைகட்குப் பயன்படுத்தலாம் என்று உலகிலுள்ள அறிவியலறிஞர்கள் அனைவரும் ஆராய்ந்துவருகின்றனர்.

[1] சமயக் கணக்கர்தம் திறம் கேட்ட காதை-வரி 110—19.

நவீன அறிவியல் கருத்துக்களைத் தமிழில் எழுதிப் பரப்ப வேண்டும் என்ற எண்ணம் யான் கல்லூரியில் படித்த காலத்திலிருந்தே—சுமார் இருபது ஆண்டுகட்கு முன்னரே—உண்டு. பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களை மொழி பெயர்த்தும், இறவாத புது நூல்கள் இயற்றியும்தான் தமிழை வளர்க்கவேண்டும். அதுவே தமிழ் மொழியின் ஆக்கத் திற்குச் சிறந்த வழி; இன்றியமையாத போக்கு.

புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்;
மெத்த வளருது மேற்கே—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை.

என்ற குறை தமிழுக்கு இருத்தல் கூடாது. கல்லூரிகளிலும் தாய்மொழி வாயிலாகக் கல்வி பயிற்றப்பெறும் வாய்ப்பு ஏற்படுகின்ற காலத்தில்தான் உயர்ந்த அறிவியல் நூல்கள் தமிழில் பெருக வழி அமையும். இந்தத் துறையில் ஓரளவு பணியாற்ற வேண்டும் என்பது எனது அவா. ஆங்கில மொழிக்கும் தமிழ் மொழிக்கும் தக்க கலைச்சொற்களைக் கொண்டு பாலம் - சேது - அமைத்துவிட்டால் ஆங்கில மொழியிலிருந்து ஏராளமான "கருத்துச் சரக்குகள்" தமிழுக்கு வந்து சேரும். அறிஞர்கள் செய்துவரும் இப் பணியில் எனது முயற்சி சேது கட்டியபொழுது ஒரு சிறு அணில் மேற்கொண்ட முயற்சியைப் போன்றது. எனது சிறு முயற்சியை அறிஞர் உலகம் பாராட்டி ஆசி கூறுமாயின் அதுவே யான் பெற்ற பேறு; அந்தச் சிறு அணில் இராகவ னுடைய ஆசி பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியைப்போல் யானும் மகிழ்ச்சியடைவேன். இத்துறையில் "தெளிவுறவே அறிதலுக்கும், தெளிவுதர மொழிந்திடுதலுக்கும்" தமிழ் வாணியின் அருள் வேண்டும்; பெரியோர்களின் ஆசியும் வேண்டும்.

இந்த நூல் அணுவினை ஆக்கத்துறைகளில் பயன் படுத்தும் முறைகளை விளக்க எழுந்தது. புத்தகம் 16 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பெற்றிருக்கின்றது. முதல்

அத்தியாயத்தில் அணுவின் அற்புத ஆற்றலைப்பற்றியும் அவ்வாற்றல் மக்கள் நலனுக்கு எவ்வாறு பயன்படக்கூடும் என்றும் பொதுவாக கூறப்பெற்றுள்ளன. இரண்டாவது அத்தியாயம் நுண்ணணுப் பெருக்கியாலும் காணமுடியாத அதிநுட்பமான அணுவின் அமைப்பு எவ்வாறு உள்ளது என்று ஓரளவு விளக்கமாக எடுத்தியம்புகின்றது. ஆற்ற லின் தன்மையையும் வகைகளையும் ஓரளவு நன்கு அறிந்து கொண்டால்தான் அணுவாற்றலின் அற்புதப் பயன்களைப் புரிந்துகொள்ளக் கூடும் என்ற நோக்கத்துடன் மூன்ருவது அத்தியாயத்தில் அதனை ஒரு சிறிது விளக்கியுள்ளேன். நான்காவது அத்தியாயத்தில் அணுவின் உட்கருவிலடங்கிய ஆற்றலும் அதனை வெளிப்படுத்துவதற்குக் காரணமாக வுள்ள தொடர்நிலை வினைவும் விளக்கப் பெற்றுள்ளன. ஐந்தாவது அத்தியாயத்தில் அணு எரியைகளாகப் பயன் படும் பொருள்கள் இன்னவை என்றும், அவற்றுள் முக்கிய மாகவுள்ள யு-235 எவ்வாறு தூய்மைப்படுத்திப் பிரிக்கப் பெறுகின்றது என்பதும் விளக்கமாக உரைக்கப்பெற்றுள் ளன. அணு உலைகளைப்பற்றி ஆருவது அத்தியாயம் விளக்கு கிறது. நவீன வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாததாக வுள்ள மின்ருற்றலைக் குறைந்த விலைக்கு எவ்வாறு அணு உலைகளிலிருந்து பெறக்கூடும் என்பதையும் அணுவாற்றல் நிலையங்களை அமைப்பதையும் ஏழாவது அத்தியாயம் எடுத்தியம்புகின்றது. எட்டாவது அத்தியாயம் கதிரியக்கம் இன்னது என்பதையும், அதன் தன்மைகளையும் விளக்கிக் கூறுகின்றது. 'அங்கு இங்கு எனுதபடி எங்கும்' எல்லாத் துறைகளிலும் பயன்படுத்தவல்ல அற்புத சஞ்சீவி போல் உள்ள கதிரியக்க ஓரிடத்தான்களின் வகைகள், அவற்றின் பண்புகள், ஓரிடத்தான்களின் உற்பத்தி ஆகியவைபற்றி ஒன்பதாவது அத்தியாயத்தில் ஓரளவு விளக்கியுள்ளேன். அணு ஆராய்ச்சித்துறையில் பயன்படும் கருவிகளின் அமைப்பும் அவை பயன்படும் முறையும் பத்தாவது அத்தியாயத்தில் விளக்கப்பெற்றுள்ளன. அணு வாற்றல் உயிரியலில் ஆராய்ச்சி முறையில் எவ்வாறு பயன் படுகின்றது என்பதை பதினொன்ருவது அத்தியாயத்தில் ஓரளவு விரிவாக விளக்கியுள்ளேன். இந்த ஆராய்ச்சியின்

காரணமாகப் பெற்ற அறிவு மருத்துவத்துறையில் எங்ஙனம் பயன்படுகிறது என்பதையும், அணுவாற்றலால் சில கொடிய நோய்கள் எவ்வாறு சிகிச்சை செய்யப்பெறுகின்றன என் பதையும் பன்னிரண்டாவது அத்தியாயம் நன்கு விளக்கு கின்றது. பதின்மூன்ருவது அத்தியாயத்தில் அணுவாற்றல் உழவுத்தொழிலில் பயன்படும் விந்தையும் அணுவாற்றலின் துணையால் உணவு உற்பத்திப் பெருக்கத்தை விளைவிக்கக் கூடிய ஆராய்ச்சி முறைகளும், தாவரங்களுக்கு நேரிடும் நோய்கள், பீடைகள் முதலியவற்றைப் போக்குவதற்கு அணுவாற்றல் துணையாகவுள்ளமையும் ஓரளவு விளக்க மாகக் கூறப்பெற்றுள்ளன. பதினான்காவது அத்தியாயம் அணுவாற்றல் தொழில் துறையை எவ்வெவ்வாறு வளமாக்கி யிருக்கிறது என்பதை விளக்கமாக எடுத்தியம்புகின்றது. எதிர்காலத்தில் அணுவாற்றல் எவ்வெவ்வாறெல்லாம் பயன்படக்கூடும் என்பதைப் பதினைந்தாவது அத்தியாயம் 'சோதிடம்' கூறுகின்றது. உலக ஒற்றுமைக்கும் மானிட வாழ்க்கைக்கும் அணுதான் 'மங்கல வாழ்த்தாக' அமை கிறது என்பதைப் பதினுருவது அத்தியாயம் எடுத்துரைக் கின்றது. இவ்வாறு இந்நூல் அணுவாற்றல் ஆக்கத்துறை களில் பயன்படும் முறைகளை ஓரளவு தெளிவாகப் புலப் படுத்துகின்றது.

புத்தகத்தின் இறுதியில் இப்புத்தகம் எழுதப் பயன் பெற்ற நூல்களின் பெயர்களும், இப்புத்தகத்திலுள்ள பொருள் விளக்கத்திற்குத் துணையாக இருக்கும் என்று கருதிய கலைச் சொற்களின் விளக்கங்களும், இப்புத்தகத்தில் மேற்கொள்ளப்பெற்றுள்ள எல்லாக் கலைச் சொற்களும், பொருட்குறிப்பு அகராதியும் பின்னிணைப்புக்களாகச் சேர்க் கப்பெற்றுள்ளன. கலைச் சொற்களின் விளக்கம் அறிவியல் அறிவு வாய்க்கப்பெருதவர்களுக்குப் பொருள் விளக்கம் பெறுவதற்கும், கலைச் சொற்கள் ஆங்கிலத்தில் அணுவைப் பற்றிப் படிக்கும் கருத்துக்களைத் தமிழில் அமைத்துக் கோட லுக்கும், பொருட் குறிப்பு அகராதி நூலினைப் படிப்போர் பல செய்திகளை அவரவர்கள் விரும்புகிறவண்ணம் தொகுத்

தறிவதற்கும் துணையாக இருக்கும் என்று கருதியே அவை சேர்க்கப்பெற்றுள்ளன.

இந்நூலில் மேற்கொள்ளப்பெற்றுள்ள கலைச்சொற்களில் பெரும்பாலானவை முன்னோர் அரும்பாடுபட்டு அமைத்தவை. அவற்றுள் பலவற்றைத் திருத்தியமைத்த பொறுப்பு சிறிது எனக்கு உண்டு. யானும் பல கலைச் சொற்களை ஆக்கி அமைத்திருக்கின்றேன். கலைச்சொல்லாக்கம் ஓர் அரிய கலை. அதற்குப் பொருளறிவும் வேண்டும்; பன்மொழியறிவும் வேண்டும். உயர்ந்த முறையில் சொற்கள் அமைந்துவிட்டால் அவை என்றும் வாழும்; இல்லையென்றால் வீழும். எல்லா நிலைகளிலும் அறிவியல் தாய்மொழியில் பயிற்றப்பெறும்பொழுதுதான் உயர்ந்த கலைச்சொற்கள் அமையும் வாய்ப்புக்கள் உண்டாகும். இந்நூலிலுள்ள கலைச்சொற்கள் பக்கங்களின் அடியில் படிப்போருக்குத் துணையாக இருக்கும் என்று கருதி அடிக் குறிப்புக்களாக ஆங்கிலச் சொற்களுடன் தரப்பெற்றுள்ளன. பல சொற்கள் இன்னும் திருத்தம் பெறவேண்டியவை என்பதை யான் நன்கு அறிவேன்.

பொருள் விளக்கத்திற்குப் படங்கள் பெருந்துணை புரியும் என்பது கல்வியறிஞர்கள் கண்ட துணிபு; சாதாரணமக்களின் அனுபவம். இந்நூலை 44 படங்கள் அணி செய்கின்றன. இப்படங்களை எழுதி உதவியவர் என் அரிய நண்பர் திரு. வெ. முனியாண்டி என்பவர்; காரைக்குடி அழகப்பா மாதிரி உயர்நிலைப்பள்ளியில் ஓவிய ஆசிரியராகப் பணியாற்றுபவர். நுண்ணிய கலைத்திறம் படைத்தவர். அறிவியல் துறையில் அமையவேண்டிய படங்களின் நுட்பங்களையெல்லாம் நுணுகியறியும் திறமை அவரிடம் இயல்பாகவே அமைந்து கிடக்கின்றது. இவ்வாண்டு அவர் அடிக்கடி நோய்வாய்ப்பட்டார். எனினும், நோயுற்ற நிலையிலேயே சிறிதும் சிரமத்தைப் பாராது நல்ல பல ஓவியங்களை அமைத்துத்தந்தார். அவருக்கு என் உளங்கனிந்த நன்றி. அவருக்கு எல்லா நலன்களையும் ஆண்டவன் அருளவேண்டும் என்பது என் பிரார்த்தனை.

இப்புத்தகத்தை எழுதப் புகுவதற்கு முன்பு பல ஆங்கில அறிவியல் நூல்களைப் படிக்கவேண்டியிருந்தது. சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து ஒரு சிலவற்றைப் பெற்றேன். ஆனால், அண்மையில் வெளியான நூல்களையும் பருவ வெளியீடுகளையும் எனக்கு உதவியவர்கள் அமெரிக்க செய்தித் துறையைச் சார்ந்த நூலகத்தார். சென்னையில் மவுண்ட்ரோட்டில் அமைந்துள்ள நூலகத்திற்கு யான் நேரில் சென்றபொழுது இன்முகத்துடன் வரவேற்று யான் வேண்டிய புத்தகங்களைத் தந்தார்கள். அஞ்சல்வழி நூல்களை அனுப்பியபொழுதெல்லாம் அடையாளம் வைத்து படிக்கவேண்டிய பகுதிகளைச் சுட்டினார்கள். அவர்கள் உதவியின்றேல் நூலின் பொருளமைப்பு இவ்வளவு விரிவாக அமைந்திராது. அவர்கட்கு என் உளமார்ந்த நன்றி என்றும் உரியது.

இப்புத்தகம் உருவாகிக் கொண்டிருக்கும்பொழுது பிரதி சரியாக அமைவதற்குப் பலவிதமான யோசனைகளைக் கூறியவர் என் கெழுதகை நண்பர் உயர்திரு. சா. கணேசன் அவர்கள். புத்தகம் அச்சுவடிவம் பெறுவதற்கும் அவர்களே முதற்காரணமாக இருந்தவர்கள். அவருடைய துணையால் தான் என் கல்லூரி வாழ்வு தொடங்கியது; அவர் துணையால்தான் அது சிறந்தது. பல்லாண்டுகளாகக் கூம்பியிருந்த என் அறிவுத்துறைவாழ்வும் மலர்ந்தது. தொடர்நிலை வினைவு தொடங்குவதற்கு ஒரு பொதுஇயல்பின்னி உறு துணையாக இருக்குமாப்போல, அவர் தொடங்கிவைத்த ஒரு வெளியீடு ஏனைய என் நூல்கள் யாவும் அச்சுவடிவம்பெற்று உலாப்போதற்குக் காரணமாக அமைந்தது. இங்ஙனம் பல்லாற்றானும் எனக்கு உதவியும், என் தீயூழால் என் சொந்த வாழ்வில் நேரிடும் பல இடையூறுகளைக் களைந்தும் எனக்கு என்றும் உறுதுணையாக இருக்கும் இப்பெரியாருக்கு என் மனமொழி மெய்களால் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

குறைந்த காலத்தில் மாணாக்கர்களின் பொருளுணர்வுக்கும், தாய்மொழி வளர்ச்சிக்கும் முக்கியமாக வேண்டப் பெறுவது ஆங்கிலம்போன்ற மேனாட்டு மொழிகளிலுள்ள

அருங்கலைகளைத் தாய்மொழியில் வடித்துத் தரவேண்டும் என்பது. இந்தக் கனவை காந்தியடிகள் போன்ற பல பெரியார்கள் நீண்ட நாட்களாகக் கண்டுவருகின்றனர். தமிழைப் பொருத்தமட்டிலும் இந்தக் கனவை நனவாக்க முயல்கின்றவர்களுள் தலைசிறந்தவர்கள் மூவர். ஒருவர் ராஜாஜி; முதன் முதல் மாகாண சுய ஆட்சியில் காங்கிரஸ் மகாசபை பதவியேற்று ராஜாஜி தலைமையமைச்சராகப் பணியாற்றிய பொழுது உயர்நிலைப்பள்ளிகளில் தாய்மொழி வாயிலாகக் கல்விபயிற்றும் திட்டத்தை நிறைவேற்றிவைத்தார்கள். அது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துகொண்டு வருங்கால் நாடு விடுதலைபெற்று திரு. தி. சு. அவிநாசிலிங்கம் கல்வியமைச்சராகப் பணியாற்றிய பொழுது தமிழ்மொழிக்கு முதலிடம் அளித்தும், இன்னும் பல்லாற்றானும் அதனைச் சிறப்பித்தார்கள். திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் கல்வியமைச்சராக இருந்துவரும் நாள் தொட்டு கல்லூரிகளிலும் தாய்மொழி மூலம் கல்வி பயிற்றப் பெறல் வேண்டும் என்று முயன்றுவருகின்றார்கள். அவர்கள் காலத்தில்தான் நம் மாநிலத்தில் தமிழன்னை அரியாசனம் ஏறும் வாய்ப்புப் பெற்றுப் பெருமிதமாகத் திருவோலக்கம் கொண்டுள்ளாள்; சட்ட சபையிலும் அரசினர் அலுவலகங்களிலும் உலாப் போகின்றாள். தமிழ் வளர்ச்சியிலும் கல்விப் பணியிலும் உண்மையான ஊக்கம் காட்டிவரும் அப்பெரியாரிடம் இந்நூலுக்கு முன்னுரை மூலம் ஆசி பெறவேண்டும் என்பது என் நீண்டநாள் அவா. அந்த அவா நிறைவேறினால் என் முயற்சி மேலும் மேலும் வளரும் என்பது என் நம்பிக்கை. இந்த அவாவை அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் திரு. T. M. நாராயணசாமிப்பிள்ளை அவர்கள் இல்லத்தில் சந்திக்கும் வாய்ப்பு வந்தபொழுது தெரிவித்தேன். அவர்கள் மிக அன்புடனும் முகமலர்ச்சியுடனும் ஒப்புதல் தெரிவித்து முன்னுரை வழங்கியும் ஆசி கூறியுள்ளார்கள். அப்பெரியாருக்கு என் உளங்கனிந்த நன்றி.

தமிழ்ப் பணியே தன் பிறவிப் பணியாகக்கொண்ட பெரியார் திரு. தி. சு. அவிநாசிலிங்கம் அவர்கள்; தமிழ்

வளர்ச்சிக் கழகம் கண்டு கலைக்களஞ்சியம் உருவாக்கிய மேதை. தமிழ்நாட்டு இளைஞர்கட்கு அன்னார் காட்டிய பாதையில் பணியாற்றிவரும் எண்ணற்ற இளைஞர்களுள் சிறியேனும் ஒருவன். அத்தகைய பெரியாரிடம் யான் கொண்டுள்ள அன்புக்கு அறிகுறியாக இந்நூலைச் 'சமர்ப் பணம்' செய்கின்றேன். அவர் ஆசியால் இந்நூல் தமிழ் மக்களிடையே பெருமிதத்துடன் உலவும் என்பது என் நம்பிக்கை.

காலத்திற்கேற்ற அரிய தமிழ் நூல்களை வெளியிட்டு நீண்ட நாட்களாகத் தமிழ்ப்பணியாற்றிவருகிறவர்கள் திரு வாளர்களான எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை பதிப்பகத்தார். அவர்கள் இந்நூலை மனமுவந்து ஏற்று அழகுற அச்சிட்டு உதவியமைக்கு என் மனமுவந்த நன்றி என்றும் உரியது.

எனக்குள்ள பலவகையான குறைகளால் இப்புத்த கத்தில் பலவித குறைபாடுகள் ஏற்பட்டிருத்தல் கூடும். அறிஞர்களும் அன்பர்களும் அவற்றைப் பொறுப்பார்களாக. அவர்கள் குறைபாடுகளைச் சுட்டியுரைப்பார்களாயின் அடுத்த பதிப்பில் அவற்றைத் திருத்திக்கொள்வேன். இப் புத்தகத்தை எழுதி வெளியிடுவதற்கு யான் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றிவைத்த எல்லாம் வல்ல திருவருளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

"குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்."

அழகப்பா பயிற்சிக் கல்லூரி
காரைக்குடி
23-7-58

இங்ஙனம்
ந. சுப்பு ரெட்டியார்

# காலமும் கவிஞர்களும்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

கட்டுரைகள் யாவும் பழமையையும், புதுமையையும்
இணைத்து வழுவின்றி வருங்காலத்திற்கு
ஏற்ற கருத்துக்களை வழங்குகின்றன. தமிழ்
மாணவர்களும், பொது மக்களும் இவற்றினைப்
படித்துத் தமிழ்க் கலையின் பல
கோணங்களைக் காணலாம்.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939353-7-8

*eBOOK ~ மின் நூல்*



# நூல்முகம்

"வெண்டா மரைக்கன்றி நின்பதம்
தாங்கஎன் வெள்ளையுள்ளத்
தண்டா மரைக்குத் தகாதுகொ
லோசகம் ஏழும்அளித்(து)
உண்டான் உறங்க ஒழித்தான்பித்
தாகஉண் டாக்கும்வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே!
சகல கலாவல்லியே."[1]

—குமரகுருபர அடிகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் உரைநடை அண்மைக் காலத்தது. தமிழர்களின அறிவுச் செல்வமெல்லாம் கவிதை வடிவில் காட்சியளிக்கின்றன. இலக்கியங்களேயன்றி இலக்கணங்கள், அகராதிகள், நிகண்டுகள், வாழ்க்கை வரலாற்று நூல்கள், நூலின் முகவுரைகள், கல்வெட்டுக்கள், மருத்துவ, சோதிட, வானநூல்கள் முதலியவை யாவும் கவிதை வடிவிலேயே எழுந்துள்ளன. தமிழில் உரைநடை உரையாசிரியர்கள் காலத்தில் அரும்பி, ஐரோப்பியர் வருகையால் போதாகி, அச்சுப்பொறி வளர்ச்சியால் மலர்ந்து, நவீன வாழ்க்கைத் தேவைகளை யொட்டி மணம் வீசத் தொடங்கியுள்ளது. எனினும், ஆங்கில மொழியிலுள்ளன போல் தமிழில் உரைநடைச் செல்வங்கள் பல்வேறு வடிவில் பல்கிப் பெருகவில்லை.

உரைநடைச் செல்வத்தின் பல வடிவங்களில் கட்டுரையும் ஒன்று. கட்டுரையைக் 'கோப்புரை' என்பர் மறைமலையடிகள். ஒரு பொருளைப்பற்றிப் பல கருத்துக்களை இசைத்துக் கோவைப்பட வரையப்பெறும் சொற்பெருக்கே கட்டுரையாகும்.

---

1. சகல கலாவல்லி மாலை.

**'காலமும் கவிஞர்களும்'** என்ற இச் சிறு நூல் பன்னிரண்டு கட்டுரைகளின் தொகுப்பு. இவை 'குமரிமலர்' 'அமுதசுரபி','ஜனநாயகம்', 'கலைமகள்', 'தமிழ்நாடு' ஆகியவற்றின் மலர்களில் வெளிவந்தவை. நான்கு கட்டுரைகள் வானொலிப் பேச்சுக்களுக்காகித் திரட்டப்பெற்ற குறிப்புக்களிலிருந்து எழுதப்பெற்று 'குமரி மலரிலும்', 'ஜனநாயகத்திலும்' வெளிவந்தவை. கட்டுரைகளைப் பதிப்பித்துக்கொள்ள இசைவு தந்த மேற்குறிப்பிட்ட இதழ்களாசிரியர்கட்கு என் இதயம் நிறைந்த நன்றி.

இக்கட்டுரைகள் கல்லூரி மாணக்கர்கட்கு ஏற்றவையாக இருக்கக்கூடும் என்று எண்ணி அவற்றைத் தொகுத்து இச்சிறு நூலாக வெளியிடுகின்றேன். அறிஞருலகமும் தமிழ் கூறு நல்லுலகமும் இதனை ஏற்றுத் தக்க முறையில் பயன் படுத்திக்கொள்ளும் என்று நம்புகின்றேன்.

இந்நூலுக்குத் தக்கதொரு முன்னுரை பெறவேண்டும் என்று எண்ணி என் அரிய நண்பரும் எங்கள் கல்லூரி முதல்வருமான திரு. ப. **துரைக்கண்ணு முதலியார்** அவர்களை அண்மி முன்னுரை வழங்கி ஆசி கூறுமாறு வேண்டினேன். அவர்களும் மனமுவந்து அரியதொரு முன்னுரையை அளித்தார்கள். திரு. முதலியார் அவர்களை அறியாத ஆசிரியர் உலகமும் இல்லை ; மாணக்கர் உலகமும் இல்லை. கிட்டத் தட்ட முப்பதாண்டுகளாகக் கல்வித்துறையில் பணியாற்றி வரும் பெரியார் இவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் நல்ல சொல்வன்மை பெற்றவர். வகுப்பறைகளிலும் சரி, பேச்சு மேடைகளிலும் சரி, கருத்துச் செறிவுடன் 'கேட்டார்ப் பிணிக் குத் தகையவாய்க் கேளாரும் வேட்கும்' வண்ணம் சுவை படப் பேசும் திறமை வாய்ந்தவர். தமிழ் நாட்டில் தமிழ் எம். ஏ., பட்டதாரிகளுள் முதன்முதலாகக் கல்லூரி முதல் வராக வந்தவர். இத்தகைய பேரறிஞரைக் கல்லூரிக்கு முதல் வராக ஆக்கியதன்மூலம் தமிழ் நாட்டிற்கே எங்கள் வள்ளல் அழகப்பர் அவர்கள் வழிகாட்டியுள்ளார் என்று கூறின், அது சிறிதும் மிகையன்று. இத்தகைய பெரியார் இந்நூலுக்கு முன்னுரை அளித்து ஆசி கூறினமைக்கு என் இதயம் கனிந்த நன்றி.

இந்நூலை அழகுற அச்சிட்டுக் கற்போர் கரங்களில் கவின் பெறச் செய்த **எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை** பதிப்பகத் தார்க்கு என் மனமுவந்த நன்றி உரித்தாகும்.

யான் கல்லூரி தொடங்கப்பெற்றதிலிருந்து எட்டாண்டு களாக இக்கல்லூரியில் பணியாற்றி யிருந்தாலும், கடந்த மூன்றுண்டுகளாகத்தான் திரு. **C.V.CT.V. வேங்கடாசலம் செட்டியார்** அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிடைத்தது. வள்ளல் அழகப்பர் அவர்கள் நோய்வாய்பட்ட திலிருந்தே வள்ளல் நிறுவிய கலைக்கூடங்களை யெல்லாம் கருத்துடன் கண்காணித்து வருகின்றுர்; தம்முடைய முழு நேரத்தையும் கலைக் கூடங்களின் வளர்ச்சிக்கான முயற்சி களிலேயே செலவிடுகின்றுர். இராமநாதபுரம் மாவட்டக் கழகத் தலைவர் பதவியையும் இந்தியன் பாங்கி இயக்குநர் பதவியையும் பல ஆண்டுகள் வகிந்துவந்த திரு. செட்டியார் அவர்கள் அவற்றில் பெற்ற நிருவாகத் திறமை முழுவதையும் வள்ளல் தோற்றுவித்த கலைக்கூடங்களின் முன்னேற்றத் திற்கு அர்ப்பணித்துள்ளது அவரது பண்பிற்கு ஓர் எடுத்துக் காட்டாகும். கூர்த்த மதியும் நிதானமான இயல்பும் நியாயத் துடன் அன்பையும் தயையையும் ஒன்றுசேர்க்கும் தன்மை யும் திரு. **வேங்கடாசலம் செட்டியார்** அவர்களின் ஆட்சி முறையை என்றென்றும் நினைவிற் கொள்ளுமாறு செய் துள்ளன. இவ்வாறு பல்லாற்ருனும் சிறந்துள்ளவரும் என் பால் அன்புகொண்டுள்ளவருமான திரு. செட்டியார் அவர் கட்கு இந்நூலைச் 'அன்புப்படையலா'க்குகின்றேன்.

இளைஞர் உலகம் இந்நூலிலுள்ள கருத்துக்களால் பயன் அடைவதாயின், அதுவே யான் பெற்ற பேறு. எந்தப் பிரச் சினையையும் காய்தல் உவத்தலின்றி அறிவியல் முறையில் அணுகவேண்டும் என்பது என் அவா. அதற்கு இந்நூல் சிறிதளவாவது துணைபுரியக்கூடும் என்பது எனது திடமான நம்பிக்கை.

அழகப்பா பயிற்சிக் கல்லூரி<br>காரைக்குடி<br>௨4-1-58

இங்ஙனம்<br>**ந. சுப்பு ரெட்டியார்**

# மானிட உடல்

தமிழாக்கம்: பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்த மொழியாக்க நூல், உடலைப்பற்றி உடல்நூல்
வல்லுநர்கள் நவீன காலத்தில் ஆராய்ந்து
தெரிந்து கொண்டுள்ள உண்மைகளை
எல்லாம் ஜனரஞ்சகமான முறையில்
எளிய நடையில் வழங்குகிறது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939430-8-3

eBOOK ~ மின் நூல்



# நூல்முகம்

உடம்பார் அழியில் உயிரார் அழிவர் ;
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார் ;
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே.

உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன் ;
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன் ;
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின் றேனே. —திருமூலர்

இது அறிவியல் யுகம். ஆராய்ச்சிகளால் பல உண்மைகள் கண்டறியப்பெறும் காலம். இந்த உண்மைகளால் உடல் பற்றிய தத்துவங்களும் கருத்துக்களும் மாறிக் கொண்டே வருகின்றன. எனவே, மானிட உடலைப் பற்றிய நம் அறிவு விரிந்துகொண்டே வருகிறது. அவற்றை யெல்லாம் சாதாரண மக்கள் அறிந்துகொள்வ தென்பது எளிதன்று. அவை யாவும் அவர்கட்கு விளக்கம் தருவதை விட, குழப்பத்தில்தான் கொண்டுசெலுத்தும். சாதாரண மக்கள் தம் உடல் எவ்வாறு இயங்கி வருகிறது என்பதைப் பற்றிப் பொதுவாக அறிந்துகொண்டால் போதுமானது. அதற்கு இந்நூல் பெருந் துணைபுரியும்.

நியூயார்க்கிலுள்ள கொலம்பியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் எடித் இ. ஸ்ப்ரௌல் என்ற அம்மையார் " The Science Book of Human Body " என்ற நூலை எழுதியுள்ளார். அம்மையார் ஓர் ஆய்வாளர் ; ஆசிரியர் ; மருத்துவர். எனவே, அவர் அறிவு வளர்ச்சியினை யொட்டியும் அனுபவத்தை யொட்டியும் மானிட உடலைப் பற்றிய பல கருத்துக்களைத் தெளிவாக விளக்கியுள்ளார். அதன் தமிழாக்கமே இந்நூல். இந்நூலிலுள்ள பல்வேறு படங்கள், படிப்பவர், பொருளை நன்கு விளங்கிக்கொள்ளப் பெருந் துணைபுரியும். புத்தகத்தைப் படிப்பவர்கள் இதை நன்கு உணர்வார்கள். சாதாரண மக்கள் உடலைப்பற்றி அறிந்து கொள்ள வேண்டியவற்றையெல்லாம் மிக நல்ல முறையில் எடுத்தோதியுள்ளார் மூல ஆசிரியர்.

தமிழ்மொழி வளம் பெற வேண்டுமானால் எல்லாத் துறைகளிலும் நல்ல தமிழ்ப் புத்தகங்கள் வெளிவருதல் வேண்டும். எந்தத் தமிழனும் தமிழிலேயே படித்து எத்தகைய உயர்ந்த அறிவையும் பெற வாய்ப்புக்கள் இருக்க வேண்டும்.

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்"

என்ற பாரதியாரின் வாக்கை 'மறைமொழி' போல் போற்றி அறிஞர்கள் தமிழுக்குத் தொண்டாற்ற வேண்டும். தமிழில் வரும் புத்தகங்கள் தொடக்கத்தில் மொழிபெயர்ப் பாகத்தான் இருத்தல் முடியும். மொழி மரபுகளையெல்லாம் மேற்கொண்டு முதல்தரமான மொழிபெயர்ப்பு நூல்களை ஆக்குவதென்பது எளிதான செயல் அன்று. அதற்கு மொழிபெயர்ப்பாளர் இருமொழிப் புலமையுடன் மொழி பெயர்க்கும் துறையறிவும் நன்கு பெற்றிருக்க வேண்டும். என்றாலும், மொழிபெயர்ப்பு நூல்கள் முதல் தரமானவையாக அமைதல் கடினம். பிற துறையறிவை நன்முறையில் பெற்று அவ்வறிவுடன் ஒன்றித் தம் சொந்த அனுபவமாய்த் தாய்மொழியிலேயே நூல்கள் வெளிவரும் பொழுதுதான் தமிழ்மொழியில் இன்னும் சிறந்த நூல்களை எதிர்பார்த்தல் முடியும்.

பிற துறைக் கலைச்சொற்களையெல்லாம் தமிழில் அமைக்கும்பொழுது எத்தனையோ சங்கடங்கள் ஏற்படுகின்றன. அவற்றையெல்லாம் ஆராய்வதற்கு இது இடம் அல்ல. எனினும், இந்நூலில் இயன்றவரை நல்ல கலைச் சொற்களை ஆக்கி அமைத்திருக்கிறேன். இயலாத இடங்களில் ஆங்கிலக் கலைச் சொற்களை அப்படியே மேற்கொண்டுள்ளேன். மொழிமரபு கெடாது இத் தமிழாக்கம் அமைய வேண்டுமென்பதில் மிக்க அக்கறை செலுத்தியுள்ளேன். மூல நூலிலுள்ள கருத்துக்களை மனத்தில் நன்கு ஏற்றுக்கொண்டு மொழிபெயர்த்ததால், நூல் ஓரளவு நன்முறையில் அமைந்திருக்கிறது என்றே கருதுகிறேன். எனினும், எவ்வளவுக்கு வெற்றி பெற்றிருக்கிறேன் என்பதை நூலைப் படிப்பவர்கள்

தாம் கூறுவதற்கு உரிமையுள்ளவர்கள். படிப்பவர்கட்கு எளிய முறையில் பொருளுணர்வு ஏற்பட்டால் அதுவே மொழிபெயர்ப்பின் முதல் வெற்றியாகும்.

புத்தகத்தின் இறுதியில் இப்புத்தகத்தில் மேற்கொண்டுள்ள கலைச்சொற்களும், முக்கியமான சில கலைச் சொல் குறிக்கும் பொருள் விளக்கமும், குறிப்புப் பொருள் அகராதியும் பின்னிணைப்புக்களாகச் சேர்க்கப் பெற்றுள்ளன. 'கலைச்சொற்கள்' ஆங்கிலத்தில் உடலியலைப்பற்றிப்படிக்கும் கருத்துக்களைத் தமிழில் அமைத்துக்கோடலுக்கும், 'கலைச் சொற் பொருள் விளக்கம்' முதன் முதலாக உடலியலைப் பற்றிப் படிப்பவர்கள் நன்முறையில் பொருளுணர்வு பெறுவதற்கும், 'குறிப்புப் பொருள் அகராதி' பல செய்திகளை அவரவர் விரும்புகிற வண்ணம் தொகுத்தறிவதற்கும் துணையாக இருக்கும்.

எனக்குள்ள பல வகையான குறைகளால் மொழிபெயர்ப்பில் எத்தனையோ வழுக்கள் ஏற்பட்டிருத்தல் கூடும். அறிஞர்கள் அவற்றைப் பொறுப்பார்களாக. கலைச்சொற்கள் இன்னும் திருத்தம் பெற வேண்டும் என்பதை நன்கு அறிவேன். அடுத்த பதிப்பில் அவை இன்னும் நன்முறையில் திருத்தம்பெற்று மேற்கொள்ளப் பெறும். இந்த என் முயற்சியை நிறைவேற்றி வைத்த எல்லாம்வல்ல இறைவனை மனமொழி மெய்களால் வணங்கி இந்நூலைத் தமிழ்த்தாயின் திருவடியில் சமர்ப்பிக்கின்றேன்.

> 'தெளிவுறவே அறிந்திடுதல், தெளிவுதர
> மொழிந்திடுதல், சிந்திப் பார்க்கே
> களிவளர உள்ளத்தில் ஆனந்தக்
> கனவுபல காட்டல், கண்ணீர்த்
> துளிவரஉள் ளுருக்குதல், இங்கிவை எல்லாம்
> நீயருளும் தொழில்கள் அன்றோ ?
> ஒளிவளரும் தமிழ்வாணீ ! அடியனேற்கு
> இவையனைத்தும் உதவு வாயே.' —பாரதியார்

காரைக்குடி
20—4—'58

இங்ஙனம்,
ந. சுப்பு ரெட்டியார்.

# கல்வி உளவியல்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளுக்கும்
கலைவளர்ச்சியில் நாட்டமுள்ள
பெருமக்களுக்கும் பெரும்பயன்
அளிக்கவல்ல அரிய நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-936450-9-3




eBOOK ~ மின் நூல்

## நூல்முகம்

ஆங்கொரு கல்லை வாயிலிற் படியென்
　　றமைத்தனன் சிற்பி,மற் றொன்றை
ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்
　　றுயர்த்தினன் ; உலகினோர் தாய்நீ
யாங்கனே எவரை எங்ஙனம் சமைத்தற்
　　கெண்ணமோ அங்ஙனம் சமைப்பாய் :
ஈங்குனைச் சரணென் றெய்தினேன் ; என்னை
　　இருங்கலைப் புலவனுக் குதியே.

—பாரதியார்.

ஒரு நாட்டில் வாழும் மக்களது அறிவின் திறத்தை இனிது புலப் படுத்துவது அவர்களால் போற்றி வளர்க்கப்பெறும் தாய்மொழியாகும். தாய்மொழி வாயிலாக அறிவின் ஒட்பமும் அதன் பயனாக வினைத்திட்ப மும் நற்பொருளாக்கமும் வளர்ந்து சிறப்பதைப்போல் அயல்மொழி வாயிலாக வளர்ந்து சிறத்தல் அரிது. குறைந்த காலத்தில் அதிக முயற்சியின்றித் தாய்மொழியில் பிறதுறைக் கருத்துக்களை எளிதில் அறிவதைப்போல் அயல்மொழி வாயிலாக அறிதல் அருமை. தமிழ் மொழியோ உலகியல் வழக்கும் இலக்கியப் பழமையும் இலக்கண வரம்பும் கொண்டு வீறுபெற்று வழங்கும் ஒப்புயர்வற்ற ஓர் உயரிய மொழி. இன்று மேற்புலநாடுகளில் பெருமையுடன் திகழும் அறிவியற் கலைகளும் ஏனைய கலைகளும் தமிழில் தோன்றிவிட்டால் இந்திய மொழி களில் தமிழ்மொழியே தலை சிறந்து நிற்கும் என்பதற்கு எள்ளளவும் ஐயம் இல்லை. இதனை நன்குணர்ந்த கவிஞர் பாரதியார்,

'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
　　தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும் ;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
　　தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்'

என்று கூறியுள்ளதைத் தமிழ்மொழியின் ஆக்கம் கருதுவோர் நினைவில் இருத்தி அதன்படி செயற்படத் துணிதல் வேண்டும்.

தமிழ்மொழியின் ஆக்கத் துறையில் பணியாற்ற விரும்புவோர் மேனுட்டு மொழிகளை—குறிப்பாக—எல்லாக் கலையறிவினையும் தன்னகத்தே அடக்கிக்கொண்டு வீறுடன் திகழும் ஆங்கிலத்தை—ஆழ்ந்து பயின்று மேனுட்டு அறிவியற் கலைகளையும் பிற கலைகளையும் ஆழ்ந்து கற்று அவற்றில் தெளிவான அறிவினைப் பெறுதல் வேண்டும். தமிழ் மொழியில் ஆழ்ந்த பயிற்சிபெற்று, இயன்றவரை தமிழ் மரபு கெடாதபடி மேனுட்டுக் கலைகளைத் தமிழில் மொழிபெயர்த்தலும் அக்கலைத் துறைகளில் தமிழில் 'முதல்நூல்கள்' எழுதுதலும் வேண்டும். ஆங்கில மொழியில் இத் துறைநூல்களைப் பயிலுங்கால், அக்கலைத் துறையினர் எவ்வளவு உயர்ந்த மொழியுணர்ச்சியுடன் அந்நூல்களை எழுதியுள்ளனர் என்பதைத் தெள்ளிதின் உணரலாம். தமிழில் அங்ஙனம் எழுதுவோர், அல்லது மொழிபெயர்ப்போர் ஒருவித வரம்புமின்றி மனம் போகின்ற போக்கில் எழுதிவருவது வருத்தத்தை விளைவிப்பதாகும்.

இங்ஙிலையில் கலைச்சொல்லாக்கப் பிரச்சினை எழுகின்றது. சிலர் இப்பிரச்சினையையும் போதனுமொழிப் பிரச்சினையையும் ஒன்று சேர்த்துப் போதனுமொழிப் பிரச்சினையை என்றும் தீரமுடியாத பிரச்சினைபோல் காட்டுகின்றனர். இரண்டற்கும் ஓரளவு தொடர்பு உண்டு என்பது உண்மையேயாயினும், இரண்டையும் அணுகவேண்டிய முறை வேறுவேறு என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். 1956-ஆம் யாண்டில் பி.டி. தேர்வுக்குரிய விருப்பப்பாடங்களைத் தாய்மொழியிலும் கற்பிக்கலாம் என்று சென்னைப் பல்கலைக் கழகம் செய்த முடிவில் குறையிருப்பதன் காரணம் இதுவேயாகும். விருப்பப் பாடங்களைப் பயிற்றும்போது எத்தனையோ உளவியற் கருத்துக்கள், கல்விபற்றிய கருத்துக்கள் வருகின்றன. அப்பொழுது கலைச்சொல்லாக்கப் பிரச்சினை எழாமல் இல்லை. பி. டி. தேர்வு முழுவதையுமே தமிழில் எழுதலாம், பயிற்சிக் கல்லூரிகளில் எல்லாப் பாடங்களையும் தாய் மொழியிலேயே கற்பிக்கலாம் என்று முடிவு செய்திருக்குமாயின் இன்று ஓரளவு காணும் வெற்றியைவிடப் பன்மடங்கு வெற்றி கண்டிருக்கக்கூடும். பி. டி. பாடத்திட்டத்தைப் பொறுத்தமட்டிலும் ஒன்றிரண்டு யாண்டுகளில் இதனைக் கிட்டத்தட்ட முழுவெற்றிக்குக் கொண்டுசெலுத்தலாம் என்பதைச் சற்று உறுதியுடனேயே கூறலாம். அறிவியற் கலைகளைப் பொறுத்தமட்டிலும் கலைச் சொற்களை அனைத்துலகச் சொற்களாகவே ஒப்புக்கொள்ளுதல் பலவற்றிற்கும் நலம் பயக்கும் என்பது சிறியேனின் கருத்து. சாதாரணச் சொற்களை இயன்றவரை தமிழாக்கிவிடலாம். இது கல்லூரியில் பயிற்றுவதற்கு மேற்கொள்ளவேண்டிய முறை.

பொதுமக்களுக்கென்று எழுதப்பெறும் நூல்களில் இயன்றவரை—மிகச் சிக்கலான சொற்களைத் தவிர—அனைத்தையுமே தமிழாக்க முயலலாம். ஆயின், பல யாண்டுகள் அனுபவத்திற்குப் பிறகுதான் எதனையும் ஒரு வரையறைக்குள் கொண்டு வருதல் இயலும்.

கல்வித் துறையில் எத்தனையோ சீர்திருத்தங்கள் வந்து கொண்டே யிருக்கின்றன. பாடத் திட்டங்கள் அடிக்கடி மாற்றியமைக்கப் பெறுகின்றன. பெரும்பாலும் அறிஞர்கள் அனைவருமே பாடப் பொருள்களில் கருத்தினை அதிகம் செலுத்துகின்றனரே யன்றி, பாடங்களைப் பயிலும் மாணாக்கர்களைப்பற்றி அதிகம் ஆராய்வதில்லை. மாணாக்கர்களின் மனநிலை, அறிவுநிலை, உணர்வுநிலைபோன்ற கூறுகளைக் கவனியாமல் செய்யப்பெறும் எந்தத் திட்டங்களாலும் அதிகமான நற்பயன் விளையாது. எந்நிலையிலும் கற்பிக்கும் ஆசிரியர்கட்குக் கல்விஉளவியல்அறிவு மிக மிக வேண்டற்பாலது; கல்வித்துறைபற்றிய அறிவும் இன்றியமையாதது. பயிற்றுதலில் எவ்விதமான பயிற்சியுமின்றிக் கல்லூரியில் ஆசிரியர்கள் கற்பிக்கும் வழக்கம் அவ்வளவு பயன்தாராது. பல யாண்டு-கள் கழித்து அனுபவத்தில் தெரியும் செய்திகளை ஒரே யாண்டில் பயிற்சிக் கல்லூரியில் தெரிந்து கொள்ளலாம். இவற்றை யறிந்து கற்பிக்கும் ஆசிரியர்களின் தரம் சற்று உயர்நிலையிலேயே இருக்கும் என்பதைச் சிறிது துணிந்தே கூறலாம்.

இந்நூல் கல்விஉளவியல் பற்றியது. கற்பித்தல்துறையில் பணியாற்றும் ஆசிரியர்களும் சிறுவர்களின் கல்வியில் அக்கறை கொள்ளும் பெற்றோர்களும் பொதுமக்களும் இன்றியமையாது படிக்க வேண்டிய நூல். கல்வித்துறையில் எந்த அளவுக்கு உளவியல் பயன்படுகின்றது என்பதை விளக்கிக் கூறுகின்றது இந்நூல். ஆசிரியர்பயிற்சிப்பள்ளி-மாணாக்கர்கட்கு மிகவும் ஏற்றது; பயிற்சிப்பள்ளி, ஆதாரப்பயிற்சிப் பள்ளிக்குரிய கல்விஉளவியல்பற்றிய பாடத் திட்டங்களை யொட்டி எழுதப்பெற்றுள்ளது. இத்துறையில் ஒரு சில நூல்கள் எழுந்துள்ளன. இன்னும் இத்துறையில் பல நூல்கள் வெளிவரவேண்டும். கல்வித்துறையில் எழும் பிரச்சினைகளுக்கு உளவியல்அடிப்படையில் பல கோணங்களிலும் தீர்வு காணப்பெறுதல் வேண்டும். இந்நூலில் மாணாக்கர்கட்கும் பிறருக்கும் இயல்பாக எழும் ஐயங்களைப் பல இடங்களில் பல எடுத்துக்காட்டுக்களைக் கொண்டும் படங்களைக் கொண்டும் போக்கியிருக்கின்றேன். இதன் காரணமாக நூலும் சற்று நீண்டுவிட்டது. மாணாக்கர்கள் நூலின் நீட்டத்தைப் பொருட்படுத்தாது விளக்கத்தை-மட்டிலும் பொருட்படுத்தி இந்நூலைப் பயில்வார்களாக. படிக்கும் மாணாக்

கர்கள் விளங்காத பகுதிகளை இந்நூலாசிரியர்க்கு அவ்வப்பொழுது கடிதம் மூலமோ நேரிலோ தெரிவிப்பார்களாயின் அவ்வனுபவத்தைக் கொண்டு அடுத்த பதிப்பில் அப்பகுதிகள் இன்னும் தெளிவாக விளக்கப் பெறும்.

இப்புத்தகம் பதின்மூன்று அத்தியாயங்களாகப் பிரிக்கப்பெற்றுள்ளது. முதல் அத்தியாயம் கல்வி உளவியலின் இயல்பினையும் அளவினையும் விளக்குகின்றது. இரண்டாவது அத்தியாயம் மனிதன் சூழ்நிலையிலுள்ள உயிரி என்றும், அவன் சூழ்நிலையுடன் பொருத்தப்பாடடைவதே கல்வி என்றும், பொருத்தப்பாடடைவதற்குத் துணை செய்யும் உறுப்புக்கள் இவை என்றும் எடுத்தியம்புகின்றது. மூன்றாவது அத்தியாயம் குழந்தை வளர்ச்சியில் நாம் காணும் பல்வேறு உடல், உளமாறுபாடுகளைத் தெளிவாக விளக்குகின்றது. நான்காவது அத்தியாயத்தில் குடிவழியின் தன்மைகள், சூழ்நிலையின் இயல்புகள்,குழந்தை பிறப்பதற்கு முன்னும் பின்னும் அது முதிர்ச்சி அடைவதிலுள்ள சிறப்பியல்புகள், கற்றலுக்கும் முதிர்ச்சிக்கும் உள்ள தொடர்பு ஆகியவை போன்ற கருத்துக்கள் கூறப் பெற்றுள்ளன. ஐந்தாவது அத்தியாயம், குழந்தைகளின் ஊக்கு நிலைகள், உள்ளக் கிளர்ச்சிகள், இவை இரண்டற்குமுள்ள உறவு முறைகள் ஆகியவற்றை விளக்கி நிற்கின்றது. ஆறுவது அத்தியாயத்தில் கற்றலின் அடிப்படை இயல்புகள், கற்றல் விதிகள், செயல் மூலம் கல்வி பெறுதல், அனுபவத்தால் கல்வியை அடைதல் போன்ற கருத்துக்கள் தெரிவிக்கப்பெற்றுள்ளன. ஏழாவது அத்தியாயம் கற்றலிலுள்ள கூறுகளனைத்தையும் தொகுத்துக் கூறுவது; கற்றலுக்கும் கற்பித்தலுக்கும் இது உயிர்நாடிபோல் இருப்பது. எனவே, இப்பகுதி சற்று விரிந்து புத்தகத்தின் நடுநாயகமாகவும் அமைந்துளது. எட்டாவது அத்தியாயம் மாணுக்கர்களின் அறிதிறன் தன்மைகள், அவற்றின் காரணமாகத் தனியாளிடம் காணப்பெறும் வேற்றுமைகள் ஆகியவற்றை விளக்குகின்றது. ஒன்பதாவது அத்தியாயம் மாணுக்கர்களின் உடல்நலத்தைப் பற்றியது. இதில் சிறுவர்களிடம் சாதாரணமாகக் காணப்பெறும் கண், காது, பற்கள்பற்றிய ஊறுகள், ஊட்டத் தேவைகள், களைப்பு, சோர்வுபற்றிய செய்திகள் முதலியவை கூறப்பெற்றுள்ளன. பத்தாவது அத்தியாயத்தில் பல்வேறு இயல்புப் பிறழ்ச்சிகள், அவற்றிற்குரிய காரணங்கள், அவற்றைக் களையும் முறைகள் ஆகியவை ஓரளவு விளக்கப்பெற்றுள்ளன. பதினோராவது அத்தியாயம் மாணுக்கர்களின் ஒழுக்க வளர்ச்சிபற்றியும், பன்னிரண்டாவது அத்தியாயம் மதிப்பீடும் சோதனையும்பற்றிய நவீன கருத்துக்களையும் கூறுகின்றன. பதின்

மூன்றுவது அத்தியாயம் 'ஆசிரியர்களின்' பல்வேறு பிரச்சினைகளைச் சற்று விரிவாக விளக்குகின்றது.

இப்புத்தகத்தில், இதுகாறும் வெளிவந்துள்ள கலைச்சொற்களே தேர்ந்தெடுத்துக் கையாளப்பெற்றுள்ளன; சில புதிய கலைச்சொற்கள் ஆக்கப்பெற்றும் மேற்கொள்ளப்பெற்றுள்ளன. இவை ஆங்காங்கு ஒவ்வொரு பக்கங்களின் அடியில் குறிப்பிடப்பெற்றிருப்பதுடன் புத்தகத்தின் இறுதியிலும் பின்னிணைப்பாகத் தொகுத்தும் கூறப் பெற்றுள்ளன. இவ் விணைப்பைத் தவிர, இப்புத்தகம் எழுதத் துணையாக இருந்த நூல்களின் பெயர்கள், பொருட்குறிப்புஅகராதி ஆகியவையும் இணைப்புக்களாக அமைந்துள்ளன. புத்தகத்தைப் படிப்போருக்கு அவரவர் விரும்பும் வண்ணம் இவை துணையாக இருக்கும்.

இப்புத்தகம் உருவாகும்பொழுது பிரதி சரியாக அமைவதற்கும் பிறவற்றிற்கும் துணையாக இருந்தவர் என் கெழுதகை நண்பர் உளவியல் பேராசிரியர், திரு. வை. நா. சுப்பிரமணியம். நான் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவனுகப் பணியாற்றியபொழுது இந்நூலை எழுதினேன். எழுதுங்கால் எனக்கு ஏற்பட்ட பல்வேறு ஐயங்களை அவ்வப்பொழுது அகற்றியும், அடிக்கடி மேற்கோள்நூல்களைக் காட்டி ஆற்றுப்படுத்தியும், இன்னும் பல்லாற்ருனும் துணை செய்தார் பேராசிரியர் சுப்பிரமணியம். புத்தகம் எழுதி முடிந்ததும் பொறுமையாக இருந்து பிரதி முழுவதையும் யான் படிக்கக் கேட்டுப் பல திருத்தங்களைக் கூறினுர். உளவியல் துறையில் ஆழ்ந்த அறிவும் ஆராய்ச்சித் திறனும் அவற்றிற்கு மேலாக நல்ல அனுபவமும் நிறைந்த இவர் இத்துணையளவு உதவியதுடன் இந்நூலுக்கு ஓர் அரிய முன்னுரையையும் வழங்கி இதனைச் சிறப்பித்திருக்கின்ருர். இவருக்கு என் உளங்கனிந்த நன்றி.

உயர் திரு. கோ. ர. தாமோதரன் அவர்களை அறியாத தமிழ்மக்களே இரார். இன்று இந்தியாவிலுள்ள தொழில்துறை மேதைகளில் விரல் விட்டு எண்ணக் கூடியவர்களுள் ஒருவர்; தமிழ்நாட்டிற்குக் கோவை மாவட்டம் தந்த அறிஞர்; பல கல்விக் கூடங்களைத் தோன்றுவித்த உயர்ந்த செல்வர் குடும்பத்தில்தோன்றி உயர்கல்வி பெற்று, பல்லாண்டு-கள் வெளிநாடுகளிலும் பயின்று பொறியியல் துறையில் உயர்பட்டங்கள் பெற்றுச் சிறந்த அறிஞராகி, தம் குடும்பத்திற்குச் சொந்தமான பூ. சா. கோ. பொறியியற் கல்லூரியின் முதல்வராயிருந்துகொண்டு தமிழ்நாட்டு இளைஞர்கட்குப் பொறியியற் கல்வியை ஊட்டிவரும் செம்மல். கிட்டத் தட்ட அந்தப் பொறியியற் கல்லூரியைத் தோன்றுவித்தவரும் இப்பெரி

யாரே என்றுதான் சொல்லவேண்டும். தோன்றுவித்த நாள்தொட்டு அதனை உயர்ந்த முறையில் கண்காணித்தும் வளர்த்தும் வருபவர். இத்தகைய கல்வித்துறை அறிஞருக்கு அரசியலிலும் பங்கு இல்லாமல் இல்லை. முன்னாள், தில்லி பாராளுமன்ற உறுப்பினர்; இன்று சென்னை மாநில அரசின் மேல்சட்டசபைக்கு ஆசிரியர் தொகுதியில் உறுப்பின ராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றவர். பல தொழிற்சாலைகளின் இயக்குந ராகவும், அனைத்திந்தியத் தொழிற்கல்வி ஆலோசனைக் குழுவின் உறுப் பினராகவும், பல்லாண்டுகளாகச் சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிக் குழு(Syndicate) உறுப்பினராகவும் இன்னும் வேறு பல உயர்ந்த நிறு வனங்களில் உறுப்பினராகவும் இருந்து பணியாற்றி வருபவர்.

பல்லாண்டுகளாக இவர் ஆற்றிவரும் தமிழ்த் தொண்டினைத் தமிழ் கூறு நல்லுலகம் நன்கு அறியும். பன்னிரண்டு யாண்டுகட்குமேல் தமிழ் மக்களிடையே பெருமிதத்துடன் உலவிவரும் **கலைக்கதிர்** என்ற அறி வியல் திங்கள்இதழின் ஆசிரியராகப் பணியாற்றித் தமிழன்னைக்குப் புதிய அணிகளைப் பூட்டி மகிழ்பவர். இவரது ஆராத தமிழ்க்காதலையும் பற்றற்ற தமிழ்த் தொண்டினையும் பொறியியல் ஆராய்ச்சித் திறனையும் கண்ட சென்னை மாநில அரசு இவரைக் கல்லூரித் தமிழ்க் குழுவின் தலைவராக்கியது. அதன் தலைவராக இருந்துகொண்டு தமிழைக் கல்லூரி களிலும் பாடமொழியாக ஆக்கும் ஆக்கத் துறைகளில் அல்லும் பகலும் உழைத்து வருவதை யாவரும் அறிவர். தமிழன்னையைக் கல்லூரிகளிலும் பல்கலைக் கழகத்திலும் அரியணை ஏற்றுவிக்கும் இத்தகைய அறிஞர், என் சிற்றறிவிற்கு எட்டிய வரை சிறிய அளவில் தமிழன்னைக்குப் புத் தணிகளைப் பூட்டி மகிழும் சிறியேனது இந்தச் சிறு நூலுக்கு அணிந்துரை அருளி எனக்கு ஆசிகூறியதைக் கிடைத்தற்கரிய பேறாகக் கருதுகின் றேன். இப்பெரியாரின் ஆசியால் இத்துறையில் என் சிறு பணியும் சிறக்கும் என்ற நம்பிக்கை உண்டு. ஆசிகூறிய அறிஞருக்கு என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

டாக்டர், த. ஆ. புருடோத்தம்அவர்கள் கல்வித்துறையில் ஒரு 'ஜாம்பவான்'; ஒரு பழுத்த மேதை; முதுபெரும் புலவர். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பதின்மூர் யாண்டுகளும், ஆந்திரப் பல்கலைக் கழகத்தில் பத்தாண்டுகளும், மைசூர்ப் பல்கலைக் கழகத்தில் பன்னிரண்டு யாண்டுகளும் பணியாற்றி 1955-லிருந்து திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் மெய்ப்பொருளியற் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்றார்; கடந்த மூன்றாண்டுகளாகப் பல்கலைக் கழகக் கல்லூரி முதல்வராகவும்

இருந்து வருகின்றார். இவர் ஆங்கிலத்தில் 'கேட்டார்ப் பிணிக்குந் தகைய வாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாஞ் சொல்' வன்மை படைத்தவர். எப்பொருளைப்பற்றிப் பேசினும், அதில் சொல்வளமிக்க இலக்கிய மணமும் மெய்ப்பொருளியல் மணமும் கமழும். கடினமான பொருளை-யும் கேட்போர் மனத்தில் ஆழமாகப் பதியும்படி எளிய முறையில் விளக்கும் மொழித்திறம் படைத்தவர். ஐரோப்பிய, இந்திய மெய்ப்பொருளியல்-துறைகளில் நிபுணராக இருப்பினும் இலண்டன் பல்கலைக் கழகத்தில் உளவியல் துறையில் டாக்டர் பட்டம் பெற்றவர். தம்முடைய அன்பாலும் பரிவாலும் உடன்பணியாற்றும் ஆசிரியர் உள்ளங்களையும் தம்கீழ் பயிலும் மாணாக்கர்களின் உள்ளங்களையும் கவர்ந்தவர். 'கீழோராயினும் தாழஉரை' என்ற முதுமொழிக் கிணங்க எவரிடமும் மரியாதையாகப் பழகும் உயர்ந்த பண்புடையவர். இத்தகைய உயர்ந்த பண்புகளையும் சீலங்களையும் ஆராய்ச்சித் திறனையும் உடையவர் இந்த நூலுக்கு 'அறிமுகம்' வழங்கி ஆசிகூறினமைக்கு என் உளங்கனிந்த நன்றி.

இந்நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தினருக்கு—சிறப்பாக அதன் துணை வேந்தர் திரு. எஸ். கோவிந்தராஜுலு நாயடு அவர்கட்கு—என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இப்புத்தகத்தை முப்பது படங்கள் அணி செய்கின்றன. பல சிக்கலான கருத்துக்களைப் புரியவைக்கவும், படிப்போர் அவற்றைப் புரிந்து கொள்ளவும் அப்படங்கள் பெரிதும் துணை செய்கின்றன என்பதைப் புத்தகத்தைப் படிப்போர் நன்கு அறிவர். இப்படங்களை மிகுந்த ஈடு-பாட்டுடன் எழுதி உதவியவர் என்னுடைய அரிய நண்பர் திரு. **வி. முனியாண்டி** அவர்கள்; காரைக்குடி அழகப்பா மாதிரிப் பள்ளியின் ஓவிய ஆசிரியர். அவருக்கு என் இதயங் கனிந்த நன்றி உரியது.

இப்புத்தகத்தை அச்சிட மனமுவந்து ஏற்று விரைவில் வெளியிட்ட மயிலாப்பூர் **எஸ். வாஸன் கம்பெனியாருக்கும்**, இதனை நன்முறை-யில் அச்சிட்டுக் கற்போர் கரங்களில் கவின்பெறத் தவழச்செய்த இராயப்பேட்டை **'ஸ்ரீ இராஜா பவர் பிரஸி'**னருக்கும் என் மனமுவந்த நன்றி-யறிதலைப் புலப்படுத்துகின்றேன்.

அறிவாலும் ஆற்றலாலும் மேற்கொண்டு செயலாற்றும் பணியாலும் சீலத்தாலும் என் உள்ளத்தைக் கவர்ந்தவர் சென்னை மாநில அரசின் நிதி, கல்வி இவற்றின் அமைச்சர் உயர்திரு. **சி. சுப்பிரமணியம்** அவர்கள். கடந்த பத்தாண்டுகட்குமேல் சென்னை மாநில அரசின் அமைச்சரவையின்

உயர் ஒளி வீசும் அருமணியாகத் திகழும் இவர்களது ஆட்சிக்காலத்தில்-தான் தமிழன்னை சட்ட சபையில் அரியணை ஏறினாள். 'தமிழ் ஆராய்ச்சி-வளர்ச்சி ஆலோசனைக் குழு'வினை நிறுவித் தமிழன்னைக்குப் புதுக் கோலம் புனைந்து புத்தணிகள் பூட்டி அரியணை ஏற்றுவிப்பதில் முனைந்து நிற்கும் இவர்களது ஆட்சிக் காலத்தில்தான் தமிழன்னை பல்கலைக் கழகக் கல்வியிலும் பாடமொழியாக அரியணை ஏறத் தகுதிபெற்று வருகின்றாள். முருகனைத் தமிழ்க் கடவுள் என்பர் தமிழறிஞர்; அந்த முருகன் அருளால்-தான் திரு. சுப்பிரமணியம் அவர்கள் தமிழ் நாட்டில் இன்று 'தேவசேனா பதிபோல்' தமிழ்த்தொண்டு புரிகின்றார்களோ என்றுகூடத் தமிழ் மக்கள் கருதுவதில் பொருத்தம் உண்டு. தவிர, இவர்கள் காரைக்குடி அழகப்ப செட்டியார் கல்வி அறநிலையக் குழுவின் உறுப்பினராகவும் பணியாற்றுகின்றார்கள். அக்குழுவினரால் கண்காணிக்கப்பெற்றுவரும் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் கடந்த பத்தாண்டுகள் சிறி யேன் பணியாற்றியபொழுது இவர்களது சிறப்பை நன்றாகத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. இத்தகைய பேரறிஞர்பால் சிறியேன் கொண்டுள்ள பேரன்பிற்கும் பெருமதிப்புக்கும் அறிகுறியாக இவர்கட்கு இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன். இவர்கள் ஆசியால் இந்நூல் தமிழ்கூறு நல்லுலகத்தில் பெருமிதத்துடன் உலவும் என்பது என்திடமான நம்பிக்கை.

எனக்கு இயல்பாகவுள்ள பலவகையான குறைகளால் இப்புத்தகத்தில் பலவித வழுக்கள் நேரிட்டிருத்தல் கூடும். அன்பர்கள் அவற்றைப் பொறுத்தருள்வார்களாக. புத்தகத்தை ஊன்றிப் படித்து மேற்படி குறைபாடுகளைத் தெரிவிப்பார்களாயின் அவர்கட்கு மிகவும் கடப்பா டுடையேன்; அவற்றை அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்வேன் தமிழன்னையின் புதுவாழ்வில் பணியாற்றவும் இப்புத்தகத்தை எழுதி வெளியிடவும் சிறியேன் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றிவைத்த எல்லாம் வல்ல திருவருளை மனம் மெய் மொழிகளால் எண்ணி இறைஞ்சி வாழ்த்துகின்றேன்.

"குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்."

திருவேங்கடவன் பல்கலைக்
கழகம், திருப்பதி.
*12-1-1961.*

இங்ஙனம்,
**ந. சுப்பு ரெட்டியார்**

# அறிவுக்கு விருந்து

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

மனப் பயிற்சி வளர்ச்சிக்கு துணை செய்யும் நோக்கத்துடன்
தொகுக்கப்பெற்ற இந்நூல் கல்லூரி மாணாக்கர்கட்கும்
ஏனைய இளைஞர்கட்கும் நன்முறையில் பயனளிக்கும்
வகையில் ஒன்பது கட்டுரைகளின் அரிய தொகுப்பு

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939317-7-6




eBOOK ~ மின் நூல்

# நூல்முகம்

வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே.[1]

—மாணிக்கவாசகர்.

உளவியலார் மனத்தினைப் பல நிலைகளாகப் பிரித்து ஆய்ந்து பல உண்மைகளை வெளியிட்டுள்ளனர். ஒரு வகையில் அவர்கள் *அறிதல்நிலை*,[2] *உணர்தல்நிலை*,[3] *இயற்றிநிலை*[4] என்று மனத்தை முந்நிலைகளாகப் பகுத்துப் பேசுவர். தனியொரு மனிதனுடைய ஆளுமை[5] சிறந்த முறையில் வளர்ச்சியும் துலக்கமும்[6] அடைய வேண்டுமாயின் இம்மூன்று நிலைகளிலும் அம்மனிதன் பயிற்சி பெறுதல் வேண்டும். இத்தகைய பயிற்சியினைக் கல்வி நிலையங்கள் நல்குகின்றன. பாடத் திட்டங்களும் பயிற்றும் முறைகளும், நிலைய நடவடிக்கைகளும் அதற்கேற்ப அமைக்கப் பெறுகின்றன.

---

1. திருவாசகம்—குழைத்த பத்து-6. 2. அறிதல் நிலை — Cognition.
3. உணர்தல் நிலை - Affection. 4. இயற்றி நிலை - Conation.
5. Personality. 6. துலக்கம்—Development.

'*அறிவுக்கு விருந்து*' என்ற இச் சிறுநூல் ஓரளவு மனப் பயிற்சி வளர்ச்சிக்குத் துணை செய்யும் நோக்கத்துடன் தொகுக்கப் பெறுகின்றது. இது கல்லூரி மாணாக்கர்கட்கும் ஏனைய இளைஞர்கட்கும் நன்முறையில் பயனளிக்கும் என்பது என் கருத்து. இதிலடங்கியுள்ள ஒன்பது கட்டுரைகளில் பெரும்பான்மையானவை பல சமயங்களில் குமரிமலர் (கட்டுரைகள்— 6, 7, 8, 9) தமிழ்நாடு (கட்டுரை–3), தினமணி (கட்டுரை–5) மணிமொழி (கட்டுரை-2) போன்ற இதழ்களில் வெளிவந்தவை. ஏனையவை(கட்டுரைகள்-1,4)இந்நூலுக்கென எழுதப்பெற்றவை.

தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கனார் அவர்களைத் தமிழ் கூறு நல்லுகம் நன்கு அறியும். தமிழ் இலக்கியத்தின் ஆழத்தையும் அகலத்தையும்கண்ட மேதை. எவருடனும் இன்முகத்துடனும் எளிமையுடனும் பழகும் பண்புடையாளர். நவில்தொறும் நூல் நயத்தைக் காண்பது போல அவருடன் பழகுந்தொறும் அவருடைய பண்புடைமையைக் காணலாம். யான் 1950-இல் காரைக்குடிக்கு வந்த நாளிலிருந்தே இவரது தமிழ்ப் புலமை என்னை யீர்த்து அடிமையாக்கிக் கொண்டது. காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் சனிக்கிழமைதோறும் இவர்கள் அளித்த தமிழ் விருந்தை செவியாரக் கேட்டு உளமார அனுபவித்த யான் இந்நூல் விருந்தை அவர்கட்குப் படைக்கின்றேன். மணிவிழாக் கண்டு தமிழ்க்கடலாகவும் சிவமணியாகவும் திகழும் இவர்களது ஆசியால் இந்நூல் பல தமிழ் இளைஞர்களின் உள்ளங்கட்கும் விருந்தாக அமையும் என்பது என் திடமான நம்பிக்கை.

இந்நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அதனைத் தொடங்கிய நாள்தொட்டு மிக்க ஈடுபாட்டுடன் கண்காணித்து வரும் அதன் துணைவேந்தர்

திரு. எஸ். கோவிந்தராஜுலு நாயுடு அவர்கட்கு—என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலை அழகுற அச்சிட்டுக் கற்போர்கரங்களில் கவினுடன் தவழச் செய்த காரைக்குடி சௌத் இந்தியா பிரஸ் உரிமையாளர்கட்கு என் மனமுவந்த நன்றி.

என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு இச்சிறு நூலை வெளியிடத் தோன்றாத் துணையாக நின்று இயக்கிய எல்லாம் வல்ல இறையருளை நினைந்து போற்றுகின்றேன்; அவன் திருவடிமலர்களை எண்ணி வாழ்த்துகின்றேன்; வணங்குகின்றேன்.

காரைக்குடி,<br>
15 - 9 - 62.

ந. சுப்பு ரெட்டியார்.

# இளைஞர் வானொலி

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

அளப்பரிய பயன்களை நல்கும் வானொலியின்
தோற்றம், இயங்குமுறை, இயக்கும் கருவிகள்
முதலியனபற்றி இளைஞர்கள் படித்து அறிந்து
கொள்ளும் வகையில் இந்நூலை
பேராசிரியர் படைத்துளிக்கின்றார்

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939353-4-7

eBOOK ~ மின் நூல்



# நூல்முகம்

ஆத்தி சூடி அமர்ந்த தேவனை
ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே.

—அவ்வையார்.

'சென்றிடு வீர் எட்டுத் திக்கும் - கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்.'

என்று தமிழன்னை தன் மைந்தர்களை நோக்கி வேண்டுவதாக அமைத்துத் தமிழ் மக்களை அறை கூவி அழைக்கின்றார் புதுமைக் கவி பாரதியார். இதற்கு வேண்டிய அறிவியற் கலையறிவு இளமையிலிருந்தே அமைய வேண்டும்; அதற்குரிய ஆர்வமும் சிறு வயதிலிருந்தே கிளர்ந்தெழ வேண்டும். அந்த முறையில் சிறுவர்களை ஊக்குவிக்க இந்த வரிசை நூல்கள் துணை செய்யும்.

தமிழில் அறிவியற்கலைகளை எழுதவும் விளக்கவும் முடியும் என்பதைச் சிலர் இன்னும் ஒப்புக் கொள்வதில்லை. எந்த மொழியும் அதன் வாயிலாகக் கருத்துக்களை விளக்க முயன்றாலன்றிக் கலைச்சொற்களும் தொடர்மொழிகளும் அதன்கண் அமைவதில்லை. பொருள்களை விளக்க முயன்றால் அவை தாமாகவே அமைந்து பொங்கிப் பொலிவுறும். 'சொல்லுந் திறமையும்' (Expressive ability) தமிழ்மொழிக்கு அமையும்.

இந்நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அதனைத் தொடங்கிய நாள் தொட்டு மிக்க ஈடுபாட்டுடன் கண்காணித்துவரும் அதன் துணை வேந்தர் திரு. எஸ். கோவிந்தராஜுலு நாயுடு அவர்கட்கு—என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலை மனமுவந்து ஏற்று வெளியிட்ட திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினருக்கும், நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டுக் கற்போர் கரங்களில் கவினுறத் தவழச் செய்த அப்பர் அச்சகத்தினருக்கும் என் நன்றி உரித்தாகுக.

தமிழ் நாட்டு எண்ணற்ற ஏழைச் சிறுவர்களின் எதிர் காலத்தை எண்ணத்தில் கொண்டு பணியாற்றும் ஏழை பங்காளர் தலைமையமைச்சர் திரு. கே. காமராசர் அவர்கட்கு படைக்கப்பெற்று, அவர்களின் அறுபதாவது ஆண்டு நிறை வின் நினைவு மலராக இந்நூல் வெளிவருகின்றது.

என்னையும் ஒரு கருவியாகக்கொண்டு இச்சிறு நூலை வெளி யிடத் தோன்றாத் துணையாக நின்று இயக்கிய எல்லாம் வல்ல இறையருளை நினைந்து போற்றுகின்றேன்; அவன் திருவடி மலர் களை வணங்கி வாழ்த்துகின்றேன்.

திருப்பதி
1-11-1962

ந. சுப்பு ரெட்டியார்

# தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

தமிழ் இலக்கிய மரபுகளை நன்கு
அறிந்துகொண்டு சங்க இலக்கியங்களை
சுவைக்க விரும்புவோர்க்கு பெருந்துணை
நல்கும்வண்ணம் அமைந்த நூல்

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-938927-0-1

*eBOOK ~ மின் நூல்*



# நூல் முகம்

அடியேன் மேவி அமர்கின்ற
அமுதே! இமையோர் அதிபதியே!
கொடியா அடுபுள் உடையானே!
கோலக் கனிவாய்ப் பெருமானே!
செடிஆர் வினைகள் தீர்மருந்தே!
திருவேங் கடத்துஎம் பெருமானே!
நொடிஆர் பொழுதும் உன்பாதம்
காண நோலாது ஆற்றேனே.[1]

—நம்மாழ்வார்

மேனாட்டு வரலாற்றைப் படித்தோர் 'ரினேசான்ஸ்' (Renaissance) என்ற ஒரு திட்டமான காலவரையறையை நன்கு அறிவர். நடுக்காலத்திற்குப் பின்—ஆனால், நவீன காலத்திற்கு முன்—உள்ள ஒரு காலப் பகுதியே இக்காலவரையறையில் அடங்கும். அஃதாவது, பதினான்காவது நூற்றாண்டின் நடுப் பகுதியிலிருந்து பதினேழாவது நூற்றாண்டின் நடுப்பகுதிவரை—மூன்று நூற்றாண்டுகள்—அடங்கிய காலப் பகுதியாகும் இது. இக்காலப் பகுதியில்தான் மேனாட்டில் இலக்கியம், பண்பாடு, சமூகம், அரசியல் முதலிய துறைகளில் ஒரு பெரிய திருப்பம் ஏற்பட்டது; அத்துறைகள் யாவும் வானுற ஓங்கி வளர்ந்தன. ஒரு புதிய யுகம் தோன்றியது போன்ற மாறுதல் எம்மருங்கும் காணப்பெற்றது. இதைத்தான் மேனாட்டு அறிஞர்கள் 'ரினேசான்ஸ்' என்று கூறுவர். இந்த ஃபிரெஞ்சுச் சொல்லின் பொருள் 'மறு பிறப்பு' (Re-birth) என்பது. தமிழில் நாம் இதனை 'மறுமலர்ச்சி' என்று வழங்கலாம்.

மேனாட்டில் இம்மறுமலர்ச்சி ஏற்படுதற்கு முன்னிருந்த சூழ்நிலையைச் சிறிது நோக்குவோம். நடுக்காலத்தில் சில நூற்றாண்டுகளாக ஐரோப்பியர் வாழ்வு இருள் அடைந்து கிடந்தது. சமயவாதிகளின் கருத்து வேறுபாடுகளும் வாதப்போர் களும் மக்களைக் கொடுமையாய் ஆண்டுவந்தன. எல்லாவற்றை யும், மக்கள் சமயக் கோட்பாடுகளை அளவுகோலாகக்கொண்டுதான் அளந்தனர். சமய சாத்திரங்கட்கு விரிவுரைகளும், விரிவுரைகட்கு மேலும் விரிவுரைகளும் மறுப்புகளும் மறுப்புகளுக்கு மேலும் மறுப்புகளும் எழுதுவதிலேயே அறிஞர்கள் காலத்தைக் கழித்தனர்.

---

1. திருவாய். - 6.10:7

அவர்களது அறிவும் கல்வியும் இவற்றின் பொருட்டே பயன்பட்டன. சமய நூல்களும் சமயக் குருமார்களும் கூறியவையே உண்மை என்றும், இவ்வுண்மைக்கு மாறாக, புறம்பாக, ஓர் உண்மையும் இருக்க முடியாதென்றும் கருதினர். அறிவினைப் பயன்படுத்திப் புதிய உண்மைகளைக் கண்டறிய முயலவும் இல்லை; புதிய உண்மைகளைக் கண்டறிவதும், அவற்றை மக்கட்கு வெளியிடுவதும் பாவச் செயல் என்றே கருதினர்; அங்ஙனம் நம்பவும் செய்தனர். அக்காலத்தில் கற்றவர்கள் கூர்த்த மதியினராக இருந்தும், அம் மதியினைத் தக்கவாறு பயன்படுத்தாமல், சிறுமகார் பொம்மைகளை வைத்து விளையாடுவதுபோல் விளையாடினர். இவ்வுலகினை இயக்கிவரும் இயற்பியல் விதிகளைப்பற்றி இவர்கள் ஒரு சிறிதும் அறியார். ஆயினும், தெய்வத்தின் இயல்பு என்ன, தேவ தூதர்கள் எவ்வளவு விரைவாகச் செல்வர், எவற்றின்மீது இவர்ந்து செல்வர் என்பன போன்ற கற்பனைக் கருத்துகளில் அதி நுட்பமாக வாதப்போர் புரிந்து வந்தனர். புதிய அறிவுத் துறைகளில் நுழைந்து உண்மைகளை ஆராயவேண்டும் என்ற அவா இருந்தும், சமயக் கோட்பாடுகளின் கட்டுப்பாட்டினால்—அவற்றின் பிணிப்பினின்று வெளியேற முடியாமல் திண்டாடினர். கருத்துப்பொருள் வாதத்திலே அழுந்திக் கிடந்த இவர்களால் காட்சிப் பொருள் ஆராய்ச்சிக்குள் நுழைய முடியவில்லை.

இந்நிலையில் ஞானக்கதிரவன் மெதுவாகத் தோன்றத் தொடங்கினான். கி.பி. 1453-ஆம் யாண்டில் உரோமானியத் தலைநகராக வேண்டிய 'காண்ஸ்டாண்டி நோபில்' துருக்கியரால் கைப்பற்றப்பெற்றது. இந்த யாண்டிலிருந்து மறுமலர்ச்சியின் தாக்குதல்கள் ஐரோப்பியரின் அறிவுலகத்தை மோதின. சில அறிவியல் நூல்களும் புதிய அறிவுச் செல்வங்களும் அரபு நாட்டவர் மூலம் சிறிது சிறிதாக இவர்கட்குக் கிடைத்தன. இவற்றால் இயற்கை யுலகைக் காண வேண்டும் என்ற அவா இவர்களிடம் எழுந்தது; அதற்கேற்றவாறு ஆராய்ச்சிக்கண்ணும் திறக்கப்பெற்றது. இப்பொழுது கிரேக்க இலக்கியங்கள் வெளிவரத் தொடங்கின. அச்சுப்பொறியின் கண்டுபிடிப்பால் இந்த இலக்கியங்களும் மற்றைய நூல்களும் மக்களிடையே பல்கிப் பெருகின. சமயத் தளையில் அகப்படாத புதிய அறிவும் புதிய நோக்கங்களும் முகிழ்த்தன. கிரேக்கக் கவிஞர்களின் கற்பனையில் அமைந்த புதிய உலகமும் இவர்கள் கண்முன் தென்பட்டது. கிரேக்க மெய்ப்பொருளியல் அறிஞர்களின் புதிய உலகமும் இவர்கட்கு எதிர்ப்பட்டது. பல நகர்களில் பல்கலைக் கழகங்கள் அமைக்கப்பெற்றன. இளைஞர்கள் புதிய பார்வையில் கல்வியைப் பெறப் பெற அறிவுலகத்தை மூடியிருந்த இருட்படலம் கலையத்

தொடங்கியது. மனிதனிடம் விழிப்பு ஏற்பட்டது. அவன் தன்னையுணர்ந்தான்; தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கை யுலகினையும் கண்டுகொண்டான்; அறிவியல் ஆராய்ச்சியில் நாட்டங் கொண்டான். சோதனை மூலம் காணும் உண்மையே உண்மையென்றும், சமய நூல் ஆராய்ச்சியால் காணும் முடிவு உண்மையல்லவென்றும் உணர்ந்தான்; வெறும் தருக்க வாதத்தால் யாதொரு பயனும் விளைவதில்லை என்பதையும் தெளிந்தான். இந்நிலையில் சில மாலுமிகள் துணிந்து தம் உயிரையும் பொருட்படுத்தாது நீண்டகாலம் கப்பல் பயணம் செய்து புதுநிலப் பகுதிகளைக் கண்டுபிடித்தனர். இதனால் புதிய உணர்ச்சிகள் மக்கள் இதயத்தில் மலர்ந்தன. விடுப்பூக்கம் (Instinct of curiosity) மிக வன்மையுடன் செயற்படத்தொடங்கியது. புதிய கைத்தொழில்கள் தோன்றி வளர்ந்தன. இதனால் மக்களிடையே செல்வமும் பெருகியது; வாழ்க்கை நிலை பல்லாற்றானும் உயர்ந்தது. பழைய இலக்கியங்கள் புதிய கண்கொண்டு ஆராயப்பெற்றன; திறந் தெரிந்து ஆராயப்பெற்றன. கலை, இலக்கியம், சிற்பம், சமயம் முதலிய துறைகளிலும் புத்துணர்ச்சி தோன்றி வளர்ந்தது. இங்ஙனம் ஒரு புது யுகமே தோன்றிவிட்டது. இந்நிலையே மேனாட்டில் தோன்றிய மறுமலர்ச்சியாகும். நீண்ட காலமாக வெளியிற் புலப்படாமல் அமைதியாய்ப் பரவிச் சமுதாயத்தை உள்ளூர இயக்கி வரும் பல்வேறு ஆற்றல்கள் சிற்சில காரணங்களால் திடீரென்று மிக வேகத்துடன் எழுந்து முழுவன்மையுடன் சிலர் வாயிலாக வெளிப்படடுச் சமுதாயம் முழுவதும் அதிர்ந்து எதிரொலிக்கச் செய்து முன்னேற்றப்பாதையில் விரைந்து பாயும் நிலைமையே 'மறுமலர்ச்சி' என்பதை ஈண்டு நாம் தெளிவாக உணர்தல் வேண்டும்.

## 2

மேலே குறிப்பிட்டவாறு பதினான்காவது நூற்றாண்டின் நடுப் பகுதிக்கு முன்னால் ஐரோப்பாவில் நிலவிய இருள் நிலைமையைப் போன்றதொரு நிலை சற்றேறக்குறைய நூறு யாண்டுகட்கு முன்னர்த் தமிழ்நாட்டிலும் நிலவியது என்று சொல்லலாம். இங்குச் சமயப் பூசல்களும் வாதப் போர்களும் எம்மருங்கும் காட்சியளித்தன. சைவ-வைணவப் பூசல்கள், வைதிக—கிறித்தவப் போர்கள் எங்கும நிகழ்ந்தவண்ண மிருந்தன. அத்வைத சண்டமாருதங்கள், தருக்கக் குடாரங்கள், ஆபாச நிரசனங்கள், அருட்பா-மருட்பாப் போர்கள் மக்களது அறிவினைச் சூறையாடி வந்தன. சிவஞான முனிவர், அரசன் சண்முகனார், ஆறுமுக நாவலர் போன்ற பேரறிஞர்களும் இவ்வித விநோத விளையாட்டு

களில் பங்கு கொண்டனர்; வயிரக் குப்பாயங்கள் அமைத்தனர்; கண்டன கண்டனங்கள் இயற்றினர்; இலக்கணச் சூறாவளிகள் போன்ற பல சூறாவளிகள் எழுந்தன. தமிழ்நாடெங்கும் வாதீப சிங்கங்களும், பரசமயக் கோளரிகளும், தருக்கப் புலிகளுமாக நிரம்பியவண்ணமிருந்தனர். இறைவனது இயல்பு, உயிர்களின் இயல்பு, ஐந்து பூதங்களின் இயல்பு ஆகியவை துருவித்துருவி ஆராயப்பெற்றன. முத்தியின் இயல்பு நீரும் உப்பும் கலந்தது போன்றதா, அல்லது நீரும் பாலும் கலந்தது போன்றதா என்பது பற்றிப் பெரும் போர்கள் விளைந்தன. எங்குப் பார்த்தாலும் சொல்மாரிகள் நடைபெற்றவண்ணமிருந்தன. அறிவுபற்றிய அனைத்திலும் சமயம் கொடுங்கோலாட்சி புரிந்து வந்தது என்று சொல்லுவது மிகையன்று. வடமொழித்தருக்க சாத்திரங்களும் மெய்விளக்க நூல்களும் இந்தக் கொடுங்கோலாட்சிக்குத் துணை புரிந்தன; எரிகின்ற நெருப்பில் எண்ணெயை ஊற்றியது போன்ற நிலையை உண்டாக்கின. அறிவு விளக்கத்தை நாடிச் சென்றவர் கள் இருட்படலத்தினுள் சிக்கிக்கொண்டு தத்தளித்தனர்; குளிக்கப் போய்ச் சேற்றை வாரிப் பூசிக்கொண்டது போன்ற நிலையை மக்கள் அடைந்தனர்.

‘ஆறு கோடி மாயா சக்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின;
ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்;
விரத மேபர மாகவே தியரும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்;
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்;
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழித்தடித் தார்த்து
உலோகா யதம்எனும் ஒண்திறல் பாம்பின்
கலாபே தத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை எனைப்பல சூழவும்’[2]

என்று மணிவாசகப்பெருமான் காட்டிய சூழ்நிலையைப் போன்ற ஒரு நிலை இங்கும் காணப்பெற்றது. வீணான வாதப் போர் களில் மக்கள் காலங் கழித்தனர்; எம்மருங்கும் குதர்க்க மயம்; விதண்டா வாதங்கள்!

---

2. திருவாச. போற்றித் - அடி 44-57

பதினேழாம் நூற்றாண்டில் திகழ்ந்த தாயுமான அடிகள் (கி. பி. 1608-1664) இந்தத் தருக்கப் பூசல்களையும் பிற செயல்களையும்,

கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்;
கற்றும்அறி வில்லாதஎன்
கன்மத்தை என்சொல்வேன் மதியைஎன் சொல்லுவேன்;
கைவல்ய ஞான நீதி

நல்லோர் உரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன்; கர்மம் ஒருவன்
நாட்டினா லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன்; வடமொ ழியிலே

வல்லான் ஒருத்தன் வரவும்திரா விடத்திலே
வந்ததா விவகரிப் பேன்;
வல்லதமி ழறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிது புகல்வேன்;

வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்தி தருமோ?
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.[3]

என்ற பாடல் மூலம் தெளிவாக எடுத்துரைப்பது ஈண்டுக் கருதத்தக்கது.

இந்த நிலையில் ஐரோப்பியர் நம் நாட்டிற்கு வந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியா முழுவதும் ஆங்கிலேய ஆட்சியைப் பெற்றது. மெக்காலே பிரபு ஆழ்ந்து சிந்தித்துச் செய்த பரிந்துரையின் பேரில் ஆங்கில அரசினர் இந்தியருக்கு மேனாட்டுக் கல்வியை அளிக்கவேண்டுமென்று தீர்மானித்தனர். இதனால் இந்தியாவின் குன்றிப்போன நாகரிகமும், உயிரற்ற ஆசாரப் பழக்க வழக்கங்களும் நவீன நாகரிகத்தால் மறைமுகமாகத் தாக்கப் பெற்றன. ஆங்கிலேயரின் ஆட்சி முற்றிலும் நிறுவப்பெறுவதற்கு முன்பே கிறித்தவ சமயம் இந்தியாவில்—முக்கியமாகத் தமிழ் நாட்டின் கீழ்க்கரையோரத்திலும் மேற்கரையோரத்திலும்—பரவத் தொடங்கியது. கிறித்தவப் பாதிரிமார்களின் சமயப் பிரச்சாரம், அந்தப் பிரசாரத்தின் ஒரு பகுதியாக அவர்கள் அளித்த கல்வி, அரசினரால் நடத்தப்பெற்ற கல்விக்கூடங்கள், ஆங்கில ஆட்சி

3. தாயுமானவர் பாடல்—சித்தர் கணம் - 10.

முறைகள், வாணிகம் முதலியவை நவீன நாகரிகத்தை நம் நாட்டிற்குள் கொண்டுவந்தன. ஆங்கில ஆட்சிக்குத் தேவையான எழுத்தர்களைத் தோற்றுவிப்பதற்கெனக் கல்வி முறை அமைந்தாலும் நவீன நாகரிகத்தைப் பெறவும், அறிவியற்கலைகளை அறியவும் ,விடுதலையுணர்ச்சியுடன் மேனாடுகளில் மக்கள் ஆட்சி நடைபெற்றுக்கொண்டிருப்பதைப் பார்க்கவும் அக்கல்வி முறை மக்களுக்குத் துணை செய்தது. மேனாட்டு நாகரிகம் நம் நாட்டுச் சமுதாயத்தையும் கலைகளையும் மூடியிருந்த இருட்படலத்தை நீக்க முயன்றது. தொடக்கத்தில் இந்தியர்களில் சிலர் நவீன நாகரிகத்தில் மூழ்கித் தங்கள் பழமையை வெறுத்தாலும், நாளடைவில் நவீன அறிவால் தம்முடைய கலைகளையும் நாகரிகத்தையும் ஆராயத் தொடங்கினர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தேசிய இயக்கம் தோன்றியது. சமுதாய உணர்ச்சியும் ஒற்றுமையுணர்வும் நாட்டுப் பற்றும் நாட்டில் வேகமாகப் பரவின. மக்கள் பண்டைய நாகரிகத்தின் சிறப்பையும் கலைகளின் வளத்தையும் இயக்கத்தின் பெருமையையும் அறிய அறிய, அவர்களிடம் நாட்டன்பும் விடுதலை யுணர்ச்சியும் வலுப்பெற்றன. இதன் பயனாகப் பல இந்திய மொழிகளில் புதுக்கவிஞர்கள் தோன்றினர். தமிழகத்தில் சுப்பிரமணிய பாரதியார் தலைசிறந்த கவிஞராகத் திகழ்ந்தார்; புதிய பாணியில் மணிமயமான பண்களைக் கொட்டும் பாடல்களைப் பாடிக் குவித்தார். அச்சுப் பொறிகள் நாட்டில் நிறுவப்பெற்றதனால் நெடுங்காலமாக மக்கள் பார்வைக்குக் கிட்டாமல் சுவடிகளில் புதையுண்டு கிடந்த நமது பண்டைய இலக்கியங்கள் அச்சில் வெளி வந்து பலர்க்கும் கிடைத்தன. திரு சி. வை. தாமோதரம் பிள்ளை, திரு. அனந்தராமய்யர், திரு. பின்னத்தூர் நாராயணசாமி அய்யர், டாக்டர் உ. வே.சாமிநாதய்யர் ஆகியோர் பண்டைய இலக்கியங் களை வெளியிட்டனர். இறுதியில் குறிப்பிடப்பெற்ற பெரியார் ஈடும் எடுப்புமற்ற பதிப்பாசிரியராகத் திகழ்ந்தார். திரு. வி. கனகசபை பிள்ளை, பேராசிரியர் பி. சுந்தரம்பிள்ளை, திரு பி. டி. சீனிவாசய்யங்கார், திரு. ரா. இராகவய்யங்கார், தவத்திரு. மறைமலையடிகள் ஆகியோர் பண்டைத் தமிழ் நாகரிகச் சிறப்பையும் பண்டைய இலக்கிய நயங்களையும் அறிவுறுத்தினர். இவர்களைப் பின்பற்றிப் பல அறிஞர்கள் மறுமலர்ச்சியின் தூதுவர்களாய் அமைந்தனர்.

டாக்டர் கால்டுவெல் திராவிட மொழியினம் என்ற ஒரு பிரிவை உலகிற்குணர்த்தி, அக்குழுவினுள் தமிழ், பண்டைப் பெருமை யையும் புகழையும் இலக்கியப் பரப்பையும் உடைய பண்பட்ட

மொழி என்று காட்டினார். இவர் காட்டிய பாதையில் பலர் மொழியியல் துறையில் தம் கவனத்தைச் செலுத்தி ஆராயத் தொடங்கினர். சமயச் சிறைச்சாலையினின்றும் வெளிப்போந்து, விடுதலை பெற்று, மக்கள் புதிய அறிவுலகத்திற்குள் புகுங்காலம் தோன்றியது. ஆங்கில இலக்கிய அறிவும் மேனாட்டு அறிவியல் அறிவும் நமக்கு இப்புத்துணர்ச்சியை அளித்தன. இந்நிலையில் 1947-இல் நமக்கு விடுதலையும் கிட்டியது; அந்நிய ஆட்சியினின்று விடுபட்டோம். இதற்கு முன்னர் ஏற்பட்ட பல்கலைக் கழகங்களாலும், புதிதாக நிறுவப்பெற்ற பல்கலைக் கழகங்களாலும் மக்கள் கல்வி பெருகிற்று. நம் நாட்டிலும் ஒரு புதுயுகம் தோன்றத் தொடங்கியது. இதுவே நமது நாட்டில் தோன்றிய 'மறுமலர்ச்சி'யாகும்.

மக்களின் மனப்பான்மை விரிந்து நவீன ஒளியைப் பெற வேண்டுமென்ற ஓர் உணர்ச்சித் துடிப்பு எம்மருங்கும் காணப்பெறுகின்றது. இந்த உணர்ச்சி, இலக்கியங்களிலும் நிழலிடுகின்றது. பழைய கதைகளும், புராணங்களும், பாட்டுகளும் சுவையற்றுப் போயின. நவீன உணர்ச்சித் துடிப்புடன் கூடிய கவிதைகளும் புதினங்களும் சிறுகதைகளும் உண்டாகிப் பெருகி வருகின்றன. இன்று இளைஞர்களிடையே சங்க இலக்கியங்களின்மீது ஆராக் காதல் பிறந்துள்ளது. இதற்கு மறைமலையடிகள் முக்கிய காரணமாவார். அவரைத் தொடர்ந்து பணியாற்றிய பலருள் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை ஆகியோரும், இன்று பணியாற்றிவரும் திரு. கி.வா. ஜகந்நாதன், டாக்டர் மு. வரதராசனார் ஆகியோரும் குறிப்பிடத்தக்கவர்கள். திரு. கி. வா. ஜ. அவர்களின் 'சங்க நூற் காட்சிகள்' என்ற தொடரில் வந்த எட்டு நூல்களும், டாக்டர் மு. வ. அவர்களின் குறுந்தொகை, நெடுந்தொகை, நற்றிணை விருந்துகளும் விளக்கங்களும் இளைஞர்களின் சங்க இலக்கியக் காதலுக்குத் தூண்டுகோல்களாக அமைந்தன. சென்ற சில யாண்டுகளில் இதற்கு முத்தாய்ப்பு வைத்ததுபோல் பல மலிவுப் பதிப்பு நூல்கள் தோன்றி அனைவர் கைக்கும் கிட்டியுள்ளன. இந்த மலிவுப் பதிப்பு நூல்களை உயர்ந்த முறையில், நல்ல அச்சுடன் பிழைகளின்றி, அதிகச் செலவினையும் பொருட்படுத்தாது, அப்பொறுப்பினைத் தாமே ஏற்றுக்கொண்டு வெளியிட்ட பெருமை திரு. எஸ். ராஜம் (உரிமையாளர், மூர்ரே கம்பெனி, சென்னை - 1) அவர்களைச் சாரும். அவருடைய சீரிய தமிழ்ப் பணியைத் தமிழ்நாடு என்றும் மறக்காது; நன்றியுடன் போற்றும். இந்நிலையில் பண்டைப் பெருமையையுடைய தொல்காப்பியம் என்ற இலக்கண நூலுக்கும் ஒருசில விளக்க, ஆராய்ச்சி நூல்கள் தோன்றியுள்ளன.

3

மேற்குறிப்பிட்ட சூழ்நிலையில் 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை' என்ற நூல் வெளிவருகின்றது. இந்நூலின்கண் 34 கட்டுரைகள் அடங்கியுள்ளன; இறுதிக் கட்டுரை நூலின் பெயராக அமைந்தது. இவற்றுள் பத்துக் கட்டுரைகள் 1953, 1954 யாண்டுகளில் **அமுதசுரபி** என்ற திங்கள் இதழ்களில் வெளிவந்தன. ஏனையவை அதன் பின்னர் வெவ்வேறு சமயங்களில் எழுதப்பெற்றன. திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பணியேற்றபின் (ஆகஸ்டு - 1960) ஒருசில கட்டுரைகள் எழுதப்பெற்றன. பல சமயங்களில் பல நோக்குடன் எழுதப்பெற்றமையான் இவற்றுள் ஆங்காங்கே 'கூறியது கூறல்' காணப்பெறும்; எனினும், அவை விளக்கம்பற்றி வந்தனவாகக் கொள்ளல் பொருந்தும். பல யாண்டுகள் கழிந்து நூல் வடிவமாக வரும் இக்கட்டுரைகள் யாவும் 'தொல்காப்பியம்—பொருளதிகாரம்' பயில்வாருக்கு ஒரு வழித்துணை விளக்கம்போல் அமையும்; ஏனையோருக்கும் தொல்காப்பியத்தைப்பற்றிய கருத்துகளை எளிதாகப் பெறுவதற்குத் துணையாக இருக்கும். இந்த நூலைப் பயில்வோர் "கவிதை வாழ்க்கையிலிருந்து மலர்ந்தது; அது வாழ்க்கைக்கே உரியது; வாழ்க்கைக்காகவே அது நிலை பெற்றுள்ளது" என்று கவிதையைப்பற்றி ஹட்சன் என்ற மேனாட்டுத் திறனாய்வாளர்[4] கூறிய கருத்து ஒல்காப் பெரும்புகழ் 'தொல்காப்பியம்' என்ற நூலுக்குப் பெரிதும் பொருந்துவதை நன்கு அறிவர். 'அமுதசுரபி'யில் வெளிவந்த கட்டுரைகளை இந்நூலில் சேர்த்து வெளியிட இசைவுதந்த அந்த இதழாசிரியருக்கு என் நன்றி உரியது.

பல்லாண்டுகளாகச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்த் துறையில் பெரும்பணியாற்றிக் கடந்த இரண்டாண்டுகளாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராக இருந்து, அத்துறையை அணி செய்யும் டாக்டர் மு. வரதராசனாரைத் தமிழ்கூறு நல்லுலகம் நன்கறியும். கடந்த இருபது யாண்டுகளாக அவரை யான் நன்கு அறிவேன். பழைய பரம்பரைத் தமிழ்ப் புலவர்களையும் புதிய பரம்பரைத் தமிழ்ப் புலவர்களையும் இணைத்து நிற்கும் பெரும்புலவர் அவர். பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் நின்று அறிவொளி வீசும் ஆசிரியமணியாவார். உழைப்பினால் உயர்ந்தமைக்குத் தமிழ் நாட்டு இளைஞர்கட்கு எடுத்துக்காட்டாக நின்று நிலவுபவர். இவருடைய எழுத்துகளில் புலமை மணம்

---

4. Hudson, W.H.: **An Introduction to the Study of Literature**-pp-92.

கமழும்; ஆராய்ச்சித் திறன் ஒளிரும்; சிந்தனைச் சுடர் தெறிக்கும். இவருடைய கருத்துகளில் ஆழ்கடலைப் போன்ற ஆழமும் உண்டு; அதனைப் போல் அவை அகன்றும் காணப் பெறும். இலக்கியம், திறனாய்வு, ஆராய்ச்சி, மொழியியல், நாடகம், புதினம், சிறுகதை, கடிதங்கள் போன்ற பல்வேறு வகை இலக்கியங்களை அணி அணியாக வெளியிட்டுத் தமிழன்னையின் மகிழ்ச்சியைப் பொங்கச் செய்தவர்; செய்து வருகின்றவர். தமிழ் ஆராய்ச்சியும் தமிழில் புதிய இலக்கிய வகைகளைப் படைக்கும் ஆற்றலும் நிறைந்த இவரைத் 'தமிழ் நாட்டு **பெர்னாட்ஷா'** என்று கூறினும் மிகையன்று. வல்லவர்; நல்லவர்; எவருடனும் இன்முகத்துடன் புன்முறுவல் காட்டி உரையாடும் பண்புடையாளர். 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற வள்ளுவவர் வாக்கிற்கு இலக்காக நிற்கும் உயர்குணச் செம்மல். தமிழ் மூதறிஞர் **திரு. வி. க.** தமிழ் மக்களின் உள்ளத்தில் நான்கு எழுத்துகளில் நிலையாக வாழ்கின்றார். அவர் காட்டிய பாதையில் செல்லும் இவர் 'மு. வ.' என்ற இரண்டெழுத்து களில் தமிழ் இளைஞர்களின் உள்ளத்தில் நிரந்தரமாக இடம் பெற்றுவிட்டார். இத்தகைய அறிஞர்—பண்புடையாளர்—எனது இந்நூலுக்கு அணிந்துரையருளி ஊக்கியமைக்கு என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

கடந்த பதினெட்டு யாண்டுகட்கு மேலாகப் பேராசிரியர் **அ. சீனிவாசராகவன்** அவர்களை அறிவேன். துறையூர் உயர் நிலைப் பள்ளித் தலைமையாசிரியனாகப் பணியாற்றிய காலத்தி லும், அதன் பின்னர் காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பேராசிரியனாகப் பணியாற்றிய காலத்திலும், முறையே ஆசிரியர் மாநாடுகளிலும், பல இலக்கியக் கூட்டங்களிலும் கலந்து பழகியுள்ளேன். ஆங்கிலத்திலும் அருந்தமிழிலும் தேனூறும் சொற்களால் இனிக்க இனிக்கப் பேசும் நாவீறு படைத்தவர். ஆங்கிலப் பேராசிரியரான இவர் அருந்தமிழை நன்கு கற்றவர். தமிழ் கூறு நல்லுலகம் எங்கும் உலாப்போந்து தமிழ்ப்பணியாற்றுபவர். சில்லாண்டுகள் **'சிந்தனை'** என்ற திங்கள் இதழின் ஆசிரியராகப் பணியாற்றிய உயர்ந்த சிந்தனையாளர். கம்பன் புகழ் பாடுபவர். பல தமிழ் நூல்களின் ஆசிரியர். தூத்துக்குடியில் கப்பலோட்டிய தமிழன் பெயரால் நிறுவப்பெற்ற கல்லூரியில், அது தோன்றிய நாள் தொட்டு அதன் முதல்வராகவும், பல்லாண்டுகள் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவின் (Syndicate) உறுப்பின ராகவும் பணியாற்றுபவர். என்னுடைய உழைப்பையும் வளர்ச்சியையும் நன்கு அறிந்து, என் பணியில் என்னை மென்

மேலும் ஊக்குவிப்பவர். எவருடனும் எளிமையாகவும் உள்ளங் குழைந்தும் பழகும் உயர்ந்த பண்புடையாளர். இத்தகைய பெரியார் இந்நூலுக்கு 'ஆங்கில முன்னுரை' வழங்கி ஆசி கூறியமைக்கு என் உளங்கனிந்த நன்றியும் வணக்கமும் உரியவை.

திருவையாறு அரசர் கல்லூரியில் பல்லாண்டுகளாகத் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி, நூற்றுக்கணக்கான மாணாக்கர்கட்கு உயர்ந்த முறையில் பாடஞ்சொல்லி, அவர்கள் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு அவர்களைப் புலவர்களாக்கிய பேராசிரியர் பு. ரா. புருடோத்தம நாயுடு அவர்கள் கடந்த பதினைந்து யாண்டுகட்கு மேலாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையை அணி செய்பவர்கள். தமிழன்னைக்கு, இவர் செய்துள்ள தொண்டு பொன்னெழுத்துகளால் பொறிக்கத் தக்கது. இவர்களால் தமிழன்னை பெற்ற செல்வம் ஒப்புயர் வற்றது. இறைவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற நம்மாழ்வார் அருளிசெய்த 'திருவாய்மொழி'க்கு மணிப்பிரவாள நடையிலுள்ள 'ஈடு' என வழங்கும் முப்பத்தாறாயிரப்படியை (நம்பிள்ளை அருளிச்செய்த இது வடக்குத் திருவீதிப் பிள்ளையால் எழுதிவைக்கப்பட்டது) தமிழாக்கிப் பத்துத் தொகுதி களாகத்[5] தமிழர்கள் கையில் கிட்டும்படி செய்த மேதை; உண்மைத் தமிழ்த் தொண்டர். தமிழ்மொழி உள்ள அளவும் 'ஈட்டின் தமிழாக்கமும்' நின்று நிலவும் என்பதற்கு ஐயமில்லை. இங்ஙனம் திருந்திய உள்ளத்தை மாலடிக்காக்கிச் சேவையைத் தமிழ்மொழிக்காக்கிய பேராசிரியர் நாயுடு அவர்கள் அமைதியான போக்கும் உயர்ந்த நெறியும் உடையவர்கள். 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்ற தொல்காப்பியரின் இலக்கணத்திற்கு இலக்கியமாக — எடுத்துக்காட்டாக — அமைந்தவர்கள். இத்தகைய பெரியார் என்மீது என்றும் கொண்டுள்ள கெழுதகை அன்பினால் எனது இந்த நூலுக்கு 'முன்னுரை' அருளி ஆசி கூறியதற்கு என்றென்றும் கடமைப் பட்டுள்ளேன்; இவருக்கு என் நன்றியும் வணக்கமும் உரியவை.

இந்நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அதனைத் தொடங்கிய நாள்தொட்டு மிக்க ஈடுபாட்டுடன் கண்ணெனக் காத்து வரும் அதன் முதல் துணைவேந்தர் திரு. எஸ். கோவிந்தராஜுலு நாயுடு அவர்கட்கு—என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

---

5. சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு.

காலத்திற்கேற்ற நூல்களை வெளியிட்டுத் தமிழ் நாட்டில் சிறந்த முறையில் தமிழ்ப்பணியாற்றி வரும் **பழனியப்ப சகோதரர்கள்** இந்தப் பெரிய நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அவர்கட்கும், நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டுக் கற்போர் கரங்களில் கவினுடன் தவழச் செய்த **ஏஷியன் அச்சகத்தாருக்கும்** என் மனமுவந்த நன்றி என்றும் உரியது.

அறிவாலும் ஆற்றலாலும் ஒழுக்கத்தாலும் உயர்ந்த சீலத்தாலும் இத்தனைக்கும் மேலாகச் செயலாற்றும் திறனாலும் என் உள்ளத்தைக் கவர்ந்தவர்கள் — தமிழ் கூறு உலகிற்கு அறிமுகப்பட்டவர்கள் - உயர்திரு. **எஸ். கோவிந்தராஜுலு நாயுடு** அவர்கள். பல்லாண்டுகளாகச் சென்னைச் சட்டக் கல்லூரியில் பேராசிரியராகவும் முதல்வராகவும் பணியாற்றித் தமிழ்நாடு, ஆந்திரம், கேரளம் ஆகிய மூன்றிலும் உள்ள பல்லாயிரக் கணக்கான மாணாக்கர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டவர்கள். 'இந்தியன் பீனல் கோட்' என்ற சட்டத்தை இலக்கியம் போல் சுவையாகக் கற்பித்துப் பலரை உயர்ந்த சட்ட நிபுணர்களாக்கியவர்கள். மூன்றாண்டுகள் தமிழ்நாட்டுக் (அப்பொழுது சென்னை, ஆந்திரம், கேரளம் கர்நாடகம், அடங்கிய பகுதி) கல்வித்துறை இயக்குநராகப் பணியாற்றித் தம் சீலத்தாலும் உயர்ந்த பண்பாட்டாலும் பல்லாயிரம் ஆசிரியர்களின் உள்ளங்களைக் கவர்ந்தவர்கள். பல்லாண்டுகள் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவின் உறுப்பினராகவும், இடையிடையே துணை வேந்தராகவும் இருந்து பணியாற்றி, அப்பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சர். ஆ. இலக்குமணசாமி முதலியார் அவர்கட்கு உறுதுணையாக நின்று பெரும்புகழ் பெற்றவர்கள். அன்றியும், சென்னைப் பல்கலைக் கழகத் தெலுங்குப் பாடத்திட்ட ஆய்வுக் குழுவிலும், கீழை நாட்டு மொழிகளின் பாடத்திட்ட ஆய்வுக் குழுவிலும் உறுப்பினராகவும் தலைவராகவும் ஏறக்குறைய முப்பதாண்டுகளாகப் பணியாற்றி, மக்களுக்குக் கண்போல் விளங்கும் மொழிகளின் தரத்தை உயர்த்தி மொழித் துறையை வளமாக்கி வருபவர்கள். கடந்த பல யாண்டுகளாகத் "தென்மொழி புத்தகப் பொறுப்பாட்சிக் குழுவிற்கு" த் (Southern Languages Book Trust) தலைவராக இருந்து, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளிலும் பொது மக்களுக்கெனப் பல நூல்கள் வெளிவரக் காரணமாக இருந்து வருபவர்கள். கடந்த ஒன்பதாண்டுகளாகத் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக இருந்துகொண்டு அதன் வளர்ச்சியிலும் பெருமையிலும் அதிகக் கவனம் செலுத்திக்

கண்காணித்து வருபவர்கள். இத்தகைய கல்வித் துறை 'ஜாம்பவான்' திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திலும் 'தமிழ்' இடம் பெறச் செய்து, அதன் வளர்ச்சியில் 'கடைக்கண் நோக்கத்தைக்' கொண்டவர்கள். ஒருதலைச் சார்பற்ற உள்ளத்தைக்கொண்ட இவர்கள் ஆசியாலும் 'பைந்தமிழ்ப்பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலின்' திருவருளாலும் தமிழ்த் துறை விரிவடைந்து, பல தமிழறிஞர்கள் ஒருங்கிருந்து பணி யாற்றும் வாய்ப்பு அண்மையில் ஏற்பட வேண்டும். அன்றியும், பல்கலைக் கழகங்களின் ஆலோசனைக் குழு (Inter-University Board) வின் தலைவராக இருந்து பல்கலைக் கழகக் கல்வியின் தரம் குறையாதிருக்கப் பாடுபடுபவர்கள். ஆந்திர மாநில மேல் சட்ட சபையில் உறுப்பினராக இருந்து அரசியலிலும் தம் ஆழ்ந் தகன்ற அநுபவத்தை வழங்குபவர்கள். ஆசிரியர்களின் தோன்றா துணையாகவுள்ள இத்தகைய பேரறிஞரின்பால் கொண்டுள்ள பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் அறிகுறியாக இப்பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் பணியாற்றும் சிறியேன் இந்நூலை அவர்கட்கு அன்புப் படையலாக்குகின்றேன். இவர்கள் ஆசியால் இந்நூல் தமிழ்கூறு நல்லுலகத்தில் பெருமிதத்துடன் உலவும் என்பது என் திடமான நம்பிக்கை.

எனக்கு இயல்பாகவுள்ள பல வகையான குறைகளால் இந் நூலின் பொருட்புணர்ப்பில் பலவித இடைவெளிகள் ஏற்பட் டிருத்தல் கூடும். அறிஞர்களும் அன்பர்களும் அவற்றைப் பொறுப்பார்களாக. அவர்கள் அத்தகைய இடைவெளிகளையும் ஏனைய குறைகளையும் சுட்டியுரைப்பார்களாயின் அவற்றை நிறைவு செய்து அடுத்த பதிப்பில் இணைத்துக்கொள்வேன். இந்நூலை எழுதி வெளியிடுவதற்கு யான் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றி வைத்த எல்லாம் வல்ல திருவருளை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகிறேன்.

வேண்டத் தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதுந் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
வேண்டி என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயாது அருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசுஒன்று உண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே.[6]

திருப்பதி
15-2-63

ந. சுப்பு ரெட்டியார்

6. திருவாசகம்,—குழைத்த பத்து-6

# அதிசய மின்னணு

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

மனிதனின் அன்றாட வாழ்க்கை முதல் அவன் வானுலகைத்
துருவித் துருவி ஆராய்வது வரை மின் அணுவின்
ஆற்றல் எப்படி யெல்லாம் பயன்படுகின்றது
என்பதை – ஆங்காங்கே தக்க படங்களுடன் –
பதினோரு தலைப்புகளில் அழகுபடச் சுருங்கச்
சொல்லி விளங்க வைக்கின்றார. பேராசிரியர்.

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939561-3-7




eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

"அணுவிற் கணுவாய் அப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தில் நிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே."*

இஃது அறிவியல் ஊழி (epoch). கடந்த பல நூற்றாண்டுகளில் ஏற்பட்ட அறிவியல் வளர்ச்சியின் அளவைவிட இந்த நூற்றாண்டில் அதன் வளர்ச்சியின் அளவு மிக அதிகமாக ஏற்பட்டுள்ளது. பல நூற்றாண்டுகளாக வாமனன் போலிருந்த அது திடீரென்று இந்த நூற்றாண்டில் திரிவிக்கிரம அவதாரம் எடுத்துள்ளது. இன்னும் அதன் வளர்ச்சி எந்த அளவிற்குப் போகும் என்று இப்பொழுது சோதிடம் கூறுவதற்கில்லை. நேற்றுக் கண்டறியப் பெற்றவை இன்று 'பத்தாம் பசலிகளாகப்' போகின்றன. இவற்றையெல்லாம் கருத்திற்கொண்ட மேனாட்டு அறிஞர் ஒருவர் 'இந்த நூற்றாண்டு கருத்துக்கள் வெடித்த காலம்' என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு விரைவாக வளர்ந்து வரும் அறிவியல் துறையில் 'மின்னணுவியல்' (electronics) என்பது ஒரு பிரிவு; பௌதிக இயலைச் சார்ந்தது. இப்பிரிவில் மின்னணு (electron) 'அலகிலா விளையாட்டுடையார்' போல் புரியும் திருவிளையாடல்கள் எண்ணற்றவை. அத் திருவிளையாடல்களால் நாம் பெறும் நன்மைகளும் கணக்கிலடங்கா. இவற்றைச் சுருக்கமாக விளக்குவதுதான் 'அதிசய மின்னணு' என்ற இச் சிறுநூல்.

அறிவியல் கருத்துக்கள் இளமையிலேயே சிறுவர்கள் உள்ளத்தில் கால்கொள்ளச் செய்தல் வேண்டும். கல்வியாளர்கள்

* விநாயகரகவல் - வரி (64-71)

இதனைக் கருத்தில் கொண்டு பணியாற்ற வேண்டும். ஐ. நா. அவையின் ஒரு பகுதியாகிய 'கல்வி - அறிவியல் - பண்பாட்டுக் கழகம்' இதில் பெருங்கவனம் செலுத்தி வருகின்றது. இதற்குத் துணையாக அறிவியல் பாடப் புத்தகங்கள் நேர்த்தியாக அமைய வேண்டியது ஒருபுறமிருக்க, மாணாக்கர்கள் தாமாகவே அறிவிய லின் பல பிரிவுகளைப்பற்றிய செய்திகளை அறிந்து கொள்வ கேற்றவாறு எளிய முறையில் அவர்கட்கு ஆர்வமூட்டும் வ யில் பற்பல நூல்கள் சுவையாக எழுதப் பெறுதல் வேண்டு கடந்த பல ஆண்டுகளாகப் பல துறைகளில்—குறிப்பாகக் கதை துறையில்—சிறுவர்கட்கெனப் பல நூல்கள் வெளிவந்தி பினும், அறிவியல் துறையில் அவை அத்தி பூத்தமாதிரி எங் ஒன்றிரண்டுதான் தலைகாட்டி வருகின்றன. இக்குறை விரைவ நீங்கவேண்டும். இந்தக் குறை இந்த வரிசை நூல்களால் ஓரள நீங்கும்.

இந்த நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கட பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அதனைத் தொடங் நாள்தொட்டுப் 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந் கண்காணித்து வரும் அதன் துணைவேந்தர் திரு. எஸ். கோவி ராஜுலு நாயுடு அவர்கட்கு—என் உளங்கனிந்த நன்றி என் உரியது.

காலத்திற்கேற்ற அரிய நூல்களை வெளியிட்டு வரும் 'கழக இந்த நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்காக அத் தலைவராக 'என்றும் இளையராய்' நின்று அருந்தமி பணியாற்றி வரும் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கட் நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டுக் கற்போர் கைகள கவினுடன் தவழச் செய்த அப்பர் அச்சகத்தினருக்கும் என் நன் என்றும் உரியது.

அறிவாலும் ஆற்றலாலும் வாழ்க்கை நெறிச் சீலத்தா உயர்ந்த பண்பாட்டாலும் என் உள்ளத்தைக் கவர்ந்த தமிழகக் கல்வித்துறை இயக்குநர் திரு. நெ. து. சுந்தரவடிவே அவர்கள். இவர் பல்லாண்டுகள் மாவட்டக் கல்வி ஆணையா ராகவும், சென்னை மாநகராண்மைச் சிறப்புக் கல்வித்துறை ஆ

ளராகவும் பணியாற்றிக் கடந்த ஒன்பதாண்டுகட்குமேல் மிழகக் கல்வித்துறை இயக்குநராகப் பணியாற்றி வருபவர். மிழ் நெஞ்சங்கொண்ட இவரால் தமிழ் நாட்டு ஆசிரியர்களும் ாணுக்கர்களும் அடைந்த ஏற்றங்களும் நன்மைகளும் பலப்பல. வருக்கு முன்னர் இருந்த இயக்குநர்கள் போல 'மூலவராக' ட்டிலும் இராமல் தமிழ் நாடெங்கும்—பட்டி தொட்டிக ளல்லாம்—உலாப்போகும் 'உற்சவராக' இருப்பவர். நடுப்பகல் ணவுத்திட்டமும் சீருடைத்திட்டமும் இவர் கண்டவை. வற்றால் எண்ணற்ற ஏழைமாணுக்கர்களின் கண்களைத் திறந்து ட்ட புண்ணியம் இவருக்குண்டு. இவருடைய திட்டங்களை ) அரசும் பன்முறை பாராட்டிய துண்டு; இத் திட்டங்கள் ) மாநிலங்கட்கும் வழிகாட்டிகளாக இருப்பவை என்று கல்வி றிஞர்கள் பாராட்டிப் புகழ்ந்ததும் உண்டு. கல்லூரிகளிலும் மிழன்னை அரியணை ஏறுவதற்கு அல்லும் பகலும் ஒல்லும் வகை ல்லாம் உவந்து பணியாற்றும் உண்மைத் தமிழ்த் தொண்டர் பர். கடந்த இருபதாண்டுகட்குமேல் தமிழகத்தில் கல்வித் றையில் பணியாற்றிய சிறியேன் இத்தகைய பேரறிஞர்பால் ாண்டுள்ள பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் அறிகுறியாக, ர்கள் இசைவுபெற்று, இந்நூலை அவர்கட்கு 'அன்புப்படையல்' ய்கின்றேன். அவர்கள் ஆசியால் இந்நூல் தமிழகச் சிறுவர்கள் யில் கிட்டி அவர்களிடம் அறிவியல் ஆர்வத்தை ஊட்டும் பது என் திடமான நம்பிக்கை.

ஒன்றுக்கும் பற்றாத என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு சிறு நூலை வெளியிடத் தோன்றாத் துணையாக நின்று க்கிய எல்லாம் வல்ல இறையருளை நினைந்து போற்று றேன்; அவன் திருவடி மலர்களை வணங்கி வாழ்த்துகின்றேன்.

ப்பதி
7-63

ந. சுப்பு ரெட்டியார்.

# இராக்கெட்டுகள்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இராக்கெட்டு என்பது என்ன? இ∴து எப்படி கண்டுபிடிக்கப்பெற்றது?
இதன் கதை என்ன? இதன் அமைப்பு என்ன?
இதனை இயக்குவது எங்ஙனம்?
ஏவுகணைகள் என்றால் என்ன? இன்னபிற
செய்திகளை சுருக்கமாகவும், விளக்கமாகவும்
கூறுகின்றார் பேராசிரியர்.

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939637-0-8

*eBOOK* ~ *மின் நூல்*



# நூல் முகம்

*காலைப் பிடித்தேன் கணபதி! நின்பதங் கண்ணிலொற்றி*
*நூலைப் பலபல வாகச் சமைத்து நொடிப்பொழுதும்*
*வேலைத் தவறு நிகழாது நல்லவினைகள் செய்துன்*
*கோலை மனமெனும் நாட்டின் நிறுத்தல் குறியெனக்கே.*[1]

—பாரதியார்

"பறக்கச் சிறகிருந்தால் வெண்ணிலாவே—உன்றன்
பக்கம் வந்து சேருவேனே வெண்ணிலாவே."

என்பது புதுமைகளைக் கண்டு களிப்பெய்தத் துடிக்கும் மனிதன் காணும் கனவுகளைக் காட்டும் கவிஞனின் குரல். கவிஞர்களைப் போலவே அறிஞர்களும் கற்பனை ஓவியங்களைத் தீட்டிச் சுவை மிக்க புதினங்கள் பலவற்றைப் படைத்து மகிழ்கின்றனர். நம்மையும் மகிழ்விக்கின்றனர். இங்ஙனம் கி. பி. 160 இல் எழுதப்பெற்ற கதையொன்றில் கதைத்தலைவன் வானக் கப்பலில் செல்லுகின்றான் பல இடையூறுகளைத் தாண்டி, விபத்துமிக்க பகுதிகள் பலவற்றைக் கடந்து, எட்டு நாட்கள் கழித்து விண்வெளியில் ஒளிமிக்க தீவு ஒன்றினைக் கண்ணுறுகின்றான். இதுவே மதிமண்டலமாகும். இன்னொரு கதையில் கதையாசிரியர் கதைத் தலைவனுக்குச் சிறகுகளைப் படைத்துவிடுகின்றார். மதிமண்டலத்தை எட்டிய இவன் கதிரவன் மண்டலத்தையும் அடைய முயல்கின்றான். இதனைக் கண்ட வானுலகத்தோர் சீற்றங்கொண்டு அவனைத் தரைக்கு அனுப்பிவிடுகின்றனர். மீண்டும் அவன் விண்வெளிக்கு வர இயலாதிருக்க அவனது இறக்கைகளையும் களைந்து விடுகின்றனர்!" இதற்குப் பல நூற்றாண்டுகட்குப் பிறகு (17 ஆவது நூற்றாண்டில்) கெப்ளர் எழுதிய கதையிலும், அவருக்குப் பின்னர் காட்வின் என்பாரும், பிறரும் எழுதிய நூல்களிலும் மதிமண்டலச் செலவு பற்றிய கருத்துக்கள் வருகின்றன. கெப்ளர் காலத்தில் சமயக் கோட்பாடுகட்கும் அரசியல் கொள்கைகட்கும் புறம்பான கருத்துக்களை எடுத்துரைப்பவர்கள் கடுந்தண்டனைக்குள்ளானதால் அவர்

---

1. கவிதைகள்: விநாயகர் நான்மணிமாலை - செய்-6.
2. கவிமணி: மலரும் மாலையும் - வெண்ணிலா-15

கள் தம் கருத்துக்களைக் கதைவடிவில் கற்பனைக் கூற்றுகள்போல் எடுத்துரைக்க வேண்டியதாயிற்று. இருபதாவது நூற்றாண்டில் வாழ்ந்த எச். ஜீ. வெல்ஸ் என்ற புகழ்பெற்ற அறிஞரும் "மதியை அடைந்த மாந்தர்கள்" (First men in the Moon) என்னும் புதினத்தில் பல கற்பனைக் கருத்துக்களை உருவாக்கியுள்ளார்.

இங்ஙனம் கற்பனையாக இருந்து வந்த எண்ணங்கள் இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் நடைமுறையில் செயற்பட்டன. பல அறிவியலறிஞர்கள், கனவாக இருந்து வந்த மதிமண்டலச் செலவினை நனவாக்க முயன்றனர். காடார்டு, ஓபெர்த் போன்ற அறிஞர்கள் இராக்கெட்டு ஆராய்ச்சியில் ஈடுபட்டுப் பல அரிய உண்மைகளைக் கண்டறிந்தனர். நாளடைவில் இத்துறையில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டு வந்தன. இன்று இராக்கெட்டின் துணையால் மதியினையே தொட்டு விட்டனர்! ஐந்தாண்டுகட்கு முன்னரே (1959 இல்) இரஷ்யர்கள் இதில் வெற்றி கண்டனர். இந்த ஆண்டுதான் (ஆகஸ்டு - 1964) அமெரிக்கர்கட்கு இதில் வெற்றி கிட்டியது. இப்பொழுது மதிமண்டலத்திற்கு மனிதனே சென்று திரும்பிவர வேண்டுமென்ற முயற்சி நடைபெற்று வரு கின்றது. இன்னும் ஆறாண்டுகளில் இதில் வெற்றிகிடைக்கும் என்ற நம்பிக்கை அறிஞர்களிடையே இருந்து வருகின்றது.

இந்த விண்வெளிச் செலவுக்கு உறுதுணையாக இருப்பது இராக்கெட்டு. இந்தப் பயணம் தொடங்கப்பெறுவதற்கு முன்னர் வானவெளியில் எடையின்மை அனுபவம், வானவெளியின் வெப்பம், அழுக்கம் இவைபோன்ற செய்திகள் இவற்றை அறிவ தற்கு இராக்கெட்டு துணைசெய்கின்றது. இராக்கெட்டின் துணை யால் தொலைக்காட்சி அமைப்பு, இராடார் அமைப்பு, தொலைஒலிப் பான் அமைப்பு போன்ற அமைப்புக்களடங்கிய சிறிய துணைக் கோள்களை விண்வெளியில் பல்லாயிரக்கணக்கான மைல் உயரங் கட்கு அனுப்பிப் பல செய்திகளை அறிகின்றனர். அன்றியும், போர்த்துறையிலும் பல்வேறு செயல்களில் இராக்கெட்டு பயன்படு கின்றது. இங்ஙனம் பலதுறைகளிலும் சேவை புரியும் இராக்கெட் டினைப் பற்றி இந்நூல் ஓரளவு விளங்க உரைக்கின்றது. இந்த விளக்கத்திற்கு ஆங்காங்கு 41 படங்கள் துணைசெய்கின்றன. இந் நூலும் இந்தவரிசையில் வரும் என்னுடைய ஏனைய நூல்களும்

இவற்றைப் பயிலும் மாணுக்கர்களிடமும் பிறரிடமும் 'அறிவியல் பசி'யைத் தூண்டக் கூடுமானுல் அதுவே யான்பெறும் பேறு எனக் கருதுவேன்; மகிழ்வேன்.

இலக்கியத் துறையிலும் சமயத் துறையிலும் பல்லாண்டு களாகப் பணியாற்றிப் பெரும் புகழ்பெற்ற சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார் இந்த அறிவியல் நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்குக் கழகத்தினருக்கும், சிறப்பாகக் கழகத்தின் உயிர் நாடியாக இயங்கும் இளமைத் துடிப்பு மிக்க கழக ஆட்சியர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கும், என் உளங் கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலை வெளியிட இசைவுதந்த திருவேங்கடவன் பல் கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அப் பல்கலைக் கழகத்தை நன்முறையில் இயக்கிவரும் அதன் துணைவேந்தர் டாக்டர் V. C. வாமனராவ் அவர்கட்கு—என் மனமுவந்த நன்றியைத் தெரி வித்துக் கொள்ளுகின்றேன்.

அறிவாலும் ஆற்றலாலும் உயர்ந்த சீலத்தாலும் அத்த னைக்கும் மேலாகச் செயலாற்றும் திறனுலும் என் உள்ளத்தைக் கவர்ந்தவர்கள்—தமிழ் கூறு நல்லுலகத்தின் தந்தை போன்ற வர்கள்—தவத்திரு. குன்றக்குடி அடிகளார். அடிகளார் சின்னப்பட்ட மாக இருந்த காலத்திலேயே வேண்டாத சில மடத்துச் சம்பிர தாயங்களைக் கைவிட்டதனுல் பொதுமக்கள் உள்ளத்தைக் கவர்ந்த வர்கள். எவருடனும் இன்முகத்துடன் பழகும் பண்புடைய வர்கள்; 'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்' என்ற வாய் மொழிக்கு எடுத்துக்காட்டாக நின்று நிலவுபவர்கள். பட்டம் ஏற்று மடத்துப் பொறுப்புக்கள் யாவும் அவர்களை வந்தடைந்த பிறகு பலதுறைகளிலும் அவர்களது அருள் நோக்கம் சென்றது. அறங்கள்யாவினும் "புண்ணியங்கோடி ஆங்கோர் ஏழைக்கெழுத் தறிவித்தல்" என்பதை உணர்ந்து பல பள்ளிகளையும் இலவச உணவு விடுதிகளையும் நிறுவினுர்கள். "பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி, பேணி வளர்த்திடும் ஈசன்" என் பதையுணர்ந்த அடிகள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியைத் துவக்கி, "பெண்கள் அறிவை வளர்த்தால்—வையம், பேதைமையற்றிடும்

காணீர்" என்ற குறிக்கோளைப் பறையறைவித்தனர். தம் பார் வையின் கீழுள்ள திருக்கோயில்களைப் புதுக்கி அவற்றில் தமிழ் அருச்சனை வழிபாட்டைச் செயற்படுத்தினார்கள். இதனால் பாடிய வாய் தேனூறும் 'பால்வாய்ப் பசுந்தமிழ்' ஏற்றம் பெற்றது. தமிழ் கூறு நல்லுலகமெல்லாம் அருள் நெறிக் கழகங்களைத் தோற்று வித்துச் சமயப்பணி ஆற்றிவருகின்றார்கள். ஏனைய மடாதிபதிகள் போல் 'மூலவராக' இராமல், அடிகளார் 'உற்சவராக' எங்கும் சென்று தமிழ் முழக்கம் செய்து சமயநெறியையும் தமிழ்நெறி யையும் பரப்பி வருகின்றார்கள். அடிகளாரின் திருவாயினின்றும் அருவிபோல் பொங்கிவரும் அமுத வெள்ளமாகிய பேச்சில் புலமை மணங்கமழும்; ஆராய்ச்சித் திறன் ஒளிரும்; சிந்தனைச் சுடர் தெறிக்கும். இவர்களுடைய கருத்துக்களில் ஆழ்கடலைப் போன்ற ஆழமும் உண்டு; அதனைப்போல் அவை அகன்றும் காணப்பெறும். அனைத்தையும் துறந்து தமிழைத் துறக்க முடி யாத அடிகளார் ஆசிரியர்களின் தோன்றாத்துணையாக இருப் பவர்கள்; புலவர்களிடம் பெருமதிப்புக் கொண்டவர்கள். வருங்கால மானிடப் பயிர்கள்—மாணாக்கர்கள்—உய்யவேண்டும் எனத் துடித்து நிற்பவர்கள். தம்மிடம் சுரக்கும் அருள் காரண மாக இங்ஙனம் பல்லாற்றானும் சேவை புரிந்து வரும் தவத்திரு அடிகளாரின்மீது அடியேன் கொண்டுள்ள பேரன்பிற்கும் பெரு மதிப்பிற்கும் அறிகுறியாக இச்சிறுநூலை அவர்கள் திருவடி களில் அன்புப் படையலாக்குகின்றேன். இவர்கள் ஆசியால் இந்நூல் தமிழ் கூறு நல்லுலகத்தில் பெருமிதத்துடன் உலவும் என்பது என் திடமான நம்பிக்கை.

என்னிடம் இயல்பான குறைகளிருந்தும் என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு என்னுளே நின்று என்னை இயக்கி இந் நூலை எழுதி வெளியிடுவதற்கு யான் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றி வைத்த எல்லாம் வல்ல திருவருளை மனம்மொழி மெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

திருப்பதி,<br>ஆகஸ்டு 10, 1964.

ந. சுப்புரெட்டியார்.

# இல்லறநெறி

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

தற்கால இளந்தம்பதிகளின் தேவைக்கேற்ப
ஏற்புடைய நூல்களின் இன்றியமையாமையை
உணர்ந்து, கடித உத்தியைக் கையாண்டு
எழுதப்பெற்ற ஒரு சிறந்த நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*




ISBN: 978-81-938927-9-4

eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

வரங்கொண்ட வுமைமுலைப்பால்
மணங்கொண்ட செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும்
பன்னிரண்டு கண்மலரும்
சிரங்கொண்ட மறையிறைஞ்சும்
சேவடியும் செந்தூரன்
கரங்கொண்ட வேலும்என் றன்
கண்ணைவிட்டு நீங்காவே.[1]

—சுவாமிநாத தேசிகர்

இம்மண்ணுலகில் தோன்றிய ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் பிறப்பு, திருமணம் இறப்பு ஆகிய மூன்று நிகழ்ச்சிகளும் மிகப் பெரியவை; சிறப்புடன் குறிப்பிடத் தக்கவை. இவை மூன்றும் முறையே ஒருவரது வாழ்வின் முற்பகுதி, நடுப்பகுதி, பிற்பகுதிகளில் நடைபெறும் நிகழ்ச்சிகளாகும். உலகிலுள்ள எல்லாச் சமூகங்களும் இம்மூன்றற்கும் முக்கியத்துவம் அளித்துள்ளன. இம்மூன்றிலும் நடு நாயகமாக அமைந்துள்ள திருமணமே மக்களின் கவனத்தைக் கவர்ந்துள்ளது; நாகரிகம் அடைந்த எல்லா மக்களும் இதனைக் கருத்துடன் கவனித்துப் பல கட்டுப்பாடுகளை அமைத்துள்ளனர். இதற்குக் காரணம் என்ன? காரணம் மிகவும் வெளிப்படை. திருமணம் என்பது தனிப்பட்டோரின் உடல்பற்றியதும், உளம் பற்றியதும், உள்ளக் கிளர்ச்சிபற்றியதும், ஆன்மிக உறவுபற்றியதுமான முதிர்ச்சியினைக் காட்டும் சமூகச் சான்றாகும். அஃது ஒரு குறிப்பிட்ட தருணத்தில் ஓர் இளைஞனைக் கணவன்-தந்தையாகவும், ஒரு யுவதியை மனைவி-தாயாகவும் மாற்றுகின்றது. இந்நிலையில் அது அவர்கட்குச் சமூகத்தில் ஓர் உயரிய நிலையையும், கடமைகளையும் உரிமைகளையும் பொறுப்புகளையும்

1. திருச்செந்திற் கலம்பகம்-செய். 20

நல்குகின்றது: பெரும்பான்மையான ஆடவர்-மகளிர் வாழ்க்கையில் திருமணம் உயிர்நாடிபோல் அமைந்து மிக நெருங்கிய உடல், உள, ஆன்மிக ஒருமைப்பாட்டினை விளைவித்து விடுகின்றது; 'யான்' 'எனது' என்ற தன்னல நிலைகள் மறைந்து 'நாம்' 'நமது' என்ற பொதுநல நிலைகள் தோன்றுகின்றன. ஒரு நல்ல திருமணத்தில்கணவன்-மனைவியரின் தனிப்பட்ட முனைப்புகள் ஒன்றிக் கலக்கின்றன. ஒருவருடைய சுக துக்கங்கள் மற்றவரின் சுக துக்கங்களாக அமைகின்றன. அவர்களுடைய மதிப்பீடுகள், விருப்பங்கள் வாழ்க்கை யநுபவங்கள் இவை யாவற்றையும் இருவரும் பகிர்ந்து கொள்ளுகின்றனர். இறக்கும் வரையில் இருவரது பற்றுறுதியும் யாதொரு நிபந்தனையுமின்றி இருவரையும் இறுகப் பிணைக்கின்றது. திருமணத் தளை என்பது உண்மையில் தெய்விகத் தன்மையுடையது; எவரும் அதனைச் சிதைத்தல் முடியாது.

இங்ஙனம் ஒருயிர் ஈருடல் எனப் பிணிக்கும் திருமணம் ஒருவருடைய தனிமைக்கு மருந்தாக அமைகின்றது; காதல் உணர்ச்சியைத் தூய்மையாக்குவதற்கும் அவ்வுணர்ச்சி சிறப்பாகப் பொலிவதற்கும் வாய்ப்பினைத் தருகின்றது. அத்தகைய மணமக்களுக்குப் பிறக்கும் குழவிகளின் சமூக வாழ்க்கையையும் வளமாவகுகின்றது. நினைப்பிற்கெட்டாத நெடுங்காலமாகவே மணத்தினால் பிணைக்கப்பெற்ற பெற்றோர்கள் தம் குழவிகட்குச் சிறந்த ஆசிரியர்களாக அமைந்துகொண்டு வருகின்றனர்; புதிதாகப் பிறந்த மானிடப் பிராணிகளைச் சிறந்த சமூகப் பொறுப்புடைய ஆட்களாகச் செய்வதற்குக் குடும்பம் முக்கிய பள்ளியாக அமைகின்றது. 'குடும்பம் எவ்வழி அமைகின்றதோ, அவ்வழியே சமூகமும் அமையும்' என்ற பொன்மொழியும் இதனால் எழுந்தது.

மேலும், கணவன்-மனைவி ஆகிய இருவருள் ஒருவர் மற்றவர்பால் கொண்டுள்ள அன்பும் தம் குழந்தைகட்டுக் கல்வி நல்கும் பொறுப்பும் அவர்களுடைய படைப்பாற்றல்களைக் கிளர்ந்தெழச் செய்யவும், அவற்றைச் சிறந்த முறையில் வளரச் செய்யவும் துணை செய்கின்றன. தம்முடைய கல்வி, சமூகநிலை, சமயம், பொருளாதாரநிலை இவை எங்ஙனமிருப்பினும் ஒவ்வொரு தம்பதிகளும் திருமணத்தினால் எழக்கூடிய படைப்புத் தூண்டலினால் மிக்க மனநிறைவு கொள்ளுகின்றனர். இம்முறையில் திருமணம் ஒவ்வொரு குடிமகனுக்கும் சிறந்த பயிற்சிப் பள்ளியாக

அமைகின்றது. இத்தகைய படைப்புத் தூண்டல் மானிட இனத்திற்குமட்டிலும் சிறப்பாக அமைந்த ஓர் அற்புதப் பண்பாகும்; இம்மன நிறைவு வாழ்க்கை இன்பத்திற்கே இன்றியமையாத தேவையுமாகும்.

திருமண உறவினை, பெற்றோர்கள் சிறப்புறத் துய்ப்பதனால் பல பெரிய கடமைகள் தாமாக நிறைவேறுகின்றன. மானிட இனம் வாழையடி வாழையாக வளர்ச்சியுறுகின்றது. பெற்றோர்கள் தம் மக்கள் வழியே தம்முடைய மரபு வழிப் பண்புகளையும் வாழ்க்கையில் பெற்ற சிறப்பியல்புகளையும் வழிவழியே கடத்துகின்றனர். திருமணத்தினால் தம்முடையவும், தம் முன்னோருடையவும், ஒரு குறிப்பிட்ட மரபு வழியினருடையவுமான சமூக மார்க்கண்டேயத்தை[2] அடைய முடிகின்றது. தம்முடைய நற்பெயர், மதிப்பீடுகள், மரபு வழிப் பண்புகள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றைத் தம்முடைய குழந்தைகள், பேரன்மார்கள், பின் சந்ததியினர் இவர்கட்குத் தருவதனால் இவை நல்ல பாதுகாப்பாக அமைந்து விடுகின்றன. இக்காரணங்களால்தான் உலகிலுள்ள எல்லாச் சமூகத்தினரும் திருமணத்தை மானிட இனத்தின் இருப்பிற்கே இன்றியமையாத நிகழ்ச்சியாகவும் சமூகம் அழியாதிருக்கக் கூடிய அறுதியிடும் கூறாகவும் கருதுகின்றனர்.

பெண், ஆண் என்னும் இருபாலாரும் உற்ற வயதடைந்ததும் இருவர் மாட்டும் ஒருவித இன்ப உணர்வு எழுகின்றதன்றோ? இவ்வுணர்வு உயிர்களிடத்து எழுவதன் நோக்கம் என்ன? இன்பத் தோற்றத்துக்கென மெல்லுறுப்புகளும் அவைகளின் காப்புக்கென வல்லுறுப்புகளும், அவைகளின் அரணுக்கென நரம்பு, எலும்பு, தசை, தோல் முதலிய ஏனைய அமைப்புகளும் இயற்கையில் அமைந்திருக்கும் நுட்பத்தை ஒவ்வொருவரும் உன்னிப் பார்த்தல் வேண்டும்; அவற்றின் நோக்கங்களையும் உணர்தல் வேண்டும். உடற்கூற்றின் அமைப்பும், அதனால் எழும் இன்பமும் பெண் ஆண் சேர்க்கை இயற்கையில் பொருந்தியதொன்று என்பதைச் செவ்வனே அறிவுறுத்துகின்றன. பெண்-ஆண் சேர்க்கையின் மூலம் துன்ப இருளிற்கட்டுண்டு கிடக்கும் உயிர்கட்கு ஆண்டவன் உடலை ஈந்து இவ்வுலக வாழ்வை நல்குகின்றான் என்றும், ஆண்டவன் படைப்புக்கு இச்சேர்க்கை ஒரு வழியாக அமைந்துள்ளது என்றும் ஆன்றோர் கூறுகின்றனர்.

---

2. சமூக மார்க்கண்டேயம்-Social immortalitiy

## 2

'இல்லற நெறி' என்ற இந்நூல் திருமண வாழ்வில் நுழையும் நம்பி-நங்கையர் அறிந்துகொள்ள வேண்டிய அடிப்படைச் செய்திகளனைத்தையும் ஐம்பது கடிதங்களில் விரித்தோதுகின்றது. இச்செய்திகள் மணப்பொருத்தம், அறிவியலடிப்படையில் திருமணம், இனப்பெருக்கம், குடும்பக் கட்டுப்பாடு, மக்கட்பேறு, திருமணக்கலை, பால் பொருத்தக் கேடுகள், திருமண வாழ்வில் உடல்நலம், மகிழ்வுடைய இல்வாழ்க்கை, மங்கல வாழ்த்து என்ற பத்து இயல்களில் பாங்குறப் பாகுபாடுசெய்து கூறப்பெற்றுள்ளன. ஒவ்வொரு இயலின் தொடக்கத்திலும் அவ்வியலின் திரண்ட கருத்து சுருக்கமாகத் தரப்பெற்றுள்ளது. இம்முறை அவ்வியலைப் படிக்கப் புகுவோருக்கு ஆர்வம் எழுப்பக்கூடியதாக இருக்கும். எல்லாப் பகுதிகளையும் ஊன்றிப் பன்முறைப் படித்துச் செய்திகளைத் தெளிவாக உளங்கொள்ளல் சாலப் பயன் தரும். நூலின் இறுதியில் பின்னிணைப்புக்களாகச் சேர்க்கப் பெற்றுள்ள பயன்பட்ட நூல்களின் பெயர்கள், பொருளடைவு ஆகியவை இந்நூலினைப் பயில்வோருக்குப் பல துறைகளிலும் ஆற்றுப்படுத்த துணையாக அமையும். அவற்றைப் பயனறிந்து ஏற்ற பெற்றிப் பயன்படுத்திக் கொள்வார்களாக.

கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலிய அனைத்திற்கும் நிலைக்களன் உடல் என்பதை ஒவ்வொருவரும் நன்கு உணர்தல் வேண்டும். அறிவு விளக்கம் மன அமைதியைப் பொறுத்து நிற்பது உடல் நலம் இனத்தை அறிவிக்கும் உறுப்பின் அகப்புற வளத்தைப் பொறுத்து நிற்பது. அவ்வுறுப்பிற்குப் பழுது நேரின் வாழ்வே குலைந்து போகும். உடலில் எவ்வுறுப்பிற்கு ஊறு நேரினும் சிகிச்சை செய்துகொள்ள இயலும்; எவ்வுறுப்பினை இழப்பினும் உயிர் வாழ்தல் கூடும். ஆயின், குறிக்கு ஊறு நேரின் அதற்கு எவ்விதச் சிகிச்சையும் இல்லை; சிகிச்சை செய்து கொள்ளினும் ஊறு நீங்காது; ஊறுடன் உயிர் வாழ்தலும் இயலாது. இந்நுட்பத்தினை நன்குணர்ந்தே தமிழ் மக்கள் அவ்வுறுப்பிற்கு 'உயிர் நிலை' என்று பெயர் சூட்டிப் போற்றினர்.

எத்தனையோ மணமக்கள் உடற்கூறு தெரியாது பல வழிகளிலும் கெடுகின்றனர். ஆணுறுப்புபற்றியும் அதனோடு தொடர்புள்ள சிறு சிறு உறுப்புகள் பற்றியும் அறியாத

ஆடவர்களும், கருக்குழியைப் பற்றியும் அதன் சினைகளாக உள்ள சிறுசிறு உறுப்புகள் பற்றியும் போதிய அறிவு பெருத மகளிரும் நன்முறையில் தாம்பத்திய உறவு கொள்ள முடிவதில்லை. இவர்கள் உறுப்புகளின் நிலையை உணராது, அவற்றின் வழி துறை தெரியாது உழன்று, இன்பத்தை இழந்து நிற்பதுடன் நெறி தவறிய வாழ்வினால் வேறு பல நோய்களையும் தேடிப் பாழ்படுகின்றனர். இப்போது மேனாட்டு அறிஞர்கள் உயிர் நிலைகளின் நுட்பங்களைச் செவ்வனே ஆய்ந்து அவற்றின் இயல்புகளை எவரும் எளிதில் உணரும் முறையில் பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளனர். அந்த நுட்பங்களையெல்லாம் மனத்திற்கொண்டு பல அறிவியல் கருத்துகள் இந்நூலில் விளக்கப்பெற்றுள்ளன. உயிர் நிலையாகவுள்ள உறுப்புகளைப் போற்றிப் புரத்தலும், நெறியுடன் ஆளுதலும் மணமக்களின் முதலாய கடனாகும்.

"நமது நாட்டுப் பழைமை என்னும் 'உயிர்' இக்கால மேல்நாட்டுப் புதுமை என்னும் 'உடல்' தாங்கும் முறையில் தாய்மொழியில் நூல் பல யாத்தல் காலத்துக்கு இயைந்த தொண்டாகும். அத்தகைய நூல்களின் இன்றியமையாமையைச் சொல்லவும் வேண்டுமோ" என்ற திரு. வி. க. அவர்களின் குறிப்பே[3] என்னை இந்நூலை எழுதத் தூண்டியது. அப்பெரியாரின் ஆசியால் நூலும் ஓரளவு நன்முறையில் அமைந்தது என்று கருதுகின்றேன். என்னுடைய உயர்நிலைப் பள்ளி வாழ்க்கை முதற்கொண்டே அப்பேரறிஞர்பால் கொண்டுள்ள பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் அறிகுறியாக இந்நூலை அவர்களின் திருவடிகட்குப் படைக்கின்றேன். அவர்கள் காட்டிய பாதையில் செல்லும் இந்நூல் அமரத்துவம் பெற்றுள்ள அவர்களது ஆசியால் தமிழ் கூறு நல்லுலகில் பெருமிதத்துடன் உலாப்போந்து பல மணமக்களின் வாழ்வினை வளமாக்கும் என்பது என் திடமான நம்பிக்கை.

## 3

பொருள் விளக்கத்திற்குப் படங்கள் பெருந்துணைபுரியும் என்பது கல்வியறிஞர்கள் கண்ட துணிபு. இந்த நூலை 55 படங்கள் அணி செய்கின்றன. இப்படங்களை எழுதி உதவியவர் என் அரிய நண்பர் திரு. வே. முனியாண்டி என்பவர்; காரைக்குடி அழகப்பா மாதிரி உயர்நிலைப் பள்ளியில் ஓவிய

---

3. 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை' —முன்னுரை.

ஆசிரியராகப் பணியாற்றுபவர். அறிவியல் துறையில் அமையவேண்டிய நுட்பங்களையெல்லாம் நுணுகி அறிந்து திறம்படப் படங்களை அமைத்துத் தந்த அவருக்கு என் உளங் கனிந்த நன்றி. அவருக்கு எல்லா நலன்களையும் திருவேங் கடத்தான் அருள்வானாக.

காலத்துக்கேற்ப நூல்களை அணி அணியாக வெளியிட் டுத் தமிழ் பணி புரிந்து வரும் தமிழ்ப் புத்தகாலயம் இந்த அறிவியல் நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அதன் அதிபர் திரு கண. முத்தையா செட்டியார் அவர்கட் கும், நூலை அழகுற அச்சிட்டுக் கற்போர் கைகளில் கவி னுடன் தவழச் செய்த இராமன்ஸ் அச்சகத்தினருக்கும் என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலை வெளியிட இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அப் பல்கலைக் கழகத் தைச் சீரிய முறையில் இயக்கி வரும் அதன் துணைவேந்தர் டாக்டர் V. C வாமன்ராவ் அவர்கட்கு—என் மனமுவந்த நன்றியைப் பணிவன்புடன் புலப்படுத்திக் கொள்ளு கின்றேன்.

என்னிடம் இயல்பான பல குறைகளிருந்தும் என்னையும் ஒரு கருவியாகக்கொண்டு என்னுளே நின்று என்னை இயக்கி இந்நூலை எழுதித் தமிழன்னையின் புதுவாழ்வில் பணியாற்ற அடியேன் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றி வைத்த எல்லாம்வல்ல நீலமேனி நெடியோனை மனம், மொழி, மெய் களால் நினைந்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

ஃ ஃ ஃ

பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை
குறியொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு
பொறியொன்றி நின்று புணர்ச்சிசெய் தாங்கே
அறிவொன்ற நின்றனள் ஆருயி ருள்ளே.[4]

திருப்பதி
1-12-1964

ந. சுப்பு ரெட்டியார்

4. திருமூலர்: திருமந்திரம்—1158

# முத்தொள்ளாயிர விளக்கம்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

நாட்டுவளம், போர்க்களக்காட்சி, இனப்பற்று, வீரம்,
சோகம், காதல் ஏக்கம், அறியாமை, வாடைவிடு தூது,
பேய்களின் விளையாட்டு, ஊசலாடும் உள்ளம், காதல்
நெருப்பு, நகர் வளம் என இன்னபிற தலைப்புகளில்
பாண்டியன், சோழன், சேரன் மீதுள்ள பாடல்களை
சுவையுற விளக்கும் ஓர் அரிய நூல்.

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939502-1-0




eBOOK ~ மின் நூல்

# PREFACE

The justification for another edition of Muttoḷḷāiram seems to lie in the need for a thorough appraisal of the work as a source of history and sociology. The impression created by over-emphasis on the erotic aspect of the work needs must be removed and a motivation must be provided for a systematic search for the original as a source of history. However, it is not to belittle the literary value of the work which is fit to be ranked with any of the greatest Caṅkam classics. My purpose has been to lead the readers both to an enjoyment of the artistry of the poet and to a perception of the social conditions depicted in the work. I have examined all the available sources and made a selection of the most authentic verses. I have also furnished variations in readings available in the commentaries.

My thanks are due to Dr. M. Varadarajan, Professor of Tamil, University of Madras, Madras for enthusing me in my work and Sri K. Venkataswami Reddiar of Bh[illegible]dur, South Arcot District, for help in the finalising of the Manuscript before it was sent to the press.

I am grateful to the Vice-chancellor and to the Syndicate of Sri Venkateswara University for accepting the work as a University Publication and for their encouragement afforded to me in my humble labours in the field of Tamil research.

Tirupati,
November 1, 1965.

N. SUBBU REDDIAR.

# நமது உடல்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்த உலகில் நாம் இவ்வுடல் வாழ்க்கையைச் செவ்வனே
கொண்டு செலுத்துவதற்கு வேண்டிய கருவி கரணங்கள்
யாவும் நாம் பிறக்கும்பொழுதே இவ்வுடலில் அமைந்துள்ளன.
உயிர் நிலையான இவ்வுறுப்புக்கள் யாவும் சரியான நிலையில்
இருக்கவேண்டியதன் அவசியத்தை இந்நூல் வலியுறுத்துகின்றது.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939430-0-7




*eBOOK ~ மின் நூல்*

# நூல்முகம்

*கல்லும் கனைகடலும் வைகுந்த வான்நாடும்*
*புல்என்று ஒழிந்தனகொல் ஏபாவம்,—வெல்ல*
*நெடியான் நிறம்கரியான் உள்புகுந்து நீங்கான்,*
*அடியேனது உள்ளத்து அகம்.*[1] —நம்மாழ்வார்.

*"உடலின் உறுதி உடையவரே*
*உலகில் இன்பம் உடையவராம்;*
*இடமும் பொருளும் நோயாளிக்கு*
*இனிய வாழ்வு தந்திடுமோ?"*[2]

என்பர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. இந்த உலகில் நாம் இவ்வுடல் வாழ்க்கையைச் செவ்வனே கொண்டு செலுத்துவதற்கு வேண்டிய கருவி கரணங்கள் யாவும் நாம் பிறக்கும்பொழுதே இவ்வுடலில் அமைந்துள்ளன. இதயம், இரத்தம், மூளை, நரம்புகள், நுரையீரல்கள்; இரைப்பை, சிறுநீரகங்கள், கல்லீரல் போன்றவை யாவும் இந்த உடல் யாத்திரைக்குத் தேவையான உறுப்புகளாகும். உயிர் நிலையான இவ்வுறுப்புகள் யாவும் சரியான நிலையிலிருப்பின் சாதாரணத் தேவைக் கேற்றவாறும், எதிர்பாராது ஏற்படும் தேவைக் கேற்றவாறும் வியத்தகு முறையில் இவை செயற் படும். நம் பிறப்புடன் நாம் பெற்றுள்ள இந்த இயற்கைத் 'தளவாடங்களைக்' கையாளும் முறையைச் சரியாக அறிந்து கொள்வோமாயின் நம்முடைய உடல் யாத்திரை இனிதாகச் செல்லும். இது கருதியே தெய்வத் திருமூலரும் 'உடம்பார் அழியில் உயிரார் அழிவர்' என்று வலியுறுத்தி, 'உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே, உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்றும்,[3] 'உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று, உடம்பினை யானிருந்து ஓம்புகின்

---

1. *நம்மாழ்வார் :* பெரிய திருவந்தாதி - *68.*
2. *கவிமணி :* மலரும் மாலையும் - உடல் நலம் பேணல் - *1.*
3. *திருமந்திரம் - 427.*

றேனே' என்றும்[1] உடலோம்பலின் இன்றியமையாமையை வற்புறுத்திச் சென்றனர்.

இத்தகைய உறுப்புகளடங்கிய இவ்வுடலைப்பற்றி ஓரளவு நாம் நன்கு அறிந்துகொள்ளுதல் இன்றியமையாதது. எல்லோரும் எளிய முறையில் அறிந்து கொள்வதற்கேற்றவாறு தமிழ்மொழியில் உடலைப்பற்றிய நூல்கள் இல்லை என்றே சொல்லலாம். இக் குறையை ஓரளவு இந்நூல் போக்கும் என்று யான் கருதுகின்றேன். சில நுட்பமான கருத்துகளைத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கு ஆங்காங்குள்ள விளக்கப் படங்கள் துணைபுரியும். அறிவியலறிஞர்கள் கண்டறிந்து விளக்கியுள்ள உடலைப்பற்றிய எத்தனையோ அரிய செய்திகள் உள்ளன. அவற்றை ஓரளவு தெளிவாகப் புரிந்து கொள்வதற்கு இந்நூல் ஓர் அடிப்படையை நல்கும். சாதாரண மக்கட்கும் பள்ளி மாணுக்கர்கட்கும் இந் நூலறிவே ஓரளவு போதும் என்று சொல்லலாம்.

கடந்த நாற்பது யாண்டுகட்கு மேலாக ஆயிரத்திற்கு மேற்பட்ட அரிய நூல்களை வெளியிட்டுச் சமயப் பணியும் தமிழ்ப் பணியும் புரிந்துவரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந்நூலையும் மனமுவந்து ஏற்றுக் கற்போர் கைகளில் கவினுடன் தவழச் செய்தமைக்குக் கழகத்தினருக்கும், சிறப்பாக அதனைச் செவ்விய முறையில் இயக்கிவரும் அதன் ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையாபிள்ளையவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்த நூலை யான் 'எழுதி வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தினருக்கும் சிறப்பாக அதனைத் திறம்பட இயக்கிவரும் அதன் துணைவேந்தர் டாக்டர் V. C. வாமன்ராவ் அவர்கட்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

---

1. திருமந்திரம் - 725.

தமிழ் கூறு நல்லுலகில் தவத்திரு சித்பவாநந்த அடிகளை அறியாதவரே இரார். கடந்த இருபத்தைந்து ஆண்டுகட்கு மேலாகத் திருசிராப்பள்ளிக்கு அண்மையில் சற்றேறக்குறையப் பத்துக்கல் தொலைவிலுள்ள திருப்பராய்த் துறையில் இராம கிருஷ்ணத் தபோவனம், விவேகாநந்த வித்யாவனம் என்ற இரண்டு தாபனங்களை நிறுவி முறையே சமயப் பணியும் கல்விப் பணியும் புரிந்து வரும் தவச் செல்வர் இவர்; தம் பேச்சாலும் எழுத்தாலும் இப்பணிகளை மேன்மேலும் துலக்கமும் விளக்கமும் அடையச் செய்து வரும் அருட்செம்மல். இன்றுள்ளார் கண்காணும் "சுவாமி விவேகாநந்த அடிகள்;" அந்த அடிகளாரின் மறுபிறவியே இந்த அடிகளார் என்று கூறினும் சாலப் பொருந்தும். கடந்த இருபத்தைந்து யாண்டு கட்கு முன்னதாகவே என் உள்ளத்தைக் கவர்ந்து என்னையும் ஓர் அடியனாக ஆட்கொண்ட பெருமான் இவர். இவருடைய அருள் நோக்கு, சிறியேனது வாழ்க்கையினைப் புனிதமாக்கி வருகின்றது என்பது என் திடமான நம்பிக்கை. இவருடைய ஆசியால் என்னுடைய எழுத்துப் பணியும் கல்விப் பணியும் சிறக்கவேண்டும் என்பது எனது பேரவா. இத்தகைய பெருந்தவச் செல்வருடைய திருவடிகளில் இந் நூலை அன்புடன் படைக்கின்றேன். இவருடைய ஆசியால் இந் நூலைப் படிக்கும் சிறுர்கள் முதலியோருடைய வாழ்க்கையும் புனிதமாகும் என்பது என்னுடைய நம்பிக்கை.

என்னையும் ஒரு பொருளாகக் கொண்டு என் உள்ளத்தில் நின்று இயக்கி என்னை இத்தகைய தமிழ்ப் பணியில் கொண்டுசெலுத்திவரும் எல்லாம் வல்ல இறையருளை மனம் மொழி மெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

*திருப்பதி* }
*திசம்பர் 25, 1965* }　　ந. சுப்பு ரெட்டியார்.

# இளைஞர் தொலைக்காட்சி

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

அறிவியல் கலையறிவு இளமையிலிருந்தே அமைதல் வேண்டும். அதற்குரிய ஆர்வமும், அவாவும் அவர்களிடம் கிளர்ந்தெழுதல் வேண்டும். அந்த முறையில் இளஞ்சிறார்களை ஊக்குவிக்க இந்நூல் பெரிதும் துணை செய்கிறது.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939353-5-4

*eBOOK ~ மின் நூல்*



# நூல் முகம்

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். —நக்கீரர்.

'புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்
மெத்த வளருது மேற்கே—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை'

என்று 'அந்தப் பேதை' உரைத்ததை எண்ணி, தமிழ்த்தாய் 'இந்த வசை எனக்கு எய்திடலாமோ?' என்று ஏங்குவதாகக் கற்பனை செய்கின்றார் புதுமைக் கவிஞர் பாரதியார். தமிழ்த் தாய்க்கு அந்தக் குறை—அந்த ஏக்கம்—இல்லா தொழியச் செய்வது இன்றைய தமிழ் இளைஞர்களின் கடமை. இதற்கு வேண்டிய அறிவியற் கலையறிவு இளமையிலிருந்தே அவர்களிடம் அமைதல் வேண்டும்; அதற்குரிய ஆர்வமும் அவாவும் சிறுவயதிலிருந்தே அவர்களிடம் கிளர்ந்தெழல் வேண்டும். அந்த முறையில் இளஞ் சிறார்களை ஊக்குவிக்க இந்த வரிசை நூல்கள் பெரிதும் துணை செய்யும் என்பது என் திடமான நம்பிக்கை.

சொல்லுந் திறமை (Expressive ability) தமிழ் மொழிக்கு அமைய வேண்டுமாயின், தமிழ் பயிற்று மொழியாக அமைந்து தமிழிலேயே அறிவியற் கலைகள் எழுதப் பெறுதல் வேண்டும்; வகுப்புக்களிலும் விளக்கப் பெறுதல் வேண்டும். இந்தவித முயற்சிகளின்றித் தமிழ் மொழியில் அறிவியற் கலைகள் தோன்ற வேண்டும் என்று வாளா நினைப்பது மனக்கோட்டை கட்டுவது போலாகும். அரசினரும் பல்கலைக் கழகத்தினரும் இத்துறையில் ஒருங்கிணைந்து உள்ளத் தூய்மையுடன் பணியாற்ற முன் வருதல் வேண்டும்.

இந்த நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினருக்கு (Syndicate)—சிறப்பாக

## நூல் முகம்

அதனைத் திறம்படக் கண்காணித்து வரும் அதன் துணைவேந்தர் டாக்டர் V. C. வாமன்ராவ் அவர்கட்கு—என் உளங்கனிந்த நன்றி என்றுமே உரியது.

இந்நூலை மனமுவந்து ஏற்று வெளியிட்ட திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினருக்கும், குறிப்பாக என்றும் இளையராய் இருந்து புதிய துறைகளில் தமிழை வளர்க்கவேண்டும் என்ற பேரவாவுடைய அதன் அதிபர் திரு. வ சுப்பையா பிள்ளை அவர்கட்கும் என் அன்புகலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

நமது இராஜாஜி அவர்கள் உலகப் பேரறிஞர்களில் ஒருவர்; உயர்ந்த சிந்தனையாளர். நம் நாட்டு விடுதலை இயக்கத்தில் பெரும்பங்கு கொண்டவர். எதிலும் பகுத்தறிவு வழியைக் கடைப் பிடிப்பவராயினும் நம்பிக்கையின் உருவான உத்தம சீலர். 'காலத் தொலைவில்' நடைபெறவேண்டியவற்றை முன்னரே கணித்துக் காட்டவல்ல ஆழ்ந்த பெருநோக்குடையவர். 'இடத் 'தொலைவில்' நடைபெறுவனவற்றை உடனுக்குடன் காணவல்ல தொலைக் காட்சிச் சாதனத்தை விளக்கும் 'இளைஞர் தொலைக் காட்சி' என்னும் இந்நூல் பாரதத்தின் முதல் இரத்தினமாகிய அவரது எண்பத்தெட்டாவது ஆண்டு நிறைவினைப் பாராட்டும் மலராக வெளிவருகின்றது. அவரது ஆசியைப் பெற்றுத் தமிழ் நாட்டுச் சிறுவர்களின் கைகளை அடையும் இந்நூல் அவர்கட்குச் சிறந்த அறிவியலறிவினை நல்கும் என்பது உறுதி.

என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு என்னுளே தோன்றாத் துணையாக நின்று இச்சிறு நூலை வெளியிட என்னை இயக்கிய எல்லாம்வல்ல இறையருளை மனம், மொழி, மெய்களால் நினைத்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

திருப்பதி
25—12—66

ந. சுப்பு ரெட்டியார்.

# அணுக்கருபௌதிகம்

(மொழிபெயர்ப்பு)

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இதனுடைய மூல நூலின் ஆங்கில நடை தத்துவநூல்
நடைபோல் மிகக்கடுமையானது. இதை தமிழில் மொழிபெயர்ப்பது
என்பது இரும்புக் கடலையை வேகவைப்பது போன்றது.
இதை மிக இலகுவாக செய்து கற்றோர் கரங்களில்
கவினுறச் செய்துள்ளார் பேராசிரியர்

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939317-6-9

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன் பவளவாய்க் காண்பேனே.[1]
-குலசேகராழ்வார்.

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்."[2]

என்ற புதுமைக் கவிஞர் பாரதியாரின் குரல் பல்லாண்டு கட்கு முன்னரே பல்கலைக்கழக மாளிகையிலும் ஒலிக்கத் தொடங்கிவிட்டது. அதன் விளைவே இம்மொழிபெயர்ப்பின் தோற்றமாகும். சுமார் பத்தாண்டுகட்கு முன்னர் சென்னைப் பல்கலைக் கழகப் பரிசிலைப் பெற்ற இந்த அறிவியல் குழந்தை 'நாமகரணம்' பெற்று வெளியில் உலவ முடியாமல் இருந்த தெல்லாம் ஒரு நீண்ட கதை. அக்குழந்தை ஏழுமலையான் திருவடிவாரத்திலிருந்து உலவத் தொடங்க வேண்டும் என்ற 'ஊழ்' பெற்றிருந்தது போலும்!

இந்த மொழி பெயர்ப்பினைப் பல்கலைக் கழக நியதிப்படி ஒருவர்பின் ஒருவராக மூன்று பௌதிக அறிஞர்கள் மேற் பார்த்தனர். முதலாமவர் பரமபதம் எய்தினர்; ஏனைய இருவர் இடையில் கைவிட்டனர். என் வேண்டுகோளுக் கிணங்கி என் அருமை நண்பர் டாக்டர் மா. இராதா கிருஷ்ணன் எம். எஸ்சி., பிஎச். டி., (திருவேங்கடவன்

1. பெருமாள் திருமொழி-4. 9.
2. பாரதியார்: கவிதைகள்—தமிழ்-3.

பல்கலைக் கழகப் பெளதிகப் பேராசிரியர்) இந்த மொழி பெயர்ப்பினை முழுதும் நோக்கி அச்சேறும் தகுதி யுடையதாக்கினர். அவருக்கு என் நன்றி. திருவேங்கடவன் அருளால் அவர் மேலும் மேலும் இத்தகைய தமிழ்ப் பணி யில் ஈடுபடுவாராக.

நூற்றாண்டு விழாவினைக் கண்ட சென்னைப் பல்கலைக் கழகத்தினைப் பல துறைகளிலும் புகழுடன் விளங்கப் பேணி வளர்த்தவர்கள் அதன் துணைவேந்தர் சர். ஆ. இலக்குமண சாமி முதலியார் அவர்கள். கடந்த இருபத்தைந்து யாண்டு களாக அதனைக் கட்டிக்காத்துவரும் இவர் காலத்தில்தான் அஃது ஆல்போல் தழைத்து அருகுபோல்வேரூன்றியது. இவர் ஆட்சிப் பொறுப்பின்பொழுது தோன்றிய இந்த அறிவியல் குழந்தைக்கு இவரது நிறைந்த ஆசி உண்டு. இந்த மொழி பெயர்ப்பினை நானே வெளியிட்டுக்கொள்ள இசைவு தந்த இப்பெரியாருக்கும், அப் பல்கலைக்கழக ஆட்சிக் குழுவிற்கும் (Syndicate) என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

தமிழில் மொழிபெயர்க்க வேண்டிய நூல்கள் எண் ணற்றவை.

> புத்தம் புதிய கலைகள்-பஞ்ச
> பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்
> மெத்த வளருது மேற்கே;[3]

அந்த 'மேன்மை கலைகளைத்' தமிழில் 'மொழி பெயர்ப்பாகவும், முதல்நூலாகவும்' தோற்றுவித்தல் வேண் டும். மேனாட்டு மொழிகளினின்றும் அறிவியல் கருத்துக்கள் தமிழ்மொழியின்பால் வருவதற்கு 'மொழி பெயர்ப்பு சேது' ஒரு வழியாகும். இத்தகைய 'சேதுவை' அமைக்கும் பணியில் சிறியேனின் தொண்டு, 'குளித்துத்தாம் புரண்டிட்டு ஓடித், தரங்கநீர் அடைக்கல்உற்ற சலம்இலா அணிலின்'[4] தொண் டினைப் போன்றது. அந்த அணிலுக்கு இராமன் ஆசி கூறியது

---

3. பாரதியார்: கவிதைகள்—தமிழ்த்தாய்-9.
4. திருமாலை—27.

போல என் சிறிய தொண்டினுக்கு ஆசி கூறியுள்ளனர் நம் அருமை ராஜாஜி அவர்கள் தமது முன்னுரையின் மூலமாக. சில ஆண்டுகட்கு முன்னர் அணுவாற்றலை நன்முறையில் பயன்படுத்த வேண்டும் என்று மேனாட்டு அரசியல் தலைவர் கட்கு 'செவியறிவுறுத்தும்' தூதுக் குழுவின் தலைவராகச் சென்ற ராஜாஜி அவர்கள் 'அணுக்கரு பௌதிகம்' என்ற நூலுக்கு முன்னுரை வழங்கி ஆசி கூறுவது மிகவும் பொருத்த மன்றோ? அவருடைய இந்த ஆசியை இப்பிறவியில் கிடைத் தற்கரிய பெரும் பேறாகக் கருதி அப்பேற்றினை வழங்கிய பெரியாருக்கு என் நன்றி கலந்த வணக்கத்தைப் புலப்படுத் திக்கொள்ளுகின்றேன்.

இத்தகைய பெரியாரின் ஆசியைப் பெறுவதற்கும், என் வாழ்வில் நேரிட்ட பல இடையூறுகளைக்களைந்து ஆக்கத்துறை களில் என்னைப் பணியாற்ற ஊக்குவிப்பதற்கும் பல புதிய திருப்பங்களை உண்டாக்குவதற்கும் காரணமாக இருப்பவர் கள் காரைக்குடிக் கம்பன், அண்ணல் சா. கணேசன் அவர்கள். அவர்கள் செய்துவரும் உதவிகட்கெல்லாம் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன். அவர்களுக்கு என் வணக்கமும் நன்றியும் என்றும் உரியவை.

இந்த நூல் தொடக்கத்தில் ஜெர்மன் மொழியில் தோன் றியது; பிறகு ஆங்கில மொழியில் தவழ்ந்தது. அது சிறியே னைக் காரணமாகக்கொண்டு தமிழ்மொழியில் சிறுதேர் உருட்டி விளையாடுவதற்கு இசைவு தந்த அதன் உரிமையாளர் கட்கு[5] என் நன்றி என்றும் உரியது.

காலத்திற்கேற்ற நூல்களை அணி அணியாக வெளியிட் டுத் தமிழ்ப் பணி புரிந்துவரும் தமிழ்ப் புத்தகாலயம் இந்த அறிவியல் நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அதன் அதிபர் திரு. கண. முத்தையா செட்டியார் அவர்கட்கும், நூலினை அழகுற அச்சிட்டுக் கற்போர் கைகளில் கவினுடன் தவழச் செய்த இராமன்ஸ் அச்சகத்தினருக்கும் என் உளங் கனிந்த நன்றி என்றும் உரியது.

5. Friedr. Vieweg & Sohn-Verlag, Western Germany.

இந்நூலை யான் வெளியிட இசைவு தந்த திருவேங்கட வன் பல்கலைக் கழகத்தினருக்கு—சிறப்பாக அப் பல்கலைக் கழகத்தினைச் சீரிய முறையில் இயக்கிவரும் அதன் துணை வேந்தர் டாக்டர் V. C. வாமன்ராவ் அவர்கட்கு—என் மன முவந்த நன்றியைப் பணிவன்புடன் புலப்படுத்திக் கொள்ளு கின்றேன்.

பன்மொழிப் புலவர் உயர்திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்களை அறியாதவர்களே இரார். அவர்கள் தற் காலப் புதிய துறையாம் மொழியியல் துறையின் கொடுமுடி யைக் கண்டவர்கள். பல்லாண்டுகள் சென்னை அரசினரின் தமிழ்நூல் வெளியீட்டுக் கழகத்தின் (Bureau of Tamil Publications) தலைவராக இருந்து பல துறைகளில் பல அரிய தமிழ் நூல்கள் வெளிவரக் காரணமாக இருப்பவர்கள்; சென்னைப் பல்கலைக் கழகம் ஈன்ற அருமை மகளாம் மதுரைப் பல்கலைக் கழகத்தை அதன் முதல் துணை வேந்தராக நின்று 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' வளர்க்கும் பெரியார். அவர்களின் திருவடிகளில் இந்நூலினைப் படைத் துப் பெருமைகொள்கின்றேன். அவர்களது ஆசியால் இந்நூல் தமிழ் மக்களிடையே பெருமிதத்துடன் உலவும் என்பது என் திடமான நம்பிக்கை.

என்னிடம் இயல்பான பல குறைகளிலிருந்தும் என்னை யும் ஒரு கருவியாகக்கொண்டு என்னுள்ளே நின்று என்னை இயக்கி இந்நூலை இயற்றுவித்துத் தமிழன்னையின் புதுவாழ் வில் பணியாற்ற சிறியேன் மேற்கொண்ட முயற்சியை நிறை வேற்றி வைத்த எல்லாம் வல்ல நீலமேனி நெடியோனை மனம், மொழி, மெய்களால் நினைத்து, வாழ்த்தி, வணங்கு கின்றேன்.

திருப்பதி
ஜூன் 30, 1966

ந. சுப்பு ரெட்டியார்

# யுனெஸ்கோ
# அறிவியல் பயிற்றும்
# மூலமுதல் நூல்

தமிழாக்கம்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

உற்று நோக்கல், சோதனை ஆகியவற்றின் அடிப்படையில்தான் திறமான அறிவியல் பயிற்றல் அமையவேண்டும். இவையன்றி வேறொன்றும் அமை–யாது. ஆனால் சோதனைகள் செய்வதற்கும் நெருங்கிய உற்றுநோக்கல்களை மேற்கொண்டு கற்பதற்கும் தனிப்பட்ட வாய்ப்புத்திறன்கள் தேவைப்படுகின்றன. இன்னபிற பயிற்றுமுறைகளையும் இந்நூல் தன்னகத்தே கொண்டுள்ளது.

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939835-3-9




eBOOK ~ மின் நூல்

# தமிழாக்க ஆசிரியரின் குறிப்பு

''பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்;
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்''

என்று கூறியுள்ள பாரதியின் கனவு நாடு விடுதலை பெற்ற பிறகு விரைவாக நனவாகி வருகின்றது. 'மொழிபெயர்ப்பு' என்பது ஒரு கலை; இலக்கியப் படைப்புக்களில் மொழிபெயர்ப்பு நூலும் ஒரு வகை. கல்லூரிகளில் தமிழ் பாடமொழியாகச் செயற்படும் தொடக்க நிலையில் இம் மொழிபெயர்ப்பு நூல்கள்தாம் பெருந் துணைபுரியவேண்டும். மொழிபெயர்ப்பினைத் தொல்காப்பியர் 'அதர்ப்பட யாத்தல்' என்று குறிப்பிடுவர். மொழிபெயர்ப்பு நூலைப் படிப்போருக்கு 'இது ஒரு மொழிபெயர்ப்பு' என்று தோன்றுவண்ணம் முதல்நூல் போலவே சரளமான தீந்தமிழ் நடையில் மொழிபெயர்ப்பு அமைதல் வேண்டும். நூல் நுவலும் கருத்துக் களை யான் அறிந்தவனாதலால் இந்தக் குறிக்கோளை மனத்திற்கொண்டு அதனை ஓரளவு நிறை வேற்ற முயன்றுள்ளேன். அதில் சிறிதாவது வெற்றிபெற்றேனா என்பதை இந்த நூலைப் படிப்போர்தாம் முடிவுகட்டவேண்டும்.

மேனாட்டுப் புதிய துறைக் கருத்துக்கள் தமிழ் மொழியினை அடைவதற்கு 'மொழி பெயர்ப்பு சேது' ஒரு வழியாகும். தமிழ் மொழியின் ஆக்கத்தை விரும்புவோர் 'இதுவே வழி' என்று நினைத்தல் தவறு. தமிழர்கள் அத் துறைக் கலைகளை முறையாகப் பயின்று அத் துறை களில் 'முதல் நூல்கள்' (Original works) அமைத்தலைக் குறிக்கோளாகக் கொள்ளல் வேண்டும். 'இந்த மொழிபெயர்ப்பு சேது' அமைத்தலில் சிறியேனின் தொண்டு இராமன் அமைத்த 'சேதுவில்' ஒரு சிறு அணில் மேற்கொண்ட தொண்டினைப் போன்றது. தமிழ் மொழியாக்கத் தில் தூய்மையான ஆர்வமே முக்கியமாகும். கூட்டங்களில் பாமர மக்களிடையே 'வெற்று வேட்டுக்கள்' எழுப்புவதைவிட அறிஞர்கள் அமைதியாக உருப்படியான பணியில் இறங்குவது இன்று மிகவும் வேண்டப்படுவதொன்று. துறையறிவு சிறிதுமின்றி தமிழ்ப்புலமை யொன்றையே துணையாகக்கொண்டு மொழிபெயர்ப்புத் துறையில் இறங்குவது விரும்பத் தக்கதன்று.

இந்த நூலை எழுதி வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினருக்கு (Syndicate) — சிறப்பாக அதனைத் திறம்படக் கண்காணித்து வரும் அதன் துணைவேந்தர் டாக்டர் V. C. வாமனராவ் அவர்கட்கு — என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந் நூலை எழுதுங்கால் என்னுளே தோன்றாத் துணையாக நின்று எனக்கு உடல் நலத்தையும் மன வளத்தையும் அருளி வரும் எல்லாம்வல்ல இறைவனின் பெருங் கருணைத் திறத்தை எண்ணி அவன் அடிகளைப் போற்றுகின்றேன்.

திருப்பதி,
ஏப்ரில் 1, 1969

ந. சுப்பு ரெட்டியார்

# மலைநாட்டுத் திருப்பதிகள்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

மலைநாட்டுத் திருப்பதிகளுக்கு நம்மை அழைத்துக் கொண்டு
போவது போல் பாசாங்கு செய்யும் பேராசிரியர்,
உண்மையில் வைணவ சமய தத்துவங்கள் ,
பக்தி நிலைகள், மரபுகள் – இவற்றையெல்லாம்
நமக்கு சுற்றிக் காட்டி விடுகின்றார்.

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939685-9-8

*eBOOK ~ மின் நூல்*



# நூல் முகம்

''செடியாய வல்வினைகள்
தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா!
நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும்
அரம்பையரும் கிடந்துஇயங்கும்
படியாய்க் கிடந்துஉன்
பவளவாய் காண்பேனே.'[4]

—குலசேகராழ்வா

அனைத்தும் நடைபெறுவதற்கு ஆண்டவன் அருளே காரணம் என்பது நம் முன்னோர் கண்ட அநுபவம்; நம் அநுபவமும் அதுவே. கடந்த ஆறாண்டுகளாக நாலாயிரத்தை ஆய்ந்ததும், அதில் அநுபவத்தைப் பெற்றதும் அவன் அருளாலேயே என்பதை நன்கு உணர்கின்றேன். அதனையொட்டி ஆழ்வார்கள் அநுபவித்த 108 திருப்பதிகளையும் யானும் அநுபவிக்க வேண்டும் என்ற அவா என்னிடம் எழுந்ததும் அவன் அருளாலேதான். ''அவன் அருளாலே அவன் தாள் வணங்கி''[5] என்பது மணிவாசகர் கூறும் அநுபவம் அன்றோ?

1969-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் என் துணையாருடனும் என் மக்கள் இருவருடனும் மலைநாட்டுத் திவ்விய தேச யாத்திரை தொடங்கினேன். ஆழ்வார்களால், குறிப்பாக

---

4. பெரு.திரு 4 : 9
5. திருவா.சிவபு. அடி 18.

நம்மாழ்வாரால் மங்காசாசனம் செய்யப்பெற்ற எம் பெருமான்களைக் கண்ணாரக் கண்டு வாயார அவன் புகழ் பாடிச் சேவித்தோம். யான் பெற்ற அநுபவத்தைக் கட்டுரை களாக வடித்துத் தந்தால் பலருக்கும் பயன் படும் என்று சில நண்பர்கள் என்னைத் தூண்டினர். "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"[6] என்பது திருமூலரின் திருவாக் கன்றோ?

"என்சொல்லால் யான்சொன்ன
இன்கவி என்பித்துத்
தன்சொல்லால் தான்தன்னைக்
கீர்த்தித்த மாயன்"[7]

என்று நம்மாழ்வார் குறிப்பிட்ட அந்த 'மாயனே' என்னை இயக்கி இக்கட்டுரைகளை வரையத் திருவருள் புரிந்தனன் என்பது என் நம்பிக்கை.

ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பெற்ற மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றும் நான்கு பிரிவு களாக அமைந்துள்ளன. திருவண்பரிசாரம். திருவாட்டாறு, திருவனந்தபுரம் இம்மூன்றும் ஓரிடப் பிரிவு (1, 2, 3); திருவாறன்விளை, திருச்சிற்றாறு, திருக்கடித்தானம், திருவல்லவாழ், திருவண் வண்டூர், திருப்புலியூர் இந்த ஆறும் மற்றொரு பிரிவு (4, 5, 6, 7, 8, 9); திருக்காட்கரையும் திருமூழிக்களமும் வேறொரு பிரிவு (10, 11); திருவித்துவக் கோடும் திருநாவாயும் பிறிதொரு பிரிவு (12, 13). இந்த நான்கு பிரிவுகளிலும் மங்களாசாசனம் செய்தருளினவர் நம்மாழ்வார்; மூன்று பிரிவுகளில் பாடிச் சிறப்பித்தவர் திருமங்கையாழ்வார்; ஒரு பிரிவில் மட்டிலும் போற்றி யுரைத்தவர் குலசேகரப்பெருமாள்.

இந்தப் பதின்மூன்று கட்டுரைகளிலும் ஆழ்வார்களின் பக்தியுணர்ச்சியின் கொடுமுடிகளைக் காணலாம். சில

6. திருமந். 85.
7. திருவாய் 7.9:2

இடங்களில் சுட்டப்பெற்றுள்ள எடுத்துக் காட்டுகளால் பாசுரத்தின் சொல்வளத்தையும், உரையின் நயத்தினையும் உணரலாம். பக்தி இலக்கியத்தில் அகப்பொருள் துறைகள் அமைந்துள்ள சிறப்பைக் கண்டு சுவைக்கலாம். எல்லாக் கட்டுரைகளிலுமே 'ஆசாரிய ஹிருதயத்தின்' நாடி துடிப்பதனை அறியலாம். இக்கட்டுரைகளைப் படிப் போரிடையே வைணவ இலக்கியத்தின்பால் அவாவினை எழுப்பிவிட்டால் அதுவே என் சிறிய முயற்சிக்குக் கிடைக்கும் பரிசாகக் கருதி மகிழ்வேன்.

மேற்குறிப்பிட்ட திருக்கோயில்களில் இரண்டாவது பிரிவிலுள்ளவற்றைப் பார்ப்பதில் சிறிது சிரமத்தால் மயங்கினேன். அப்போது என் கெழுதகை நண்பர் திரு. **வீ. திருவேங்கட ரெட்டியார்** அவர்கள் பி.ஏ., பி.எல்., உரிமையாளர், ஸீமாட்டி ஹால், கோட்டயம் எங்களை விருந்தினராக ஏற்றுக் கொண்டு கார் வசதியை நல்கினார். அதனால் இந்த ஆறு திவ்விய தேசங்களுக்கும் எளிதாகப் போய்வர முடிந்தது. இந்த வசதிகள் அளித்த நண்பர் அவர்கட்கு என் நன்றியை புலப்படுத்துகின்றேன்.

இந்நூலிலுள்ள 2, 11, 12 எண்ணுள்ள கட்டுரைகள் திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தார் வெளியிடும் **சப்தகிரி** என்ற திங்கள் இதழ்களில் வெளி வந்தவை. 10 எண்ணுள்ள கட்டுரை பொள்ளாச்சி வரதராஜப் பெருமாள் கோயில் குடமுழுக்குவிழா மலரில் வெளிவந்தது. 1 எண்ணுள்ள கட்டுரை பெங்களூர்—ஜயநகர் அரங்கமன்னார்—ஆண்டாள் ஆலயக் 'குடமுழுக்கு விழா' மலரில் வெளிவந்தது. இவற்றை வெளியிட்ட அந்தந்த இதழாசிரியர்கட்கு என் நன்றி.

இந்நூலை யான் எழுதி வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினருக் கும் (Syndicate), சிறப்பாகப் பல்கலைக் கழகத்தைத்

திறம்பட இயக்கி வரும் அதன் துணைவேந்தர் டாக்டர் டி ஜகந்நாத ரெட்டி அவர்கட்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

காலத்திற்கேற்ற நூல்களை, சிறப்பாக பக்தி நூல்களை வெளியிட்டுச் சிறந்த முறையில் தமிழ்ப் பணியாற்றி வருபவர்கள் எஸ் ஆர். சுப்பிரமணிய பிள்ளை பதிப்பகத்தார். என் அரிய நண்பர் திரு. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களுடைய 'வேங்கடம் முதல் குமரி வரை' (4 பகுதிகள்) என்ற நூலை வெளியிட்டு தமிழ் மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர்கள். இந்த நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அவர்கட்கும்,அவர்களுடைய சென்னைக் கிளையைச் சிறந்த முறையில் செயற்படச் செய்து வரும் கந்தன் அடிமை திரு. எஸ்.பி. சண்முகம் பிள்ளை அவர்கட்கும் என் மனமுவந்த நன்றியறிதலைப் புலப்படுத்துகின்றேன்.

சென்னை உயர்நீதி மன்றத்து நீதிபதி எஸ். மகராஜன் அவர்கள் என் நெடுநாளைய நண்பர்;ரஸிகமணி டி.கே.சி.யின் முதன்மையான சீடர்; ஆங்கிலம் படித்த அன்பர்களிடையே யும் தமிழ்ச் சுவையூட்டி அவர்களையும் தமிழன்பர்களையும் தமிழ்ச் சுவைஞர்களாக மாற்றிய பெருமை இவருக்குநிறைய உண்டு. இவருடைய பேச்சிலும் எழுத்திலும் இவருடைய உயிர் நாடி பேசும்; கவிதைகளின் நாடிநரம்புகளைச் சுண்டிப் பார்த்து நமக்கு அவற்றின் துடிப்புக்களைத் தெளிவாக எடுத்துக்காட்டும் அற்புத ஆற்றல் இயல்பாக அமைந்த மேதை இவர். இத்தனைக்கும் மேலாக 'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்'[7] என்ற வள்ளுவத்திற்கு எடுத்துக்காட்டாகத் திகழும் உயர்குணச் செம்மல். இறையன்பிலும் தத்துவக் கருத்துகளிலும் திளைக்கும் இப்பெரியாரின் அணிந்துரை இந்நூலின் பெருமையை உயர்த்துகின்றது என்பது என் நம்பிக்கை. அணிந்துரை அருளிய அன்பருக்கு என் இதயம் நிறைந்த நன்றி என்றும் உரியது.

---

8. குறள்-996

வைணவ உலகில் காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்க ராசாரிய சுவாமிகளை அறியாதார் இல்லை. அவருடைய திவ்வியார்த்த தீபிகை (நாலாயிரத்தின் உரை) என்னுடைய பிஎச்.டி (Ph.D) ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டது. அவருடைய வேறு இரகஸ்ய கிரந்த உரைகளும் நன்கு பயன்பட்டன. அந்த நூல்களைப் பயிலுங்கால் அவருடைய எல்லையற்ற புலமையும் பக்தியும் எனக்குத் தெளிவாகப் புலப்பட்டன. என் மனங்கரைந்து அவருக்கு ஆட்பட்டேன். அதனைப் புலப்படுத்தும் வகையிலும், அவரது எண்பதாவது ஆண்டு நிறைவின் (சதாபிஷேகம்) மகிழ்வாகவும் இந்நூலை அவரது திருவடி மலர்களில் அன்புப் படையலாக்குகின்றேன். அன்னாரது ஆசியால் ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களிலும், ஆசாரியர்களுடைய உரைகளிலும் எனக்குத் தெளிவும் பக்தியும் மேலும் மேலும் பெருகும் என்பது என் திடமான நம்பிக்கை.

இந்நூலை எழுதி வெளியிடுவதற்கு என்னுள்ளே தோன்றாத் துணையாக நின்று என்னை இயக்கி வரும் திருவேங்கடமுடையானை மனம் மொழி மெய்களால் இறைஞ்சி வாழ்த்தி வணங்குகின்றேன்.

திருப்பதி,
மார்ச்சு 31, 1971

**ந. சுப்பு ரெட்டியார்**

# பரணிப்பொழிவுகள்

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியர் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில்
பணியாற்றியபோழ்து, நிகழ்த்திய விரிவுச் சொற்பொழிவுகளின்
தொகுப்பு. திருவேங்கடவன் பல்கலைக் கழகமும் பாக்காலா
தமிழ்ச்சங்கமும் இணைந்து சித்தூர் மாவட்டத்தில் வாழும்
தமிழர்கள் பயன்பெறும் வகையில்
இச்சொற்பொழிவுகளை நடத்தின.


ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939561-6-8

eBOOK ~ மின் நூல்




# PREFACE

Printed here are a series of six Extension Lectures on a twelfth century Tamil Classic called **Kalinkattup-parani**, which it was my pleasure and privilege to deliver at Pakala during 1965-1966 under the joint auspices of Sri Venkateswara University and the Pakala Tamil Cankam. Extension lectures, as a means of fulfilment of the public and social functions of a University and its Faculty members and as a means of active contact with the intelligentsia outside its portals, have an importance which can hardly be exaggerated. In this case, the lectures, as I can testify by my experience, supplied a long-felt desire and need of the Tamils of Pakala and places around it. The lectures are a critical exposition of the classic of Jayankontan which is couched in a significant minor mode of Tamil literature called Parani, a model classic which, in fact, inaugurated the **Parani** tradition. I am happy that, thanks to an enlightened gesture of the University administration, the lectures will reach a larger public through print. I take occasion to express my gratitude to the dynamic Vice-Chancellor Dr. D. Jaganatha Reddy and the Members of the Syndicate for arranging for the extension lectures, and later, sponsoring publication of the lectures in book form by the University. I thank the Pakala Tamil Cankam for hosting the lectures, and the lecturer too.

Department of Tamil,
S. V. University,
March 31, 1972.

N. Subbu Reddiar

# அம்புலிப் பயணம்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூல் வாயிலாக பேராசிரியர், அப்போலோ–8
முதல் அப்போலோ–17 வரையிலான
திட்டங்களனையத்தையும் இளைஞர்கள்
எளிதில் படித்து பயன்பெறும்
வண்ணம் படைத்துள்ளார்.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939430-3-8

*eBOOK ~ மின் நூல்*



அவர்கள் கைக்குக் கிட்டச் செய்து இதில் மேலும் ஊக்கம் அளித்தல் வேண்டும். இந்த முறையில் இந்த வரிசை நூல்கள் பெரும் பணியாற்றும் என்ற நம்பிக்கையுடையவன் நான்.

இந்த நூல் 1970 இல் அப்போலோ-11 பயணம் முற்றுப் பெற்ற சில திங்கள்களில் பிறந்தது. பல்வேறு காரணங்களால் தவழ்ந்து வரக் காலந் தாழ்த்தது. அதனுல் அப்போலோ-12 முதல் 17 முடியவுள்ள பயணங்களைப் பற்றிய செய்திகளையும் தொடர்பாகச் சேர்த்து 'அம்புலிப் பயணம்' பற்றிய எல்லாச் செய்திகளும் அடங்கிய ஒரு நூல் கிடைக்க வாய்ப்பாக அமைந்தது. இதுவும் இறையருள் போலும்!

இந்நூலை மனமுவந்து ஏற்று வெளியிட்ட திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினருக்கும், குறிப்பாக என்றும் இளையராய் இருந்து புதிய துறைகளில் தமிழை வளர்க்க வேண்டும் என்ற பேரவாவுடைய அதன் ஆட்சியாளர் அண்மையில் பவளவிழாக் கண்ட தாமரைச் செல்வர் திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கும் என் நெஞ்சு கலந்த நன்றி என்றும் உரியது. இந்நூல் அச்சு வடிவம் கொள்ளுங்கால் பார்வைப் படிவங்களைத் திருத்தி உதவிய என் முதல் மகன் செல்வன் S. இராமலிங்கம் M. Sc. க்கும் என் நன்றி உரியது.

டாக்டர் D. சகந்நாத ரெட்டி அவர்கள் மருத்துவத் துறையில், டாக்டர் A. L. முதலியாரை யொப்ப, பெரும் புகழ்பெற்ற பேரறிஞர். இரண்டாம் உலகப் பெரும் போரில் பல்வேறு இடங்களில் எட்டாண்டுகட்கு மேலாகப் பணியாற்றியவர். அடுத்துச் சென்னை அரசினர் மருத்துவமனை மருத்துவர், விசாகப் பட்டினம் மருத்துவக் கல்லூரிப் பேராசிரியர், குண்டூர் மருத்துவக் கல்லூரி முதல்வர், மீண்டும் விசாகப்பட்டினம் மருத்துவமனையில் நோயியல் (Pathology) இயக்குநர் என்று சுமார் பதினெட்டு ஆண்டுகள் பணியாற்றிய பெருந்தொண்டர். இவரது சலியாத உழைப்பையும் தந்நலமற்ற சேவையையும் பாராட்டு முகத்தான் நடுவரசு இவருக்குப் பாண்டிச்சேரியிலுள்ள சவகர்லால் நேரு முதுகலை மருத்துவக் கல்வி ஆராய்ச்சி நிலையத்தின் முதல்வர் பதவியை அளித்தது. ஐந்தாண்டுக் காலத்தில் டாக்டர் ரெட்டியார் அவர்கள் அதன் வளர்ச்சியை வீறுகொண்டெழச் செய்து அதன் தனி இருப்பை நாடறியச் செய்தார். செயல் திறம்மிக்க இவருடைய சுறுசுறுப்பையும் 'மெய் வருத்தம் பாராதும் பசி நோக்காதும் கண் துஞ்சாதும்' பணியாற்றும் திறமையையும் அறிந்த ஆந்திர மாநில அரசு திருவேங்கடவன்

பல்கலைக் கழகத் துணைவேந்தர் பதவியை அளித்தது. பதவி ஏற்ற நாலாண்டுக் காலத்திற்குள் இங்குப் பல புதிய துறைகளைப் பிறப்பித்தார். முதுகலையுடன் கூடிய தமிழ் ஆராய்ச்சித் துறையும் அவற்றுள் ஒன்று. பல்கலைக் கழகத்தில் பல்லாண்டுகள் உறங்கிக் கிடந்த திட்டங்களையெல்லாம் உயிரியம் (Oxygen) ஊட்டிச் செயற்படச் செய்து மருத்துவ நிபுணத்துவத்தை ஆட்சி முறையிலும் காட்டின பெருந்தகை இவர். முதல் துணைவேந்தர் திரு. எஸ். கோவிந்தராஜுலுவை 'விசுவகர்மா' என்றால் மூன்றாம் துணைவேந்தர் டாக்டர் ரெட்டியை 'மயன்' என்று கூறலாம்.

இவருடைய அரும்பெரும் பணிச்சிறப்புக்களைப் பல்கலைக் கழக வட்டத்தில் பல இடங்களிலும் காணலாம். பாண்டி மருத்துவ ஆராய்ச்சி நிலையமும் திருப்பதிப் பல்கலைக் கழகமும் இவருடைய நினைவுச் சின்னங்களாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

இவருடைய 'கடைக்கண் நோக்கு தமிழ்த்துறைபாலும் உண்டு. ஆதலால், இவருடைய ஆட்சிக் காலத்தில் இங்குப் பணியாற்றும் பேறுபெற்ற நான் இவரது அரும்பெருஞ் சேவையின் நினைவாக இச்சிறு நூலை இவருக்கு மகிழ்ச்சியுடன் அன்புப் படையலாக்குகின்றேன். அமெரிக்கர்கள் அம்புலிப் பயணத் திட்டங்களை விரைவாக நிறைவேற்றினது போல் இவரும் பல்கலைக்கழக வளர்ச்சியின் பயனுள்ள திட்டங்களை மின்னல் வேகத்தில் நிறைவேற்றுவதால் இந் நூலை இவருக்குப் படைப்பது சாலப் பொருத்தமாகும் என்று கருதுகின்றேன்.

முப்பது ஆண்டுகளாகத் தமிழ்ப்பணி புரிந்துவரும் என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு என்னுள்ளே தோன்றாத் துணையாக நின்று வருங்காலக் கல்வழியினருக்குப் பயன்படும் வண்ணம் இச் சிறுநூலை எழுதி வெளியிட என்னை இயக்கிச் செயற்படச் செய்த ஏழுமலையின்மீது திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் நெடியோனை மனம் மொழி மெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

திருப்பதி<br>15—11—73 ந. சுப்பு ரெட்டியார்

# திருவேங்டமும் தமிழ் இலக்கியமும்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய
சொற்பொழிவுகள், நம்மை சங்க காலத்திற்கு
அழைத்துச் செல்கின்றன; இடைக்காலத்திற்கு
இட்டு வருகின்றன; பிற்காலத்திற்கும்
கொண்டு வந்து நிறுத்துகின்றன.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939685-0-5




eBOOK ~ மின் நூல்

# நூல்முகம்

"வெற்பென்று வேங்கடம் பாடினேன்; வீடாக்கி
நிற்கின்றேன்; நின்றுநினைக் கின்றேன்—கற்கின்ற
நூல்வலையிற் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண்."[1]

—திருமழிசையாழ்வார்

எம் பெருமான் கோயில் கொண்டிருக்கும் திவ்விய தேசங்களில் வாழ்வதே ஒரு பெரும்பேறு என்பது வைணவர்களின் நம்பிக்கை. கடந்த பதினைந்து ஆண்டுகளாக அத்தகைய பேறுபெற்றவன் யான். இந்நிலையில் வேங்கடத்து மேயான் "அன்பனே, என்னையும் என் ஊரையும் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கும் நீ, என்மேலும் என் ஊரின் மேலும் எழுந்த தமிழ் இலக்கியங்களைப் பற்றியும் சிறிது சிந்திப்பாயாக" என்று பணிப்பது போல் சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து கடிதம் வந்தது. அதில் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா அறக்கட்டளையின்கீழ் "தமிழ் இலக்கியத்தில் திருவேங்கடம்" என்ற தலைப்பில் இரண்டு அல்லது மூன்று சொற்பொழிவுகள் நிகழ்த்துமாறு குறிப்பிடப் பெற்றிருந்தது.

இங்ஙனம் ஒரு பெருங்கடமையை எங்ஙனம் ஆற்றுவது என்று திகைத்துக் கொண்டிருக்கும் பொழுது, நம்மாழ்வார் இறைவனின் இருப்பைப்பற்றிக் கூறியுள்ள,

"கறந்தபால் நெய்யே நெய்யின்இன் சுவையே
கடலினுள் அமுதமே அமுதில்
பிறந்தஇன் சுவையே சுவையது பயனே"[2]

---

1. நான்முகன் திருவந்–40
2. திருவாய்—8.1:7

என்ற பாசுரப்பகுதி நினைவிற்கு வந்தது. தமிழ் இலக்கியக் கடலிலும் திருவேங்கடத்தைப்பற்றிய குறிப்புகள் அங்ஙனமே இருப்பதாக எண்ணினேன். எள்ளினுள் எண்ணெய் போல் இருக்கும், 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலின்'[3] இருப்பிடமும் அங்ஙனம் தானே இருக்க முடியும்? கடிதம் பெற்ற நாள் தொட்டு சிலவாரங்கள் இப் பொருள்பற்றியே என் சிந்தனை ஓடிய நிலையிலிருந்தது. இறுதியில் 'சங்ககால வேங்கடம்', 'இடைக்கால இலக்கியத்தில் வேங்கடம்', 'திருவேங்கடத்தின்மீது எழுந்துள்ள நூல்கள்' என்ற மூன்று தலைப்புகளில் என் பொழிவுகளைத் திட்டமிட்டேன். இங்குள்ள வசதிகளுக்கேற்பவும், என் ஒய்வுக் கேற்பவும், என் அறிவிற்கேற்பவும் இப் பொழிவுகள் அமைந்தன. இதற்குமேலும் திருவேங்கடத்தைப்பற்றிய செய்திகளைத் திரட்ட இப்பொழிவுகள் ஒரு தூண்டுகோலாக அமைதல் கூடும் என்ற நிலையில் அமைதி பெறுகின்றேன்.

பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் ஆராய்ச்சி உலகிற்கும் பொதுமக்கள் உலகிற்கும் இடையே ஒரு பாலம்போல்—சேதுபோல்—அமைந்து திகழ்ந்ததைத் தமிழ்கூறு நல்லுலகம் நன்கு அறியும். பிள்ளை அவர்கள் அறிஞர்கள் ஆராய்ச்சியால் கண்டறிந்த கருத்துக்களை யெல்லாம் பொதுமேடையில் எளியமுறையில் வாரிவழங்கிப் பொது மக்களிடையே ஆராய்ச்சி மனப்பான்மைக்கு வித்திட்டு அதனை வளர்த்தவர். தம் சொல்வன்மையால் பொதுமக்களிடம் அழகிய குழைவுத் தமிழில் இலக்கியச் சுவையை நன்குஊட்டியதால் இன்று அவர்கள் உள்ளத்தில் 'சொல்லின் செல்வராக' நிலையான இடம்பெற்றுத் திகழ் கின்றார்கள். அத்தகைய பெரியார் அவர்களின் நினைவுச் சொற்பொழிவுகளை ஆற்றும் பேறு பெற்றமைக்குப் பெரிதும் மகிழ்கின்றேன்.

---

3. மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்-செய் 1

என்னை இம்முறையில் சிந்திக்க வைப்பதற்கு முதற் காரணமாக இருந்த சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியரும், என் ஆசிரியப் பெருந்தகை பேராசிரியர் மு நடேச முதலியார் அவர்களின் அருமைத் திருமகளுரு மாகிய டாக்டர் ந. சஞ்சீவி அவர்கட்கும், கரும்பு அயிரற்குக் கூலி கொடுக்கும் சென்னைப் பல்கலைக் கழகத்தினருக்கும் என் உளம் நிறைந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

தாமரைச் செல்வர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் கல்வித்துறை ஜாம்பவான். தம் வாழ்நாள் முழுவதும் கல்விப் பணி ஒன்றிலேயே தம் கவனத்தைச் செலுத்திப் பெரும்புகழ் பெற்றவர். தமிழகக் கல்வி இயக்குநராகப் பணியாற்றிய பல்லாண்டுக் காலத்தில், தொடக்க நிலை, உயர்நிலை, கல்லூரி நிலைக் கல்வியில் ஊக்கமும் ஆக்கமும் தந்து 'பால் நினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' அந்நிலைக் கல்விகளின் ஆழத்தையும் அகலத்தையும் பெருக்கி, அவற்றின் தரத்தையும் உயர்த்திய பெருமகனார். சென்னைப் பல்கலைக் கழகத்தின் நூற்றுண்டுக்கு மேற்பட்ட வரலாற்றில் தமி ழறிந்த, தமிழரார்வம் மிகுந்த ஓர் அறிஞர்—தமிழ்க் கல்வித் தொண்டர்—முதன் முதலாகத் துணைவேந்தராக அணி செய்த பெருமை இவரைச் சாரும். இங்ஙனம் பணியாற்றிய ஆறுண்டுக் காலத்தில் பல்கலைக் கழகக் கல்வித் தரத்தைப் பல்லாற்றுனும் உயர்த்திய பெருமை இவருக்கே உரியது. இவரது கடைக்கண் பார்வை தமிழ்த்துறைக்கு இருந்ததனுல் அது மிக விரிவாக வளர்ந்து சிறப்புற்றது. இத்தகைய பெரியார் மிகப்பெரிய பொருள்பற்றிச் சிறியேனுல் ஆக்கப் பெற்ற நூலுக்கு அணிந்துரை நல்கி ஆசி கூறியமைக்கு என் உளங்கனிந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன்.

தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணுநிதி அவர்களின் பீடும் பெருமையும் நிறைந்த ஆட்சி இந்தியத் துணைக்கண்டம் முழுவதிலுமிருந்தும் ஒரே கருத்துடன் பாராட்டைப் பெற்றுத் திகழ்கின்றது. கலைச்சுவையும்

தமிழ்ச் சுவையும் சுத்துவக்கும் இன்பமும் ஒருங்கே நிறைந்த இவரிடமிருந்து கருணை வெள்ளம் பல்வேறு துறைகளில் இவர் மேற்கொண்ட சமூக நலத் திட்டங்களில் பாய்ந்து செல்கின்றது. பிச்சைக்காரர்கள், கண்ணிழந்தோர், உடல் ஊனமுற்ருேர், ரிக்ஷா வண்டிக்காரர்கள், சாலேயோரம் வாழ் ஏழை மக்கள் ஆகியோர் இவர் கருணையின் பலனேத் துய்த்து இவரை வாழ்த்துகின்றனர். இவர் ஆட்சியில் தமிழும் திருக்குறளும் ஏற்றமான உரிய இடங்களேப் பெற்றன; தமிழாசிரியர்களின் நிலேயும் உயர்ந்தது. இவரது ஆட்சிக்காலத்தில்தான், இவருடைய கடைக்கண் பார்வையினுல்திருப்பதி திருவேங்கடவன் பல்கலேக்கழகத்தில் தமிழ்த் துறை எம். ஏ., பி எச். டி. அளவில் விரிந்து பெருகிச் செழிப் புடன் வளர்ந்து வருகின்றது. கருணுநிதியாகிய இவரது கருணே என்றுமே இத்துறைபால் உண்டு என்ற நம்பிக்கை நிலேயாகவே என்னிடம் உளது. தமிழகத்தின் எல்லேயாகத் திகழும் 'வட, மாலவன் குன்றத்திற்கும்' தமிழுக்கும் உள்ள உறவினேக் காட்டும் இந்நூலே, அவரது 52-வது அகவை நிறைவின் நினேவாக அன்புப் படையலாக்கிப் பெருமிதம் கொள்ளுகின்றேன்.

இந்த மூன்று பொழிவுகளேயும் நூல்வடிவில் என் பொறுப்பில் வெளியிட்டுக் கொள்ள இசைவுதந்த சென்னேப் பல்கலேக் கழகத் துணேவேந்தர் தாமரைச் செல்வர் நெ. து. சுந்தர வடிவேலு அவர்கட்கும், இந்தத் தொடர் சொற் பொழிவுகளே ஆற்றவும், அப்பொழிவுகள் அச்சுவடிவம் பெறவும் இசைவுதந்த திருவேங்கடவன் பல்கலேக் கழகத் துணேவேந்தர் டாக்டர் D. சுகந்நாத ரெட்டி அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

காலத்திற்கேற்ற பல அரிய இன்றியமையாத உயர்ந்த தமிழ் நூல்களே வெளியிட்டுப் பெரும் புகழ்பெற்ற பாரி நிலேய உரிமையாளர் திரு. க. அ. செல்லப்பன் அவர்கட்கும், இந்த நூலே விரைவில் அழகுற அச்சிட்டுக் கற்போர் கரங்

களில் தவழச் செய்த மாருதி அச்சகத்தினருக்கும் என் இதயம் நிறைந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

என்னுள்ளே தோன்றாத் துணையாக நின்று என்னை இயக்கியும், எனக்கு உடல்நலனும் மனவளமும் நல்கியும் வரும் ஏழுமலையான் பொன்னார் திருவடிகளை நினைந்து,

"சேயன் அணியன் என்சிந் தையுள்நின்ற
மாயன், மணிவாள் ஒள்வெண் தரளங்கள்
வேய்விண் டுதிர்வேங் கடமா மலைமேய
ஆயன் அடியல்லது மற்றறி யேனே."[4]

என்ற திருமங்கை மன்னனின் வாக்கால் வழுத்தி வணங்கு கின்றேன்.

திருப்பதி
15-7-75

ந. சுப்புரெட்டியார்

---

4. பெரிய திருமொழி 1. 10 : 8

# தொலை உலகச் செலவு

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

விண்வெளி சம்பந்தப்பட்ட பல்வேறு விஷயங்களை – நம்
அண்டை உலகுகள், அறிவியல் துணைக்கோள்கள், வளி
மண்டலக் கடல், விண்வெளிப் பேரடர்கள், விண்வெளியில்
உயிர்கள், விண்வெளி நிலையங்கள் –
பதினேழு இயல்கள் வாயிலாக எளிய நடையில்
அழகுத்தமிழில் அளிக்கின்றார் பேராசிரியர்.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939561-8-2




*eBOOK ~ மின் நூல்*

## நூல்முகம்

*பாலாழி நீகிடக்கும் பண்பையாம் கேட்டேயும்*
*காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்—நீலாழிச்*
*சோதியாய்! ஆதியாய்! தொல்வினையெம் பால்கடியும்*
*நீதியாய்! நின்சார்ந்து நின்று.*[1]

—நம்மாழ்வார்.

விபுவான (எங்கும் நிறைந்த) ஆண்டவன் ஞான சொரூபமுடையவன் என்றும், அங்ஙனமே அணுவளவான ஆன்மாவும் ஞானவடிவுடையது என்றும் வேதாந்த நூல்கள் விளம்புகின்றன. ஆண்டவன் வினைகட்கு அப்பாற்பட்டவன்; ஆன்மாவோ வினைகளினால் கட்டுண்டு கிடப்பது. ஞான வடிவான ஆன்மாவிற்கும், ஒரு ஞானம் உண்டு; அது 'தர்ம பூதஞானம்' எனப்படும். ஆண்டவன் அருள் இருப்பின் தியானத்தினால் மனம் ஒன்றித் தர்மபூத ஞானம் மலர்ந்து ஆன்மா ஆண்டவனையே காணும் ஆற்றலைப் பெறும். ஞானிகள் இந்த ஆற்றலைப் பெற்றுள்ளனர். அவர்கள் கால எல்லையையும் (Time) கடந்து நடந்ததையும் நடக்கப்போவதையும் முற்கூறும் ஆற்றல் பெற்றவர்கள். அங்ஙனமே, விஞ்ஞானிகள் மனம் ஒன்றி ஆய்வுகளால் இடத்தைக் (Space) கடந்து பல உண்மைகளைக் காணவல்லவர்கள். அதனால் தான் தாம் போகாமலேயே மதிமண்டலம், செவ்வாய்

---

1. பெரிய திருவந்தாதி - 34.

மண்டலம் போன்ற இடங்களின் தன்மைகளை நன்கு அறிந்து அவர்களால் பயணங்களை மேற்கொள்ள முடிகின்றது. சில ஆண்டுகட்கு முன்னர் ஆளுள்ள பயணங்களை மேற்கொண்டு அம்புலிக்குச் சென்று மீண்டனர். அண்மையில் செவ்வாய்க்கு ஆளில்லாப் பயணங்களை மேற்கொண்டு வெற்றி கண்டனர். செவ்வாய்க்கோளில் உயிர் உண்டா என்ற சோதனையையும் நடத்திவருகின்றனர்.

இங்ஙனமே, கவிஞர்களும் சில சமயம் தம்மை அறியாமல் கற்பனையினால் தொலைவிலுள்ள உலகங்களையே மானசீகமாகக் கண்டுகளிக்கின்றனர். இந்த 'நீள்நோக்கின்' அடிப்படையில்தான் பாரதியாரும்,

> 'பூமிக் கெனைய னுப்பினான்—அந்தப்
> புதமண் டலத்திலென் தம்பிக ளுண்டு.'[2]

என்று புத மண்டலத்தைப் பற்றிச் சிந்தித்துப் பாடியுள்ளார் போலும்! இன்னும் வருங்காலத்தில் மனித மனம் எல்லாக் கோள்களுக்கும் பயணம் செய்யவும் அங்குள்ள நிலைமைகளை ஆராயவும் முயன்றுவரும் என்பதற்கு எள்ளளவும் ஐயம் இல்லை.

இங்ஙனம் மனித மனம் மேற்கொள்ளும் செயல்களையெல்லாம், ஆய்வுகளையெல்லாம், பொதுமக்களும் பள்ளிச் சிறுர்களும் அப்பொழுதுக்கப்பொழுது அறிந்துகொள்ள வாய்ப்பளிப்பது அறிஞர்களின் கடமையாகும். எளிய முறையில் கவர்ச்சியூட்டும் வண்ணம் சிறிய சிறிய அறிவியல் நூல்களை எழுதி அவர்கள் கைக்குக் கிட்டச் செய்தல்

---

2. கண்ணன் பாட்டு: கண்ணன்-என் தந்தை. வரி. (1-2)

வேண்டும். பல நுட்பமான அறிவியல் உண்மைகளையும் எளிய முறையில் விளக்குவனவாக நூல்கள் அமைதல் வேண்டும். இந்த முறையில் இந்த வரிசையில் வெளிவரும் நூல்கள் பெரும்பணியாற்றும் என்ற நம்பிக்கையுடன் இம் முயற்சியில் ஈடுபட்டுள்ளேன்.

இந்த நூல் 1970இல் அப்போலோ-11 பயணம் முற்றுப் பெற்ற சில நாள்களில் 'அம்புலிப் பயணம்' என்ற நூலுடன் இரட்டைக் குழந்தை போல் பிறந்தது. மூன்றாண்டுகள் இறகுகள் முளைக்காத குஞ்சுபோல் கிடந்து 'அம்புலிப் பயணம்' 1973இல் இறகுகள் முளைத்துப் பறக்கத் தொடங் கியது. ஆனால், இந்த நூல் செவ்வாய்க்கோள் ஆய்வு வெற் றியை ஏந்திக்கொண்டு பறக்கவேண்டும் என்று காத்துக் கிடந்ததுபோலும்! அந்த வெற்றியின் எக்களிப்பினால், இதற்கும் இறகுகள் முளைத்துப் பறக்கத் தொடங்கிவிட்டது. இனி, இந்த இரண்டு நூல்களும் தமிழ்கூறு நல்லுல கெங்கணும் இராமஇலட்சுமணர்கள் போல் இணைந்தே பறந்து சென்று தம்மை அறிமுகம் செய்துகொள்ளும் என்று நம்புகின்றேன்.

இந்நூலை மனமுவந்து ஏற்று வெளியிட்ட 'கழகத் திற்கும்' சிறப்பாக எண்பது அகவையை எட்டிப்பிடிக்கும் அதன் ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கும் என் இதயங் கனிந்த நன்றி என்றும் உரியது. இந்த நூல் அச்சுவடிவங் கொள்ளுங்கால் பார்வைப் படிகளைத் திருத்தி உதவிய என் முதல் மகன் செல்வன் S. இராமலிங்கம் M. Sc. க்கும் என் வாழ்த்து உரியது.

இந்நூலை வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினருக்கும்

(Syndicate) சிறப்பாக அதனைப் 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' கண்காணித்து வரும் அதன் துணை வேந்தர் பேராசிரியர் K. சச்சிதானந்தமூர்த்தி அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

திருவேங்கடவன் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் டாக்டர் V. C. வாமன ராவ் அவர்கள் கல்வித்துறையில் 'டாக்டர்' பட்டம் பெற்றவர். கல்வித்துறையில் பல மட்டங்களில் பல்வேறு பொறுப்புள்ள பதவிகளிலிருந்து பணியாற்றி ஆந்திரமாநிலக் கல்வித்துறை இயக்குநர் பதவி அடைந்தவர். அதிலும் பல்லாண்டுகள் திறம்படப் பணியாற்றி ஓய்வு பெற்றபின்னர்த் தாமாகத் தேடிவந்த இப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பதவியை ஐந்தாண்டுக் காலம் வகித்து மிகத் திறம்படக் கண்காணித்து எல்லோர் மனத்தையும் கவர்ந்தவர். குறிப்பாக மாணவர்களிடம் செல்வாக்குடன் திகழ்ந்தவர். எவர் மனத்தையும் புண்படச் செய்யாப் பொன்னான உள்ளத்தைக் கொண்டவராதலால் இவர் புகழுடன் திகழ்ந்ததில் வியப்பொன்றும் இல்லை. இவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எப்படியோ எனக்கு ஏற்பட்டது. 'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்' என்ற வாய்மொழியின் உண்மையை இவரிடம் கண்டு மகிழ்ந்தேன். இவர் மூலம் பல வாழ்க்கை உண்மைகளையும், ஆட்சிமுறை நுட்பங்களையும் அறியும் வாய்ப்பும் எனக்குக் கிட்டியது. அவற்றிற்கெல்லாம் அறிகுறியாக இச் சிறுநூலை இவருக்குப் படைத்து மகிழ்வது பொருத்தமாகும் என்று கருதுகின்றேன்.

கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளாகப் பல்வேறு துறைகளில், பல்வேறு கோணங்களில் தமிழ்ப்பணி புரிந்து தமிழன்னையின் உளங்களிக்கச் செய்யும் என்னையும் ஒரு

கருவியாகக் கொண்டு என்னுள்ளே தோன்ருத் துணையாக நின்று வருங்காலக் கால்வழியினருக்குப் பயன்படும்வண்ணம் இச் சிறு நூலை எழுதி வெளியிட என்னை இயக்கிச் செயற் படச் செய்த நெடியோன் திருவருளை மனம் மொழி மெய் களால் நினைந்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

திருப்பதி
7-8-1976

ந. சுப்பு ரெட்டியார்.

Religion and Philosophy of

# NALAYIRAM

with Special Reference to

# NAMMALVAR


## PROF DR N SUBBU REDDIAR




எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

This Book (Professor's PhD Thesis) is an unique one dealing as it does with the Alvars. Sri Vaishnavites must feel greatly indebted to Professor (is a born Saivite) for the deep study and thought he has bestowed on ***Nalayira Divya Prabhandham.*** In this his great work which can be called his *magnum opus*, he has traced the history of Vaishnavism from the time of the *Rig Veda*.


ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*






ISBN: 978-81-939835-4-6


eBOOK ~ மின் நூல்

# PREFACE

This book is a fruit of my study of the compositions of the Āḻvārs from the Religious and Philosophical points of view in the main and occasionally from the literary viewpoint. A fairly thorough critical study is offered in the following pages of the hymns on the strength of work done over a period of five years.

The focus of the study is on Nammāḻvār's poems, for he is the most well-known amongst the Āḻvārs and held as the leading exponent of Vaiṣṇavism through Tamil and as the head of all those who have been following him representing Śrī Vaiṣṇavism in the post-Āḻvār period. However, the compositions of the other Āḻvārs and the contributions made by them to the cause of Vaiṣṇvism have also been taken into consideration for purpose of nothing similarly in treatment to that of Nammāḻvār and for separately mentioning their contributions whichever are individualistic and unique in their nature.

Although a critical study of the commentaries and criticisms upon these compositions is not within the framework of the present study, the expositions of the later Ācāryas including their commentaries are utilised mainly for clarifying the interpretation of certain typical passages and problems of religious significance. A general, but brief, account of some of the well-known commentaries is given in a separate chapter (Section V, Chapter XXXI).

Schools of thought in India and elsewhere have been mostly maintaining Religion and Philosophy as independent branches However, Indian philosophy has been theistic from the earliest times with the exception of the schools of Absolutism. The concept of a personal deity is involved in this co-ordinated development of religion and philosophy, the principles of which have coalesed rendering impossible a treatment of one in a manner independent of the other. Works which are brought under the subject of philosophy proper do not question the foundations of religious experience and can be admitted to tacitly lend support to the validity of the religious experiences. Works like the *Itihāsas, Purāṇas* and

'குயில் பாட்டு' ஆகிய இம்மூன்றனுள் இறுதியில் குறிப்பிட்ட குயிற்பாட்டே மிகச் சிறந்தது என்பது பலரது கொள்கையாகும். ஒரு கவிதையைச் சுவைத்துக் கூறுகின்றவர்களின் கருத்துகளெல்லாம் அவரவர்களுடைய உணர்ச்சியையே சார்ந்திருக்கும் என்று கொண்டால் இந்தக் கூற்று வாதத்திற்கு இடந்தராது. பல்லாண்டுகளாக யான் இந்தக் கவிதையைச் சுவைக்கும்போது குமிழியிட்டெழுந்த என் கருத்துகள் 'பாரதியாரின் நூற்றாண்டில்' நூல் வடிவம் பெற்றுத் தமிழ் கூறு நல்லுலகில் நடையாடுகின்றன. பாரதியாரின் படைப்புகளில் ஈடுபாடு கொண்டவர்கள் என்னுடைய இந்தச் சிறிய நூலிலும் தம் கவனத்தைச் செலுத்துவார்கள் என்பது என் உறுதியான நம்பிக்கை. அத்தகைய பேற்றினை இந்நூல் பெறுமானால் அதனை என் பெறற்கரிய பேறாகக் கருதுவேன்.

இந்த நூலை அழகுற அச்சிட்டும், நன்முறையில் கட்டமைத்தும் தந்த நாவல்'ஆர்ட் அச்சகத்தின் அதிபர், கவிஞர் திரு. நாரா நாச்சியப்பன் அவர்கட்கு என் நன்றி கலந்த அன்பினைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய டாக்டர் ஆர். கே. நாகு என் உடன் பிறவாச் சகோதரர் போன்றவர். நான் டாக்டர் பட்டம் பெறுவதற்குமுன் அப்பட்டத்தைப் பெற்றவர். டாக்டர் மு. வரதராசனின் பல நன்மாணாக்கர்களில் ஒருவர். தமிழ் இலக்கியங்களையும் இலக்கணங்களை பழுதற ஓதிப் பயன் பெற்றவர். அடக்கமான பண்புடையவர். எளிமையாக மாணாக்கர்களிடம் பழகினாலும் ஒழுங்குமுறையையும் நன்னடக்கையையும் வற்புறுத்துபவர். இக்காலத்திலும் மாணவர்கட்குப் பொறுப்புடன் கற்பித்து அவர்கள் பாராட்டுதலைப் பெற்றவர்! இத்தகைய பண்புடைய நல்லாசான் இந்நூலுக்கு உவந்து அணிந்துரை வழங்கினமைக்கு என் அன்பு கலந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ரசிகமணி டி.கே.சி. சிதம்பரநாத முதலியாரை (டி.கே.சி.) அறியாதவர்கள் அரியர். 1949 மார்ச்சு முதல் இவரை அறிவேன். இந்த ஆண்டு காரைக்குடிக் கம்பன் விழாவிலும்' அமராவதிப் புதூர் மகளிர் இல்ல ஆண்டு விழாவிலுமாக இரண்டு சொற்பொழிவுகளைக் கேட்டுச் சுவைத்தவன். இதற்கு முன்னர் இவரது பல நூல்களை, குறிப்பாக இவர் பதிப்பித்த இராமாயணத்தை, படித்துச் சுவைத் திருந்தேன் இரண்டு நாள் பழக்கந்தான்; கவிதைகளை நாடி படித்துப் பார்த்துச் சுவைக்கும் பழக்கத்தைப் பெற்றேன். சுவைக்கும் பழக்கம் வருவது முன்னைய பிறப்பில் புண்ணியம் செய்தவர் கட்குதான் கைவரப் பெறும் என்று பெரியோர்கள் பணிப்பர். இப்பழக்கம் கைவரப் பெறுவது அரிய முயற்சியால்தான் ஏற்படும் என்பதை இப்படிச் சொல்லி வைத்தனர் போலும். இத்தகைய பெரியாருக்கு இந்நூலை அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். அமரராகிய இவர்தம் ஆசியால், இலக்கியங் களைச் சுவைக்கும் பழக்கம் மேன்மேலும் வளரும் என்பது என் திடமான நம்பிக்கை.

எழுதுகோல் தெய்வம் இந்த
எழுத்தும் தெய்வம்![3]

என்று தம் கொள்கையையே அடித்துக் கூறினவர் பாரதியார். எழுத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் அனைவருக்கும் இக் கொள்கை மறை வாக்காகவே இருத்தல் வேண்டும். இத் தகைய கொள்கையில் வாழ்ந்த கவிஞருக்குத் 'தமிழ் கூறு நல் லுலகம்' எங்கணும் நூற்றாண்டு விழாக் கொண்டாடப் பெறுகின்றது. 'குருவிக்குத் தகுந்த இராமேச்சுரம்' என்ற பழமொழிக் கொப்ப இச்சிறியேனும் அக்கவிஞரேறுபற்றி நான்கு ஆய்வு நூல்கள் வெளியிட்டு அவர் நூற்றாண்டு

---

3. சுயசரிதை - பாரதி அறுபத்தாறு - 18.

விழாவினைக் கொண்டாடுகின்றேன். மூன்றினைப் பதிப்பகத்தார் வெளியிட்டனர். இதனை நானே என் பொறுப்பில் வெளியிட்டு மகிழ்கின்றேன்.

இச்சமயத்தில் பாரதியாரின்,

செய்யும் கவிதை பராசக்தி
யாலே செய்யப்படுங்காண்[4]

பாட்டினிலே சொல்லுவதும்
அவள்சொல் லாகும்[5]

என்ற வாக்குகளைச் சிந்திக்கின்றேன். பாரதியார் கருதுவது போல் இந்நூலை யான் எழுதி வெளியிட்டதற்கு என்னுள்ளே அந்தர்யாமி இருக்கும் திருவேங்கடமுடையானே காரணன ஆவான். அவனே எனக்கு நோயற்ற நிலையையும் எல்லா நலன்களையும் ஈந்து என்னை இயக்கி நன்னெறிப் படுத்தி வருபவன். அவனே பாரதியார் வழிபடும் முருகனாகவும் சக்தியாகவும் இருந்து வருகின்றான்; அவனை மனம் மொழி, மெய்களால் வழுத்தி இறைஞ்சி வணங்குகின்றேன்.

வேலைப் பணிந்தால் விடுதலையாம்; வேல் முருகன்
காலைப் பணிந்தால் கவலைபோம்—மேலறிவு
தன்னாலே தான்பெற்று சக்திசக்தி சக்தியென்று
சொன்னால் அதுவே சுகம்.[6]

சென்னை-600 040
நவம்பர் 30, 1982

ந. சுப்பு ரெட்டியார்

---

4. வி. நா. மா - 26
5. தோ. பா: பேதை நெஞ்சே - 5
6. ஷ்ெ. விடுதலை வெண்பா - 4

# கண்ணன் பாட்டுத்திறன்

[பாரதி நூற்றாண்டு விழா வெளியீடு]


பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**




எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பாட்டிலமைந்துள்ள படிமங்களையும், கலவை
உருக்காட்சிகளையும் வெளிநாட்டார் இலக்கியத்
திறனாய்வுவழி எடுத்துக் காட்டியுள்ளமை
சுவையாகவும், இலக்கிய மாணாக்கர்கட்கு
பெரிதும் பயனுடையதாக அமைந்துள்ளது


**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939270-7-6

*eBOOK ~ மின் நூல்*




## நூல் முகம்

*உருவாய் அறிவில் ஒளிர்வாய்—கண்ணா!*
*உயிரின் அமுதாய்ப் பொழிவாய்க் கண்ணா!*
*கருவாய் என்னுள் வளர்வாய்—கண்ணா!*
*கமலத் திருவோ டிணைவாய்—கண்ணா!*
*வருவாய், வருவாய், வருவாய், கண்ணா!*[1]

*—பாரதியார்*

பாரதியாரின் கண்ணன் பாட்டு கவிதை இன்பத்தின்—பக்தி அநுபவத்தின் கொடுமுடிக்குப் படிப்போரைப்——பாடி அநுபவிப்போரை—இட்டுச் செல்லும் ஓர் அற்புத இலக்கியப் படைப்பு. இதனைப் படித்து அநுபவித்த பிறகு என் உள்ளத்தில் குமிழியிட்டெழுந்த சில கருத்துகளே இந் நூலாக வடிவம் பெறுகின்றன. பாரதியாரின் நூற்றாண்டில் இந்நூல் உலாவரத் தொடங்குகின்றது. தமிழன்பர்கள் இதனை ஒரு விருந்தாக ஏற்று அநுபவிப்பார்களானால் அதனை நான் பெற்ற பேறாக மகிழ்வேன்.

> "இதன் (கண்ணன் பாட்டின்) ஆசிரியர் ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியாரைத் தமிழ் நாட்டார் அறிவார்கள். ஆனால் அவர் பெருமையை உள்ளபடி அறிந்தவர்கள் மிகமிகச் சிலரே யாவர். ஸ்ரீமான் பாரதியார் ஒரு பெரிய மேதாவி; மகா பண்டிதர்; தெய்விகப் புலவர்; ஜீவன் முக்தர். இவர் தமிழ் நாட்டின் 'ரவீந்திர நாதர்'; இவர் எனது தமிழ்நாட்டின் தவப்பயன்...இந்த ஆசிரி யரின் காலத்திற்குப் பின், எத்தனையோ

---

1. தோ. பா. வருவாய் கண்ணா!

> நூற்றாண்டுகட்குப்பின், இவர் பாடல்களைத் தமிழ் நாட்டு மாதர்களும் புருஷர்களும் மிகுந்த இன்பத்துடன் படித்துக் களிப்படையும் காட்சியை யான் இப்பொழுதே காண்கின்றேன். இந்நூல் வாழ்க! என்னவர் வாழ்க!' எந்தாய் வாழ்க!!!'[2]

இது 'கண்ணன் பாட்டுக்கு' நெல்லையப்ப பிள்ளை எழுதிய முகவுரையின் பகுதி. பிள்ளையவர்களின் 'உபநிடத உண்மை' போன்ற கூற்றின் உண்மையை இன்று நாம் காண்கின்றோம்.

கண்ணன் பாட்டில் தெய்விகப் புலவர் காட்சி தருகின்றார். ஜீவன் முக்தராகத் திகழ்ந்த கவிஞர் தென்படுகின்றார். இவரைத் தமிழ் நாட்டின் தவப் பயனாகக் காண்கின்றோம்; உணர்கின்றோம். 'கண்ணன் பாட்டு' வாழ்கின்றது. 'இறவாத புகழுடைய புதுநூலாக' வாழ்கின்றது. அதனை இயற்றிய 'என்னவர்' வாழ்கின்றார். கவிஞரின் பெயரால் தமிழக அரசு எடுத்த பல்கலைக் கழகம் கவிஞரின் புகழுடம்பாகத் திகழ்கின்றது. அதில் 'எந்தாயும்' வாழ்கின்றாள்; 'புகழ் ஏறிப் புவிமிசை என்றும் இருப்பேன்' என்ற கவிஞரின் கூற்று உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை.

இந்நூல் வெளிவரும் "பேறு' கிட்டுமோ என்ற ஐயம் முளைவிட்டது. கண்ணன் அருளால் 'சர்வோதயம்' உதயமாயிற்று. சர்வோதய இலக்கியப் பண்ணை என் கைப்படியை அன்புடன் ஏற்று வெளியிட்டது. இந்நிறுவனத்தின் அன்பைப் போற்றுகின்றேன்; நிறுவனத்தாருக்கு என் அன்புகலந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்கின்றேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டும், மேலுறையைக் கண்கவர் வனப்புடனும் பக்தியுடனும் அச்சிட்டும்

---

2. முதற் பதிப்பின் முகவுரை.

கட்டமைத்துத்தந்த மாருதி அச்சகத்தாருக்கு என் நன்றியை யும் பாராட்டுதலையும் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

டாக்டர் கா. மீனாட்சி சுந்தரம் பல இடங்களில் பணி யாற்றியபொழுது அவர்தம் புகழால் அவரை அறிவேன்; அண்மைக் காலமாக அவர்தம் சென்னை வாழ்க்கையால் எனக்கு அவரிடம் நெருக்கம் ஏற்பட்டது; நெருங்கிய நண்பரானார். நெருங்கிப் பழகுந்தோறும் இவரிடம் இயல்பாகவே அமைந்துள்ள நேர்மை, ஒழுங்கு, பெருமித தோரணை, நெஞ்சுரம், எளிமை இத்துணைக்கும் மேலாக அடக்கம் ஆகிய நற்குணங்களும் புலமையும் மிகுதிறமும் என்னைக் கவர்ந்தன. இவர் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்ற பொன்மொழிகட்கு இலக்கியமாகத் திகழ்வதையும் கண்டேன். பாரதியாரின் நூல்களை ஆராய்ச்சிப் பட்டத் திற்கு முதன் முதலாக 'ஆய்வுப் பொருளாக' எடுத்து ஆய்ந்த பெருமை இவரைச் சாரும். இந்தப் பெருமையையே பற்றுக்கோடாகக் கொண்டு இந் நூலுக்கு 'அணிந்துரை' வழங்குமாறு வேண்டினேன். என் வேண்டுகோளை அன்புடன் ஏற்று அழகியதோர் அணிந்துரை நல்கிய என் கெழுதகை நண்பருக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலை யான் எழுதி வெளியிட்டதற்குக் காரணம் என் இதயத்தில் 'கோயில் கொண்ட கோவலனே'—கண்ணனே— ஆவான். இவனே பாரதியார் இதயத்தில் வீற்றிருந்து அவரைக் கருவியாகக் கொண்டு தன்னைப் பாடுவித்துக் கொண்டான்; அப் பாட்டை என்னை அநுபவிக்கச் செய்து— என்னைக் கொண்டு—தன் புகழை மேலும் பரவச் செய்கின்றான்; நிலைநிறுத்திக் கொள்ளுகின்றான். எம்பெருமானின் தற்புகழ்ச்சி அவா நம்முடைய தற்புகழ்ச்சி அவாவைவிட விஞ்சி நிற்பது. சகஸ்ரநாமப் பிரியன் அல்லவா? இங்ஙனம் எனக்கு எல்லா நலன்களையும் நோயற்ற வாழ்வையும் ஈந்து என்னை இயக்கி நன்னெறிப்

படுத்திவரும் திருவேங்கடமுடையானை—வேங்கடக் கிருஷ்ணனை—மனம், மொழி, மெய்களால் வாழ்த்தி இறைஞ்சி வணங்குகின்றேன்.

கண்ணன் திருவடி
எண்ணுக மனமே
திண்ணம் அழியா
வண்ணம் தருமே[3]

—பாரதியார்

சென்னை - 600 040
செப்டம்பர் 25, 1982

ந. சுப்பு ரெட்டியார்

3. தோ. பா. கண்ணன் திருவடி

# பாரதீயம்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பாரதியார் கவிதைகளனைத்தையும்
திறனாய்வு மூலமாக அவற்றின் சாரத்தை பிழிந்து
தமிழ் கூறும் நல்லுலகிற்கு
வழங்கும் பெருநூலே பாரதீயம்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-938927-2-5

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

அறிவிலே தெளிவு நெஞ்சிலே உறுதி
அகத்திலே அன்பினோர் வெள்ளம்
பொறிகளின் மீது தனியரசாணை,
பொழுதெலாம் நினதுபே ரருளின்
நெறியிலே நாட்டம் கருமயோ கத்தில்
நிலைத்திடல் என்றிவை யருளாய்
குறிகுண மேதும் இல்லதாய் அனைத்தாய்க்
குலவிடு தனிப்பரம் பொருளே![1]

—பாரதியார்

நடைபெற்றுக்கொண்டிருப்பது இலக்கிய மறுமலர்ச்சி யுகம். அதில் நாம் பாரதி நூற்றாண்டில் வாழ்கின்றோம். தமிழ்கூறு நல்லுலகமெங்கும் பாரதி நூற்றாண்டு விழாச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. பாரதியாரின் படைப்புகளில் மக்கள் ஆழங்கால் படுகின்றனர். பாரதியாரை ஆழ்ந்து கற்குங்கால் நாம் ஆய்ந்து கண்ட முடிவுகள் யாவை? தமிழ் மொழியில் கவிதையாயினும் உரைநடையாயினும் முதன் முதலாக எளிய நடையை அழகுற அமைத்த பெருமை பாரதியாரையே சாரும். பாரதியாரின் கவிதை வேர் பண்டைத் தமிழ் இலக்கியப் புலத்தில் ஆழமாய் ஓடியுள்ளதையும் அதில் பூத்த மலர்கள் புதியதொரு சோலையைக் கண்டிலங்குவதையும் காண முடிகின்றது. அவர் உள்ளம் கம்பனின் கங்கை வெள்ளக் கவிதையில் மூழ்கிக் களித்ததையும், வான்புகழ் கொண்ட வள்ளுவரின் நூலில் ஈடுபட்டிருந்ததையும் நோக்க முடிகின்றது; அவர்தம் நெஞ்சம், நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தில் கரைந்ததையும், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டத் திகழும் ஆழ்வார்களின் பாசுர ஊற்றுகளிலும் இராமலிங்கர், தாயுமான அடிகள் இவர்களின் தீஞ்சுவைக் கவிதை ஓடைகளிலும் நீராடி மகிழ்ந்ததையும் உணர முடிகின்றது.

இவற்றையெல்லாம் நன்கு அறிந்து தெளிந்த கவிமணியவர்கள் "பாட்டுக்கொரு புலவன் பாரதியடா!" என்று பட்டிக்காட்டான் ஒருவன் வாயில் வைத்துப் பேசுகின்றார். பட்டிக்காட்டான் தான் பெற்ற பாரதியின் பாட்டநுபவத்தை,

---

1. கவிதைகள் : சுயசரிதை - 49.

**நாட்டு மொழியுமவன் பாட்டினிசையில்—மிக்க**
**நல்ல கற்கண்டினிமை சொட்டுமேயடா**
**ஏட்டிலிம் மந்திரந்தான் கண்டவருண்டோ—ஈதவ்**
**ஈசன் திருவருளென் றெண்ணுவாயடா.**

**உள்ளந் தெளியுமொரு பாட்டிலேயடா—மிக்க**
**ஊக்கம் பிறக்குமொரு பாட்டிலேயடா**
**கள்ளின் வெறிகொளுமோர் பாட்டிலேயடா—ஊற்றாய்க்**
**கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலேயடா.**[2]

என்று வடித்துக் காட்டுவர். மற்றும் கவிதைகளில் சொல்லுக்குச் சொல்லழகு ஏறுவதையும்; கவி துள்ளும் மறியைப்போல் துள்ளு வதையும், கல்லும் கனிந்து கனியாவதையும், பசுங்கன்றும் பால் உண்டிடாது கேட்பதையும்; கவிதைகளில் குயிலும் கிளியும் கூவு வதையும், மயில் குதித்துக் குதித்து நடமாடுவதையும், வெயிலும் மழையும் அதில் தோன்றுவதையும், மலர் விரிந்து விரிந்து மணம் வீசுவதையும்; பாடல்களில் விண்ணில் ஒளிரும் மீன்கள் மின்னுவதை யும், விண்ணில் திகழும் மதி நிலவு வீசுவதையும், கண்ணுக்கினிய சோலை தென்படுவதையும், அச்சோலையில் இளமான்கள் களித்து விளையாடுவதையும்; தேனும் தினை மாவும் பாவில் உண்ண முடி வதையும், மிகத் தித்திக்கும் முக்கனியை நுகர முடிவதையும், கானக் குழலினிசையையும் அதன் ஊடே களி வண்டு மிழற்றுவதையும் கேட்க முடிவதைப் பிரித்துப் பிரித்துக் காட்டுவர்.

**பாரதீயம்** என்ற இந்நூல் 'பாரதீயம்' என்ற கட்டுரையைத் தொடக்கமாகக் கொண்ட பத்துக் கட்டுரைகளின் தொகுப்பாகும். இந்தக் கட்டுரைகளில் யான் பாரதியாரின் கவிதைகளில் ஆழங்கால் பட்டதைக் காட்டியுள்ளேன். இவை பாரதியாரின் பாடல்களின் நயத்தைப் பகிர்ச்சிட்டுக் காட்டுவதுடன் பாரதியாரின் பல்வேறு கொள்கைகளைப் பாங்குற எடுத்துக்காட்டும் விருந்துமாகும். இவற்றில் பாரதியாரின் ஆளுமைக் கோலங்களை ஒரு பல்லுருவம் காட்டியில் (Kaledoscope) காணும் காட்சிகளைப்போல் கண்டு மகிழ லாம். என்றாலும்,

**பாவின் நயமெல்லாம்— யானும்**
**பகர வல்லேனோ**
**ஆவின் பாற்சுவையை—நாழி**
**அளந்து காட்டிடுமோ ?**[3]

என்ற கவிமணியின் அளவுகோலின் வரையறையை எண்ணிப் பார்த்தே யாகவேண்டும். அப்போதுதான் அந்த அளவுகோலின்

---

2. **கவிமணி: மலரும் மாலையும்**-பாரதியும் பட்டிக்காட்டானும்-7. 8.
3. ஷை - ஷை - 22.

எல்லையை உண்மையிலேயே உணர முடியும். கவிதைகளைச் சுவைத்துக் கூறுகின்றவர்களின் கருத்துகளெல்லாம் அவர்களுடைய உணர்ச்சியையே சார்ந்திருக்கும் என்று கொண்டால் இங்குக் காணப் பெறும் கூற்றுகள் வாதத்திற்கு இடம் தரா. பல்லாண்டுகளாக யான் பாரதியாரின் பாடல்களைச் சுவைக்கும்போது குமிழியிட்டெழுந்த என் கருத்துகள் 'பாரதியாரின் நூற்றாண்டில்' பாகுபடுத்தப்பெற்று நூல் வடிவம் கொண்டு தமிழ்கூறு நல்லுலகில் நடையாடுகின்றன. பாரதியாரின் படைப்புகளில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள், அறிஞர்கள் என்னுடைய இந்த நூலிலும் கவனத்தைச் செலுத்து வார்கள் என்பது என் உறுதியான நம்பிக்கை. அத்தகைய பேற்றினை இந்நூல் பெறுமானால் அதனை என் பெறற்கரிய பேறாகக் கருதுவேன்.

இந்த நூலின் கைப்படியை அன்புடன் ஏற்று வெளியிட்ட **பழநியப்பா சகோதரர்கட்கு** என் நன்றி கலந்த அன்பினைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன்.

இந்த நூலுக்கு அழகிய அணிந்துரை நல்கிய டாக்டர் ஒளவை நடராசன் என் உடன்பிறவாச் சகோதரர் போன்றவர். டாக்டர் மு. **வரதராசனின்** பல நன்மாணாக்கர்களுள் ஒருவர். தமிழ் இலக்கியங் களையும் இலக்கணங்களையும் பழுதற ஓதிப் பயன் பெற்றவர். அடக்கமான பண்புடையவர். எல்லோரிடமும் எளிமையாகப் பழகுபவர். தமது 'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும்' பேச்சால் பல்லாயிரக்கணக்கான மக்களின் மனத்தைக் கவர்ந்து வருபவர். இத்தகைய கெழுதகை நண்பர் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கினமைக்கு என் அன்பு கலந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஜஸ்டிஸ் டாக்டர் **எஸ். மகராசன்** அவர்களை அறியாத தமிழர்களே இரார். சட்ட நுணுக்கங்களை அறியும் திறன் ஒருபுறமிருக்க, ஆங்கிலம், ஃபிரெஞ்சு என்ற இரண்டு அயல் மொழிகளிலும் வல்லுநர். தமிழ் இலக்கியங்களில் மிகவும் ஆழங்கால் பட்டுச் சுவைக்கும் பேரன்பர். **ரசிகமணி டி. கே. சி.**-யின் முதல் சீடர். ரசிகமணி டி. கே. சி. யின் வாழ்நாள் காலம் முதல் தாம் மறைந்த காலம் வரை ரசிகமணியின் புகழ் பரப்பி வந்த பெருமகனார். ரசிகமணி கண்ட வட்டத்தொட்டியின் தலைவராக இருந்து பல இலக்கியக் கூட்டங்களை நடத்திப் பல்லாயிரக்கணக்கான தமிழன்பர்கட்கு இலக்கிய ரசனை யினைத் தொற்று போல் பரப்பினவர். கம்பனையும் வள்ளுவனையும் கரைத்துக் குடித்தவர். இவர்தம் அருந்தமிழ் நூல்கள் அனைத்தும் ரசனையின் வடிவங்கள். இவர்தம் இலக்கியங்களை மேனாட்டாரும் அறியும்படி அரிய ஆங்கில நூல்களை வெளியிட்டு உதவியவர்.

செகப்பிரியரின் ஆங்கில நாடகங்களை ரசனைப் பண்புடன் தமிழ் மக்கட்குத் தமிழில் வழங்கினவர். திருமூலரின் இதயத்தை நன்கு அறிந்த பெரியார். இத்தனைக்கும் மேலாகப் 'பண்புடையார் பட்டுண்டு உலகு' என்ற வள்ளுவர் வாக்குக்கு இலக்கியமாகத் திகழ்பவர். இவர் தூத்துக்குடி மாவட்ட நீதிபதியாக இருந்த நாள் முதல் (1949) மறைந்த நாள் வரை (1982) இவரை நன்கு அறிவேன். காரைக்குடிக் கம்பன் அடிப்பொடியால் எனக்கு அறிமுகம் ஆனவர். நான் காரைக்குடியில் பணியாற்றியபோது ஆண்டுதோறும் இவரைச் சந்தித்து அன்புரையாடும் வாய்ப்பு இருந்து வந்தது. திருப்பதியில் பணியாற்றியபொழுது அப்பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற கம்பராமாயணக் கருத்தரங்கை இவரைக்கொண்டு தொடங்கி வைத்தேன். இவருடைய ஆங்கிலப் பேருரையைக் கேட்ட பல நூற்றுக்கணக்கான தெலுங்கு அன்பர்கள் தம் மூக்கின்மேல் விரல்வைத்து மகிழ்ந்தனர். இத்தகைய பேரன்பர்க்கு இந்த நூலை அன்புப்படையலாக்கி மகிழ்கின்றேன். அமரத்துவம் பெற்ற இவர்தம் ஆசியால் இலக்கியங்களைச் சுவைக்கும் பழக்கம் என்னிடம் மேன்மேலும் வளரும் என்பது என் திடமான நம்பிக்கை.

இச்சமயத்தில் பாரதியாரின்,

> **செய்யும் கவிதை பராசக்தி**
> **யாலே செயப்படுங்காண்.[4]**
>
> **பாட்டினிலே சொல்லுவதும்**
> **அவள்சொல் லாகும்.[5]**

என்ற வாக்குகளைச் சிந்திக்கின்றேன். பாரதியார் கருதுவதுபோல் இந்நூலை, யான் எழுதி வெளியிட்டதற்கு என்னுளே அந்தர்யாமியாக இருக்கும் திருவேங்கடமுடையானே காரணன் ஆவான். அவனே எனக்கு நோயற்ற நிலையையும் எல்லா நலன்களையும் ஈந்து என்னை இயக்கி நன்னெறிப்படுத்தி வருபவன். அவனே பாரதியார் வழிபடும் கண்ணனாகவும், கோவிந்தனாகவும், இராமனாகவும் இருந்து வருகின்றான்; அவனை மனம், மொழி, மெய்களால் வழுத்தி இறைஞ்சி வணங்குகின்றேன்.

> **எளியனேன் யானெனலை எப்போது**
> **போக்கிடுவாய், இறைவ னே !இவ்**

---

4. வி. நா. மா—26

5. தோ. பா : பேதை நெஞ்சே-5.

வளியிலே பறவையிலே மரத்தினிலே
முகிலினிலே வரம்பில் வான
வெளியிலே, கடலிடையே மண்ணகத்தே
வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே, கோவிந்தா ! நினைக்கண்டு
நின்னொடுநான் கலப்ப தென்றோ ?[6]

சென்னை - 600 040
டிசம்பர் 20, 1983,

ந. சுப்பு ரெட்டியார்

---

6. தோ. பா : கோவிந்தன்பாட்டு - 2

# கம்பனில் மக்கள் குரல்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூலில் உள்ள 11 கட்டுரைகளின் மூலமாக, கம்பன் காலத்து
குடியாட்சி, அசுரர்கள் வதம், இளையபெருமாள், குறிஞ்சி
நிலக்காட்சிகள், அநுமனின் திறன், காடுறை வாழ்க்கை,
இராகவன் புகழ், தம்பியுடையான் பகையஞ்சான்,
இன்ன பிற காட்சிகளையும் திறனாய்வு முறையில்
கம்பனை நுகர இயலுகிறது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939430-1-4

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

வில்லால் இலங்கை மலங்க சரம்துரந்த
வல்லாளன் பின்போன நெஞ்சம் வரும்அளவும்
எல்லோரும் என்தன்னை ஏசிலும் பேசிடினும்
புல்லாணி எம்பெருமான் பொய்கேட்டு இருந்தேனே.[1]

—திருமங்கையாழ்வார்

உள்ளம் மகிழ உரைநா அமுதூறக்
கொள்ளும் இருகாதும் குளிரவே—தெள்ளரிய
செந்தமிழ்க் கம்பத் திருநாடன்செய் நூலுக்கு
எந்தநூ லாகும் இணை[2]

என்று கவிமணி தேசியவிநாயகம் பிள்ளை சிறப்பித்துக் கம்பனைப் பல்லாண்டுகளாக அநுபவித்து வருகின்றேன். காரைக்குடிக் கம்பன்அடிப்பொடியுடன் தோழமை கொண்டு காரைக்குடியில் வாழ்ந்த பொழுது (1950-1960) கம்பனில் ஆழங்கால்பட்ட நிலையில் 'குமரி மலர்' 'ஜனநாயகம்' 'தினமணிக் கதிர்' 'தமிழ் நாடு ஞாயிறு மலர்' போன்ற இதழ்களில் பல கட்டுரைகள் வெளிவந்தன. சிலவற்றைத் தொகுத்துக் 'கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்' என்ற தலைப்பில் நூலாக வெளிவரச் செய்தேன்[3]. வேறு தனி நூல் களில் சேர்ந்தவை போக எஞ்சிய பதினொரு கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்று இப்போது வெளி வருகின்றன. சற்றேறக்குறைய ஏழாண்டுகளாக உறங்கிக் கிடந்து இப்போது,

---

1 பெரி—திரு. 9. 4. 5

2. மலரும் மாலையும்—கம்பர்—17

3 நாவலர் புத்தக நிலையம், 59, மேலாவணி மூலவீதி மதுரை—625 001. (1979)

மாரி கழைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலே[4]

வெளிவருகின்றது- 25 ஆண்டுகட்கு முன்னர் இவற்றைச் சுவைத்த அன்பர்களைப் போலவே இப்போதுள்ள பெரு மக்களும் சுவைத்து அநுபவித்தால் அதுவே நான் பெற்ற பேறு.

இந்த நூலை அன்புடன் ஏற்று வெளியிட்ட அன்பர் "சிவகாசி மத்தாப்புபோல், ஒருசிரிப்பு வெளிச்சம் சிதறிக்" காட்டும் வானதி திருநாவுக்கரசு அவர்கள். எத்தனையோ தரமான நூல்களைத் தந்து வாசகர்களின் அறிவுவிடாயைத் தீர்த்து வைக்கும் 'வானதி'யுடன் இந்த நூலும் சேர்ந்து கொண்டது இந்நூல் பெற்ற பேறு. இதனை வெளியிட்ட அன்பர் 'அப்பருக்கு' என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

மிக விரைவாக, ஆனால் மிக அழகாக, அச்சிட்டு உதவிக் கற்போர் கைகளில் கவினுடன் திகழச் செய்த தமிழ் பற்றாளர் மூவேந்தர் அச்சகம் முத்து அவர்கட்கும் பிறருக்கும் என் அன்பு கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளு கின்றேன்.

அண்மைக் காலமாக என் நூல்களெல்லாம் சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிகளின் அணிந்துரையுடன் வெளிவருகின்றன. இந்த நூலும் அம்மரபினில் வழு வாது வெளிவருகின்றது. ஜஸ்டிஸ் சு. இரத்தினவேலு பாண்டியன் அவர்கள் தமிழ் உலகுக்குப் புதியவர் அல்லர். 'எங்கள் திருநெல்வேலி' என்று மாவட்டப் பற்றுடன் பேசப்பெறும் திருநெல்வேலிச் சீமையிலுள்ள திருப்

---

4. திருப்பாவை—23

புடைய மருதூரைச் சேர்ந்த இப்பெருமகனார் நெல்லை இந்து கல்லூரி, பாளையங்கோட்டை புனித சேவியர் கல்லூரி, சென்னை சட்டக் கல்லூரி ஆகியவற்றில் நற் கல்வி பயின்று சென்னையிலும் நெல்லையிலும் வழக்குரைஞராகப் பணி யாற்றிப் பெரும் புகழ் பெற்றவர். இப்போது ஐம்பத்து நான்கு அகவை நிறைந்த இந்த இளைஞர் 1971-இல் பப்ளிக் பிராசிகுயூட்டராக நியமனம் பெற்று மூன்றாண்டுகள் சிறப்புடன் பணியாற்றியவர். சட்ட நுட்பங்களையெல்லாம் ஆழ்ந்து காணும் இவரது திறனைக் கண்டு தமிழக அரசு இவருக்கு நீதிபதிப் பதவியை அளித்துச் சிறப்பித்தது. 'சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல்' பணியாற்றிவரும் சிறப்பை இவர் தம் 'தீர்ப்புகளை'க்காணும் அன்பர்கள் அவற் றின் திட்பத்தையும் நுட்பத்தையும் உணர்வார்கள். இத்தனைக்கும் மேலாக இவர்தம் சீலமும் எளிமையும் இன்முகத்துடன் அன்பர்களை ஏற்கும் பண்பும் எவரையும் கவரும் பான்மையவை. இத்தகைய பேரன்பர் இந்நூலுக்கு மனமுவந்து அணிந்துரை அருளியது இந்நூல் பெற்ற பேறு. இவருக்கு என் இதயம் கனிந்த நன்றியைப் புலப் படுத்திக் கொள்ளுகின்றேன்.

அன்பாலும் பண்பாலும் ஆழ்புலமையாலும் இத்தனைக் கும் மேலாகத் தம் அடக்கத்தாலும் சீலத்தாலும் என் உள்ளத்தைக் கவர்ந்தவர் பேராசிரியர் டாக்டர் வி. வரதாசாரியார் பல்லாண்டுகள் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் வடமொழித் துணைப்பேராசிரியர் (Reader) பதவியிலிருந்து ஓய்வு பெற்றுத் தற்சமயம் புதுச் சேரி ஃபிரெஞ்சு ஆய்வுக்கழகத்தில் ஆய்வு நெறியாளராகப் பணியாற்றி வருபவர். நான் திருப்பதியிலிருந்த காலத்தில் என் பிஎச்.டி. ஆய்வுக்கு வழிகாட்டியாக இருந்தபோதும், அதற்குப் பின்னரும் இவருடன் நெருங்கிப் பழகும் பேறு பெற்றேன். வடமொழி இலக்கியத்தின் நயத்தையும் சிறப் பையும் எனக்கு எளிமையாக எடுத்துக் காட்டி அதன்பால் பற்றினை உண்டாக்கி வளர்த்தவர். மாலவனையும் மாறனை

யும் மனத்தில் இருத்திக் கொண்டதனுல் வாழ்விலும் தாழ்விலும் நெருக்கடி நிலையிலும் சலனமற்ற உள்ளத்தைக் கொண்ட இப்பெருமகனுருக்கு இந்நூலை அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். இவர்தம் ஆசியால் இவர்தம் எல்லா நற்குணங்களும் புலமையும் சமயப் பற்றும் இறையன்பும் என்னை வந்தடையும் என்பது என் அதிராத நம்பிக்கை.

என்னுள்ளே எனக்குத் தோன்ருத் துணையாக இருந்து கொண்டு என் இதயத்தேரை இயக்கி நன்னெறிப் படுத்தி வருபவன் 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலாகிய' ஏழுமலை அப்பன். அவனே எனக்கு இன்றுவரை உடல் நலத்தையும் மன வளத்தையும் நல்கி வருபவன். என் 'பிராரப்தம்' தீரும்வரையில் இப்படியே என்னை வைத்திருந்து இலக்கியப் பணி, சமயப்பணி, மெய்விளக்கப் பணி, அறிவியல் பணி ஆகியவற்றில் ஈடுபடச் செய்து நாட்டிற்கும் சமூகத்திற்கும் பயன்பட வைப்பான் என்ற நம்பிக்கை என்றும் என்பால் உண்டு. "குன்றம் ஏந்தி குளிர்மழை காத்த" அந்த எம்பெருமானை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

> இன்ரு அறிகின்றேன் அல்லேன்; இருநிலத்தைச்
> சென்ருங் களந்த திருவடியை; அன்று
> கருக்கோட்டி யுள்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
> திருக்கோட்டி எந்தை திறம்.
>
> —பூதத்தாழ்வார்.

'வேங்கடம்'
சென்னை–40
11-5-1983

ந. சுப்புரெட்டியார்

5. இரண்டாம் திருவந்தாதி—87

# சைவ சமய விளக்கு

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சமயக்காழ்ப்பு ஒருகாலத்தில் அருகியிருந்து, பெருகிவரும்
தற்கால சூழ்நிலையில் சைவ சமயத்தில்
உள்ளடங்கியிருக்கும் தத்துவங்களையும்,
பேருண்மைகளையும் எளிய, தூய, இனிமையான
தமிழில் விளக்கும் ஓர் அரிய சமயக் கருவூலம்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939270-2-1

eBOOK ~ மின் நூல்



# நூல்முகம்

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
 தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
 நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
 திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
 யாருன்னை யறியகிற் பாரே.[1]

—மணிவாசகப் பெருமான்

மக்களுக்கு மன அமைதியை நல்கி வருவது இறையநு பவத்தோடு கூடிய சமய வாழ்க்கையாகும் என்பது அநுபவ உண்மை. எல்லாச் சமயங்கட்கும் இது பொருந்தும் பொதுவான உண்மையுமாகும். என் நல்வினைப் பயனால் 'பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல்' குன்றின் மேலிட்ட விளக்காக எழுந்தருளியிருக்கும் திருப்பதியில் 17 யாண்டுகள் என் இறுதிக்காலக் கல்விப் பணியாற்றும் பேறு கிட்டியது. சூழ்நிலை 'சார்ந்ததன் வண்ணமாகச்' செய்தது. நாலாயிரத் திவ்வியப் பிர பந்தத்தை ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றேன்.[2] இதன்

---

1. திருவா. கோயில் திருப்பதிகம்-7

2. பிஎச் டி. பட்டம் பெற்ற ஆங்கிலக் கட்டுரை: 'The Religion and Philosophy of Nalayira Divya Prapandham with Special Refrence to Nammalvar' என்ற தலைப்பில் பல்கலைக் கழகம் வெளியிட்டது.

விளைவாக 108 திருப்பதிகளைச் சேவிக்கும் வாய்ப்பை ஏற் படுத்திக் கொண்டேன். 'மலைநாட்டுத் திருப்பதிகள் (1971), தொண்டை நாட்டுத் திருப்பதிகள் (1973), பாண்டி நாட்டுத் திருப்பதிகள் (1977), வட நாட்டுத் திருப்பதிகள் (1980), சோழ நாட்டுத் திருப்பதிகளை (2 பகுதிகள்) (1981), என்ற ஆறு திருத்தலப் பயண நூல்களை எழுதி வெளியிட்டேன். 'முத்தி நெறி' (1982) என்ற தலைப்பில் வைணவ—விசிட்டாத்வைத தத்துவத்தை 'வேங்கடவாணனுக்கு வேலப்பன் கடிதங் களாக' வெளியிட்டேன். சில நோக்கில் நாலாயிரம் (1983) என்ற கட்டுரைத் தொகுப்பு நூலும் வெளிவந்தது. இவை யாவும் 'அநுபூதி நிலையில்' வெளிவந்தவை.

ஆய்வு மாணவர்களாக மூவரை ஏற்றேன்; அவர்களுள் ஒருவர் 'தாயுமானவர் பாடல்களை' ஆய்வுக்கு தேர்ந் தெடுத்துக் கொண்டார். ஆய்வு மாணவர்கள் தேர்ந் தெடுக்கும் தலைப்புகளை அவர்கட்குமுன் அத் தலைப்புகள்பற்றி நான் முதலில் ஆய்ந்து விடுவேன்; பின் அவர்களோடு கலந்து ஆய்வேன். இப் பழக்கத்தை யுடையவனாதலால் சைவம்பற்றிய பல நூல்களைப் படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. பதினான்கு சாத்திரங் களை மேலோட்டமாகப் பயின்றேன். தாயுமானவர் கூறும் 'சுத்தாத்துவிதத்தில்' (பாடல்—283) தெளிவு ஏற்பட வேண்டுமல்லவா? இதன் காரணமாகச் 'சைவ சித்தாந்த ஒளி' என் மனத்தில் வீசத் தொடங்கியது; ஓரளவு தெளிவும் பிறந்தது.

நான் ஏகலைவனின் 'மரபுவழி' வந்தவன். அறிவியல் பட்டதாரியாகிய என்னைத் தமிழன்னைஆட்கொண்டாள். உயர்நிலைப்பள்ளியிலும் கல்லூரியிலும் எனக்குத் தமிழ் கற்பித்த தமிழாசிரியர்கள் என்னிடம் தமிழ்பற்றிய அகத் தெழுச்சி (Inspiration) எழக் காரணமாக இருந்தவர்கள். தமிழைத் தனியாகக் கற்று வித்துவான், எம்.ஏ., பட்டங்கள் பெற்றேன். எம்பெருமானாரை மானசீகமாக ஆசானாகக் கொண்டு வைணவத்தையும், மெய்கண்டாரை

ஆசானாகக் கொண்டு சைவத்தையும் அணுகினேன். இரண்டிலும் ஓரளவு தெளிவு பிறந்தது. இத்தகைய தெளிவின் பயனாகவே 'சைவ சமய விளக்கு' என்ற இந் நூல் 'கண்ணுதலப்பனுக்குக் கார்த்திகேயன் எழுதும் கடிதங்களாக' வெளிவருகின்றது. கருத்துகளைத் தெளி வாக உணர்த்துவதற்கு கடித உத்தி கைகொடுத்து உதவு கின்றது என்பது என் கருத்து. பாணபத்திரனுக்கு உதவ வேண்டுமென்று சேரமான பெருமாள் நாயனாருக்கு ஆலவாய் சோமசுந்தரக் கடவுள் எழுதிய திருமுகப் பாசுரத்தை ஈண்டு நினைத்தல் தகும்.

இந்தப் பெரிய நூல் தமிழ் கூறு நல்லுலகத்தில் நடை யாடும் பேறு கிட்டுமோ என்ற ஐயமும் அச்சமும் என்பால் எழுந்தன. இந்நிலையில் ஏழுமலையான் திருவருள் பாலித்தான். திருவேங்கடத் திருப்பதிக்கு முருகன் **க்ஷேத்திர பாலகனாயிருப்பதாலும்**[3] இந்நூல் கார்த்திகேயன் கடிதங்களா யிருப்பதாலும் எம் பெருமான் ஏழுமலையான் திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தின்மூலம், நிதி உதவினான். இதனால் இந்நூல் தமிழ்கூறு நல்லுலகில் உலா வரும் வாய்ப்பு கிட்டியது. இந்தப் பெருமான் திருவருளாலே என்னுடைய Collected Papers என்ற ஆங்கில நூலும் நிதி உதவி பெற்று வெளி வர இருக்கின்றது. இந்த அப்பன் கருணையினால் **'வைணவ உரைவளம்—ஐதிகங்களும் இதிகாசங்களும்'** என்ற பெரு நூலும் வெளி வரும் என்ற நம்பிக்கை என்றும் என்பால் உண்டு. நிதி உதவிய தேவஸ் தானத்தாருக்கு குறிப்பாக திரு. K. சுப்பராவ் அவர்கட்கு ('சப்தகிரி' ஆசிரியர்) என் அன்பு கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய மூவேந்தர் அச்சக உரிமையாளர் திரு.

---

3. திருவரங்கம் பெரிய கோயிலின் க்ஷேத்திர பாலகருள் விநாயகரும் ஒருவராதல் போல.

**கோ. தையமுத்து** அவர்கட்கும், எழில்கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக் கட்டை தயாரித்து மூவண்ணத்தில் அட்டையில் அச்சிட்டு லாமினேஷன் (Lamination) போடுதல்வரை பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் திரு **பி. என். ஆனந்தன்** அவர்கட்கும், சீரிய முறையில் கட்டமைத்துத் தந்த கந்தன் அடிமை திரு **எஸ். பி. சண்முகம்பிள்ளை** (உரிமையாளர், Canesh Printing and Binding) அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்த நூலுக்கு ஆங்கிலத்தில் ஓர் அரிய முன்னுரை (Foreword) அருளிய பேராசிரியர் **டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி** அவர்களை அறியாத தமிழர்கள்—சித்தாந்திகளே—இரார். கண்ணியம் மிக்க சைவக் குடும்பத்தைச் சார்ந்த இப் பெரும்பேராசிரியர் தம் பள்ளிப் படிப்பைப் புரசை நகரிலுள்ள ஒரு கிறித்தவப் பள்ளியில் முடித்துக் கொண்டு சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் பயின்று தத்துவத்துறையில் பி. ஏ. (ஆனர்ஸ்) பட்டம் (1935) பெற்றவர். (1935—38) இல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வு மாணாக்கராகவும், (1940—45) இல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் துணைப் பேராசிரியராகவும் பணியாற்றியவர்; மீண்டும் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆய்வு மாணாக்கராகச் சேர்ந்து (1946—48) '**சிவஞான சித்தியார—சுபக்கம்**' என்ற நூலை ஆய்ந்து டாக்டர் (Ph. D.) பட்டம் பெற்றவர் (1949). பிறகு பச்சையப்பன் கல்லூரியில் தத்துவத்துறையில் துணைப் பேராசிரியராகவும் (1949-55), பின்னர், சென்னைப் பல்கலைக்கழகத்தில் துணைப் பேராசிரியராகவும் (1955—64), அடுத்துப் பேராசிரியராகவும் (1964—76) பணியாற்றியவர். 1975 முதல் **டாக்டர் எஸ். இராதா கிருஷ்ணன் மேல்நிலைத் தத்துவ ஆய்வு** மையத்தில் இயக்குநராகப் பணியாற்றி 1978 இல்—ஓய்வு பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலுமாகப் பல சித்தாந்த நூல்களின் ஆசிரியர். சித்தாந்தத்தைப் பழுதர

வோதிச் சிவபெருமானை இடையறாது சிந்தித்துத் தம் மனத்தில் அவரை நிலையாக நிறுத்திக் கொண்டவர். இத்தனைக்கும் மேலாக 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே'[4] என்ற தொல்காப்பிய இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்பவர். சுமார் பன்னிரண்டு ஆண்டுகளாக இவருடன் நெருங்கிப் பழக வாய்ப்பினைப் பெற்றவன். இப்பெருமகனாரின் முன்னுரை (Foreword) இந்நூலுக்கு அணிசெய்வது அடியேனின் பெரும் பேறு. இவர்தம் ஆசியால் அடியேனுக்கு மேலும் மேலும் சித்தாந்தத் தெளிவும் சிவன் பால் ஈடுபாடும் வளரும் என்பது என் திடமான நம்பிக்கை. முன்னுரை அருளிய முக் கண்ணன் அடியாருக்கு என் அன்பு கலந்த வணக்கத்தையும் நன்றியையும் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

ஜஸ்டிஸ் பி. வேணுகோபால் சென்னை உயர்நீதி மன்றத்தை அணி செய்யும் சிறந்த நீதிபதிகளுள் ஒருவர். வழிவழியாக வைணவ நெறியினைத் தழுவி வரும் மரபினில் வந்தவர். சென்னைச் சட்டக் கல்லூரியில் நல்லோஸ் உதவி ஊதியம் (Schoparshrp) பெற்றுச் சிறந்த மாணாக்கராகத் திகழ்ந்தவர். ஏழாண்டுகள் (1944—51) வழக்குரைஞர் பணியில் புகழுடன் இலங்கியவர்; ஏழாண்டுகள் (1959—66) நடுவண் அரசின் சட்டப் பரிந்துரையாளராகவும் (Legal adviser) இரண்டாண்டுகள் (1966-88) வருமானப் பொதுப்பணித் துறையின் சட்ட ஆலோசகராகவும், பத்தாண்டுகள் (1968—78) வருமான வரித்துறையின் முறை மன்ற உறுப்பினராக, (Judicial member) சென்னை, பாட்னா கல்கத்தா ஆகிய இடங்களில் பணியாற்றி நற்பெயரோடு திகழ்ந்தவர். இந்த நற்பெயர், புகழ் காரணமாக சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிப் பதவியை வழங்கியது நடுவண் அரசு. இங்கு இரண்டாண்டுகள் (1979—81) பெரும் புகழுடன்

---

4. தொல். சொல்—கிளவியாக்கம்—1

பணியாற்றி ஓய்வு பெற்றவர். பின்னர் ஓராண்டுக் காலம் (1983—84) தனிப்பட்ட நீதிபதியாகப் (ad hoc Judge) பணியாற்றிவர்.

இவருடைய சீரிய பணியையும் நற்புகழையும் கண்ட அரசு இவரைப் பல சமயம் பல ஆணையங்களில் பணி யாற்றும் பொறுப்பை வழங்கியது; பல் கலைக் கழகத் துணை வேந்தர்களைத் தேர்ந்தெடுக்கும் குழுக்கள் போன்ற குழுக்களில் தலைவராகப் பணியாற்றும் வாய்ப் பினையும் வழங்கியது. இவற்றைத் தவிர பல இலக்கிய, கலை மன்றங்களிலும், கருத்தரங்குகளிலும் பங்கு பெற்று வருகின்றார். இப்பெரியார் சமயத்துறையில் ஈடு பாடு மிக்கவர். இத்தகைய உயர் பண்புகளையெல்லாம் ஒருங்கே பெற்றுச் சமரச மனப்பான்மையுடன் திகழும் வைணவர் ஒருவரின் அணிந்துரையைச் சைவ சமயம் பற்றிய இந்நூல் பெற்றது இதன் தனிச் சிறப்பாகவும் என்னுடைய பெரும் பேறாகவும் அமைகின்றது. அணிந் துரை அருளிய பெருமகனாருக்கு என் இதயம் கனிந்த நன்றி என்றும் உரியது.

பேராசிரியர் K. சச்சிதானந்த மூர்த்தியவர்கள் பழுதற ஓதிப் புலமை மிக்க பண்புடையாளர். சைவசித்தாந்தத்தில் ஆழங்கால் பட்டவர். அறுபது அகவையைத்தாண்டும் நிலையிலுள்ள (பிறப்பு : செப்டம்பர் 24, 1924) இப்பெரு மகனார் தத்துவத் துறையில் எம் ஏ. பட்டம் பெற்றவர். இந்தியத் தத்துவத்தை ஆய்ந்து பிஎச். டி பட்டம் பெற்றவர். பல்வேறு குழுக்களில் பணியாற்றியவர். பல உள்நாட்டு வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களில் உரை யாற்றிப் பெரும் புகழ் பெற்றவர். மூன்றாண்டுக் காலம் (1976—79) திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் துணை வேந்தராக இருந்தபொழுது ஒன்றரையாண்டுக் காலம் இவர் சீரிய தலைமையில் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது இவர்தம் அடக்கமான பண்பும், புரையறக் கலந்து பழகும் சீரிய குணமும், புலமையையும்

உழைப்பையும் மதித்துப் பாராட்டும் பெருந்தன்மையும் என்னைக் கவர்ந்தன. நெருங்கிப் பழகும் வாய்ப்பும் இருந்தது. இவற்றின் நினைவாக 'சத்சித் ஆனந்தத்தை' ஒளிவிட்டுக் காட்டும் 'சைவசமய விளக்கினை'ப் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்'[5] என்ற பொய்யாமொழிக்கு இலக்கியமாகத்திகழும் பேராசிரியர் சச்சிதானந்த மூர்த்திக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். இவர் இதய கமலத்தில் கோயில் கொண்டிருக்கும் கண்ணுதலப்பனின் கருணையினால் என்னிடம் அவனைப்பற்றி அறியும் அவாவைத் தூண்டி அவனை அடையும் பேறும் பெறுவேன் என்பது என் திடமான நம்பிக்கை. அன்புப் படையலை ஏற்றருளிய பேராசிரியர் மூர்த்திக்கு என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலையான் எழுதி வெளியிட என்னுள்ளே தோன்றாத் துணையாக எழுந்தருளியிருக்கும் 'வேங்கடம் மேவிய விளக்கினை' மனம் மொழி மெய்களால் வணங்கி வாழ்த்தி இறைஞ்சுகின்றேன்.

உடம்பெனும் மனையகத்துள்
  உள்ளமே தகளியாக
மடம்படு உணர்நெய்யட்டி
  உயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால்
  எரிகொள இருந்துநோக்கில்
கடம்பமர் காளைதாதை
  கழலடி காணலாமே.[6]

—திருநாவுக்கரசர் பெருமான்

"வேங்கடம்"
சென்னை-600 040
15-9-1984

ந. சுப்பு ரெட்டியார்

5. குறள்—996 (பண்புடைமை)

6. தேவாரம். 4.75; 4, அரியும் அரனும் என்னுள்ளத்தில் இரண்டு ஒளிவிளக்குகளாக வீற்றிருப்பவர்கள்.

# வாழையடி வாழை

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூல் உயிரியலில் ஜீன்களால் விளையும் பல புதுமைகளை
அறிவியல் கல்வி பயிலாதவர்களும் எளிதில் புரிந்துகொள்ளுமாறு
தெளிவாகப் படங்களுடன் விளக்குகின்றது. மேலும்,
பெற்றோர்களிடமிருந்து தம் சேய்களுக்கு மரபு வழியாகச்
செலுத்துப்பெறும் பண்புகள், கடத்துப்பெறாத பண்புகள்
இவையிவை எனத் தெளிவாக விளக்கப்பெற்றுள்ளன.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939685-2-9

*eBOOK ~ மின் நூல்*



# நூல்முகம்

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி,
அகத்திலே அன்பினோர் வெள்ளம்,
பொறிகளின்மீது தனியர சாணை
பொழுதெலாம் நினதுபே ரருளின்
நெறியிலே நாட்டம் கரும யோகத்தில்
நிலைத்திடல் என்றிவை அருளாய்,
குறிகுணம் ஏதும் இல்லதாய் அனைத்தாய்க்
குலவிடும் தனிப்பரம் பொருளே.[1]

—பாரதியார்

கதைகளில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்துக் காலத்தைக் கொன்னே கழிக்கும் தமிழ் கூறு நல்லுலகப் பெருமக்களிடம், குறிப்பாக இளைஞர்களிடம், அறிவியல் கருத்துகள் பரவ வேண்டும் என்பது நான் கல்லூரியில் அறிவியல் படித்துக் கொண்டிருந்த காலத்திலேயே (1934—39) கண்ட கனவு. நான் ஆசிரியப் பணியில் இறங்கியபிறகு (1941 முதல்) இக் கனவை நனவாக்கத் துணிந்தேன். புதிதாகத் தொடங்கப் பெற்ற உயர்நிலைப் பள்ளியில் வேலைகள் அதிகமாக இருந் தமையால் அறிவியலில் கவனம் செலுத்த நேரம் கிடைக்க வில்லை. ஆனால் தமிழன்னையின் மடியில் 'கிடந்துகொண்டு' தமிழமிழ்தத்தை ஆரா அவாவுடன் பருகிக் களித்தேன்.

1950 சூலை முதல் நான் முயலாமையாலேயே காரைக்குடி திரு. சா. கணேசன் (பின்னால் இவர் கம்பன் அடிப்பொடி யானார்) அருளால் வள்ளல் அழகப்பர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியனாகப் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது. பணி புதிதாதலால் மொழிபயிற்றும் முறைகள்

---

1. பா. க : சுய சரிதை - 49.

பற்றிய பல ஆங்கில நூல்களையும் கற்பிப்பதற்கு இன்றி யமையாதனவாகவுள்ள கல்வி உளவியல்பற்றிய பல ஆங்கில நூல்களையும் ஆழ்ந்து கற்கவேண்டியிருந்தமையால் அதி லேயே காலமெல்லாம் கழிந்தது. ஏராளமான குறிப்புகளை எடுத்து வைத்திருந்தேன். இதனால் பயிற்சி மாணாக்கர் களைத் துணிவுடனும் உற்சாகத்துடனும் சந்திக்கும் வாய்ப்பு உண்டாயிற்று. 1957—58க்குள் தமிழ் பயிற்றும் முறை, அறி வியல் பயிற்றும் முறை, கவிதை பயிற்றும் முறை, கல்வி உளவியல் என்ற நான்கு நூல்கள் உருவாயின. கற்பித்துக்கொண்டே நூல்களும் எழுதினதால் நூல்களில் தெளிவும் எளிமையும் நன்றாக அமைந்தன. இன்றும் அந்த நூல்கள் பெருமதிப் புடனும் புகழுடனும் புழக்கத்தில் இருந்துவருகின்றன.

1957 - 58 முதல்தான் அறிவியல் நூல்கள் பயில நேரம் கிடைத்தது. நான் வேதியியலை முதன்மைப் பாடமாக எடுத்துக்கொண்டு பி. எஸ்சி. பயின்றவன். இருந்தபோதிலும் இயற்பியலில் பேரவாக் கொண்டிருந்தேன். இதில் அணு வியல் பகுதி என் உள்ளத்தை ஈர்த்தது. சென்னை அமெரிக்கன் நூலகத்திலிருந்து இத்துறையில் பல நூல்களைப் பெற்றுப் பயின்றேன். இதே சமயம் ஹெய்சன் பர்க் எழுதிய 'அணுக் கருவியல்' (Nuclear Physics) என்ற நூலைத் தமிழாக்கம் செய்து சென்னைப் பல்கலைக் கழகப் பரிசையும் பெற்றேன். 'அணுவின் ஆக்கம்' (Peaceful Uses of Atom) என்ற அரிய நூலொன்றையும் வெளியிட்டேன். 'கவிதையநுபவம்' என்ற நூலும் உருவாகிக்கொண்டிருந்தது. ஐ. ஏ. ரிச்சார்ட்ஸின் திறனாய்வு நூல்களிலிருந்து சில நுண்ணிய கருத்துகள் இந் நூலில் ஏறின.

1960 ஆகஸ்டு திங்கள் முதல்நாள் காரைக்குடியிலுள்ள பேராசிரியர் பணியைத் துறந்து திருப்பதி திருவேங்கடவன்

பல்கலைக் கழகத்தில் திங்களொன்றுக்கு ரூ. 153 இழப்பில் தமிழ் விரிவுரையாளர் பணியை ஏற்றுக்கொண்டேன். புதிய பல்கலைக் கழகமாதலால் இடநெருக்கடி இருந்தது. புதிய துறை வளர்ச்சிகளுக்கேற்ப கட்டட வளர்ச்சி ஏற்பட முடிய வில்லை. 'வீட்டைக் கட்டிப்பார்' என்ற பழமொழியைச் சும்மாவா சொல்லிவைத்தார்கள்? இதனால் 'ஓரேர் உழவன்' போன்ற அடியேனுக்குப் பல இடங்களில் தங்கும் வாய்ப்பு கிடைத்தது. விலங்கியல் துறையில் சிறிய தனிக் குழிப் பெருக்க அறையில் (Cubicle) சில ஆண்டுகள் தொடர்ந்து தங்கியிருக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. இந்த வாய்ப்பினை உயி ரியல் கற்கும் வாய்ப்பாகப் பயன்படுத்திக்கொண்டேன். விலங் கியல் துறையில் பணியாற்றிய திரு. எஸ். ரெங்கராவ் (ஆந்திரர்), திரு. சீனிவாசலு (தமிழர்) எனக்கு அடிக்கடி நேரிடும் ஐயங்களை யெல்லாம் அகற்றினர்.[2]

கல்வி உளவியல் நூல்களைக் கற்கும்போது என் கவனம் குடிவழியின்பால் (Heredity) சென்றது. இப் பகுதியை ஆழ்ந்து கற்றேன். ஜீன்ஸ் (Genes) பற்றிய துறையில் தெளிவு ஏற்பட்டால் குடிவழிபற்றிய கருத்தில் விளக்கம் ஏற்படும் என்று அறிந்திருந்தேன். விலங்கியல் துறையில் தங்கியிருந்தபோது 'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்ற பழமொழியைக் கடைப்பிடித்து கால்வழியியல் (Genetics) துறையில் மிகவும் ஆழங்கால்பட்டு மேற் குறிப் பிட்ட இரண்டு அறிவியல் நண்பர்களின் துணை கொண்டு நல்ல விளக்கம் பெற்றேன். இந்தக் காலப் பகுதியில்தான்

2. இந்த இரு பேராசிரியர்களும் அற்ப ஆயுளில் இறைவனடி சேர்ந்தனர். இவர்களின் மறைவு தாங்கொணாத துக்கத்தை அளித்தது.

(1960-63)'வாழையடி வாழை' என்ற இந்நூல் உருவாயிற்று. இதற்குரிய படங்களை வரையப் பல்கலைக்கழகத்தில் எழுத்தராகப் பணியாற்றிய திரு. பாஷா என்ற இஸ்லாமிய இளைஞர் துணை புரிந்தார். அப்பொழுதே இதனை அறிஞர் அண்ணாவுக்கு அன்புப் படையலாக்கத் திட்டமிட்டிருந்தேன்.

தமிழக அரசு அறிவியல் நூல்கள் வெளியிடுவதற்கும் நிதியுதவி வழங்கும் என்ற செய்தி திருப்பதியிலிருந்தபோது நான் அறியவில்லை. பேருந்து நிலையங்களிலும் இரயிலடிகளிலும் சிறு குழந்தையுடன் 'பாலுக்காக'க் கையேந்தி நிற்கும் ஓர் ஏழைப் பெண்போல நான்கு வெளியீட்டார்களை நாடினேன். ஒவ்வொருவரும் 3, 4, 5 ஆண்டுகளாகப் படியைத் தம்மிடம் வைத்துக்கொண்டிருந்து 'இதைப் பதிப்பித்தால் புத்தக சந்தையில் எடுபடாது' என்று காரணத்தைச் சொல்லித் திருப்பித் தந்துவிட்டனர். ஓய்வு பெற்றுச் சென்னையில் குடியேறிய பிறகு தமிழக அரசின் நிதி உதவி தமிழில் அறிவியல் நூல்களை வெளியிடுவதற்கும் கிடைக்கும் என்ற செய்தியை அறிந்து தமிழ் வளர்ச்சி இயக்ககத்திற்கு விண்ணப்பித்தேன். அரசும் என் நிலைக்குக் கழிவிரக்கம் கொண்டு

---

3. இந்த 'நூல்முகம்' அச்சாவதற்கு முன்னர் இன்னொரு செய்தி கிடைத்தது. பிரேசில் (தென் அமெரிக்கா) நாட்டைச் சார்ந்த 42 அகவைப் பெண்மணிக்குப் பத்தாவது முறையாக 3—7—84 அன்று இரட்டைக் குழவிகள் பிறந்தன. இந்தப் பெண்மணியும் இரட்டையாகப் பிறந்தவள்; இவள் தன் 13 ஆவது வயதிலேயே இரட்டைக் குழவிகளைப் பெற்றவள். இவளுடைய இரண்டு பெண் பிள்ளைகளுக்கும் இரட்டைகள் பிறந்துள்ளன. இவள் அன்னையும் பத்து முறை இரட்டைக் குழவிகளை ஈன்றவள். எனவே, இவளது குடும்பத்தில் 'இரட்டைப் பிறவிகள்' குடிவழிக் கூறாக அமைந்து கிடப்பதை அறிய முடிகின்றது (The Hindu dated 5—7—84) இந்நூல் பக். 271—72 காண்க)

குழந்தைக்குப் புட்டிப் பால் குப்பியைத் தருவது போன்று ரூ. 4700/- நிதி வழங்கியது. இதுபோல் இன்னொரு மடங்குக்கு மேல் சேர்ந்து சற்றேறக்குறைய ரூ. 12,000/-இல் இந் நூல் தமிழுலகில் தவழ்கின்றது. தமிழுலகம் இந்த அறிவியல் குழந்தையை 'வாரியணைத்து முத்தமிடுவதுபோல்' கொஞ்சிக் குலவிப் படித்து மகிழ்ந்தால் அஃது இந்த நூலின் பேறு. இக் குழந்தையின் தாயாகிய அடியேனும்,

*ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்.*[4]

என்று வள்ளுவர் காட்டும் தாயின் நிலையை அடைந்து மகிழ்வேன். குழந்தை தவழும் அளவுக்கு நிதியுதவி வழங்கிய தமிழக அரசுக்குத் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் வழியாக என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்த நூலைச் செவ்வியமுறையில் அச்சிட்டுதவிய அப்பர் அச்சகத்தினருக்கும், சிறப்பாக அதன் மேலாளர் திரு. ஜி. சுப்பையா அவர்கட்கும், அழகிய முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து மூவண்ணத்தில் அட்டையில் அச்சிடல், லாமினேஷன் (Lamination) போடுதல் வரை பொறுப்பேற்று உதவிய ஓவியமன்னர் திரு. பி. என். ஆனந்தன் அவர்கட்கும், சீரிய முறையில் கட்டமைத்துத் தந்த கந்தன் அடிமை திரு. எஸ். பி. சண்முகம் பிள்ளை (உரிமையாளர், Ganesh Printing and Binding) அவர்கட்கும் என் உளம் நிரம்பிய நன்றியறிதலைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன்.

இந்த நூலினை மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு. செ. அரங்கநாயகம் அவர்களின் அணிந்துரை மகுடம்போல் வனப்பூட்டுகின்றது. இவர் ஆட்சி பீடம் ஏறியது முதல்

---

4: குறள் - 69.

இன்றுவரை கல்வி அமைச்சராகப் பொறுப்பேற்றுக் கொண்டது தமிழகத்தின் பெரும் பேறாகும். இத்துறைப் பொறுப்பிலிருக்குங்கால் தமிழகத்திற்கும் தமிழ்மக்களுக்கும் தமிழ்மொழிக்கும் பல அரிய பெரிய பணிகளைப் புரிந்து வருவதைக் குன்றின் மேலிட்ட விளக்குபோல் அனைவரும் நன்கு அறிவர்.

இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்[5]

என்ற வள்ளுவர் வாக்கினை நன்குணர்ந்த புரட்சித் தலைவர் மாண்புமிகு முதல்வர் திரு. எம். ஜி இராமச்சந்திரன் இக் கல்வி யாளரைத் தேர்ந்தெடுத்துக் கல்வித்துறைப் பொறுப்பை வழங்கினமைக்குத் தமிழகம் நன்றி செலுத்தவேண்டும். கல்வி அமைச்சர் தம் காலத்தில் புரிந்த நற்பணிகளைப் பட்டியலிட்டுக் காட்ட இங்கு இடமில்லையெனினும், வரலாறுகாண முடியாத வண்ணம் ஐந்தாவது உலகத் தமிழ்மாநாட்டைச் சிறப்புற நடத்திய பெருமை, இந்தியாவிலேயே—ஏன் உலகிலேயே— ஒரு மொழிக்குத் தனிப் பல்கலைக் கழகம் கண்டமை, இரண்டு தமிழ்க் கவிஞர் பெயரில் இரட்டைக் காப்பியம்போல் இரண்டு பல்கலைக் கழகம் ஏக காலத்தில் கண்டமை,

பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடும் ஈசன்
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
பெண்கள் அறிவை வளர்த்தால்—வையம்
பேதமை யற்றிடும் காணீர்[6]

என்று கவியரசர் போற்றும் பெண்களின் கல்வி வளர்ச்சிக் காகப் பெண்களுக்காகவே ஒரு தனிப் பல்கலைக் கழகம்

5. குறள் - 517.
6. ப. பா. முரசு - 9, 10.

கண்டமை, தனிப் பெருந்தலைவர் தந்தை பெரியாருக்கு நூற்றாண்டு விழாவை அவர் பிறந்த ஈரோட்டிலேயே கொண்டாடியமை, திரு. வி. க., டி. கே சி., பண்டிதமணி, நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், மகாகவி பாரதியார், திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் போன்ற பெரியார்கட்கு நூற்றாண்டு விழா எடுத்தமை போன்ற சிலவற்றையாவது குறிப்பிடலாம். தீர்க்கமுடியாமல் கிடந்த ஆசிரியர்களின் பிரச்சினைகளைத் தீர்த்தமை இவர்புரிந்த சாதனைகளுள் தலைசிறந்தது. இத்தகைய நல்லவர், வல்லவர், அடக்கமாகப்பேசி அடக்கமாகப் பணிபுரிபவர், இந்த நூலுக்கு அணிந்துரை வழங்கியது இந்த நூலின் பேறு; அடியேனுடைய பெரும் பேறுமாகும். 'அடக்கம் அமரருள் உய்க்கும்'[7] என்ற உண்மையை நன்கறிந்த இப் பெருமகனாருக்கு என் நன்றிகலந்த வணக்கம் உரியது.

பேரறிஞர் அண்ணாத்துரை அவர்கள் நான் சிறுவனாக இருந்த காலம் முதல் என் வீர வழிபாட்டுக்குரியவர். அவர் சொற்பெருக்கு தமிழகமெங்கும் பாய்ந்துகொண்டிருந்த காலம்; அது, தந்தை பெரியார் கண்ட சுயமரியாதை இயக்கத்தில் தீவிரமாகப் பங்கு கொண்டிருந்த காலம். 1944இல் என்று நினைக்கின்றேன்—அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அருந்தமிழில் 'ஆற்றோரம்' என்ற தலைப்பில் ஒரு பேருரை நிகழ்த்தினார். அதன் பெருமை தமிழகமெங்கும் அலை பாய்ந்துகொண்டிருந்தது. சிந்தனைக்கு ஆதரவு தந்துவந்த நாள், வார இதழ்கள் அதனை வானளாவப் புகழ்ந்தன. 'திராவிட நாடு' இதழில் பேச்சு வெளிவந்ததாக நினைவு. அடுத்து, துறையூர்ப் பக்கம் அண்ணா அவர்கள் சுற்றுப் பயணம் செய்துகொண்டிருந்தபொழுது நான் தலைமையாசிரியனாக இருந்த உயர்நிலைப் பள்ளியில்

---

7. குறள் - 121.

'ஆற்றோரம்' என்ற சொற்பொழிவுக்கே ஏற்பாடு செய்தேன். ஆயிரத்திற்கு மேற்பட்ட ஊர்ப் பெருமக்கள் பள்ளிக்குத் திரண்டெழுந்து சொற்பெருக்கைச் செவிமடுத்து மகிழ்ந்தது இன்றும் என் மனத்தில் பசுமையாக உள்ளது. அன்று முதல் அண்ணா நிரந்தரமாக என் உள்ளத்தில் எழுந்தருளியுள்ளார்.

அண்ணா தமிழக ஆட்சிப் பொறுப்பேற்று, 1968இல் இரண்டாவது உலகத் தமிழ்மாநாடு கூட்டி ஆற்றிய அருஞ்செயல்களும் அவர் பாராளுமன்றத்தில் நிகழ்த்திய முதல் ஆங்கிலப் பேருரையும்[8] நேரு போன்ற உலகத் தலைவர்களையும் வியக்க வைத்தன. ஆட்சியிலிருந்த இரண்டரை ஆண்டுக் காலத்தில் தம்முடைய தன்னலமற்ற செயல்களாலும், எதிர்க் கட்சித் தலைவர்களையும் அரவணைத்துக்கொண்டு செயற்பட்ட பெருமையாலும், 'மக்கள் முன்னேற்றமே நாட்டின் முன்னேற்றம்' என்ற குறிக்கோள் நெறியில் செயற்பட்ட சிறப்பாலும் தமிழ்ப் பெருமக்கள் இதயத்தில் நிரந்தர இடத்தைப் பிடித்துக்கொண்டு இன்றும் அவர்கள் திருவுள்ளத்தில் வாழ்கின்றார். இன்னும் சில ஆண்டுகள் வாழ்ந்திருந்தால் தமிழகம் 'பொன்னுலகம்' ஆகியிருக்கும் என்பது சிறியேனின் கணிப்பு. இந்த நூலை எழுதி முடித்த அன்றே இப் பெருமகனாருக்கு இதனை அன்புப் படையலாக்கத் திட்டமிட்டிருந்தேன். அதை இப்போது நிறைவேற்றுகின்றேன். அமரர் அண்ணாவின் ஆசி பெற்று 22 ஆண்டுகட்குமேல் உறங்கிக் கிடந்த குழந்தை இப்போது தமிழகத்தில் தவழ்கின்றது; நடைபோடுகின்றது. தமிழகப் பெருமக்கள் இக் குழந்தையை வாரி எடுத்துக் கொஞ்சுவார்கள் என்பது என் திடமான நம்பிக்கை.

இந்த அறிவியல் நூல் வெளியுலகில் நடைபோட இருபதாண்டுகளாக முடங்கிக் கிடந்தாலும், எப்படியோ

8. *Anna Speaks* - at the Rajya Sabha 1962—66. Orient Longman Ltd—Published in 1975.

இறுதியில் வெளியுலகப் பார்வைக்கு இலக்காகிவிட்டது. எத்தனையோ சோதனைகட்கு என்னை உட்படுத்திவரும் ஏழுமலையப்பன் நூல் வெளிவருவதிலும் யான் பொறுமை யுடன் காத்திருக்கின்றேனா அல்லது மனம் உடைந்து உற்சாகம் குன்றிவிடுகின்றேனா என்று என்னைச் சோதிக் கின்றான் என்றே எனக்குப் படுகின்றது. என்ற போதிலும் அவனே எனக்குத் தாக்குப் பிடிக்கும் திராணியையும் நல்கி என்னை உய்ய வைக்கின்றான் என்பது என் அதிராத நம்பிக்கை. இங்ஙனம் எல்லாம் 'என் செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலை' என் மெய் மனம் மொழிகளால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

> *ஏத்திமத மெல்லாம் எதையறிந்தேம் என்னும்? எதைச்*
> *சாத்திரம்நன் காய்ந்து சலிக்கும்? எதை—நாத்திகமோர்*
> *சற்றுமே ஓர்ந்திலதாச் சாதித்திடும்? அதையே*
> *பற்றுவாய் நெஞ்சே! பரிந்து.*[9]
>
> —வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

"வேங்கடம்"
அண்ணா நகர்
சென்னை-600 040
31—7—1984

ந. சுப்பு ரெட்டியார்

---

9. அகலிகை வெண்பா - காப்பு.

# வைணவ உரைவளம்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூல் ‘தேனும் கன்னலும் கலந்து’ சுவை நிறைந்த பால் போன்றது. சுவையின்றத் தள்ள வேண்டிய பக்கம் ஒன்றுகூட இல்லை. பேராசிரியர் தாம் துய்த்துணர்ந்ததை ஐதிகம், இதிகாசம், சம்வாதம் என்ற மூவகைகளில் அடக்கி ஆழ்வார் பாசுரங்களுடன் இயைபுபடுத்திக் காட்டுகின்றார்.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939685-5-0

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

சேய பங்கயச் சிறுவிடல்
　　அங்கையில் திரட்டிய நறுவெண்ணெய்
ஆயர் மங்கையர் இடஇட
　　அமுதுசெய் தாடிய திருக்கூத்தும்
நேய மும்குறு முறுவலும்
　　புரிந்துபார்த் தருளிய நெடுங்கண்ணும்
மாய வன்திரு வடிவமும்
　　அழகும்என் மனத்தைவிட் டகலாவே!

—வில்லிபுத்தூராழ்வார்

*ஆண்டவன் அருளின்றி எதுவும் நடைபெறாது என்பது மெய்ப்பொருள் உணர்த்தும் உண்மை. 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்ற பழமொழி உணர்த்துவதும் இவ்வுண்மையையேயாகும். பி. எஸ்சி., எல். டி. பட்டங்கள் பெற்று உயர்நிலைப் பள்ளியைத் தொடங்கி அதில் தலைமையாசிரியனாகப் பணியாற்றிய அடியேனை அடியேனின் நுகர்வினை (பிராரத்தம்) பல்கலைக் கழக விதியாக அமைந்து எம். ஏ. பட்டம் பெறுவதற்குப் பத்தாண்டுகளும், பிஎச். டி. பட்டம் பெறுவதற்குப் பதினைந்து ஆண்டுகளும், ஆக இருபத்தைந்து ஆண்டுகள் பெற முடியாமல் தடுத்து நிறுத்தின.*

---

1. வில்லிபாரதம்-நச்சுப்பொய்கை-கடவுள் வாழ்த்து.

அடியேனின் முன்னோர் நல்வினைப் பயனும் அடியே னின் நல்வினைப் பயனும் பதினேழு ஆண்டுகள் திருப்பதியி லுள்ள பல்கலைக் கழகத்தில் அடியேனைக் கருவியாகக் கொண்டு 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலாகிய' ஏழுமலையான் தமிழ்த்துறையைத் தொடங்க வைத்து அதனை வளர்க்கவும் வாய்ப்பளித் தான். அடியேனைச் சார்ந்த இடத்தின் வண்ணமாகவும் செய்தான்.

அந்தர்யாமியாக இருந்து கொண்டு அடியேனின் பிஎச். டி. பட்டத்திற்கு 'நாலாயிரத்தில் நம்மாழ்வார் தத்துவம்' என்ற பொருள் பற்றி ஆயவும் வழிவகுத்தான். ஐந்தாண்டு கள் ஆழ்வார்கள் பாசுரங்களில் ஆழங்கால் பட்டேன். பாசுரங்களைப் பயிலும்போது உள்ளம் உருகியது. கண்ணீர் ஆறாகப் பெருகியது. பக்தியின் கொடு முடியை எட்டியது போன்ற அநுபவம் கிட்டியது. பட்டமும் பெற்றேன். இதுவே அடியேனின் இம்மை வாழ்வின் பொற்காலமாக அமைந்ததாகக் கருதுகின்றேன். பட்டம் பெற்றதால் இம்மைப் பயன் கணிசமாக இல்லையெனினும் பாசுரங் களால் அடைந்த மனப்பக்குவம் மறுமைப் பயனுக்கு வழியமைத்ததாக அதிராத நம்பிக்கை கொள்ளுகின்றேன்.

ஓய்வு பெற்று 1978-ஜனவரி 14ஆம் நாள் சென்னையில் குடியேறியதிலிருந்து,

> பழுதே பலபகலும் போயினஎன் றஞ்சி
> அழுதேன்[2]
>
> வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
> பூசித்தும் போக்கினேன் போது[3]

என்று என் காலம் கழிகின்றது. ஆழங்காட் பட்ட பாசுரங் களை அசைபோடுகின்றேன், உரை வளத்தில் ஈடுபட்டு

---

2. முதல். திருவந். 16
3. நான். திருவந். 63

உள்ளதைப் பறி கொடுக்கின்றேன். இந்த அநுபவத்தின் விளைவாக எழுந்தது இந்நூல். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற உணர்வின் விளைவாக இந்நூல் ஆக்கப்பெற்றது. உரைகளில் கண்ட ஐதிகம், இதிகாசம், சம்வாதம் அடியேனின் உள்ளத்தைக் கவர்ந்தனவாதலின் அவற்றிற்குரிய பாசுரங்களோடு அவற்றைத் தருகின்றேன். இத்தொகுப்பின் முன்னோடியாகவுள்ள 'அறிமுகம்' நூலைப் புரிந்து கொள்வதற்கு வழியமைக்கும் என்பது அடியேனின் நம்பிக்கை. நூலில் வரும் வைணவப் பெரியார்களைப்பற்றிய குறிப்பும் விளக்கத்திற்குத் துணைபுரிதல் கூடும் என்று கருதி அகர வரிசைப் படுத்தி குறிப்புகளுடன் நூலின் இறுதியில் தந்துள்ளேன். இம்முறையில் மேற்கொண்ட அடியேனின் முயற்சி 'வைணவ மரபுகளைப்' புரிந்து கொள்வதற்குத் துணைபுரியுமானால் அதுவே அடியேன் பெற்ற நற்பேறாக அமையும்.

ஏழுமலையானின் கருவியாக நின்று நிதி உதவி வரும் திருமலை—திருப்பதி தேவஸ்தானாருக்கும், இதனை அச்சிட்டு உதவிய மூவேந்தர் அச்சகத்தின் உரிமையாளர் முத்து அவர்கட்கும், அழகிய முறையில் ஓவியமும் அச்சுக் கட்டையும் தயாரித்து வண்ண அச்சு முதலியதையும் அமைத்துத் தந்த ஓவிய மன்னர் பி. எஸ். ஆனந்தன் அவர்கட்கும் லாமினேஷன் போட்டு உதவிய மாருதி லாமினேஷன் உரிமையாளர் திரு. பார்த்திபன் அவர்கட்கும, இவ்வளவும் ஆன நிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத் தவழச் செய்த கந்தன் அடிமை எஸ். பி. சண்முகம் பிள்ளை அவர்கட்கும் என் இதயம் கலந்த நன்றியைப் புலப்படுத்துகின்றேன்.

சிறப்புப் பாயிரம் நல்கிய 'கம்பராமனைப்'பற்றிய ஒரு சிறு குறிப்பு; முத்தர்களுள் ஒருவரான பன்மொழிப் புலவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் இவரை திருத்தக்க தேவரும் கம்பநாடரும் இணைந்த மறுபிறவி என்று

போற்றுவர்; இஃது இவர்தம் கவித்துவம்பற்றியது. ஆழ்வார்கள் பாசுரங்களில் ஆழங்கால் பெற்ற இவரது அநுபவம் இவர் பாடல்களை ஏழுமலையான் இலட்டுபோல் இனிக்க வைக்கின்றது: பச்சைக் கர்ப்பூர மணம் இலட்டில் கமழ்வதுபோல் பக்திமணம் இவர்தம் பாடல்களில் கமழ்கின்றது; சொல்வளமும் கொழிக்கின்றது. தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் பேரகராதித் துறையில் பணியாற்றும் இவருக்கு இவர் மனத்தில் குடிகொண்டு நெருடும் பல்லாயிரக் கணக்கான பாடல்கள் சொற்பொருளுக்கு மேற்கோள்களாக அமைவதில் பெருந்துணை புரியும் என்பதற்கு ஐயம் இல்லை.

ஏற்கெனவே அடியேனின் இலக்கண இலக்கிய அறிவியல் பணியை,

> கற்றவர்க்குப் புலனாகாக் காப்பி யத்தைக்
> கலைமெருகு கொடுத்தினிதே யறியச் செய்தாய்;
> பொற்றொடியார் தமைமணக்கும் காளை கட்குப்
> பொலிவுடைஇல் லறநெறியைப் புரியச் செய்தாய்;
> கொற்றமுறும் அணுநுட்பம் இனிதே யாய்ந்து
> குளிர்தமிழிற் பகர்ந்துள்ளம் தெளியச் செய்தாய்;
> உற்றகலைத் திங்கட்குப் பயணம் செய்த
> ஒளிநெறியை உளந்தோறும் விரியச் செய்தாய்.[4]

என்று காட்டி வாழ்த்தியவர். இத்தகைய நண்பர் இப்பொழுது இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் நல்கியமைக்கு அடியேனின் உளங்கனிந்த நன்றி. சிறப்புப் பாயிரம் நூலிற்குப் பொலிவும் பெருமையும் திகழச் செய்கின்றது என்பது அடியேனின் நம்பிக்கை.

அணிந்துரை அருளிய முதுபெரும் புலவர் திருவாளர் பெ. இராமாநுஜ ரெட்டியார் எங்கள் குலத்துப் பிதாமகர்

4. அடியேனின் மணிவிழா மலரில் (1977) வாழ்த்திய பாடல்களில் ஒன்று.

போன்றவர். அடியேனின் இளமைப் பருவம் தொட்டே அடியேனின் வளர்ச்சியைக் கண்டு ஆசி கூறி வருபவர். இன்று வைணவ ஒளியில் திளைத்து, தமிழ் ஒளியில் பழுத்து நிற்கும் பாகவத சிரோமணியாகத் திகழ்பவர். 1977-இல் அடியேனை,

தன்னிலைமை தானறியாத் தன்மை யாளன்;
சாதிவெறி சமயவெறி சற்று மில்லான்;
துன்னியநல் சைவகுலத் தோன்ற லேனும்
தூயதிருக் கச்சிநகர் அண்ணங் கரராம்
மன்னியவா சாரியரின் மலர்த்தாள் போற்றி
வைணவத்தின் வளமனைத்தும் உணரப் பெற்றோன்;
பன்னியதை ஏட்டினிலே பரவச் செய்தான்
பலவுரைத்தேன் அவன்திறமைப் பகர்தல் ஆற்றேன்.[5]

என்று என்னை 'ஏகலைவனாக' இனங்கண்டு வாழ்த்திய பெரியார். இப்பொழுது இந்நூலுக்கு அணிந்துரை நல்கி ஆசி கூறியமைக்கு அடியேனின் மனம் கனிந்த நன்றி என்றும் உரியது. இவர்தம் அணிந்துரையால் இன்னூல் மேலும் சிறப்படைகின்றது என்பது அடியேனின் அதிராத நம்பிக்கை.

மகாவித்துவான் கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள் சற்றேறக் குறைய நாற்பது ஆண்டுகட்குமுன் மயிலையில் வாழ்ந்து வந்த பன்மொழிப் புலவர் உயர்திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் இல்லத்தில் அறிமுகம்ஆன நாள் தொட்டு இவர் திருநாடு அலங்கரிக்கும் வரை (22-12-84) அடியேனின் உடன் பிறவாத அண்ணனாக இருந்து வந்தவர். தமிழ்-வைணவக் களஞ்சியம்போல் இருந்து ஒல்லும் வகையெல்லாம் அடியேனுக்கு உதவி வந்தவர்.

---

5. அடியேனின் மணிவிழா மலரில் (1977) வாழ்த்திய பாடல்களில் ஒன்று.

இலச்கியமா? இலக்கணமா? இயல்விஞ் ஞான
எழிற்கலையா உளநூலா' எதிலும் வல்லான்;
கலக்கமிலா தாராய்ச்சி முடிவு காட்டிக்
களிப்புறுவோன்; அறிஞரெலாம் கருத வாழ்வோன்;
புலக்கண்உற உரைகாண்பான்; நூலும் காண்பான்;
போதகா சிரியனுமாய்ப் போந்தான் கண்டீர்;
தலக்கணிவன் தனக்குநிகர் தானாய் நின்ற
சான்றோன்காண்; சுப்புரெட்டி என்பான் மன்னோ?[6]

என்று அடியேனை எடை போட்டு மகிழ்ந்தவர். என்றும் 'விஷ்ணுசித்தனாக' இருந்து வாழ்ந்தவர். எப்பொழுதும் திருமண் காப்புடன் திகழும் இவரைக் காணும்பொழுது வில்லிப் புத்தூர்ப் பெரியாழ்வார் வாழ்ந்த காலத்தில் வாழப் பேறு பெறாத நமக்குப் பூதூரில் வாழ்ந்த இப்பெரியாரைக் காணும்போதெல்லாம் பெரியாழ்வார் நினைவுக்கு வருவதால் இவர் பூதூர்ப் பெரியாழ்வாராகக் காட்சி தருவார். வைணவப் பெருமக்கள் பூதூர் சுவாமிகள் என்றே இவரைப் போற்றிப் புகழ்வர். தமிழிலும் வைணவத்திலும் ஆழங்கால் பட்டு, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை இருமுறை பதிப் பித்து, எல்லையிலாப் புகழ் பெற்ற இப்பெரியாருக்கு இந் நூலை அன்புப் படையாலாக்கி மகிழ்கின்றேன். பரம பதத்தில் முத்தர்களுள் ஒருவராகவுள்ள இப்பெரியாரின் ஆசியால் அடியேன் வைணவ இலக்கியத்திலும் தத்துவத்தி லும் மேலும் மேலும் தெளிவு பெறுவேன் என்பது என் அதிராத நம்பிக்கை.

அடியேனின் உள்ளத்தில் நிலையாக இருந்து கொண்டு அடியேனை இயக்கி இத்தகைய தெய்வப் பணியில் ஈடுபடச் செய்து வரும் 'சீர் ஆர் திருவேங்கட மாமலைமேய, ஆரா அமுதத்தை' மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்கி மகிழ்கின்றேன்.

---

6. அடியேனின் மணிவிழா மலரில் (1977) வாழ்த்திய பாடல்களில் ஒன்று.

உன்னை யுள்ள படியறியோம்;
　　உலகம் உள்ள திறமுள்ளோம்;
பின்னை யறியோம்; முன்னறியோம்;
　　இடையும் அறியோம்; பிறழாமல்
நின்னை வணங்கி நீவகுத்த
　　நெறியின் நிற்கும் அதுவல்லால்
என்னை அடியேம் செயற்பால?
　　இன்ப துன்பம் இல்லோனே.[7]

—கம்பநாடன்

''வேங்கடம்''
AD-13 (பிளாட் 3354)
அண்ணா நகர்
சென்னை-600 040
அக்டோபர் 2, 1985
(காந்தியடிகள் பிறப்பு)

ந. சுப்புரெட்டியார்

7. கம்ப, யுத்த, பிரமாத்திர—223

# தம்பிரான் தோழர்

(தமிழ்த்துறை வெள்ளிவிழா வெளியீடு)

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியர் ஐந்தெழுத்தின் பெருமையைக் குறிப்பிட்டுள்ளார்.
பேராசிரியர் வன்றொண்டர் பாடிய
அருட்பதிகங்களிலிருந்து ஒவ்வொரு தலத்திற்கும்
உரிய ஓரிரண்டு பாடல்களையும்
காட்டியுள்ளது படித்து இன்புறுவதற்குரியது.

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939637-6-0




*eBOOK* ~ *மின் நூல்*

# நூல்முகம்

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட்
டாட்கொண்ட உவனைக் கொண்டே
இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட
வல்லாளன் எல்லாம் உய்யப்
பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்த
பேரருளின் பெருமாள் என்றும்
திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமான்
எமதுகுலத் தெய்வ மாமால்.

—சிவஞானமுனிவர்

1960-ஆகஸ்டு முதல் (திருப்பதியில் பணியேற்ற நாள் முதல்) வைணவ சமயத்திலும் வைணவ இலக்கியங்களிலும் ஆழங்கால் பட்டுள்ளேன். இதன்காரணமாக 108 திவ்விய தேசங்களைச் சேசத்து அத்திவ்விய தேசத்து எம்பெருமான் களை வழிபட்டும் ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த பாசுரங்களில் ஆழங்கால்பட்டும் 6 திருத்தலப் பயண நூல் களை வெளியிட்டேன். நம்மாழ்வார் தத்துவத்தை ஆய்ந்து டாக்டர் (Ph.D) பட்டம்[2] பெற்றேன்; இது தவிர, சில நோக்கில் நாலாயிரம், கவியன் குரல் (அண்ணாமலைப் பல் கலைக் கழக வெளியீடு) வைணவ உரைவளம் என்ற நூல் களும் வெளிவந்துள்ளன.

இந்நிலையில் 1977 அக்டோபரில் ஓய்வு பெற்று, 1978 சனவரி 14:ஆம் நாள் சென்னையில் குடியேறியது முதல் சைவ சமயத்தையும் ஆயவேண்டும், சைவ இலக்கியங்களி

---

1. காஞ்சிப்புராணம்-காப்புப்பகுதி.
2. இந்நூல் ஆங்கிலத்திலானது; திருவேங்கடவன் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

லும் ஈடுபட வேண்டும், சமய குரவர்களின் பாடல் பெற்ற திருத்தலங்களைச் சேவிக்க வேண்டும் என்ற எண்ணம் அடிக்கடி முகிழ்த்தும் அடங்கியும் மாறிமாறி இருந்து வந்தது. ஆயினும், சமய இலக்கியங்களையும் சாத்திரங்களையும் பயின்று சைவ சமய விளக்கு என்ற நூலை வெளியிட்டேன். இந்நிலையில் ஒருநாள் 'தம்பிரான் தோழரின் சுந்தரக் கவிகள்' என்ற தலைப்பில் அவரது திருநட்சத்திரத்தன்று (ஆடி, சுவாதி; 25.7-85) உரையாற்ற வேண்டும் என்று வானொலியிலிருந்து அழைப்பொன்று வந்தது. இதுவே தூண்டு கோலாக அமைந்து சைவ இலக்கிய ஈடுபாட்டில் கொண்டு செலுத்தியது. சைவ இலக்கிறங்களில் ஆழங்கால்பட்டு வருகின்றேன். திருத்தலப் பயணம் மேற்கொள்வதற்கு ஓய்வு ஊதியம் கூட பெறமுடியாத நிலையில் (40 ஆண்டு உழைப்பு) பொருளாதார வசதி இல்லை. அப்படி ஏற்பட்டாலும் பயணம் செய்வதற்கு உடல் நிலையும் சரிப்பட்டு வராது என்ற நிலையும் தோன்றியுள்ளது.

மூர்த்தி தலம் தீர்த்தம்
முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே![3]

என்ற தாயுமானவர் வாக்கும் நெஞ்சில் உந்திக் கொண்டே உள்ளது. பூசலார் நாயனார் மானசீகமாக எழுப்பிய திருக்கோயிலும் நினைவிற்கு வந்தது.

சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் காட்டியுள்ள வழியைக் கடைப்பிடித்துக்கொண்டு அவருடன் மேற்கொண்ட கற்பனைப் பயணத்தின் விளைவாக இந்நூல் உரு

---

3. தா.பா; பராபரக் கண்ணி-156

வாகியது. இதற்குப் பேராசிரியர் க. வெள்ளைவாரணனின் பன்னிருதிருமுறை வரலாறு (இரண்டுபகுதிகள்) பெருந்துணை யாக இருந்தன. அப்பெருமானின் வாழ்க்கை வரலாற்றை[4] அறிந்துகொள்ளும் வாய்ப்பும் கிட்டியது. நூலின் அடிக்குறிப்பு களில் சுந்தரர் சேவித்த தலங்களைப்பற்றிய விவரங் களையும் நூலில் அவர் பாடியுள்ள பதிகங்களின் ஒவ்வொரு பாடலையும் தந்துள்ளேன். மேலும் அறிய வேண்டுவார் 'தேவார அடங்கன் முறை'யைப் படித்து அறிந்து கொள்ள லாம். இந்த நூலைக்கொண்டு சுந்தரர் வழிபட்ட திருத் தலங்களைச் சேவிக்கவும் அவர் பாடிய திருப்பதிகங்களை அநுபவித்து மகிழவும் இது துணையாக இருக்கும். படிப் போரின் மன நிலை, பக்தியில் வளர்ச்சி, இறைவனிடம் ஈடு பாடு இவற்றிற்கேற்பச் சிவாநுபவம் பெறத் துணைசெய்யும். இஃதெல்லாம் கைகூடுவதற்கு 'அவனருளாலே அவன்தாள் வணங்கும்' பேறும் பெற்றாக வேண்டும்.

'திருவருட் செல்வர்கள்'-என்ற வரிசையில் மூன்றாவ தாக வர வேண்டிய நூல் இது. முதலில் எழுதப் பெற்றதால் முதலாவதாகவே வெளிவருகின்றது. இதனால் 'சிவத்தலங் கள்' பற்றிய கட்டுரையையும் இதில் சேர்த்தேன். இத்தனை தொடர்ந்து வெளிவர இருக்கும் நாவுக்கரசர், ஞானசம்

---

4. திருத்தொண்டர் புராணம் (ஆறுமுக நாவலரின் உரைநடை) தொடக்கத்தில் 'புராண வரலாறு' என்பதில் கண்ட குறிப்பு: ஆதிகாலத்தில் திருக் கைலாசபதியாகிய சிவபெருமான் தமது திருவுரு வத்தைக் கண்ணாடியிலே பார்த்து அழைத்தருள லும், கோடி சூரியர்கள் ஒருங்கு திரண்டாற் போன்று திருமேனிப் பிரகாசத்தோடு தோன்றி னார். அவர் பெயர் சுந்தரர். அவர் திருப்பாற் கடலி னின்றும் தோன்றி விட்டுணு முதலிய தேவர்களெல் லாரையும் ஓடச் செய்த ஆலகால விஷத்தைச் சிவ பெருமான் திருவமுது செய்தருளும் பொருட்டுத் தமது உள்ளங்கையினுள்ளே அடக்கிக் கொண்டு போய்க் கொடுத்தார். அதனால் அவருடைய பெயர் ஆலால சுந்தரர் என்றாயிற்று.

பந்தர் என்ற நூல்களையும் படித்த பிறகு இந்தக் கட்டுரையில் ஆழங்கால்பட்டு அநுபவிக்க வேண்டும்.

'செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்' என்பது ஆன்றோர் வாக்கு. இவ்வுலகில் செல்வச் சீமானாக இருப்பவன் ஏழுமலையான், செல்வ நாயகியைத் திருமார்பில் தாங்கிக் கொண்டிருப்பவன். அப்பெருமாட்டியும் 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் திருமார்பை விட்டு அகலாதிருப்பவள். இந்நிலையில் நாடோறும் அவனுடைய எண்ணற்ற பக்தர்கள் அவனது கருவூலத்தை நிரப்பிக் கொண்டிருக்கின்றனர். ஆகவே, இந்த உறுபெருஞ்வத்தைச் செழுங்கிளைச் சேர்ந்த பக்தர்கள் எழுதும் சமய வெளியீடுகளுக்கு வரையாது வழங்கும் நிதி உதவித் திட்டத்தில் இந்நூலும் நிதி உதவி பெற்று வெளி வருகின்றது. இந்த உதவி பெறாது போயின் 40 ஆண்டுகள் கல்வித் தொண்டாற்றி ஓய்வு ஊதியம் பெறாது தவிக்கும் அடியேனால் இந்த நூலை வெளியிட்டிருக்க முடியாது. இவன், மேலும் வெளிவர இருக்கும் நாவுக்கரசர், ஞானசம்பந்தர், தாயுமானஅடிகள், மாணிக்க வாசகர், வடலூர்வள்ளல் போன்ற பக்திப்பனுவல்கட்கும் உதவுவான் என்ற நம்பிக்கை என்பால் உண்டு. அவனது கருவியாக இயங்கிவரும் தேவஸ்தானத்தாருக்கும் குறிப்பாகத் திரு K. சுப்பாராவ், திரு N. S. இராமமூர்த்திக்கும் என் அன்பு கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்த நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய நாவல் ஆர்ட் அச்சக உரிமையாளர் திரு. நாரா. நாச்சியப்பன் அவர்கட்கும், எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து மூவண்ணத்தில் அச்சிடும் வரையில் பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் P. N. ஆனந்தன் அவர்கட்கும் லாமினேஷன் போட்டு உதவிய மாருதி லாமினேஷன் உரிமையாளர் பார்த்திபன் அவர்கட்கும், இவ்வளவும் ஆன நிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத் தவழச்

செய்த கந்தன் அடிமை எஸ். பி. சண்முகம் பிள்ளை அவர் கட்கும் என் இதயம் கலந்த நன்றியை புலப்படுத்துகின்றேன்.

இந்த நூலுக்கு சிறப்புப்பாயிரம் நல்கிய பேராசிரியர் க. பெருமாள் (ஓய்வு பெற்ற அரசினர் கல்லூரிகளின் முதல்வர்) என் நெடுநாளைய நண்பர். பதவியிலிருந்தபோது செய்யாற்றில் பார்க்கும் பேறு கிடைத்தது. சிறந்த தமிழ் நேசராகக் காணப்பட்டார். அறிவியலைத் தமிழில் கற்பிக்கும் திட்டத்தில் உருப்படியான பணியில் ஈடுபட்டிருப்பதை நேரில் கண்டேன். நான் அறிவியலில் வேதியியல் துறையில் பட்டம் பெற்றவனாதலால், அந்த வகுப்பிற்கு (பி.எஸ் சி வகுப்பு) என்னை இட்டுச் சென்றார். அந்த வகுப்பில் ஆசிரியர் பாடத்தைத் தமிழில் நடத்திய பாங்கைக் கண்டு வியந்து போனேன்; அருந்தமிழில் அற்புதமாகக் கற்பித்தார். 1958-இல் இங்ஙனம் தாவர இயலைக் கற்பித்த அண்ணா மலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் அரங்கசாமி அய்யங் கார் கற்பிதத்தை நேரில் கண்டபோது ஏற்பட்ட வியப்பைப் போலவே இப்போதும் ஏற்பட்டது. இப்படிப்பட்ட முதல்வர் களும் பேராசிரியர்களும் இத்திருப்பணியில் ஈடுபட்டால் தமிழ்ப் பாடமொழியாகும் திட்டம் அற்புதமாகச் செயற்படும் என்பதை நினைத்தேன்; இன்றும் நினைக்கின்றேன். இங்ஙனம் உண்மையாகப் பணியாற்றுவோர் எத்துணை பேர்? என்பது பெரிய கேள்வி. துறைதோறும் தமிழ் முழக்கம் கேட்கவேண்டும் என்ற துடிப்புள்ளவர் பேராசிரியர் க. பெருமாள்; சிறந்த தமிழ் நேசர். உடல் நன்கு செயற்படு வதற்கு அளவான நாடித்துடிப்பு வேண்டும். அத்தகைய துடிப்புதான் பேராசிரியரிடமும் அமைந்திருந்தது. வேளாண் மைக் குடும்பத்திலிருந்து வந்தவராதலால், பாலைவனம் போன்றிருந்த கல்லூரி வளாகத்தைச் சோலை வனமாக்கி யுள்ளதைக் கண்டு வியந்தேன். மண்வெட்டியையும் கடப்

பாரையையும் தாங்கிய பேராசிரியரைக் கண்டபோது உழவாரப் படையைத் தாங்கிச் செல்லும் அப்பர் பெரு மானை நினைக்கச் செய்தது. முதல்வரே கையுழைப்பில் ஈடு படுவதைக் கண்டபோது இவரிடம் பயின்றவர்களும் இவர் தலைமையில் அடங்கிய மாணாக்கர்களும் ''தலைவனைப் பின்பற்று'' என்ற கட்சிப் போர்க்குரலுக்கு (Slogan) அடங்கிச் செயற்பட்டதை நேரில் கண்டு மகிழ்ந்தேன். இத்தகைய பேரன்பர் என் சம்பந்தி திரு குப்புசாமி ரெட்டியாருக்கும் நெருங்கிய நண்பர். இருவருமே டாக்டர் மு.வ. வுடன் நெருங்கிய தோழர்கள். சான்றோர்கள் நிறைந்த தொண்டை மண்டலத்தவர்கள். திரு குப்புசாமி ரெட்டியாருக்குப் படைக்கப்பெற்ற நூலுக்குப் பேராசிரியர் சிறப்புப்பாயிரம் நல்கிச் சிறப்பித்தமைக்குத் ''தலையலால் கைம்மாறு இலேன்''

தமிழ்நேசரை அடுத்து இந்நூலுக்கு 'அணிந்துரை' அருளி யவர் சிவநேசர் திரு. தே.க. சோமசுந்தரம் அவர்கள். போர்த் துறை, வங்கித்துறை, இந்து அறநிலையத்துறை இவற்றிலெல் லாம் பணியாற்றி அமைதி காணாத நிலையில் பள்ளிக்கல்வித் துறையை நாடி வந்தவர்; பல்லாண்டுகள் இதில் தலைமை யாசிரியராகப் பணியாற்றி மாணாக்கர்கள், பெற்றோர்கள், பொது மக்கள் இவர்களிடம் நற்பெயரை ஈட்டிய நல்லாசான். ஒய்வு பெற்று அண்ணாநகரில் வாழ்ந்தபோது (இப்போது போரூரில் வாழ்பவர்) ஐந்தாண்டுகட்கு முன் இவர் நட்பு கிடைக்கும் பேறு பெற்றேன். இவர் என் சம்பந்தி திரு குப்பு சாமி ரெட்டியாரின் தோழரும் கூட. சிறந்த தமிழன்பர். இப்படிச் சொல்வதைவிட உயர்ந்த சிவநேசர் என்று சொல் வதே சிறப்பு. பாடல் பெற்ற 275 சிவத்தலங்களில் கிட்டத் தட்ட 209 தலங்களை நேரில் வழிபட்டுச் சிவபெருமானின் பேரருளுக்கு இலக்கானவர். தவிர, வைணவ தலங்கள், 108 இல் 58ஐச் சேவித்துத் திருமால் அருளுக்கும் பாத்திரரானவர்.

இத்தகைய பேரன்பர் இந்நூலுக்கு அணிந்துரை நல்கியது கிடைத்தற்கரிய பெரும் பேறாகக் கருதுகின்றேன். இந்தப் பேற்றை இந்த நூலும் பெறுகின்றது. அணிந்துரை அருளிய அன்பருக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

புலவர் கா. செ. குப்புசாமி ரெட்டியார் வடார்க்காடு மாவட்டம் காட்டுக்கா நல்லூரைச் சேர்ந்தவர். 1942-இல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் வித்துவான் பட்டம்பெற்று வேலூர் திருவேங்கடவன் உயர்நிலைப் பள்ளியில் பல்லாண்டு கள் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். ஓய்வு பெறுவதற்கு முன்பே பணியிலிருந்து விலகிக் கொண்டு விட்டார். பணி யிலிருந்த பொழுதே உழவர் சம உரிமைக்கழகத்தின் அமைப் பாளராக இருந்தார். இது தவிர தமிழ்நாடு சிறுதொழில் சங்கத்தில் (TANSSIA) இணை அமைப்பாளராகவும் பணி யாற்றினார். 'உழவும் தொழிலும்' என்ற திங்கள் இதழின் ஆசிரியராகப் புகழுடன் பணியாற்றினார். பல்லாண்டுகள் வடார்க்காடு விவசாயச் சங்க தலைவராகவும் பணியாற்றி 'உழவர்களின் தோழராகத்' திகழ்ந்தவர்' ஒழுக்கத்திற்கும் நேர்மைக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்த வர். திடீரென மாரடைப்பால் காலமாகி உற்றார், உறவினர் நண்பர்கள், எண்ணற்ற உழவர் பெருமக்கள் ஆகியோரைத் துக்கத்தில் ஆழ்த்தியவர்; 1976முதல் என் முதல் சம்பந்தியாக இருந்தவர்; முத்தர் உலகில் வாழ்ந்து அனைவர்க்கும் ஆறுதல் கூறிக் கொண்டிருப்பவர். இவர் நினைவாக, இப் பெருமகனார்க்குத் 'தம்பிரான் தோழர்' என்ற நூலை அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன்.

இந்த நூலை யான் எழுதி வெளியிட என்னுளே தோன்றாத் துணையாக, அந்தர்யாமியாக, எழுந்தருளியிருக் கும் வேங்கடத்து எழில்கொள் சோதியை' மனம், மொழி மெய்களால் வணங்கி வாழ்த்திச் சரண் அடைகின்றேன். மற்றும் நாவலூர் அண்ணல் இணையடிகளையும் முடிமீது வைத்துக் கொள்கிறேன்.

அரவக ரல்கு லார்பால்
ஆசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றளவில் வேதஞ்
சாற்றிய தலைவன் தன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான்
கழுதுகண் படுக்கும் பாணாள்
இரவினில் தூது கொண்டோன்
இணையடி முடிமேல் வைப்பாம்.[5]

'வேங்கடம்'
அண்ணா நகர்
சென்னை-600 040
31-12-1982

ந. சுப்புரெட்டியார்

5. திருவிளையாடற் புராணம்-பாயிரம், 20.

# Collected Papers

**பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

**Collected Papers, covering the entire field of Tamil Studies, presented in National & International Conferences across India !**

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978 -81-936450-7-9

*eBOOK* ~ *மின் நூல்*



# Preface

I have pleasure in presenting this small collection of papers on our Religion, Philosophy, Culture anp History not only as a sort of a change from my usual Tamil writings but also as containing the essence of such writings in a language that ean reach a wider readership. I did not sit down to prepare a work in English with this twin objective, but collected the papers I had presented at various national conferences and seminars and the special articles contributed to souvenirs on special invitation. Thc source of each paper is indicated in the footnote at the commencement page of each paper.

Before collecting the papers I had a misgiving that the whole presentation would be in the nature of unrelated random round about papers artificially put together to provide sufficient quantity for a book. After the collection in the process of seeking any possible relationship amoag the different papers, I was happy to discover a distinctive pattern in the relationship. The whole presentation appeared to be very nearly cogent, complementary and connected with one another. I divldcd the collection into three parts viz., (a) Religion and Philosophy (b) Language and Literaturc, (c) History, Education and Culture. I hope my readers, will not begrudge appreciating the totality in the pattern of these papers inspite of the apparent dlfferences among the themes. The factor of totality is no doubt coincidental, but I would permit myself to believe that in view of my equipment confined to these three areas, I should have chosen themes which I could confidently do justice to. Incidentally these papers may serve as a kind of an introduction to my more comprehensive works in Tamil and a compression of my tome on Nammazhvar and readers not familiar with the Tamil Language may find in the collection something to stimulate their interest in Tamil studies,

I am extremely thankful to Professor K.R. Srinivasa Iyengar, former V:ce-Chancellor of Andhra University who, inspite of varied engagements, mostly in the sphere of culture, could still find the time to go through my collection and to favour with a Foreword which I accept both as an inspitation and blessing.

I thank the Tirumalai-Tirupathi Devasthanams for the grant-in-aid towards the publication of this work.

I have dedicated this work in very general terms to the world of scholarship in view of my long association with guidance of research. The responsibility of research guidance especially at the Doctoral and post-Doctoral levels is becoming more and more stupendous partly in view of the deteriorating student-calibre and partly due to the exacting demands of the new research technology of research. Thesis-engineering requires guidance experts of the highest calibre with the days of arm-chair research fast disappearing. There fore as a member of this emerging category of research-guides I feel it my duty to express my appreciation of the sense of commitment which my fellow research-guides bring to bear upon their work and I have the greatest pleasure in dedicating this work to them.

'Venkatam'
AD-13, Anna Nagar
Madras - 600 040
April 24, 1985

N. SUBBU REDDIAR

# கல்வி உளவியல் கோட்பாடுகள்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

வளர்ந்து வரும் உளவியலையும்
நாளும் சிறந்து வரும் கல்வியியலையும்
தன்னகத்தே கொண்டு திட்ப
நுட்பத்துடன் ஆக்கப்பெற்ற நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-936450-8-6




eBOOK ~ மின் நூல்

## நூல் முகம்

என்னுடை உயிரே! என்னுளத் தறிவே!
 என்னுடை அன்பெனும் நெறியாய்!
கன்னல்முக் கனிதேன் கண்டமிர் தென்னக்
 கலந்தெனை மேவிடக் கருணை
மன்னிய உறவே! உன்னைநான் பிறியா
 வண்ணம்என் மனமெனும் கருவி
தன்னது வழிஅற் றென்னுழைக் கிடப்பத்
 தன்னருள் வரமது வேண்டும்.[3]

— *தாயுமானஅடிகள்*

உடல் நலம் பேணுவதற்கு உடலியல் அறிவு இன்றியமையாது வேண்டப்படுவதுபோல உளவளத்தைப் பேணி வளர்ப்பதற்கு உளவியல் அறிவும் மிகவும் இன்றியமையாதது என்பது கல்வி முறைவல்லார் கண்டமுடிவு. பாடத்தை மையமாகக் கொண்டு பயிற்றும் முறை (Subject-centered) மாறிக் குழந்தையை மையமாகக் கொண்ட முறை (Child-centered) வழக்கில் வந்துவிட்டது. இந்தப் புதிய முறைக்கு முதன் முதலில் வித்திட்டவர் ரூஸோ (1712-1778) என்ற பேரறிஞர். அவர் எழுதிய **ஒமிலி** என்ற நூல்தான் புதிய முறைகளின் வித்து எனலாம். இவர் கருத்துப்படி, "இயற்கை அன்னையிடமிருந்து வரும் எவையும் சிறந்து விளங்குகின்றன: ஆனால் அவையனைத்தும் மனிதன் கைப்பட்டதும் சீரழிகின்றன" என்பது இவர் கொள்கை; இதைத்தான் இன்று எல்லா நிலைக்கல்வி பயிற்றுதலிலும் நாம் காணும் உண்மை; கல்வி புகட்டுதலில் குழந்தைதான் முக்கிய கூறு, மனிதன் வளர்த்த பண்பாடல்ல என்பது இவர் கருத்து. இதனால்தான் ரூஸோவைக் கல்வி முறையின் **காபர்னிகஸ்** என்று வழங்குகின்றனர். பூமியை நடுவாக வைத்துதான் ஏனைய கோள்கள் இயங்குகின்றன என்ற பழைய கொள்கையைக் காபர்னிகஸ் மறுத்து கதிரவனை நடுவாகக் கொண்டுதான் அவை இயங்குகின்றன என்ற உண்மையை உலகிற்கு உணர்த்தியதுபோலவே, அதுகாறும் கல்வி ஏற்பாட்டினை (Curriculum) நடுவாக வைத்துக் கற்பிக்கப் பெற்ற முறையைத் தவறு எனக் கண்டித்து குழந்தையை நடுவாக வைத்துக் கற்பிக்கப் பெறவேண்டும் என்று கூறியவர் ரூஸோ. "குழந்தையை நன்றாக ஆராய்க; குழந்தையை அறிவது எளிதல்ல. குழந்தையைக் கவனி; இயற்கையோடு இசைந்துநட" என்பவை ரூஸோ கல்வித்துறையில் பணியாற்றுபவர்கட்குக் காட்டிய மாபெறும் உண்மைகள். இவர் கொள்கை உளவியல் உண்மைகளை ஒட்டியும் உள்ளது.

இக்கொள்கைகளைப் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் அனைவரும் அறிவார்கள். அறிந்திருந்தும் கீழ்வகுப்புகளில் கற்பிக்கும்

---

3. தா. பா; ஆசையெனும் - 40.

ஆசிரியர்கள், குறிப்பாகக் குழந்தைப் பள்ளிகளில் கற்கும் குழந்தைகளை அவர்கள் கொடுமைப் படுத்தும் முறைகள் சொல்லி முடியா. அதுவும் ஆங்கிலத்தைக் கற்பிக்கும் வாயிலாகக் (Medium) கொண்டு கற்பிக்கும் பள்ளிகள் குழந்தைகளைக் கிளிப்பிள்ளைகட்குக் கற்பிப்பதுபோல் கற்பித்து வருவதைக் காணும் பெற்றோர்களின் கண்ணில் நீர் வடியாமல் இருக்க முடியாது. இல்லத்தில் கற்பிக்கும் தாய்மார்களும் குழந்தைகளை 'நாடாப்பதிவு'களாக்குகின்றனர்; ஒலித்தட்டுகளாக்குகின்றனர். இப்படிக் கிளிப்பிள்ளைகள் போல் ஒப்புவித்தற்கு ஆசிரியர்களும் அதிக மதிப்பெண்கள் வழங்குகின்றனர். இந்த மதிப்பெண் மாயத்திலும் வகுப்பில் பெறும் நிலை (Rank)மாயத்திலும் பெற்றோர்கள் மயங்கி மதி இழக்கும் நிலைக்குள்ளாகின்றார்கள். பிராணிகளைக் கொடுமைப் படுத்துவதைத் தவிர்ப்பதற்கு சீவகாருண்யசங்கம் (SPCA) என்ற ஓர் அமைப்பு தோன்றியுள்ளதைப்போல் குழந்தைகளைக் கொடுமைப் படுத்துவதைத் தவிர்க்க ஓர் அமைப்பு வேண்டும்போல் தோன்றுகின்றது.

**'கல்வி உளவியல் கோட்பாடுகள்'** என்ற இந்த நூல் கற்பிக்கும் ஆசிரியர்கட்கும், குழந்தைக் கல்வியில் அக்கறை கொள்ளும் பெற்றோர்கட்கும், பொதுமக்கட்கும் ஒரு வழிகாட்டியாக அமையட்டும் என்றே இதனை எழுதி வெளியிட்டேன். இந்த நூலில் கல்வி உளவியலின் இன்றியமையாமை, மனிதனும் சூழ்நிலையும், குழந்தையின் பல்வேறு வளர்ச்சிப் பருவங்களில் அதன் மனவளர்ச்சி, குழந்தைக் கல்வியில் ஊக்கு நிலைகள், கல்வியில் உள்ளக் கிளர்ச்சியின் பங்கு, குழந்தை கற்றலில் அடங்கிய மூலக் கூறுகள், அறிதிறன்பற்றிய கருத்துகள், இவற்றின் அடிப்படையில் தனியாள் வேற்றுமைகள், குழந்தைகளின் உடல்நலம் பற்றிய பல்வேறு செய்திகள், பால்-கல்வியைப் பற்றிய கருத்து, குழந்தையின் இயல்பு பிறழ்ந்த நடத்தைகள், அவற்றைச் சமாளிக்கும் முறைகள், குழந்தையின் ஒழுக்க வளர்ச்சி, குழந்தைக் கல்வியில் தேர்வு முறைகள்—ஆகிய பல்வேறு கருத்துகள் விளக்கம் அடைகின்றன. சிறுவர் கல்வியில் அக்கறை கொள்ளும் பெற்றோர்கள், ஆசிரியர்கள், பொதுமக்கள் இவர்கட்கு இன்றியமையாத செய்திகள் பலவும் இந்நூலில் அடங்கியுள்ளன.

தரமான நூல்களை வெளியிட்டு வெள்ளிவிழாக் காணும் மணிவாசகர் பதிப்பகத்திற்கும், என்னிடம் அன்பு காட்டும் குறிப்பாக **எஸ். மெய்யப்பன்** அவர்கட்கும், இதற்கு முதற்காரணமாக இருந்த மணிவாசகர் நூலக மேலாளர் **திரு. இரா. குருமூர்த்தி** அவர்கட்கும், இந்நூலை அழகுற அச்சிட்டு உதவிய கற்பகம் அச்சக மேலாளர், செய்வன திருந்த செய்யும் **திரு. க. நாராயணன்** அவர்கட்கும் என் மனம் உவந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்நூலுக்கு **அணிந்துரை** வழங்கிய **திரு. கே. ஆர். மாணிக்கம்**, சென்னை - சைதையிலுள்ள **ஆசிரியர்க் கல்லூரியில்** (**இப்போது** அரசு **கல்விக்கல்லூரி** எனப்பெயர் மாற்றம்

பெற்றது)எல், டி வகுப்பில் பயிலும்போது (1940-41) ஒரு சாலை மாணாக்கர்; நல்லொழுக்கம் மிக்க என்கெழுதகை நண்பர்; மாணாக்கர் உணவு விடுதியில் தங்கியிருந்தபோது நெருக்கமாகப் பழகியவர். கல்லூரி நாளில் 'துருதுரு' வென்று அங்கும் இங்கும் ஓடிப் பொதுப்பணியில் ஆர்வங்காட்டி வகுப்புத்தோழர்களின் அன்பையும் பேராசிரியர்களின் மதிப்பையும் பெற்றுப் புகழுடன் திகழ்ந்தவர். இரண்டு ஆண்டுகள் ஆசிரியப் பணி ஆற்றி, நான்கு ஆண்டுகள் போர்த்துறையில் பங்கேற்றுப் பணிபுரிந்தவர். அதன்பின்னர் மூன்று ஆண்டுகள் மாவட்டக் கல்வி அதிகாரி யாகவும், மூன்றரை ஆண்டுகள் அரசுத்தேர்வுகளின் செயல ராகவும், ஆறு ஆண்டுகள் கல்வி இயக்குநரின் தனி அலுவலராகவும், நான்கு ஆண்டுகள் கல்வித் துணைஇயக்கு நராகவும், ஐந்தரை ஆண்டுகள் மண்டலப் பள்ளி ஆய்வாள ராகவும், தாம் பயின்ற சைதை ஆசிரியர்க் கல்லூரியில் ஆறு ஆண்டுகள் முதல்வராகவும் பணியாற்றிப் பெரும்புகழுடன் ஓய்வு பெற்றவர். பணியாற்றிய காலத்தில். 'என் கடன் பணி செய்து கிடப்பதே[4]' என்ற குறிக்கோளுடன் பணியாற்றியதால் சகப்பேராசிரியர்கள், மாணாக்கர்கள், பொதுமக்கள் மேலிடத் தார் இவர்களின் அன்புக்கும் பாராட்டுதலுக்கும் இலக்காகிப் பெரும் புகழ் பெற்றவர். இங்ஙனம் பல்துறை அநுபவம் பெற்ற அன்பரின் அணிந்துரையை இந்நூல் பெற்றது இந்நூலின் பெருமையைப் பன்மடங்கு உயர்த்துகின்றது; நூலாசிரியராகிய அடியேனுக்கும் பெருமகிழ்ச்சியை நல்குகின்றது. இக்கூறிய பெருமைகள் எல்லாம் பெற்ற நண்பர் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியமைக்கு என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

பேராசிரியர் குருசாமிரெட்டியார் சைதை ஆசிரியர்க் கல்லூரியில் என் உளவியல் பேராசிரியர். ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தில் எம். ஏ. பட்டம் பெற்று இந்தியக் கல்விப் பணியாளராக (I.E.S) பணியாற்றியவர். சிறந்த முறையில் — ஆனால் சற்று விநோதமான முறையில் — கற்பிப்பவர்.

**கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை**
**நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்**
**உலகிய லறிவோ டுயர்குணம் இனையவும்[5]**

பெற்றுத் திகழ்ந்தவராதலால், இவர் வகுப்பில் நிகழ்த்தும் 'பேருரைகளை' உன்னிப்பாகக் கவனிப்பவர்கள் பெரும்பயன் அடைவர். அளக்கலாகா அளவும் பொருளும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் உடையவர். ஐயந் தீரப் பொருளை யுணர்த்தும் திறம் படைத்தவர். இவர்,

**உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து**
**விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து**
**கொள்வோன் கொள்வகை அறிந்துஅவன் உளங்கொளக்[6]**

---

4. அப்பர் தேவாரம் - 5. 19: 9
5. நன்னூல் 26.
6. ஷை-36.

கொடுத்தலால் இவருடைய பேருரைகள் மாணாக்கரிடம் அகத்தெழுச்சியை உண்டுபண்ணி உளவியலில் தனி நாட்டம் ஏற்படச் செய்யும்; ஆழ்ந்து கற்கவும் தூண்டும். இவற்றால் பெரும்பயன் பெற்றவன் அடியேன். இவருடைய 'பேருரைகள்' இன்னும் என் செவியில் ஒலிப்பன போன்ற பசுமையான உணர்வு உண்டாகின்றது. இத்தகைய பெரும் பேராசிரியருக்கு இந்நூலை அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன்.

என்னுடைய நெஞ்சில் நிலையாக இடம் பெற்றவன் 'வேங்கடம் மேவியவிளக்கு', எப்படி இடம் பெற்றான் தெரியமா?

> பனிக்கட லில்பள்ளி கோளைப்
> பழகவிட்டு ஓடிவந்து,என்
> மனக்கட லில்வாழ வல்ல
> மாய மணாளநம்பி.[7]

இன்னும் அவன்,

> அரவத்து அமளியி னோடும்
> அரவிந்தப் பாற்கட லோடும்
> அரவிந்தப் பாவையும் தானும்
> அகம்படி வந்து புகுந்து
> பரவைத் திரைபல மோதப்
> பள்ளி கொள்கின்ற பிரான்.[8]

1960-முதல் இவன் காட்டும் ஒளியில் வாழும் அடியேனுக்கு எண்ணற்ற தொல்லைகளையும் துன்பங்களையும் தந்தாலும், நல்ல உடல் நலத்தையும் மனவளத்தையும் அருளி வருபவன். அவனருளால்தான் இன்றுவரை நூலுலகில் ஆழங்கால் பட்டுப் பலதுறை நூல்களைத் தொடர்ந்து எழுதி வருகின்றேன்; என் கல்வித் தொண்டும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. இங்ஙனம் என்னைப் பல்வகைத் தொண்டுகளில் ஆளாக்கி வைத்து எனக்குப் பலவித நலன்களையும் அருளிவரும் அப்பெருமானை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்கி அவன் கழலிணைகளையே சரணமாகக் கொள்ளுகின்றேன்.

> அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
> இன்பநிலை தானே வந்து எய்தும் பராபரமே.[9]
>
> —தாயுமான அடிகள்.

'வேங்கடம்'
AD- 13, அண்ணாநகர்
சென்னை-600 040
20-12-1985

ந. சுப்புரெட்டியார்

7. பெரிவாழ். திரு. 5,4:9.
8. ஷை 5. 2: 10.
9. தா பா: பராபரக்கண்ணி-155.

# ஞானசம்பந்தர்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

ஞானசம்பந்தரின் வாழ்க்கையை 16 இயல்களாகப்
பகுத்துக்கொண்டு பேராசிரியர் நயம்பட விளக்கிக் காட்டுவர்.
சம்பந்தரின் வளர்ப்பு, திருத்தலப் பயணங்கள், சுழுமல
நிகழ்ச்சிகள், மதுரை மாநகர அற்புதங்கள், திருமணம்,
பேரொளியிற் கலந்து வீடு பேறு முதலியன நம்
கண் முன் நிறுத்தப்பெறுகின்றன.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939353-6-1

eBOOK ~ மின் நூல்



# நூல்முகம்

பரசமயக் கோளரியைப் பாலறா
　　வாயினைப்பூம் பழனம் சூழ்ந்த,
சிரபுரத்துத் திருஞான சம்பந்தப்
　　பெருமானைத் தேய மெல்லாம்,
குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளும்
　　கவுணியர்தம் குலதீ பத்தை,
விரவியெமை யாளுடைய வென்றிமழ
　　விளங்களிற்றை விரும்பி வாழ்வாம்.[3]

— சிவஞான முனிவர்

'திருவருட் செல்வர்கள்' — என்ற வரிசையில் முதலாவதாக வர வேண்டிய நூல் மூன்றாவதாக வெளிவருகின்றது. 'தம்பிரான் தோழர்' என்ற நூலை எழுதி முடித்த உற்சாகத்தில் ஞானசம்பந்தப் பெருமானின் அருளிச் செயல்களில் ஆழங்கால் பட்டு அநுபவித்தேன். இவர்தம் தமிழ்ப் பாடல்கள் கட்டளை வகைகளாக அமைந்துள்ளன; இவை இசை நுணுக்கம் கொண்டவை. இவற்றில் நட்டபாடை (8 கட்டளைகள்), தக்க நாகம் (7 கட்டளைகள்), தக்கேசி (2 கட்டளைகள்), குறிஞ்சி (5 கட்டளைகள்), வியாழக் குறிஞ்சி (6 கட்டளைகள்) மேகராகக் குறிஞ்சி (4 யாப்பு விகற்பங்கள்) என்பவை முதல் திருமுறையிலும்; இந்தளம் (8 யாப்பு விகற்பங்கள்), சீகாமரம் (2 கட்டளைகள்), காந்தாரம் (9 யாப்பு விகற்பங்கள்), பியந்தைக் காந்தாரம் (3 கட்டளைகள்), நட்டராகம் (4 யாப்பு விகற்பங்கள்), செவ்வழி (ஒரே கட்டளை) என்ற ஆறு பண்கள் இரண்டாம் திருமுறையிலும்; காந்தார பஞ்சமம் (5 யாப்பு விகற்பங்

3. காஞ்சிப் புராணம்—பாயிரம்.

கள்), கொல்லி (4 கட்டளைகள்), கொல்லிக் கௌவாணம் (4 கட்டளைகள்), பஞ்சமம் (3யாப்பு வகைகள்), சாதாரி (5 யாப்பு விகற்பங்கள்), பழம்பஞ்சுரம் (5 யாப்பு வகைகள்)[4] .புற நீர்மை (ஒரே கட்டளை), அந்தாளிக் குறிஞ்சி (ஒரே கட்டளை அமைப்பு) என்ற எட்டு பண்கள் மூன்றாம் திருமுறையிலும் அமைந்துள்ளன.[5] அதிகாலையில் (4 மணிக்கு) எழுந்து உலகம் முழுதும் உறங்கிய நிலையில் இருக்கும்போது இவர்தம் திருப்பாடல்களை வாய்விட்டுப் படித்தால் நம் ஒலியே நம் காதின்மூலம் சென்று நம் மனத்தை உருக்கும்; கண்ணீர் ஆறாகப் பெருகும். இதை அநுபவத்தில் கண்டு மகிழ்கின்றேன். உடனே இப் பெருமான்பற்றியும் நூல் எழுதத் துணிந்தேன். நூலும் ஞானசம்பந்தர் என்ற திருப்பெயருடன் மார்க்கண்டேயர் வயதைப் போல 16 இயல்களில் நிறைவு பெற்றது.

சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தில் காட்டியுள்ள வழியைக் கடைப்பிடித்துக் கொண்டு அவருடன் மேற்கொண்ட கற்பனைப் பயணத்தின் விளைவாக இந்நூல் உருவாகியது. இதற்குப் பேராசிரியர் க. வெள்ளைவாரணனாரின் பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு பகுதிகள்) என்ற நூல் கைகொடுத்து உதவியது.

---

4. பழம்பஞ்சுரம் என்ற பண் திருமுறைகண்ட புராணத்தில் ஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்களுக்கு உரியதாகக் கூறப்பெறாமையால் இப்பண்ணுக்குரிய 100 முதல் 116 வரையுள்ள பதிகங்களையும் முன்னுள்ள 67 முதல் 99 வரையமைந்த பதிகங்களுடன் சேர்த்துச் சாதாரிப் பண்ணுக்கு உரியனவாகக் கொண்டு 'சாதாரிக்கு ஒன்பது' எனத் திருமுறைகண்ட புராணம் கூறியபடி 9 கட்டளைகளாக அடக்குவர் யாழ் நூலாசிரியர் (யாழ் நூல்—பக். 245-246).

5. பன்னிரு திருமுறை வரலாறு—பகுதி 1. பக். (354-391)இல் விவரம் காண்க.

இப்பெருமானின் வாழ்க்கை வரலாறு என்னைத் திகைக்க வைக்கின்றது; நெஞ்சை உருக்குகின்றது. இந்தப் பனுவலின் அடிக்குறிப்புகளில் சேவித்த தலங்கள் பற்றிய விவரங்களை யும் நூலில் அவர் பாடியுள்ள பதிகங்களின் ஒவ்வொரு பாடலையும் (பதிக, பாடல் எண்களுடன்) தந்துள்ளேன். மேலும் அறிய வேண்டுவோர் தேவார அடங்கன் முறையைப் படித்து அறிந்து கொள்ளலாம். இந்த நூலைத் துணை கொண்டு சம்பந்தப் பெருமான் வழிபட்ட திருத்தலங்களைச் சேவிக்கவும், அவர் பாடியுள்ள திருப்பதிகங்களை அநுபவித்து மகிழவும் இதனை வாய்ப்பாகவும் அமைத்துக் கொள்ளலாம். படிப்போரின் மனநிலை, பக்தியில் வளர்ச்சி, இறைவனிடம் ஈடுபாடு இவற்றிற்கேற்பச் "சிவாநுபவம்" பெறத் துணை செய்யும். இஃதெல்லாம் கை கூடுவதற்கு அவன் அருளாலே அவன்தாள் வணங்கும் பேறும் பெற்றாக வேண்டும்.

சீமானுக்கு அழகு செழுங்கிளை தாங்குதலாகும். இவ் வுலகில் ஒரே செல்வச்சீமானாக இருப்பவன் ஏழுமலையான்; 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் மார்பைவிட்டு அகலாதிருக்கும் செல்வச் சீமாட்டியைத் தாங்கிக் கொண் டிருப்பவன். இந்நிலையில் நாடோறும் எண்ணற்ற பக்தர்கள் அவனுடைய கருவூலத்தை நிரப்பி வழியச் செய்து கொண்டுள்ளனர். ஆகவே, இந்த உறுபெறுஞ் செல்வத்தைச் செழுங்கிளையைச் சேர்ந்த பக்தர்கள் எழுதும் சமய வெளியீடுகளுக்கு வரையாது வழங்கும் நிதி உதவித் திட்டத்தில் இந்நூலும் நிதி உதவிபெற்று வெளிவருகின்றது. இந்த உதவி பெறாது போயின் 40 ஆண்டுகள் கல்வித் தொண்டாற்றி ஓய்வு ஊதியம் (Pension) கூட பெறாது தவிக்கும் அடியேனால் இந்த நூலை வெளியிட்டிருக்க முடியாது. இந்த வேங்கடத் தெம்மான் மேலும் வெளிவர இருக்கும் தாயுமான அடிகள், மாணிக்கவாசகர், வடலூர் வள்ளலார், பட்டினத்தடிகள், 'விட்டு சித்தன் விரித்த தமிழ்'

'சடகோபன் செந்தமிழ்' போன்ற பக்திப் பனுவல்கட்கும் உதவுவான் என்ற நம்பிக்கை என்பால் உண்டு. இவனது கருவியாக இயங்கிவரும் திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தாருக்கும், குறிப்பாகத் திரு. K. சுப்பாராவ், திரு. N. S. இராமமூர்த்தி ஆகிய இருவருக்கும் என் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய கற்பகஅச்சக மேலாளர் திரு. க. நாராயணன் அவர்கட்கும் எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து மூவண்ணத்தில் அச்சிடும் வரையிலும் பொறுப்பேற்று உதவிய ஓவியமன்னர் திரு. P. N. ஆனந்தன் அவர்கட்கும், லாமினேஷன் போட்டு உதவிய மாருதிலாமினேஷன் உரிமையாளர் திரு. பார்த்திபன் அவர்கட்கும் இவ்வளவும் ஆனநிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத் தவழச் செய்த திருநாவுக்கரசுக்கும் என் இதயம் கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் நல்கிய திருமதி செளந்தரா கைலாசம் அவர்கள் மங்கையர்திலகம்; சிவன்பால் ஈடுபாடு மிக்கவர்கள். பிறந்த இடமும் பெரியது; புகுந்த இடமும் பெரியது. அண்மையில் சிவப்பேறு எய்திய ஜஸ்டிஸ் கைலாசத்தின் அருமைத் துணைவியார். வள்ளல் இரத்தின சபாபதி கவுண்டரின் (புதுப்பாளையம், திருச் செங்கோடு வட்டம், சேலம் மாவட்டம்) பேத்தி; செட்டிப்பாளையம் (கரூர்வட்டம்) சுந்தரக் கவுண்டரின் திருமகளார். ஒரு குடும்பம் சிறப்புடன் பொலிய 'பானை பிடித்தவள் பாக்கியம்' என்று சொல்லுவர்கள். ஜஸ்டிஸின் குடும்பம் சிறந்து விளங்குவதற்கு அம்மையார் காரணம் என்று சொல்லுவது பொருந்தும். செம்புலப் பெயல் நீர் போல அன்புடை நெஞ்சங்கள் கலந்த குடும்பம்; இக் குடும்பத்தில் அம்மையார் 'விழவு முதலாட்டி' (குறுந். 10) யாகத் திகழ்கின்றார்கள். புலமையில் சங்கப் பெண்பாற்

புலவர்களை யொத்தவர்கள்; பக்தியில் திலகவதியார், காரைக்காலம்மையார் இவர்களை நிகர்த்தவர்கள்.

நான்கு மக்கட்செல்வத்தைப் பெற்ற (மூவர் மகளிர்; ஒருவர் ஆண்) இப்பெருமாட்டி முருகனின் அடிமை என்று தம்மைக் கூறிக் கொள்வதில் பெருமை கொள்பவர்கள். இவர் இல்லமும் 'முருகன் அடி'. முருகன் தமிழ்க் கடவுள் அல்லவா? இவன் அருளால் அம்மையார் நாவில் நாவின் கிழத்தி தாண்டவமாடுகின்றாள்; கவிதை மழை பொழி கின்றாள். இவர்தம் எழுதுகோலும் கவிதை, கட்டுரை, கதை போன்ற படைப்பிலக்கியங்களை பிறப்பிக்கின்றன. இவருக்கு எழுதுகோலும் தெய்வம்; எழுத்தும் தெய்வம். பக்தி இலக்கியத்தில் ஈடுபாடு மிக்க இப்பெருமாட்டி இந்தியாவிலுள்ள பெரும்பாலான மூர்த்தி, தலம், தீர்த்தம் இவற்றை முறையாக வழிபட்ட பெரும்பேறு பெற்ற வர்கள். கலைமகளும் திருமகளும் இவர் இல்லத்தில் இணைபிரியாது வாழ்கின்றனர். இத்தகை பேறுபெற்ற இந்தச் சீமாட்டி பல்வேறு இலக்கியக் கூட்டங்கள், கவியரங்கங்கள், கருத்தரங்குகள் இவற்றில் பெரும்பங்கு கொண்டு வருகின்றார். அலைகடலுக்கு அப்பால் இலங்கை, சிங்கப்பூர், மலேசியா போன்ற இடங்கட்குச் சென்று சொற்பொழிவு ஆற்றிய பெருமை இவருக்கு உண்டு. 2-வது 5-வது உலகத் தமிழ் மாநாட்டில் பங்கு கொண்டவர்.

சிவத் தொண்டு, கலைத் தொண்டுடன் பொதுத் தொண்டிலும் இப்பெருமாட்டிக்குப் பெரும்பங்கு உண்டு. சென்னை வானொலி ஆலோசனைக்குழு, இந்து அற நிலையக்குழு, தமிழ்நாடு சுற்றுலா நிறுவனக்குழு, சென்னை அண்ணாமலைப் பல்கலைக்கழக பேரவைகள் (Senate), போன்றவற்றில் உறுப்பினராக இருந்து பணியாற்றியவர். குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் 10-வது ஆண்டுவிழாக் குழுவின் தலைமைப் பொறுப்பும், இந்தச் சங்கத்தின் வெள்ளிவிழாக் குழுவின் தலைமைப் பொறுப்பும் இவருக்கு

இருந்தன. இங்ஙனம் தமிழ் ஆர்வம், பக்திச் செல்வம், தலவழிபாடு முதலியவற்றை நிறையப் பெற்றுள்ள ஔவைப் பாட்டி போன்ற இந்த மூதாட்டி இந்நூலுக்கு அன்புடன் ‹சிறப்புப் பாயிர மாலை' வழங்கி வாழ்த்தியமைக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது. இந்தப் பாமாலை பெற்ற இந்தப் பக்திப் பனுவல் பெறற்கரிய பேறு பெற்றது என்பது என் கருத்து.

இந்த நூலுக்கு அணிந்துரை நல்கிய டாக்டர் இரா. சாரங்கபாணி நான் காரைக்குடியில் இருந்த நாள் தொட்டே (1950 ஜூலை முதல்) நெருங்கிய பழக்கம் உடையவர். அப்போது அழகப்பா கல்லூரியில் தமிழ்த் துறையில் பணியாற்றிக் கொண்டிருந்தார். கடுமையான உழைப்பாளி. தமிழ் இலக்கியத்தை ஆராய்ச்சிக் கண் கொண்டு பயின்றவர்; ஆராய்ச்சியில் ஆழங்கால் பட்டவர். இவருடைய திருக்குறள்—உரைவேற்றுமை' இவருடைய ஆய்வுத் திறனுக்கு எடுத்துக்காட்டு. காரைக்குடியிலேயே டாக்டர் வ. சுப. மாணிக்கத்தின் கீழ் நீதி நூல் இலக்கியத்தில் ஆய்வு நடத்தி டாக்டர் பட்டம் பெற்றவர். டாக்டர் மாணிக்கம் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் சென்ற பிறகு இவரே தமிழ்த்துறைத் தலைவராகி துறையை நெறியுடன் நடத்தி நற்பேர் ஈட்டியவர். பலரை டாக்டர் பட்டத்திற்கு நெறிப்படுத்தி நடத்தியவர். இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடும் நல்லாசானுக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகத் திகழ்பவர். பல நல்ல மாணாக்கர்களை உருவாக்கியவர். பன்னூல்களின் ஆசிரியர். ஓய்வு பெறுவதற்கு ஓராண்டிற்கு முன்னர் இவரைத் தஞ்சைத் தமிழ்க்கழகம் அழைப்பு விடுத்து சில ஆண்டுகள் ஆய்வுத்துறைப் பேராசிரியராக நியமித்துப் பெருமைப் படுத்தியது. இத்தகைய நண்பர் இந்நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்தமைக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

பெருவளநல்லூர் (திருச்சி மாவட்டம் இலால்குடி வட்டம்) திரு. P. B. K. இராஜா சிதம்பரம் அவர்களை அறியாதவர்கள் அரியர். நான் துறையூரில் பணியாற்றத் தொடங்கிய நான்முதல் (ஜூன்-1941) இவரை நன்கு அறிவேன். என்னைவிட எட்டு ஆண்டு மூத்தவர். இவர்தம் பொதுத் தொண்டும் மனிதாபிமானமும் என்னைக் கவர்ந்தன. என் அளவில் அவற்றை நான் கடைப்பிடித்து வருகின்றேன். நான் அறியாக் காலத்தே தந்தையை இழந்தவன். அவர் பிறந்த ஐந்து நாட்களில் அன்னையை இழந்தவர். எனக்குத் தந்தையின் கடிந்துரை இல்லை; அவருக்கு அன்னையின் அன்பும் இல்லை; எம்முள் இது ஒருவித ஒற்றுமை, வேற்றுமை.

1908-ஆகஸ்டு 3ஆம் நாள் நாரணமங்கலத்தில் (பெரம்பலூர் வட்டம்) பிறந்த இப்பெருமகனார்க்கு மணக்காலில் தந்தை P. B. கிருஷ்ணசாமி ரெட்டியாரைப் பெற்ற பாட்டன் அரவணைப்பில் வளர்ந்து இலால்குடி உயர்நிலைப் பள்ளியில் கல்வி கற்று, திருச்சி பிஷப்ஹீபர், தேசியக் கல்லூரியில் உயர் கல்வி பெற்றார். பேராசிரியர் கார்டினர், பேராசிரியர் சாரநாதன் இவர்கள் அரவணைப்பில் வளர்ந்தது இவர்தம் நற்பேறு. திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரிடம் தமிழ் பயின்ற தால் இன்றளவும் அவரிடம் தமிழ்ப்பற்று காணமுடிகின்றது. பொதுவாக எல்லா ஆசிரியர்களிடமும் சிறப்பாகத் தமிழாசிரியர்களிடமும் குழைந்து பழகி வேண்டுவன நல்கி அவர்தம் உள்ளத்தைக் கவர்ந்தவர்.

திரு. P. B. K. இராஜாசிதம்பரம் சிறந்த தேசியவாதி; நாட்டுப் பற்றாளர். காந்திவழி ஒழுகும் நற்பண்பினர். இன்றளவும் கதருடையே அவர் திருமேனிக்குப் பொலிவு தருவதைக் காணலாம். செல்வச் செழிப்புள்ள குடும்பத்தில் பிறந்தவராயினும் எளிமையாக வாழ்பவர். சாதி சமய அரசியல் பற்றுகளைக் கடந்து மனிதநெறியில் வாழ்பவர்.

காங்கிரஸ் கட்சியினராக இருந்தாலும் குறுகிய கண்ணோட்டம் இன்றி எல்லாக் கட்சியினரிடமும் நன்கு பழகி அவர்கள் நட்பைப் பெற்றுத் திகழ்பவர்.

1949—1954இல் திருச்சி மாவட்டக் கழகத் தலைவராக வும், 1952—1957இல் சென்னை மாநில சட்டப்பேரவை உறுப்பினராகவும் இருந்து பணியாற்றிய காலத்தில் இவர் ஆற்றிய நற்பணிகள் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பட வேண்டியவை. உயர்குலத்தில் (சாதியல்ல) பிறந்தவரா தலால் 'குலத்தளவேயாகும் குணம்' என்ற முதுமொழிக்கு ஏற்பப் பரந்த நோக்கமும் மனிதாபிமானமும் கொண்ட வராகத் திகழ்கின்றார். அருமை இராஜாஜியிடம் நெருங்கிப் பழகி அவர்தம் ஆசியைப் பெற்றவர். திரு.சி. சுப்பிரமணியம் இவருடைய நெருங்கிய நண்பர். மூதறிஞர் தி. மு. நாராயணசாமிப் பிள்ளை இவர் குடும்ப நண்பர்; வழி காட்டி. சில குறுக்கு வழிகளைக் கையாள விரும்பாமை யால் அமைச்சர் பதவி இவருக்கு வரவில்லை. எனினும் அமைச்சருக்குமேல் மதிப்புடன் திகழ்ந்தார். பொதுத் துறைகளில் பணியாற்றியபொழுது 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே!' என்ற ஆன்றோர் வாக்கிற்கு எடுத்துக்காட்டாக இருப்பவர். எவர்மாட்டும் புன்முறுவலுடன் இனிமையாகப் பேசுபவர். காண்டற்கெளியவர்; கடுஞ்சொல் அறியாதவர். நாட்டு நலனிலும் இளைஞர் கல்வியிலும் பேரூக்கம் காட்டுபவர். எந்தப் பணியை ஏற்றபோதிலும் அதைத் தெய்வப் பணியாக மனம் வாக்கு செயல் தூய்மையுடன் ஆற்றுபவர். இத்தகைய பெரியவர்பால் நான் கொண் டிருக்கும் அன்பிற்கும் மரியாதைக்கும் அறிகுறியாக 'ஞானசம்பந்தர்' என்னும் இந்நூலை இவருடைய 78-ஆவது ஆண்டின் நினைவாக இவருக்கு அன்புப் படையலாக்கிப் பெருமை கொள்கின்றேன். இப்பெருமகனார் ஆசியால் இந்நூல் பல இளம் உள்ளங்களில் பல நல்லெழுச்சிகளை

விளைவித்து ஞானக்கன்றின் அருளையும் கிட்டச் செய்யும் என்பது என் திடமான நம்பிக்கை.

இந்த நூலை யான் எழுதி வெளியிட என் இதய கமலத்தில் அந்தர்யாமியாக எழுந்தருளியிருக்கும் 'வேங்கடம் மாமலை மேய ஆயனை' மனம், மொழி, மெய்களால் வணங்கி வாழ்த்தி அடிமையாகின்றேன். மற்றும் காழி வேந்தரின் இணையடிகளையும் முடிமீது எழுந்தருளச் செய்கின்றேன்.

கடியவிழ் கடுக்கை வேணித்
 தாதைபோற் கனற்கண் மீனக்
கொடியனை வேவ நோக்கிக்
 குறையிரந் தனையாள் கற்பிற்
பிடியன நடையாள் வேண்டப்
 பின்னுயிர் அளித்துக் காத்த
முடியணி மாடக் காழி
 முனிவனை வணக்கம் செய்வாம்

—பரஞ்சோதி முனிவர்[6]

'வேங்கடம்'
AD-13 (பிளாட் - 3354
அண்ணாநகர்
சென்னை-600 040
நவம்பர் 24, 1986

ந. சுப்புரெட்டியார்
தொ. பே: 615583

6. திருவிளையாடற் புராணம் - பாயிரம் - 18.

# நாவுக்கரசர்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

திருநாவுக்கரசர் வரலாற்றையும், அவர்தம் தேவாரத் திறத்தையும் தம் தெளிந்த நடைத் தேனில் குழைத்து விருந்தாகவும், மருந்தாகவும் வழங்கியுள்ளார் பேராசிரியர் இந்நூலில். இந்நூல் பல்துறை நாட்டமுடைய வாசகர்களுக்கும், அவரவர் சுவைக்கும் நிலைக்கும் ஏற்றவாறு இன்புறுத்தி இதந்தரும் ஒன்றாக இயற்றப்பெற்றுள்ளது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939502-4-1

eBOOK ~ மின் நூல்



## நூல் முகம்

இடையறாப் பேரன்பு மழைவா றும்
இருவிழியும் உழவா ரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்.[1]

— சிவஞானமுனிவர்.

'திருவருட் செல்வர்கள்' - என்ற வரிசையில் இரண்டாவதாக வர வேண்டிய நூல் இரண்டாவதாகவே வெளி வருகின்றது. 'தம்பிரான் தோழர்' என்ற நூலை எழுதி முடித்த உற்சாகத்தில் அப்பர் பெருமானின் அருளிச் செயல்களில் ஆழங்கால்பட்டு அநுபவித்தேன். இவர்தம் தமிழ்பாடல்கள் திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந் தொகை, திருத்தாண்டகம் என்ற நான்கு வகை யாப்பு களில் அமைந்துள்ளன. அதிகாலையில் (4 மணிக்கு) எழுந்து உலகம் முழுவதும் உறங்கிய நிலையில் இருக்கும் போது இவர்தம் திருப்பாடல்களை வாய்விட்டு படித்தால் நம் ஒலியே நம் காதின் மூலம் சென்று நம் மனத்தை உருக்கும்; கண்ணீர் ஆறாகப் பெருகும். இதை அநுபவத்தில் கண்டு மகிழ்கிறேன். உடனே இப்பெருமான் பற்றியும் நூல் எழுதத் துணிந்தேன்.

---

1, காஞ்சிப் புராணம் - காப்புப் பகுதி.

சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் காட்டியுள்ள வழியைக் கடைப்பிடித்துக் கொண்டு அவருடன் மேற்கொண்ட கற்பனைப் பயணத்தின் விளைவாக இந்நூலும் உருவாகியது. இதற்குப் பேராசிரியர் க. வெள்ளைவாரணனின் பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு பகுதிகள்) என்ற நூலும், பூம்புகார்ப் பேரவைக் கல்லூரி வெளியீடாகிய 'அப்பர் பெருமான் வாழ்வும் வாக்கும்' கை கொடுத்து உதவிப் பெருந்துணை புரிந்தன. இப் பெருமானின் வாழ்க்கை வரலாறு என் நெஞ்சை உருக்குகின்றது. இந்த நூலின் அடிக்குறிப்புகளில் சேவித்த தலங்கள் பற்றிய விவரங்களையும் நூலில் அவர் பாடியுள்ள பதிகங்களின் ஒவ்வொரு பாடலையும் தந்துள்ளேன். மேலும் அறிய வேண்டுவோர் 'தேவார அடங்கன் முறையை,ப் படித்து அறிந்து கொள்ளலாம். இந்த நூலைக் கொண்டு அப்பர் பெருமான் வழிபட்ட திருத்தலங்களைச் சேவிக்கவும் அவர் பாடியுள்ள திருப்பதிகங்களை அநுபவித்து மகிழவும் இது வாய்ப்பாகவும் அமையும். படிப்போரின் மன நிலை, பக்தியில் வளர்ச்சி, இறைவனிடம் ஈடுபாடு இவற்றிற்கேற்பச் 'சிவாநுபவம்' பெறத் துணை செய்யும். இஃதெல்லாம் கைகூடுவதற்கு 'அவனருளாலே அவன் தாள் வணங்கும்' பேறும் பெற்றாக வேண்டும்.

சீமானுக்கு அழகு செழுங்கிளை தாங்குதலாகும். இவ்வுலகில் ஒரே செல்வச் சீமானாக இருப்பவன் ஏழுமலையான்; 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் மார்பை விட்டு அகலாதிருக்கும் செல்வச் சீமாட்டியைத் தாங்கிக் கொண்டிருப்பவன். இந்நிலையில் நாடோறும் எண்ணற்ற பக்தர்கள் அவனுடைய கருவூலத்தை நிரப்பி வழியச் செய்து கொண்டிருக்கின்றனர். ஆகவே, இந்த உறுபெருஞ் செல்வத்தைச் செழுங்கிளையைச் சேர்ந்த பக்தர்கள் எழுதும் சமய வெளியீடுகளுக்கு வரையாது வழங்கும் நிதி உதவித் திட்டத்தில் இந்நூலும் நிதி உதவி பெற்று வெளி வருகின்றது. இந்த உதவி பெறாது போயின் 40 ஆண்டுகள் கல்வித் தொண்டாற்றி ஓய்வு ஊதியம் (Pension) பெறாது தவிக்கும் அடியேனால் இந்த நூலை வெளியிட்டிருக்க முடியாது. இந்த வேங்கடத்தெம்மான் மேலும் வெளிவர இருக்கும் ஞானசம்பந்தர், தாயுமான அடிகள்,மாணிக்கவாசகர் வடலூர் வள்ளல், பட்டினத்தடிகள் போன்ற பக்திப் பனுவல்கட்கும் உதவுவான் என்ற நம்பிக்கை என்பால் உண்டு. இவனது கருவியாக இயங்கி வரும் தேவஸ்தானத்தாருக்கும்

குறிப்பாகத் திரு. K. சுப்பாராவ், திரு. N. S. இராமமூர்த்தி ஆகிய இருவருக்கும் என் அன்பு கலந்த நன்றியைப் புலப் படுத்திக் கொள்கின்றேன்.

இந்த நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய சாலை அச்சக உரிமையாளர் டாக்டர் சாலை இளந்திரையனுக்கும், எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து மூவண்ணத்தில் அச்சிடும் வரையில் பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் திரு P. N. ஆனந்தன் அவர்கட்கும் லாமினேஷன் போட்டு உதவிய மாருதி லாமினேஷன் உரிமையாளர் திரு பார்த்திபன் அவர்கட்கும் இவ்வளவும் ஆன நிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத் தவழச் செய்த நாவுக்கரசரின் பெயர் தாங்கிய திருநாவுக்கரசுக்கும் என் இதயம் கலந்த நன்றி யைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்த நூலுக்குச் சிறப்புப் பாயிரம் நல்கிய பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் (அண்ணாமலைப் பல்கலைக் கழக முன்னாள் தமிழ் ஆராய்ச்சிப் பேராசிரியர்) என் நெடு நாளைய நண்பர். கருந்திட்டைக் குடித் தமிழ்க் கல்லூரியில் பணியாற்றிய நாள்தொட்டு நன்கு அறிவேன். அடிமை நாட்டில் இராஜாஜி சென்னை மாகாணப் பிரதமராக இருந்த காலத்தில் இந்தியைப் புகுத்த முயற்சி செய்தபோது இவர் அவருக்கு மறுத்து எழுதிய 'காக்கை விடு தூது' இன்னும் என் நினைவில் பசுமையாகவே உள்ளது. அதன் பிறகு துறையூரில் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரிய னாகப் பணியாற்றியபோதும், காரைக்குடியில் அழகப்பர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியனாக இருந்த போதும் நல்ல பழக்கம் இருந்தது. திருப்பதி சென்ற பிறகு நெருங்கிய பழக்கம் தொடர்ந்தது. பல கருத்தரங்குகளில் பங்கு கொண்டார். தொடக்கத்திலிருந்தே தமிழில் என் வளர்ச்சியைக் கண்டவர். தமிழில் ஆழ்ந்த புலமையுடைய வர்; தனித் தன்மை வாய்ந்த ஆய்வாளர். பழகுவதற்கு இனியர்; அடக்கம் இவரது தனிச்சிறப்பு. இத்தகைய பெருமகனார் 'நாவுக்கரசர்' என்ற இந்நூலுக்குச் சிறப்புப் பாயிர மலர் நல்கி வாழ்த்தியமைக்கு என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலுக்கு அணிந்துரை நல்கிய டாக்டர் அ. மா. பரிமணம் நான் காரைக்குடியில் இருந்த நாள் தொட்டே நெருங்கிய பழக்கம் உடையவர். அப்போது அழகப்பா கல்லூரியில் தமிழ்த் துணைப் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். கடுமையான உழைப்பாளி. தமிழ் இலக்கியத்தை ஆராய்ச்சிக்கண் கொண்டு பயின்றவர்; ஆராய்ச்சியில் ஆழங்கால்பட்டவர். காரைக்குடியிலிருந்து பழனி பழனியாண்டவர் பண்பாட்டுக் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்த போது தான் அப்பர் பெருமானின் அருளிச் செயல்களை ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். பின்னர்த் தஞ்சை புஷ்பம் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றி தமிழ் எம். ஏ கற்பித்து பல நல்ல மாணவர்களை உருவாக்கியவர். டாக்டர் பட்டத்திற்குப் பலரை வழிகாட்டி நடத்தியவர். நான் திருப்பதி சென்ற பிறகு இருவருக்கும் ஆய்வில் நெருங்கிய உறவு இருந்தது. தஞ்சையிலிருந்த போதிலும் இவரைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் தாமதமாக பயன் படுத்திக் கொண்டது வியப்பிற்குரியது. இத்தகைய நண்பர் இந்நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்தமைக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

வைரிசெட்டிப் பாளையம் (துறையூர் வட்டம், திருச்சி மாவட்டம்) திரு எஸ். ஆர். நாகரெட்டியார் என் நெடு நாளைய நண்பர். என்னை விட இரண்டு திங்கள் மூத்தவர். பிறந்த இடம் பெரிய குடும்பம்: அகவை இரண்டில் தத்துப் பிள்ளையாகப் புகுந்த இடமும் பெரிய குடும்பமே. இரண்டு குடும்பங்களும் ஒட்டிய உறவுடன் ஒன்றாகவே இருந்து வந்தன. இரண்டு குடும்பங்கட்கும் ஒரே பிள்ளையாக இருந்தமையால் சீரும் சிறப்புமாக வளர்க்கப்பெற்றார். இப்படிச் செல்வமாக வளர்க்கப்பெறுபவர்களில் பெரும் பாலோரின் வாழ்க்கை சரியாக அமைவதில்லை. ஊரிலேயே எம். சபாபதி அய்யர், நம்பெருமாள் ரெட்டியார், சுப்பிரமணிய அய்யர் இவர்கள் ஆசிரியர்களாக அமைந்து நன்முறையில் உருவாக்கப் பெற்றார். தமிழ், தெலுங்கு, ஆங்கில மொழிகளைக் கற்றுத் தேர்ந்தார். வெளியூர் சென்று உயர் கல்வி பெறாமற்போனது இறைவனது திருக் குறிப்பே. ஊரில் பெற்ற தமிழ்க் கல்வியே தரமானது; பண்பாட்டை வளர்ப்பது; அதனின்றும் வழுவாமல் காப்பது. சிறுவயது முதற்கொண்டே சாதுக்களின்

கூட்டுறவும் பெரியோர்களின் தொடர்பும் இவரைச் சிறந்த மனிதராக்கின. ஒருவிதத்தில், இது ஊரின் தவப்பயனே எனலாம்.[2]

சிறுவயது முதற்கொண்டே நற்பழக்கமும் நற்சிந்தனையும் கொண்டவராதலால் இறைவன் இவரைப் பொதுத் தொண்டுகளில் ஈடுபடுத்தினான். இதனால் அப்பர் பெருமான் அருகில் வர அருகதையுடையவராகின்றார். தந்தையார் சுந்தர ரெட்டியாரால் தொடங்கப் பெற்ற விவேகநந்தர் வாசகசாலையைத் திறம்பட நடத்திச் சிற்றூர் மக்களிடம் கல்வியையும் பொது அறிவையும் பெருக்கினார். இதுவே பிற்காலத்தில் இவரது அயராத முயற்சியால் உயர்நிலைப் பள்ளியாக வளர்ந்து மேல்நிலைப் பள்ளியாகவும் உயர்ந்தது (நான் துறையூரில் இருந்தபொழுதும் காரைக்குடி சென்றபிறகும் இப்பள்ளியின் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் அடியேனுக்கும் சிறிது பங்கு உண்டு). திருப்பராய்த் துறை இராம கிருஷ்ணத் தபோவன முனிவர் சித்பவாநந்த அடிகளின் கூட்டுறவும் ஆசியுமே இப்பள்ளி தோன்றவும் வளரவும் முதற் காரணமாக அமைந்தன. தபோவனத்தின் நிர்வாக உறுப்பினராகவும் சில ஆண்டுகள் பணியாற்றியதால் அடிகளின் ஆசியும் அருளும் இவர்மீது பாய்ந்தன.

கூட்டுறவு நிறுவன வளர்ச்சியில் இவருக்குச் சிறந்த பங்கு உண்டு. சில ஆண்டு முசிறிக் கூட்டுறவு ஒன்றியத்தின் தலைவர், துறையூர் கூட்டுறவு ஒன்றியத்தின் தலைவர், திருச்சி கூட்டுறவு மத்திய வங்கியின் இயக்குநர், இதன் நிர்வாக இயக்குநர் பதவிகளில் தூய்மையான உள்ளத்துடன் பணியாற்றிப் பொதுமக்களின் அன்பையும், பாசத்தையும், மதிப்பையும் பெற்றவர்.

> மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப இவருக்கு இல்லத்தரசியாக அமைந்த செந்தாரப்பட்டி கமலம்மாவினால், மனைமாட்சி சிறப்பாகத் திகழ்கின்றது. இறைவன் திருவுளக்

---

2. இவரைப்பற்றிய விவரம் நினைவுக் குமிழிகள் - (2) என்ற என் நூலில் அதிகமாகக் காணலாம்.

குறிப்பின்படி ஆண்மக்களில் மூத்தவர் பள்ளித் தாளாளரா கவும், இளையவர் பள்ளித் தலைமையாசிரராகவும், பெண் மக்களில் ஒருவர் திருச்சி மகளிர்க் கல்லூரியொன்றில் பொருளியல் பேராசிரியையாகவும் பணியாற்றி வரும் நன் மக்கட் பேற்றையும் பெற்றுத் திகழ்கின்றார். இராமகிருஷ்ணர், விவேகாந்தர், இராமலிங்க அடிகள் இவர்களது கொள்கை களைப் பரப்பியும், உள்ளூர் அருள்மிகு கற்பக விநாயகர் திருக்கோவில், அருள்மிகு வரதராசப் பெருமாள் திருக் கோயில் இவற்றின் வழிவழி அறங்காவலராக இருந்து இறைப் பணியில் ஈடுபட்டும் வரும் இப்பெரியாருக்கு இந் நூலை அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். அப்பர் பெருமான் ஆசியால் இவர்தம் தொண்டுகள் மேன்மேலும் சிறந்து வளரும் என்பதற்கு ஐயம் இல்லை.

இந்நூலை யான் எழுதி வெளியிட என்னுள்ளே தோன்றாத் துணையாக, அந்தர்யாமியாக, எழுந்தருளி யிருக்கும் 'வேங்கடம் மேவிய விளக்கை' மனம் மொழி மெய் களால் வணங்கி வாழ்த்திச் சரண் அடைகின்றேன். மற்றும் அப்பர் பெருமானின் இணையடிகளையும் முடிமீது வைத்துக் கொள்ளுகினறேன்.

அறப்பெருஞ் செல்வி பாகத்
    தண்ணலஞ் செழுத்தால் அஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறா
    வஞ்சகர் ஈட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்க்கும்
    நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனும் கடலும் நீத்த
    பிரானடி வணக்கம் செய்வாம்![3]

— பரஞ்சோதி முனிவர்

'வேங்கடம்'
AD-13 (பிளாட் 3354)
அண்ணாநகர்
சென்னை-600 040
தொ.பே. 61 55 83
30-6-1986

ந. சுப்புரெட்டியார்

---

3. திருவிளையாடல் புராணம்—பாயிரம்.19.

# ஆழ்வார்களின் ஆராஅமுது

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

ஆழ்வார் பெருமக்கள் மங்களாசாசனம் செய்தருளிய
திவ்விய தேசங்களை நேரில் சேவித்து, அங்கு
நடந்தும், நின்றும், இருந்தும், கிடந்தும்
சேவை சாதிக்கும் எம்பெருமான்களின்
திருவருளைத் துய்த்துணர்ந்து
பாங்கினை பகரும் அரிய நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939270-8-3




eBOOK ~ மின் நூல்

# நூல்முகம்

மென்னடை அன்னம் பரந்து விளையாடும்
　　வில்லிபுத் தூர்உறை வான்தன்
பொன்னடி காண்ப தோர்ஆசை யினால்என்
　　பொருகயற் கண்இணை துஞ்சா
இன்னடி சிலொடு பால்அமுது ஊட்டி
　　எடுத்தஎன் கோலக் கிளியை
உன்னொடு தோழமைக் கொள்ளுவன், குயிலே!
　　உலகுஅளந் தான்வரக் கூவாய்[4]

—ஆண்டாள்

பன்னிரண்டு ஆழ்வார்களைப் பற்றியும் அவர்களின் அருளிச் செயல்கள் பற்றியும் எளிய நடையில் நூல்கள் எழுதிப் பொதுமக்கட்குப் பக்தி விருந்தளிக்கவேண்டும் என்ற என் பேரவா நிறைவேறும் பாங்கில் 'ஆழ்வார்களின் ஆரா அமுது' என்ற தலைப்பில் எட்டு ஆழ்வார்கள் பற்றியும், அவர்களுடைய அருளிச் செயல்களை விளக்கும் பாங்கிலும் இஃது இரண்டாவது நூலாக வெளிவருகின்றது. நான் திருப்பதியில் பணியாற்றியபொழுது திருவேங்கடவன் பல்கலைக்கழக விரிவுச் சொற்பொழிவுத் திட்டத்தின் கீழ் பாக்காலாத் தமிழ்ச் சங்கம், ஏகாம்பரக் குப்பம் கழக உயர் நிலைப்பள்ளி, நகரி கழக உயர் நிலைப்பள்ளி, குண்டக்கல் தமிழ்ச் சங்கம், கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம் ஆகிய இடங்களில் நிகழ்த்திய ஆறு சொற்பொழிவுகளே இந்த நூலாக வடிவம் பெறுகின்றன. நூலின் பொருள் தெவிட்டாத ஆரா அமுதாக இருப்பதால் நூலுக்கு அதை வழங்கிய ஆழ்வார்களின் திருநாமத்தோடொட்டிய பெயர் சூட்டப் பெற்றுள்ளது.

---

4. நாச். திரு, 5:5

ஒவ்வொரு சொற்பொழிவிலும் தெரிந்த அளவு ஆழ்வார்களின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக உரைத்து அவர்தம் அருளிச் செயல்களைப் பல கோணங் களில் எடுத்துக்காட்டியுள்ளேன். வைணவப் பெருமக்க ளுக்கு இந்நூல் நல்லதொரு விருந்தாக இருக்கும் என்று கருதுகின்றேன். பொதுமக்களும் இந்த ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் ஆழங்கால்பட்டு அநுபவிப்பதற்கு இப்பனுவல் ஒரு தூண்டுகோலாக — ஏன்? ஊன்றுகோலா கவும் — அமையும் என்று நம்புகின்றேன். இந்த இரண்டு நோக்கங்களும் நிறைவேறினால் என்னுடைய இந்த முயற்சி பயனுள்ளதாயிற்று என்று மகிழ்வேன். தம்மையும் தமது அருளிச் செயல்களையும் அறிமுகப்படுத்திய என்னை ஆழ்வார்களும் வாழ்த்தி ஆசி கூறுவார்கள் என்றும் உறுதி கொள்ளுகின்றேன்.

திருப்பதித் தமிழ்ப் பணியிலிருந்து ஓய்வு பெற்று 1978 சனவரி 14 ஆம் நாள் சென்னையில் குடியேறியதிலிருந்து 'தேனாய், கன்னலாய், அமுதாய்'த் தித்திக்கும் ஆழ்வார் களின் பாசுரங்களை 'வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது' (நான். திருவந். 63) என்றவாறு என் காலம் கழிகின்றது. சொற் பொழிவுகள் நடைபெற்ற போதும், என் ஆராய்ச்சியின் போதும் நான் ஆழங்கால்பட்ட பாசுரங்களை மீட்டும் மனத்தில் இருத்தி அசை போடுவதற்குப் பெற்ற வாய்ப்பின் காரணமாக இந்நூல் பிறக்கின்றது. சொற்பொழிவுக்காக நான் தயாரித்து வைத்திருந்த குறிப்புகளை விரித்து எழுதும்போதும் பாசுரங்களில் ஆழங்கால்பட்டு அநுபவித் தேன். என் அநுபவம் இப்பனுவலைப் படிப்போரிடமும் எழுவதற்குக் காரணமாக இருக்குமானால் அதனை யான் பெற்ற பெரும் பேறாகவே கருதுவேன்.

தமிழகத்தில் ஏறக்குறைய 20 ஆண்டுகளும் ஆந்தி ரத்தில் ஏறக்குறைய 20 ஆண்டுகளும் பணியாற்றி ஓய்வு ஊதியம் கூடப் பெறாது தவிக்கும் அடியேனுக்கு ஏழுமலையான் ஓரளவு நிதி வழங்கி (நூலின் முட்டு வழியில் 50 விழுக்காடு) உதவி புரிந்திராவிடில் இந்நூல் அச்சு வாகனம் ஏறிக் கற்போர் கரங்களில் கவினுறத் தவழ்வ தற்கு வாய்ப்பே இருந்திராது. 'செல்வர்க்கு அழகு செழுங் கிளை தாங்குதல்' என்ற பேருண்மையை அறிந்து செல்வச் சீமானாகத் திகழும் ஏழுமலையான் 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் திருமார்பைவிட்டு அகலாதிருக்கும்

செல்வச் சீமாட்டியைத் தாங்கிக் கொண்டிருப்பவன். இந் நிலையில் நாடோறும் எண்ணற்ற பக்தர்கள் அவனுடைய கருவூலத்தை நிரப்பி வழியச் செய்து கொண்டுள்ளனர். இந்த உறுப்பெருஞ் செல்வத்தை அவனைப்பற்றியும் அவன் அடியார்கள் பற்றியும் எழுதப்பெறும் நூல்கட்கு வரை யாது வழங்கும் நிதி உதவித் திட்டத்தில் இந்நூலும் நிதி உதவிபெற்று வெளிவருகின்றது. இந்த 'வேங்கடம் மேவிய விளக்கு' மேலும் நான் எழுதிவைத்திருக்கும் 'மாணிக்க வாசகர்', 'சடகோபன் செந்தமிழ்' 'தாயுமான அடிகள்' ஆகிய வற்றிற்கும், எழுதிவரும் 'கீதைப் பொழிவுகள்' என்பு தற்கும், எழுத நினைத்திருக்கும் 'வடலூர் வள்ளல்' 'பட்டினத்தடிகள்' முதலான பக்திப் பனுவல்கட்கும் நிதி ஒளிகாட்டி அவற்றை அச்சேறச் செய்வான் என்ற திடமான நம்பிக்கை என்றும் என்பால் உண்டு. இவனது கருவியாக இயங்கிவரும் திரு K. சுப்பாராவ், திரு N. S. இராமமூர்த்தி ஆகிய இருவருக்கும் என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய கற்பக அச்சக மேலாளர் திரு. க. நாராயணன் அவர் கட்கும், எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக் கட்டை தயாரித்து, மூவண்ணத்தில் அச்சிடும் வரையிலும் பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் திரு. P. N. ஆனந்தன் அவர்கட்கும், காப்புறை (Lamination) போட்டு உதவிய மாருதி லாமினேஷன் உரிமையாளர் திரு. பார்த்திபன் அவர்கட்கும், இவ்வளவும் ஆன நிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத் தவழச் செய்த திரு. V. திருநாவுக் கரசுக்கும் என இதயம் கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்த நூலுக்கு சிறப்புப் பாயிர மாலை நல்கிய கவிஞர் நாரா. நாச்சியப்பன் செட்டிநாட்டில் ஆத்தங்குடி முத்துப் பட்டணத்தைச் சேர்ந்தவர்; தனவைசிய மரபில் தோன்றி யவர் (பிறப்பு 13—7—1927). அறுபது அகவையைத் தாண்டிய இவர் தம் வாழ்க்கையைத் தமிழகத்திலும் பர்மா விலும் நடத்தியவர். 1960-முதல் சென்னையில பல்வேறு துறைகளில் பணியாற்றி நிலையாக அச்சுத் தொழிலை நடத்தி வருபவர். திருச்சி தேசியக் கல்லூரியில் இடை நிலை வகுப்பு வரை படித்திருந்தாலும் தமிழில் பெரும்

புலமையை எய்தி கவிபாடும் ஆற்றல் கைவரப் பெற்றவர். புதுக்கோட்டையிலிருந்து வெளிவந்த 'பொன்னி' என்ற திங்கள் இதழின் துணையாசிரியராகவும் (1947-48), 'முத்து' என்ற சிறுவர் இதழின் ஆசிரியராகவும் (1948), சென்னையி லிருந்து வெளிவந்த 'தென்றல்' என்ற வார இதழின் துணை யாசிரியராகவும் (1959-60), 'இளந்தமிழன்' என்ற இலக்கியத்திங்கள் இதழின் ஆசிரியராகவும் (1972-74) பணி யாற்றியவர். இந்த அநுபவமே இவரை நிரந்தரமாக அச்சுத் தொழிலில் தள்ளிவிட்டது.

நகரத்தார் வாழ்க்கை 'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்று இருந்தாலும் சமய வாழ்வும், தமிழ்ப் பண்பாடும் அவர்தம் மூச்சாக இருந்து வருவதைக் காரைக் குடியில் பத்தாண்டுக்காலம் பணியாற்றிய காலத்தில் நன்கு அறிய முடிந்தது. பண்பாட்டின் உருவமாகத் திகழும் நாரா. நா. அவர்கள் குழந்தை எழுத்தாளர் சங்கம், சைவ சித்தாந்தப் பெருமன்றம், Dravidian Linguistic Assiocia- tion என்பவற்றின் வாழ்நாள் உறுப்பினராகவும், தமிழ்க் கவிஞர் மன்றம், தமிழ்ப் பண்பாட்டுப் பேரவை இவற்றின் சிறப்பு உறுப்பினராகவும் இருந்து பணியாற்றுபவர். பர்மாவில் இருந்தபோது இரங்கூன் நகரத்திலுள்ள அகில பர்மா தமிழ்ச் சங்கத்தின் மேலாளராகவும் (1952), இரங்கூன் பர்மா திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுச் செயலாளராகவும் (1954) பணியாற்றியவர்.

விரைந்து கவிபாடும் வேந்தராகத் திகழும் நாரா. நா. அவர்கள் 'காளி கோயில்', 'நீளமூக்கு நெடுமாறன்', 'ஒட்டுக்குடுமிப் பட்டுச்சாமி' முதலிய 36 சிறுவர் கதை நூல் களும்; 'சிறுவர் பாட்டு', 'மழலைச் சோலை', 'பாடு பாப்பா' முதலிய 10 சிறுவர் பாடல் நூல்களும்; 'மோகனக் கிளி', 'புதுவைக் கள்ளன்' முதலிய 6 புதின நூல்களும்; நாச்சியப்பன் பாடல்கள் தொகுதி - 1, 2, 'கொய்யாக் காதல்', 'ஈரோட்டுத் தாத்தா' முதலிய 7 கவிதை நூல் களும்; 'நான்கு பார்வைகளில் பாரதிதாசன்', 'குயிலும் சஞ்சீவி பர்வதத்தின் சாரலும்' என்ற 2 திறனாய்வு நூல்களும்; 'கடல் வீரன்', 'மூன்று திங்களில் அச்சுத் தொழில்' போன்ற 4 பிறநூல்களும் எழுதி வெளியிட்டவர்.

இத்தகைய பெருமை வாய்ந்த கவிஞர் நாரா. நா. அவர்கள் எட்டு ஆழ்வாரைப் பற்றிய இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரப் பாமாலை வழங்கிச் சிறப்பிக்கும்

போக்கில் எஞ்சிய நான்கு ஆழ்வார்களையும் அறிமுகப் படுத்திவைத்துள்ளார். பெரியாழ்வார், நம்மாழ்வார், மதுர கவிகள், திருமங்கையாழ்வார் இவர்கள் பற்றித் தனி நூல்கள் உருவாகி 'விட்டு சித்தன் விரித்த தமிழ்' மட்டிலும் வெளிவந்துள்ளது. 'சடகோபன் செந்தமிழ்' 'கலியன் குரல்' விரைவில் வெளிவரும்! மாலை வழங்கிய மாண்பார் கவிஞருக்கு என் இதயம் கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அணிந்துரை வழங்கிய திரு மு. இராமசாமி நான் பிறந்த வட்டமாகிய துறையூர் வட்டத்தைச் சேர்ந்தவர். ஐந்தாண்டுகள் திருவையாற்றில் திரு பு. ரா. புருடோத்தம நாயுடு அவர்களின் அருமை மாணாக்கராகத் திகழ்ந்து 1946இல் சென்னைப் பல்கலைக்கழகத்தின் வித்துவான் (முதல் வகுப்பு) பட்டம் பெற்று 1947இல் சேலம் மாவட்டம் சேந்தமங்கலம் மாவட்டக் கழக உயர் நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் பணியேற்று வாழ்க்கையில் படிப்படியாக உயர்ந்து மாணவர்கள் மதிப்பீட்டில் நல்லாசிரியராகவும், தோழ ஆசிரியர்களிடையே நல்ல நண்பராகவும், பெற்றோர்கள் பொதுமக்கள் மதிப்பீட்டில் மதிப்பும் மரியாதைக்குரியவராகவும் திகழ்ந்து 35 ஆண்டுகள் நற்பணியாற்றி நற்புகழ் ஈட்டி 1974—1975 ஆண்டில் மாநில நல்லாசிரியர் விருதும் பெற்றவர்; 1979 முதல் சில ஆண்டுகள் துணைத் தலைமையாசிரியராகவும் பணியாற்றி 1983இல் ஓய்வும் பெற்றார். மாணவர்கள்பால் பேரன்பு கொண்டவர்; ஏழை மாணவர்கட்குப் பெரிதும் உதவியவர்.

இவர் பணிக் காலத்தில் இரண்டு ஆண்டுகள் (1964—66) விடுப்புடன் காரைக்குடி அழகப்பர் கல்லூரித் தமிழ் ஆய்வுத் துறை இயக்குநர் பெரும் புலவர் 'தமிழ்க் கடல்', 'சிவம் பெருக்கும் சீலர்' ராய். சொக்கலிங்கம் அவர்களின் கீழ் ஆய்வுப் பணி செய்து பெரும் புகழ் பெற்றவர். ராய. சொ. வின் தொடர்பு இவரைப் பல்லாற்றானும் உயர்த்தியுள்ளது என்பது என் கருத்து. 'பெரியாரைத் துணைக் கோடல்' என்பதே வள்ளுவத்தில் ஓர் அதிகாரம். இவர் தொடர்பால் இவருடைய புகழும் புலமையும் பெரியோர்களின் தொடர்பும் மிகுந்திருக்க வேண்டும். (காரைக்குடியில் பத்தாண்டு வாழ்வில் (1950—60) அடியேன் இப்பெரும் புலவரின் நெருங்கிய தொடர்பால் பெற்ற பயன் அளவிடற்கரியது). ராய. சொ. வின் தொடர்பால் தமிழக மெங்கும் சுற்றிப் பார்க்கவும், சிவ, வைணவத் தலங்

களைச் சேவிக்கவும் வாய்ப்புகள் பெற்றவர். ராய. சொ. வின் நூல்களாகிய 'திருத்தலப் பயணம்', 'வில்லியும் சிவனும்', 'கம்பனும் சிவனும்' என்ற மூன்று அரிய நூல்கள் வெளிவரப் பேரளவில் உதவியவர். அவர் தொடர்பால் இவருக்குப் பேச்சாற்றலும் எழுத்தாற்றலும், மேலும் படிக்க வேண்டும் என்ற ஆர்வமும் வளர்ந்தன என்பது அடியேனின் கணிப்பு. தனியாகப் பயின்று தமிழ் எம். ஏ., பி. எட். பட்டங்களைப் பெற்று உயர்ந்தவர். இப்போது பதினொரு நூல்களின் ஆசிரியர், சிறந்த வைணவர்; ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால்பட்டு அவற்றில் தோய்ந்தவர். கம்பனில் ஈடுபட்டு இராமகாதையின் ஆழத்தையும் அகலத்தையும் கண்டவர். தமிழகத்தில் நடைபெறும் எல்லாக் கம்பன் விழாக்களிலும் இவருக்குப் பெரும் பங்கு உண்டு.

ஒல்லும் வகையெல்லாம் இவர் ஆற்றி வரும் தமிழ்ப் பணி போற்றுதற்குரியது. ஒன்று பேச்சால், மற்றொன்று செயலால். ஓராண்டுக் காலம் ஈரோடு தமிழ்ப் பேரவையில் சிந்தாமணி பற்றி தொடர் சொற்பொழிவுகள் ஆற்றி **'சிந்தாமணிச் செம்மல்'** (1963) என்ற விருதைப் பெற்றவர். இராசிபுரம் தெய்வநெறிக் கழகத்தில் கம்பராமாயணத் தொடர் சொற்பொழிவுகள் ஆற்றியவர். இப்பணியைப் பாராட்டி, ரிஷிகேசம் வேதாந்தப் பல்கலைக்கழகம் **'கம்பரா மாயண உபன்யாச ரத்னா'** (1977) என்ற விருதை வழங்கியுள்ளது. அண்மையில் பண்ணுருட்டி வைணவ சபை இவருக்கு 'ஸ்ரீ வைணவச் செல்வம்' (1987) என்ற விருதை வழங்கிச் சிறப்பித்துள்ளது. கல்கத்தா, பம்பாய்த் தமிழ்ச் சங்கங்களில் இவர் தொடர் சொற்பொழிவுகள் ஆற்றி ஆங்கு வாழும் தமிழ் மக்களின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரரானவர். காஞ்சிகாமகோடி சங்கராச்சாரியரின் ஆசியும் (1979) பெற்றவர். இராசிபுரத்தில் பல இலக்கிய விழாக்கள் நடைபெறக் காரணமாயிருந்து மாணவர்கள்பாலும் இளைஞர்பாலும் மொழி உணர்வையும் நாட்டுப் பற்றையும் வளர்த்தவர். இவர் திருவையாற்றில் பயின்றது முதல் (1941—46) இன்று வரை இவரது பல பணிகளைக் கவனித்தவனாதலால் இவரிடம் நெருங்கிய தொடர்பு வைத்திருப்பவன். இதனால் என்னுடன் தம்பி முறையில் பழகும் இவருடைய அணிந்துரை இந்நூலுக்குக் கிடைத்தது இந்நூலின் பேறு; என் பேறும் கூடத்தான். நன்முறையில்

அணிந்துரை நல்கிய அன்பருக்கு என் நன்றி என்றும் உரியது.

டாக்டர் G. T கோபாலகிருஷ்ண நாயுடு அவர்களை அறிஞருலகம், மருத்துவருலகம், பக்தர் உலகம் நன்கு அறியும். பாமரரும் நன்கு அறிவர். மக்கள் நலவாழ்வுத் துறையில் தம் வாழ்க்கையைத் தொடங்கிய இப்பெருமகனார் 'பணியே பரமன் வழிபாடு' என்ற கொள்கைப் பிடிப்புடையவராக இருந்தமையால் தாம் பணியாற்றிய இடங்களிலெல்லாம் தம்முடைய பணி முத்திரையைப் பதித்து வந்தவர். ஒருங்கிணைந்த சென்னை மாநிலத்தில் தாம் பணியாற்றிய இடங்களிலெல்லாம் தம்முடைய கடுமையான உழைப்பால் மக்கள் நலவாழ்வுக்கேற்ற சூழ்நிலைகளை உருவாக்கிப் பொதுமக்களும் அரசும், ஒருமுகமாகப் போற்றும் பெருமையுடையவராகத் திகழ்ந்தவர். கருவிலே ஆன்மிக நாட்டமுடைய இப்பெரியார், திருவரங்கம், சிதம்பரம், திருமலை போன்ற திருத்தலங்களில் பணியாற்றும் வாய்ப்புகள் ஏற்பட்டபோது திருத்தலப் பயணிகள் அதிகமாகக் கூடும் திருத்தல நகரங்களைத் தூய்மையாக வைத்திருக்கும் பொறுப்பு இவரைச் சார்ந்து விட்டது. இப்படிச் சொல்வதைவிட திருவரங்கத்துப் பெரிய பெருமாளும், தில்லைக் கோவிந்தராசனும் (ஏன்? நடராசப் பெருமானும் கூடத்தான்!) திருமலை சீநிவாசனும் தாம் கோயில் கொண்ட இடங்களில் இவர்தம் சேவையைப் பெற வேண்டும் என்று கருதியே இவரைச் சில ஆண்டுகள் தாம் இருக்கும் இடங்கட்கு வரவழைத்துக் கொண்டார்கள் என்று கருதுவது பொருத்தமல்லவா? குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்தானே சிறப்புப் பெறும்? இவரை ஆட்கொண்டு தமது சிறந்த அடியார்களில் ஒருவராக ஆக்கிக் கொள்ளவேண்டும் என்று கருதியே இவருக்கு இந்த வாய்ப்புகள் கிடைக்கச் செய்தனர் என்றே எனக்குத் தோன்றுகின்றது. இது மட்டுமா? தொழிலாளர்களே நாட்டுச் செல்வத்தைப் பெருக்குபவர்கள் என்ற உண்மையை அறிந்து தொழிற்பேட்டைகள், தொழிற்சாலைகள் நிறைந்த கோவைக்கும் இவர்தம் திருப்பணி கிடைக்கச் செய்தான் காக்கும் கடவுளாகிய அந்த நாராயணன். இதனால் கோவையும் இவர்தம் அயரா உழைப்பால் நல்ல சூழ்நிலையைப் பெறும் வாய்ப்புப் பெற்றது. அதிக காலம் பணியாற்றிய அந்நகரிலேயே

ஒரு திருமாளிகையை அமைத்துக் கொண்டு அதற்கு 'வேங்கடம்' என்ற திருநாமமும் இட்டுக் கொண்டார். மேற் குறிப்பிட்ட மூன்று அர்ச்சாவதாரப் பெருமாள்களிலும் வேங்கடவாணனே இவர்தம் உள்ளத்தை அதிகமாகக் கொள்ளை கொண்டு விட்டான் என்று இதனால் கருத வேண்டியுள்ளது. காஞ்சி வரதராசர் ஏன் இவரை மறந்து விட்டாரோ? தெரியவில்லை!

உடையவரின் நியமனப்படி திருமலையில் அனந் தாழ்வான் அக்காலத்தில் ஏரி வெட்டியும் நந்தவனம் அமைத்தும் கைங்கரியம் செய்ததைப் போல டாக்டர் நாயுடுவும் 1940 வாக்கில் மலேரியா நோய் அதிகமாகப் பிடித்திருந்த திருமலையை நலவாழ்வுக்குகந்ததாகச் செய்து தமது கைங்கரியத்தைப் புனிதமாக்கிக் கொண்டார். 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண் விட்ட' ஏழுமலை அப்பனின் திருவுள்ளத்தை யார் தாம் அறிய முடியும்? எம்பெருமான் நம்மாழ்வாரைக் கொண்டு தன்னைப் பாடுவித்துக் கொண்டதுபோல் ஏழுமலையப்பனும் தன் நகரில் உள்ள மலேரியா நோயை இவரைக் கொண்டு ஒழித்துக் கட்டினானோ என்று கூட எண்ணத் தோன்றுகின்றது. இந்த நற்பெயர் தன் அடியானான டாக்டர் நாயுடுவுக்கு வர வேண்டும் என்பது அந்த சீநிவாசனின் திட்டம் போலும்; இந்தக் கைங்கரியத் தால் டாக்டர் நாயுடு உடையவரின் சீடர் அனந்தாழ் வானுடன் வைத்து எண்ணப்படுவாராகின்றார்.

திருத்தில்லையில் கோவிந்தராசரையும் நடராசரையும் ஏக காலத்தில் சேவிப்போருக்கு சைவ வைணவப் பிணக்கு ஏற்படாது என்பது அடியேனின் கருத்து. அவர்கட்கு அரியும் அரனும் ஒன்று என்ற எண்ணமும் உறுதிப்படும். இங்குப் பணியாற்றிய காரணத்தால்தான் டாக்டர் நாயுடுவின் உள்ளத்தில் இப்பரந்த நோக்கம் உறுதிப் பட்டது போலும்! இவருடைய பல நூல்களில் ஒன்றான 'அரங்கம் முதலான ஆற்றங்கரையினிலே' என்ற நூலில் சைவ வைணவத்தலங்களை அற்புதமாகக் காட்டி மகிழ்ந்து நம்மையும் மகிழ்விக்கின்றார். இவர்தம் இலக்கியப் படைப்புகள் சிலவாகவும் சிறியனவாகவும் இருப்பினும் அவற்றுள் அடங்கியுள்ள இவர்தம் பக்திப் பெருக்கு கங்கையாய், கோதாவரியாய், காவிரியாய் விரிந்து கிடப்பதைக் காணலாம். ஏன்? திரிவிக்கிரமன்போல் உயர்ந்தும் காணப்படுவதைக் கண்டு மகிழலாம்.

அறிவியலைப் பயின்று மருவத்துறையில் தேர்ச்சி பெற்று மக்கள் நலவாழ்வுத் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்ற டாக்டர் நாயுடு அவர்கள் தமது இறுதிக் காலத்தைத் திருப்பதியில் தம் அருமை மகன் தாவர இயல்துறைப் பேரா சிரியர் திரு கோ. லீலாகிருஷ்ணனுடன் கழித்து வருகின்றார். திருப்பதியில் இவர்கள் தங்கும் பகுதி 'வைகுண்டபுரம்' என்ற குடியிருப்பு. பிறவியை அறுத்து வைகுண்டவாசம் இப்பெருமகனாருக்கு உறுதி என்பது இது சூசகமாக அமைந்து விட்டது என்பது அடியேனின் கணிப்பு. நான் திருப்பதிக்கு 1960-ஆகஸ்டில் பணியாற்றத் தொடங்கிய நாள் தொட்டு இவர்தம் தொடர்பு எனக்கு ஏற்பட்டது. 'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு' என்ற வள்ளுவரின் வாய் மொழிக்கு இவர் இலக்கியமாய்த் திகழ்வதை இவரிடம் கண்டு மகிழ்கின்றேன். சுருக்கமாகக் கூறினால், 'அறிவியல் அறிஞர், எழுத்தாளர், உரையாடல் கலைஞர், உயர்ந்த பண்பாளர், மனிதாபிமான மிக்கவர் — இவர்கள் யாவரும் உருண்டு திரண்டவர்தாம் டாக்டர் G.T. கோபாலகிருஷ்ண நாயுடு என்பார் என்று கூறலாம். இவர்தம் செளலப்பிய செளசீல்ய குணங்கட்கும் இவர் அடைந்த பெரும் புகழுக்கும் அறிகுறியாகத்தான் இவர் இந்திய மருத்துவக் கழகத்தின் (சென்னை) தலைவராகவும், இந்திய மருத்துவ மத்திய கழகத்தின் (புது டில்லி) துணைத்தலைவராகவும் தேர்ந் தெடுக்கப் பெற்றார் என்று கருதலாம். இவற்றுள் பின்னது கிடைத்தற்கரிய பேறு. இப்பொறுப்புகளில் இவர் பணியாற் றியபோது தமிழக ரீதியிலும் அனைந்திந்திய ரீதியிலும் புகழ் மாலைகள் வந்து குவிந்தன. இவையெல்லாம் ஏழுமலை யானின் கருணையால் ஏற்பட்ட விளைவு என்பது என் கருத்து. 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற பொய்யாமொழிக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்பவர். கடந்த 27 ஆண்டுகளாகப் பழகிச் சத்துவக் குணம் நிறைந்த இப்பெரியாரின் உயர் பண்புகளால் கவரப் பெற்றேன்; முதலாழ்வார்களிடம் காணப்படுவது போன்ற இவர்தம் அமைதியான போக்கு, சாந்தமும் புன்முறுவலும் தவழும் திருமுக மண்டலம், அதிர்ந்து பேசாத பண்பு இவை கண்டாரை ஈர்க்கும் தன்மையுடையவை. பக்தியின் சிகரமாகக் காணப்படுபவர். சீவன் முக்தர்நிலையிலிருப் பவர். இத்தகைய பெரியார் பால் அடியேன் கொண்டுள்ள பெருமைக்கும், மரியாதைக்கும் அறிகுறியாக

இந்த நூலை அன்புப் படையலாக்கும் பேறு பெறு கின்றேன். இதனால் இந்த நூலிலுள்ள எட்டு ஆழ்வார் களும் இவருக்கு ஆசி கூற, அந்த ஆசியின் கனத்தால் இவர் தம் பக்தி மேலும் மேலும் பெருகும் என்பது என் அதிராத நம்பிக்கை. இவருடைய ஆசியால் இந்நூல் தமிழ் மக்கள் பால் நல்ல செல்வாக்குடன் திகழும் என்ற நம்பிக்கையும் என்பால் உண்டு.

இந்த நூலை வெளியிடுவதற்கு என் இதயத் தேரை நடத்தி தமிழ்ப் பணி, அறிவியல் பணி, சமயப் பணி ஆற்று வதற்கு நல்ல உடல் நலத்தையும் மன வளத்தையும் நல்கி வரும் அந்தர்யாமியாக என் இதயத்தில் எழுந்தருளி யிருக்கும் 'முத்திக்கு வித்தகன் வேங்கடத்து அச்சுதனை' மனம் மொழி மெய்களால் வணங்கி வாழ்த்திச் சரண் அடைகின்றேன்.

> வெற்பென்று வேங்கடம் பாடினேன்; வீடாக்கி
> நிற்கின்றேன்; நின்று நினைக்கின்றேன்: கற்கின்ற
> நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
> கால்வலையில் பட்டிருந்தேன் காண். [5]
>
> —திருமழிசையாழ்வார்

'வேங்கடம்'
சென்னை-600 040
10-7-1987

ந. சுப்புரெட்டியார்
தொ. பே. 615583

5. நான். திருவந். 40

# விட்டுச்சித்தன் விரித்த தமிழ்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பெரியாழ்வாரைப்பற்றி பேராசிரியர் விரித்துரைக்கும்
கருத்துக்கள் படிப்போரின் மனதில் பாங்குறப்
படிவதற்கு இவர் வகுத்துக் கொண்ட இந்நூலின்
14 இயல்களும், சரளமான தீந்தமிழ் நடையும்,
கருத்துக்களைத் தெளிவாக விளக்கும்
போக்கும் கைகொடுத்து உணவுகின்றன

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939353-3-0

*eBOOK ~ மின் நூல்*



## நூல் முகம்

வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை
 மெத்தை யாக விரித்து அதன்மேலே
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம்
 காண லாங்கொல்என் றாசையி னாலே
உள்ளஞ் சோர உகந்தெதிர் விம்மி
 உரோம கூபங்களாய் கண்ண நீர்கள்
துள்ளம் சோரத் துயிலணை கொள்ளேன்
 சொல்லாய் யானுன்னைத் தத்துறு மாறே[6].

—பெரியாழ்வார்.

பன்னிரண்டு ஆழ்வார்களைப் பற்றியும் அவர்களின் அருளிச் செயல்கள் பற்றியும் எளிய நடையில் நூல்கள் எழுதி பொதுமக்கட்கு விருந்தளிக்க வேண்டும் என்ற பேரவா என் மனத்தைப் பல ஆண்டுகளாகவே நெருடிக் கொண்டு இருந்தது. அந்த அவா நிறைவேறும் பாங்கில் முதன் முதலாக 'விட்டுசித்தன் விரித்த தமிழ்' என்ற தலைப்பில் பெரியாழ்வார் பற்றியும் அவருடைய அருளிச் செயல்களை விளக்கும் பாங்கிலும் இது முதலாவது நூலாக வெளி வருகின்றது. இந்த நூலின் திருநாமம் அந்த ஆழ்வாரின் திருவாக்காலேயே இட்டு வழங்க நினைத்தேன். அப்படியே நூலும் அத்திருநாமத்துடன் வெளி வருகின்றது.[7]

---

6. பெரியாழ். திரு. 5. 1: 7

7. ஷெ. ஷெ. 3. 6: 11 பாசுரத்தில் வந்த சொற்றொடரே நூலின் திருநாமமாக அமைந்துள்ளதைக் காண்க.

நூல் பதினான்கு இயல்களாக அமைந்துள்ளது. முதல் இயல் ஆழ்வாரின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக உரைக்கின்றது. அதனைத் தொடர்ந்து வரும் பதின்மூன்று இயல்களும் அருளிச் செயல்களைப் பல கோணங்களில் ஆய்வன. வைணவப் பெருமக்களுக்கு இந்நூல் நல்ல விருந்தாக இருக்கும் என்று கருதுகின்றேன். பொது மக்களும் இந்த ஆழ்வாரின் அருளிச் செயல்களில் ஆழங்கால் பட்டு அநுபவிப்பதற்கு இப்பனுவல் ஒரு தூண்டுகோலாக — ஏன்? ஊன்றுகோலாகவும் — அமையும் என்று நம்பு கின்றேன். இந்த இரண்டு நோக்கங்களும் நிறைவேறி னால் என்னுடைய இந்த முயற்சி பயனுள்ளதாயிற்று என்று மகிழ்வேன். தம்மையும் தமது அருளிச் செயல் களையும் அறிமுகப்படுத்திய என்னை ஆழ்வாரும் வாழ்த்தி ஆசி கூறுவார் என்றும் உறுதி கொள்கின்றேன்.

திருப்பதியிலிருந்து ஓய்வு பெற்று 1978 சனவரி 14 ஆம் நாள் சென்னையில் குடியேறியதிலிருந்து 'தேனாய் கன்ன லாய் அமுதாய்'த் தித்திக்கும் ஆழ்வார் பாசுரங்களை 'வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன்போது' (நான்முகன் திருவந்தாதி — 63) என்றவாறு என் காலம் கழிகின்றது. என் ஆராய்ச்சியின் போது ஆழங்கால் பட்ட பாசுரங்களை மீண்டும் மனத்தில் இருத்தி அசை போடுவதற்குப் பெற்ற வாய்ப்பின் காரண மாக இந்நூல் பிறக்கின்றது. என் அநுபவம் இப்பனு வலைப் படிப்போரிடமும் ஏற்படுத்துமானால் அதனை யான்பெற்ற பெரும் பேறாகவே கருதுவேன்.

தமிழகத்தில் சுமார் 20 ஆண்டுகளும் ஆந்திரத்தில் சுமார் 20 ஆண்டுகளும் பணியாற்றி ஓய்வு ஊதியம் கூடப் பெறாது தவிக்கும் அடியேனுக்கு ஏழுமலையான் ஓரளவு நிதி வழங்கி (நூலின் முட்டுவழியில் 50% விழுக்காடு) உதவி புரிந்திராவிடில் இந்நூல் அச்சு வாகனம் ஏறிக் கற்போர் கரங்களில் கவினுறத் தவழ்வதற்கு வாய்ப்பே இருந்திராது. 'செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல்' என்று

பேருண்மையை அறிந்து செல்வச் சீமானாகத் திகழும் ஏழுமலையான் 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் திருமார்பை விட்டு அகலாதிருக்கும் செல்வச் சீமாட்டியைத் தாங்கிக் கொண்டிருப்பவன். இந்நிலையில் நாடோறும் எண்ணற்ற பக்தர்கள் அவனுடைய கருவூலத்தை நிரப்பி வழியச் செய்து கொண்டுள்ளனர். இந்த உறுபெருஞ் செல்வத்தை அவன் அடியார்கள் பற்றி எழுதப் பெறும் நூல்கட்கு வரையாது வழங்கும் நிதி உதவித் திட்டத்தில் இந்நூலும் நிதி உதவி பெற்று வெளி வருகின்றது. இந்த 'வேங்கடம் மேவிய விளக்கு', மேலும் நான் எழுதி வைத்திருக்கும் '**மாணிக்கவாசகர்**', '**சடகோபன் செந்தமிழ்**', '**ஆழ்வார்களின் ஆரா அமுது**', '**தாயுமான அடிகள்**' ஆகிய வற்றிற்கும், எழுதிவரும் '**கீதைப் பொழிவுகட்கும்**', எழுத நினைத்திருக்கும் '**வடலூர் வள்ளல்**', '**பட்டினத்தடிகள்**' முதலான பக்திப்பனுவல்கட்கும் நிதி ஒளிகாட்டி அவற்றை அச்சேறச் செய்வான் என்ற நம்பிக்கை என்பால் உண்டு. இவனது கருவியாக இயங்கி வரும் தேவஸ்தானத்தாருக்கும் குறிப்பாகத் திரு K. சுப்பராவ், திரு N .S. இராமமூர்த்தி ஆகிய இருவருக்கும் என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய கற்பக அச்சக மேலாளர் திரு. க. **நாராயணன்** அவர்கட்கும், எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து மூவண்ணத்தில் அச்சிடும் வரையிலும் பொறுப்பேற்று உதவிய ஓவியமன்னர் திரு. P. N. **ஆனந்தன்** அவர்கட்கும், காப்புறை (Lamination) போட்டு உதவிய மாருதி லாமினேஷன் உரிமையாளர் திரு. **பார்த்திபன்** அவர்கட்கும் இவ்வளவும் ஆனநிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத் தவழச் செய்த **திருநாவுக்கரசுக்கும்** என் இதயம் கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்த பக்திப் பனுவலுக்குச் 'சிறப்புப்பாயிர மாலை' வழங்கிச் சிறப்பித்தவர் திரு. இரா. திருமுருகன் என்பார். செந்தமிழ்த் தென்புதுவை என்னும் திருநகரில் கல்வித் துறையில் பணியாற்றி வரும் என் அருமை நண்பர். தமிழில் கல்வியியலில் முதுகலை, மதுரைத் தமிழ்ச் சங்க பண்டிதப் பட்டங்கள் பெற்றவர். பிரெஞ்சு மொழியியல், புல்லாங் குழல் இத்துறைகளில் சான்றிதழ்கள் பெற்றவர். இவர் நெஞ்சினின்று தமிழ், பேச்சாக, கவிதைகளாக வெளிவரும்; இசை புல்லாங்குழல் வழியாக மூச்சாக வெளிவரும். கண்டத்தாலும் இசைத்துக் கண்டாரை ஈர்க்கும் பெற்றியர். மாணவர்கட்கென்றும் பொதுமக்கட்கென்றும், அறிஞர்க்கென்றும் 18 நூல்களைப் படைத்துத் தந்த பாவலர். தமிழ் இலக்கணம், மொழியியல், இலக்கணம், கருநாடக இசை, இடப்பெயர் ஆய்வு, நாட்டுப்புறவியல், சித்த மருத்துவம் இப்பொருள்களில் நூற்றுக்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வெளியிட்ட ஆய்வு அறிஞர். பல கவியரங்குகள், கருத்தரங்குகள், இசையரங்குகள் இவற்றில் பங்கு கொண்டு இசைத்தமிழையும் இயற்றமிழையும் பரப்பி வரும் பண்பாளர். இவர்தம் தொண்டினைப் பாராட்டும் வகையில் இவர் பெற்ற விருதுகள் **இலக்கணச்சுடர் (1979), இயலிசைச் செம்மல் (1981), தமிழ்க் காவலர் (1985)** என்பன. பல்கலைக் கழகம் பல்கலைச் செல்வராகிய இவரைப் பயன் படுத்திக் கொள்ளாதது வருந்தத் தக்கது. ஐம்பத்தெட்டு அகவையை எட்டினாலும் டாக்டர் பட்டம் பெறும் நோக்குடன் ஆய்வு செய்து வருபவர். பழகுவதற்கு இனியர். 'நவில்தொறும், நூல்நயம் போலும் பயில் தொறும் பண்புடையாளர் தொடர்பு' என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்பவர். மாணவர்கள்பால் பேரன்பு கொள்ளும் பேராசான். இசையின்பால் ஈடுபாடு கொண்ட இவர்தம் இல்லம் **'ஏழிசைச்சூழல்'** என்பது. இந்தச் சீரிய இல்லத்திற்கு பல புலவர்கள் வந்து அளவளாவுவதுண்டு. 'பாண்டிச்சேரியா? புதுச்சேரியா?' என்ற இவர்தம் ஆய்வுக்

கட்டுரை அறிஞர் உலகத்தை ஈர்த்தது குறிப்பிடத்தக்கது. பாரதியும் பாரதிதாசனும் இவர்தம் குறிக்கோள் நாயகர்களாகத் திகழ்வதால் இவர் விரைந்து கவிபாடும் வேந்தரானார். ஒரு தென் புதுவைக் கவிஞர் மற்றொரு தென் புதுவைப் பட்டர் பிரான் வாழ்க்கைத் திறனை விளக்கும் பனுவலுக்கு 'சிறப்புப் பாயிரமாலை' வழங்கியது மிகப் பொருத்தமாக அமைந்து விட்டது. பட்டர்பிரான் அருளால் இவர்தம் கவிபாடுந் திறன் மேலும் வளர்ந்து பொலியும். 'சிறப்புப் பாயிரமாலை' பட்டர்பிரானின் ஆசியைப் பெற்றுக் கொண்டே திகழும் என்பதற்கு ஐயம் இல்லை. மாலை வழங்கிய மதிநலம் அமைந்த மாண்பார் நண்பருக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த பக்திப் பனுவலுக்கு அணிந்துரை நல்கிய பேரன்பர் திரு. க. பத்மநாப ரெட்டியார் அவர்கள் நான் பிறந்த திருச்சி மாவட்டம் பெருவள நல்லூரில் வாழ்ந்து வரும் ஒரு சிறந்த பாகவதோத்தமர். என்னைப் போன்றே பெற்றோருக்கு ஒரே பிள்ளை. மகப்பேறற்ற பெரிய தந்தையார் அரவணைப்பில் வாழ்ந்தவர். பெரிய தந்தையாரோ வைணவ கிரந்தங்களைக் காலட்சேபம் செய்யும் திறம்படைத்த வைணவச் செம்மல். பெரிய தந்தையாரின் வைணவச் செல்வம் பிதிராஜிதச் சொத்தாக இவர்பால் இறங்கியுள்ளதைப் பல்லாண்டுகளாக அடியேன் கவனித்து வந்தவனாதலால், இவரிடம் என் வைணவ சம்பிரதாய நூலொன்றுக்கு அணிந்துரை பெறவேண்டும் என்ற அவா சில ஆண்டுகளாகவே என் உள்ளத்தை நெருடிக்கொண்டிருந்தது. அந்த அவாவை இந்த நூல் நிறைவு செய்கின்றது.

இந்தத் திருமாலடியார் பெஞ்சுவாடகை தந்து பள்ளி யிறுதித் தேர்வு முடியப் படித்திருந்தாலும் அதற்குமேல் கற்றதும் கேட்டதுமே அதிகம். இவர் தமிழின்மேல் இருந்த ஆர்வத்தால் தமிழைத் தனியாகக் கற்று வித்துவான் - புகுமுகம், வித்துவான் - முதல்நிலைத் தேர்வுகள் எழுதி வெற்றி பெற்றவர். வித்துவான் - இறுதி நிலைத்

தேர்வு பெற்றால் அலுவல் பார்க்கும் அவா வந்துவிடும் என்று பெற்றோர் அத்தேர்வு எழுதுவதற்குத் தடை விதித்தனர். பரம்பரைத் தொழிலாக உழுவித்துண்டு வாழ்வதையே வாழ்க்கையாக அமைத்து விட்டனர். ஒருவிதத்தில் இது நல்லதே; எம்பெருமான் திருவுள்ளமும் இஃதே போலும். எனினும், தமிழின்பால் இருந்த ஆர்வம் வைணவ இலக்கியத்தின்பால் திரும்பியது அந்த நாராயண னின் திருவருளே என்று கருதுவது பொருந்தும். சிறுவனாக இருந்தபோது பெரிய தந்தையாரின் காலட்சேபம் கேட்ட காரணத்தால் இவர் திருமால் அடியாரானார். இதனால் 1941 முதல் 1947 முடிய திருவரங்கத்தில் இவரும் முதுபெரும் புலவர் பெ. இராமாநுஜ ரெட்டியாரும் சேர்ந்து ஸ்ரீ உப. வே. புத்தங்கோட்டம் திரு. சீநிவாச ஆசாரிய சுவாமி களிடமும் காலட்சேபம் கேட்கும் பேறுபெற்றவர். பின்னர், தனியாகத் திருவரங்கம் — மதுராந்தகம் திரு. உப. வே. வீரராகவாசாரிய சுவாமிகளிடம் சுவாமி தேசிகனின் கிரந்தங்கள் காலட்சேபம் கேட்டு உய்ந்தவர். அடுத்து பண்டித சித. நாராயண சுவாமிகளிடம் இலக்கணப் பாடம் கேட்டு தமிழறிவை பெருக்கிக் கொண்டவர்.

பக்தியே வடிவமானவர். சத் சங்கத்திலேயே நாட்டம் கொண்டவர். பல அரங்குகளில் வைணவத்தைப் பேசி அதனைப் பரப்பி வருபவர். திருமண் காப்பு தீட்டப்பெற்ற இவர்தம் மலர்ந்த முகப் பொலிவும் வைணவ சம்பிரதாயப் பேச்சும் அப்பேச்சில் உதிரும் வைணவ தத்துவங்களும் கண்டாரை ஈர்க்கும் பான்மையவை. இவருடன் கிட்டத் தட்ட நாற்பது ஆண்டு பழக்கம் இருந்தாலும் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகவே நெருங்கிப்பழகும் வாய்ப் புகள் ஏற்பட்டன. காரணம், நான் வைணவ இலக்கியத் திலும் வைணவ தத்துவத்திலும் ஈடுபட்டதே யாகும். இதனால், இவர்தம் பல அருங்குணங்கள் அடியேனைக் கவர்ந்தன. இத்தகைய பக்திச் செல்வரின் அணிந்துரை இந்நூல் பெற்றது பெரியாழ்வாரின் திருவருளேயாகும்.

இவர் ஆசியால் இந்நூல் பொதுவாகத் தமிழ்கூறு நல்லுலகிலும் சிறப்பாக வைணவப் பெருமக்களிடமும் பெருமிதத்துடன் உலவும் என்பது என் திடமான நம்பிக்கை. அணிந்துரை அருளிய அன்பருக்கு 'தலையலாது கைம் மாறிலனே'.

திரு. K. வேங்கடசாமி நாயுடு அவர்களை அறிஞருலகமும் பக்தியுலகமும் நன்கு அறியும்; பாமரரும் நன்கு அறிவர். திரு. நாயுடு அவர்கள் சிறந்த தேசியவாதி; நாட்டுப் பற்றாளர். காந்தியடிகள்வழி ஒழுகும் நற்பண்பினர். இவர் வாழ்ந்த காலத்தில் கதருடையே இவர்தம் திருமேனிக்குப் பொலிவு தரும். செல்வச் செழிப்புள்ள குடும்பத்தில் பிறந்தவராயினும் எளிமை வாழ்க்கையையே விரும்புபவர்; எளிமையாகவும் வாழ்ந்தவர். சாதி, சமய, அரசியல் பற்றுக்களைக் கடந்து மனித நெறியில் வாழ்ந்து மன்பதைக்குப் பேருதவிகள் பல புரிந்தவர். சிறந்த வழக்குரைஞர், சமூகச் சீர்திருத்தவாதி, சிறந்த கல்வியாளர், நேர்மையான அரசியல்வாதி, உயர்ந்த ஆட்சியாளர், பன்மொழிகளைப் பாங்காக அறிந்த மேதை, சிறந்த வைணவ சீலர் — இவை யாவும் உருண்டு திரண்ட உயர்ந்த மனிதர், சுருங்கக் கூறினால் 'பண்புடையார் பட்டுண்டு உலகம்', 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்ற பொன்மொழிகட்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர்.

அருமை இராஜாஜி அமைச்சரவையில் இடம்பெற்று அறநிலையத்துறை அமைச்சர் பொறுப்பேற்று சிறந்த முறையில் பணியாற்றியவர். திருமலை - திருப்பதி தேவஸ்தான ஆட்சிக்குழுவில் உறுப்பினராகவும், பின்னர் அக்குழுவின் தலைவராகவும் இருந்து பல்லோர் வியக்கும் வண்ணம் அற்புதமாகப் பணியாற்றியவர். இறைபணி இவர்தம் இதயத் துடிப்பாக இருந்ததால் இவர் ஆற்றிய பணி பல்லோர் மகிழும் வண்ணம் இருந்தது. பல்லாண்டுகள் சென்னை வைணவ மகாசங்கத்தின் தலைவராக இருந்து பணியாற்றியமை பொன்னெழுத்துகளால் பொறிக்கப்

பெறவேண்டியதாகும். திரு. நாயுடு அவர்களும் திரு. T.M. நாராயணசாமி பிள்ளையும் மேற்கொண்ட முயற்சியால் தான் திரு.பு.ரா. புருடோத்தம நாயுடு அவர்களைக் கொண்டு 'திருவாய்மொழி — ஈட்டின் தமிழாக்கம்' (10 தொகுதிகள்) வெளி வந்தது. இந்த இரு பெரியார் களின் ஆலோசனையை ஏற்று டாக்டர் A.L. முதலியார் (சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்) இந்தப் பெரும்பணியை — தெய்வப்பணியாக — ஏற்று பல்கலைக் கழகப் பணியாகச் செய்வித்ததை வைணவ உலகம் நன்றி யுடன் போற்றும். பச்சையப்பன் கல்லூரி அறம், சர். தியாகராசச் செட்டி கல்வி அறம், A.R.C. கல்வி அறம் போன்ற பல அறநிறுவனங்களில் பல்லாண்டுகள் தலை வராக இருந்து ஆற்றிய கல்விப் பணிகளை எவரும் மறவார்.

திரு. நாயுடு அவர்கள் கட்டடங்கள் எழுப்புவதில் நாட்டம் உள்ளவர். இவர் பணியாற்றிய நிறுவனங்களில் எல்லாம் ஏதாவது ஒரு கட்டடம் எழும்பும். சேத்துப்பட்டி லுள்ள பச்சையப்பன் கல்லூரிக் கட்டடம், திருப்பதியில் வேங்கடேசுவரா கலைக் கல்லூரிக் கட்டடம், பதுமாவதி மகளிர்க் கல்லூரிக் கட்டடம் (இப்போது பல்கலைக் கழகத் திற்கு வழங்கப்பட்டுள்ளன) இவர் காலத்தில் எழுந்தவை. இதனால் இவர் வீட்டு வசதி கோவாப்பரேட்டிவ் நிறுவனத் தின் தலைவராகவும் நகர வீட்டுவசதி மேம்பாட்டு வாரியத் தந்தையாகவும் அதன் காவலராகவும் பணி யாற்றும் வாய்ப்பினைப் பெற்றார். இவர் காலத்தில்தான் சென்னை காந்திநகர்க் குடியிருப்பும் வேங்கடேசபுரக் குடியிருப்பும் தோன்றின. இங்ஙனம் பல்லாண்டுகள் பல துறைகளில் சீரிய பணியாற்றிய இப்பெரியாரை நடுவண் அரசு பத்மஸ்ரீ (தாமரைச் செல்வர்) என்ற விருதை அளித்துச் சிறப்பித்தது.

ஒருசமயம் திரு.பு.ரா. புருசோத்தம நாயுடு அவர்கள் இப்பெரியாருக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தார். (1962 என்பதாக நினைவு). அன்று முதல் நான் இவரைச்

சந்திக்கும்போதெல்லாம் அன்புடன் 'நன்கு உள்ளீர்களா?' (தெலுங்கில் 'பாஹுன்னரா?') என்று கேட்கும் போதெல்லாம் என் உள்ளம் குளிரும். புன்முறுவல் பூத்தமுகம், கலையுணர்வுடன் நெற்றியில் தீட்டப்பெற்ற திருமண்காப்பு, அமைதியாகப் பேசும் இனிய பேச்சு இவற்றில் சொக்கியநிலை இன்றும் என் உள்ளத்தில் பசுமையாகவே உள்ளது. பார்க்கும்போதெல்லாம் என் மனத்தில் இடம் பெற்றிருக்கும் 'விட்டுசித்தன்' போல் காட்சி தருவார். இப்பெரியாரின்பால் யான் கொண்டுள்ள பெருமைக்கும் மரியாதைக்கும் அறிகுறியாக, 'விட்டுசித்தன் விரித்த தமிழ்' என்ற இந்நூலை அன்புப் படையலாக்கும் பேறு பெறுகின்றேன். இந்த மகாப் பிரசாதத்தை—சென்னை வைணவ மகாசங்க மாநாட்டில் (டிசம்பர்-1987) 100 படிகளை பாகவதர்கட்கு வழங்கி அவர்கள் ஆசியையும் பெறுகின்றேன். இந்தப் பெரியார்களின் ஆசியால் இந்நூல் தமிழ் மக்களிடம் செல்வாக்குடன் திகழ்ந்து வைணவ உணர்ச்சியை வளர்க்கும் என்ற திடமான நம்பிக்கை என்றும் என்பால் உண்டு. இவையெல்லாம் எம்பெருமான் திருவருள் என்பது என் அதிராத நம்பிக்கை.

இந்நூலை யான் எழுதி வெளியிட என் இதயத்தாமரையில் அந்தர்யாமியாக எழுந்தருளியிருக்கும் 'திண்வரைசூழ் திருவேங்கடமாமலை என் அப்பனை' மனம் மொழி மெய்களால் வணங்கி வாழ்த்தி அடிமையாகின்றேன்.

> **வீடாக்கும் பெற்றி யறியாது மெய்வருத்திக்**
> **கூடாக்கி நின்றுண்டு கொண்டுழல்வீர்—வீடாக்கும்**
> **மெய்ப்பொருள்தான் வேத முதற்பொருள்தான்**
> **விண்ணவர்க்கு**
> **நற்பொருள்தான் நாரா யணன்.**[8]
>
> —திருமழிசை யாழ்வார்

'வேங்கடம்'
AD—13 (பிளாட் 3354)
அண்ணாநகர்
சென்னை—600 040
7—5—1987

ந. சுப்புரெட்டியார்
தொ. பே : 615583

---

8. நான்முகன், திருவந், 13

தமிழ் இலக்கியங்களில்

# அறம் - நீதி - முறைமை


பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**




எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

அறம் என்ற தலைப்பில், மனத்தூய்மை, நிலையாமை, நடுவுநிலைமை,
இன்னும்பிற : நீதி என்ற தலைப்பில், செங்கோன்மை, நீதி உணர்வு,
நீதிவழங்கல் இன்னபிற : முறைமை எனும் தலைப்பில், ஊழ்செயற்படுதல்,
முறைமை பற்றி பல்வேறு காட்டுகள் இன்னபிற தலைப்புகளை
எளிதாகவும், தெளிவாகவும், பற்பல கோணங்களில்
இனிய தமிழில் விளக்கியுள்ளார் பேராசிரியர்.


**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939637-3-9





eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

நோற்றேன் பல்பிறவி
 நுன்னைக்காண்பதோர் ஆசையினால்
ஏற்றேன் இப்பிறப்பை
 இடருற்றனன் எம்பெருமான்!
கோற்றேன் பாய்ந்தொழுகும்
 குளிர்சோலைசூழ் வேங்கடவா!
ஆற்றேன் வந்தடைந்தேன்;
 அடியேனையாட் கொண்டருளே.[1]

—திருமங்கையாழ்வார்

பணிவாழ்க்கையின் இறுதிக்காலமாகிய பதினேழு ஆண்டுகள் திருப்பதியில் வாழ வழி வகுத்து அவன் திருவடி வாரத்தில் நிறுவப் பெற்றுள்ள பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையை நிறுவவும் அதில் துறைத்தலைவனாக வும் பேராசிரியனாகவும் பணியாற்றும் வாய்ப்புகளை நல்கினான் 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலாகிய' திருவேங்கடமுடையான். ஓய்வுபெற்ற பின் (அக்டோபர்-1977) சென்னையில் அவன் இருப்பிட மாகிய 'வேங்கடம்' என்ற இல்லத்தில் வாழவைத்துள் ளான். இடைஇடையே பல்வேறு அதிர்ச்சி வைத்தியம் தந்தருளினாலும்,

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்;
தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே[2]

என்ற திருமூலர் திருவாக்கை நினைவு கூரச்செய்து தமிழ்ப்பணியும் சமயப்பணியும் வளர்க்கத் துணைபுரிந்து

1. பெரி. திரு. 1-9 :8
2. திருமந்திரம்—91

வருகின்றான்; ஒல்லும் வகையெல்லாம் என்தகுதிக்கேற்ப உதவியும் வருகின்றான்.

இந்த நிலையில் சென்னைப் பல்கலைக் கழகத்தைத் தூண்டி அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் மூன்று நிகழ்த்துமாறு ஆணையையும் பிறப்பிக்கச் செய்தான். கரும்பு தின்னக் கூலிகொடுக்கும் பல்கலைக் கழகம் **டாக்டர் (திருமதி) கிருட்டிணா சஞ்சீவிதிருமதி கண்ணம்மாள் நடேசன் அறக்கட்டளைச்சொற்பொழிவுகளை** (1986-87க்குரியவை) நிகழ்த்துமாறு 14.5.1987ல் அழைப்புவிடுத்தது. அறக் கட்டளை நிறுவிய டாக்டர் ந. சஞ்சீவியைக் கலந்து யோசித்த போது "**தமிழ் இலக்கியங்களில் அறம்-நீதி-முறைமை**" என்ற தலைப்பில் மூன்று நாள் மூன்று சொற் பொழிவுகளை நிகழ்த்த முடிவு ஆயிற்று. அங்ஙனமே மார்ச்சு 28, 29, 30 (1988) நாட்களில் முறையே அறம், நீதி, முறைமை பற்றி மூன்று சொற்பொழிவுகளை நிகழ்த்தி னேன். இச்சொற்பொழிவுகளை என்பொறுப்பில் வெளி யிட்டுக் கொள்ள இசைவும் வழங்கியது பல்கலைக் கழகம். இசைவுவழங்கியமைக்கு என் நன்றி.

ஐந்திணைப் பதிப்பக உரிமையாளர் திரு **குழ. கதிரேசன்** அவர்களின் பரிந்துரையின் பேரில் என் அருமைத்தம்பி **திரு. வெள்ளையப்பன்** (உரிமையாளர், தேன்மழைப் பதிப்பகம் ஆலந்தூர், சென்னை - 16) இப் பொழிவுகளை மனமுவந்து ஏற்று வெளியிடுகின் றார். இவர்கள் இருவருக்கும் என் உளங் கனிந்த நன்றி என்றும் உரியது. இப்பொழிவுகளைக் கவினுற அச்சிட்டுக் கற்போர் கைகளில் தவழச்செய்த ஜெய்ஸ்ரீ அச்சகத்தாருக்கு, குறிப்பாக அதன் அதிபர் **திரு. கே. பி. பிரசாத்துக்கு**, என் நன்றியைப் புலப்படுத்துகின்றேன்.

**ஜஸ்டிஸ் S. நடராசன்** அவர்கள் நாடறிந்த நல்ல மனிதர்; அடக்கமான பண்புடையவர். இவருடைய நட்பினைப் பெற்றது இறைவனது திருவருளாலாகும். பல்லாண்டுகள் வழக்குரைஞராகப் பணியாற்றி நேர்மையையும் திறமையையும் நிலை நாட்டிய இப்பெருமகனாரைத் தமிழக அரசு உயர்நீதி மன்றத்து நீதிபதியாக்கியது. பல ஆண்டுகள் அப்பொறுப்பை வகித்துப் பணியாற்றி "சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல" அமைந்து ஒருபால் கோடாமையாலும் தமது நேர்மையை யாவரும் கண்டதாலும் நடுவண் அரசு இவரை உச்சநீதி மன்றத்து நீதிபதியாக்கியது. இங்கு இவர் பல பொறுப்புகளில் அரும் பணியாற்றி நற்பெயர் எடுத்ததை இந்திய துணைக் கண்டம் நன்கு அறியும். இவருடைய அமைதி, அடக்கம் சீலம், பரிவு முதலிய அருங்குணங்கள் 'குலத்தளவே ஆகும் குணம்' என்ற முதுமொழிக்கு ஏற்ப அமைந்தன. நல்ல சூழ்நிலைகளில் பெற்ற கல்வியும் இவற்றிற்கு மெருகூட்டியது. இவருக்குப்பெருமதிப்பையும்நல்கின. இறையன்பிலும் மெய்ப்பொருள் கருத்துகளிலும் ஆழங்கால் பட்டு நிற்பவரும் இலக்கிய இன்பத்தில் ஈடுபாடு கொண்டவரும் 'உயர் திணை என்மனார் மக்கட்சுட்டே, 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற ஆன்றோர் பொன்மொழிகட்கு இலக்கியமாகத் திகழ்பவருமான இந்த அருங்குணச் செல்வரின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறாகும்; அடியேனது பேறுமாகும். அணிந்துரை அருளிய பெரியாருக்கு என் இதயம் நிறைந்த நன்றி என்றும் உரியது.

இந்த அரிய நூலைச் சட்டக்கலை வல்லார் பரமபதவாசி **திரு மாடபூசி அனந்தசயனம் அய்யங்கார்** அவர்கட்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். திரு அய்யங்கார் பீகார் மாநில ஆளுநராகப் பணியாற்றித் திருப்பதியில், சொந்த ஊரில், சொந்த இல்லத்தில் குடியேறிய நாள் முதல் (1962) அவர் பரமபதித்த நாள் வரை (1978) அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் கிடைத்தமை

திருவேங்கடமுடையானின் திருவருளாகும். முதன் முதலில் சந்தித்தபோது "நீங்கள் தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்டவர்! வாழும் இடத்தையொட்டித் தமிழும், பிழைப்பின் நிமித்தத்தை யொட்டி ஆங்கிலத் தையும் படித்தீர்கள். அப்படியே நானும் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவன்; வாழ்ந்த இடத்தையொட்டித் தெலுங்கையும் பிழைப்பின் நிமித்தம் ஆங்கிலத்தையும் படித்தேன். இப்பொழுது நாம் இருவரும் தமிழர்களே, சரிதானே" என்றார். "ஏழுமலையான் திருவருள்படி நம் வாழ்க்கையும் பணியும் அமைந்தன" என்று அடக்கமாக மறு மொழி பகர்ந்தேன். அவரும் என் பணிவைப் பாராட்டி மகிழ்ந்தார். திருப்பதியில் நான் இருந்தவரை இவருடன் மிக நெருங்கிப் பழகினேன். தமிழ்த்துறை என் மணி விழாவை மலர் ஒன்றை வெளியிட்டுக்கொண்டாடியபோது (24-9-1977) அந்த விழாவுக்குத் தலைமை தாங்கிச் சிறப் பித்த பெருமகனார். என்வீட்டில் நடைபெற்ற சிறப்பு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதில் தவறுவதில்லை.

★ என்னுடைய டாக்டர் பட்டத்துக்குரிய ஆய்வுக் கட்டுரை (ஆங்கிலத்தில் அமைந்தது) அச்சுவடிவத்தில் பல்கலைக் கழகம் வெளியிட்டபோது அதற்கு அரியதோர் ஆங்கில அணிந்துரை நல்கி ஆசிகூறி நூலுக்குப் பெருமை யும், பொலிவும் தந்த பெருமகனார் இவர்.

இந்த வைணவ மாமணியைப் பார்க்கும்போதெல்லாம் 'கெடும் இடர் ஆய எல்லாம் கேசவா! என்ன' (திருவாய் 10-2: 1) என்ற நம்மாழ்வாரின் பாசுரமும் நினைவுக்கு வரும். என் இதயத்தாமரையில் நிரந்தரமாக எழுந்தருளி யிருக்கும் திருவேங்கடத்தப்பனும் அனந்த சயனத்து அண்ணல் பதுமநாபனாகவே காட்சி அளிப்பான். இத்த கைய எழுச்சியை உண்டு பண்ணும் இப்பெருமகனாருக்கு அறம்-நீதி-முறைமை பற்றிய இந்த அரிய நூலைப் பொருத் தமாக அன்புப்படையலாக்கிய பெருமையுடன் அகமகிழ் கின்றேன்.

இந்தப் பொழிவுகளை நிகழ்த்துவதற்கும், அவை எழுத்து வடிவம் பெறுவதற்கும் அச்சேறி வெளியிடப் பெறுவதற்கும் மூலகாரணமாக இருப்பவன் எம்பெருமான் ஏழுமலையப்பன். 'என்கண்பாசம் வைத்து' நிரந்தரமாக் என் இதயகமலத்தில் எழுந்தருளியிருக்கும் அந்த 'வேங் கடத்து எழில்கொள் சோதிக்கு' என் மனம் மொழி மெய் களால் வணங்கி வாழ்த்துகின்றேன்.

உளன்கண்டாய் நல்நெஞ்சே!
 உத்தமன்; என்றும்
உளன்கண்டாய்; உள்ளுவார்
 உள்ளத்து உளன்கண்டாய்;
வெள்ளத்தின் உள்ளானும்,
 வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான்என்று ஓர்.

—பொய்கையாழ்வார்

ந. சுப்புரெட்டியார்
தொ.பே. 615583

'வேங்கடம்'
AD—13 (பிளாட் 3354)
அண்ணாநகர்
சென்னை—600 040
திசம்பர் 15, 1988

3. முதல்திருவந்.-99.

# நினைவுக் குமிழ்கள் - 1

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சுயசரிதை

கால கட்டம் ,,,,,, 1916 ~ 1941 (பல் வேறு இடங்கள்)

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-936450-1-7




eBOOK ~ மின் நூல்

# அணிந்துரை

தமிழ் நாடு அரசு தமிழ் வளர்ச்சி இயக்குநர்
[**டாக்டர். சிலம்பொலி சு, செல்லப்பன்**
எம்.ஏ, பி,டி., பி.எல்., பிஎச்.டி.]

பேராசிரியர் **டாக்டர். ந. சுப்புரெட்டியார்** தம் வாழ்க்கை வரலாற்றை **'நினைவுக் குமிழிகள்'** என்னும் தலைப்பில் வரைந்துள்ளார்கள். முதல் தொகுதியாகிய இந்நூலில் அவர் பிறப்பு, பிள்ளைப் பருவ நிகழ்ச்சிகள், பள்ளி—கல்லூரிப் படிப்பு, துறையூர் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியராக அமர்த்தப் பெற்றமை ஆகிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. மற்றவை அடுத்த தொகுதிகளில் தொடரும்.

பேராசிரியர் ரெட்டியார் மூன்றாண்டுப் பருவம் நிரம்பும் முன்னர் தந்தையாரை இழந்தவர். எளிய குடும்பத்தில் வளர்ந்தவர்கள். என்றாலும் தன் கடின உழைப்பால் படிப்படியாக முன்னேறி இன்று கல்வியுலகு பாராட்டுகின்ற உயர்ந்த நிலையில் திகழ்கின்றார்கள். தம் வாழ்க்கைப் பயணம்பற்றி அவருடைய மனம் அசை போட்டதன் விளைவே இந்நூல். நீர்ப் பரப்பில் மழை சிறு தூறலாக விழும்போது குமிழிகள் தோன்றுவதில்லை. பெருந்துளிகளாக விரைந்து விழும் போது மட்டுமே அழுத்த மிகுதியால் குமிழிகள் தோன்றுகின்றன. பேராசிரியர் ரெட்டியாருடைய வாழ்க்கைப் பரப்பில், எண்ணத்தில் நிற்கின்ற அழுத்தமான நிகழ்ச்சிகள் மட்டுமே இங்குக் குமிழிகளாக உருப்பெற்றன. குமிழியை நோக்கும்போது அதனுள் நமது உருவத்தையும் காண முடியும். அதேபோல் இந்நூற் குமிழியைப் படிக்கும்போது

பேராசிரியர் ரெட்டியாரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளுடன் அந்த வயதில் நம்முடைய வாழ்வில் நடந்தவையும் நம் மனத்திற்குள் நிழலாடவே செய்யும்.

தங்கள் பெருமைகளைக் கூறிக் கொள்வதற்கு மட்டுமே வரலாறு எழுதுவாருண்டு; தங்களுக்கு நேர்ந்த இன்னல்களை மட்டுமே சொல்லி உலகம் தங்களைக் கண்டுகொள்ள வில்லையே என்னும் ஏக்கத்தைப் புலப்படுத்துவாரும் உண்டு. பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் உயர்வோ தாழ்வோ, நடந்ததை நடந்தவாறே ஒளிவு மறைவின்றி வெளியிட்டுள் ளார்கள். தம் இளமைப்பருவப் படிப்புபற்றிய செய்திகளை ஓவியப்படுத்துவதுபோல துல்லியமாகவும் அழகாகவும் சித்திரித்துள்ளார்கள். வெறும் நிகழ்ச்சிக் கோவையாக அமைந்துவிடாமல் ஒரு கட்டுரைக் களஞ்சியம்போன்று படிக்கப் படிக்க நிறைவேற்படுத்தும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

பேராசிரியர் தம் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை மட்டுமே அடுக்கிச் செல்லவில்லை. ஒவ்வொரு நிகழ்ச்சியைக் குறிக்கும்போதும் அது தொடர்பான பின்னணிகளுடன் அனைத்து விவரங்களையும் அழகு மிளிரும் சொல்லோவிய மாகத் தீட்டிச் செல்கின்றார்கள். இந்நூலினைப் பேராசிரியர் சுப்புரெட்டியாரின் தன்வரலாறு என்பதை விட 1920, 1930 களில் தமிழ் நாட்டுச் சிற்றூர்களின் நிலை, மக்களின் வாழ்க்கை முறை, திண்ணைப் பள்ளிக் கூடங்களில் கல்வி கற்றுத் தந்த முறை, உயர்நிலைப் பள்ளி—கல்லூரிகளில் கல்வி நிலை போன்றவற்றையெல்லாம் படம் பிடித்துக் காட்டுகின்ற சமூக வரலாற்று விளக்க நூல் என்று கூறுவது பொருத்தமாக இருக்கும். ஆசிரியரின் அன்னையார் பிறந்த ஊர் பெரகம்பி என்பதும், ஆசிரியரின் சொந்த ஊர் கோட்டாத்தூர் என்ப தும் வெறும் செய்தியாக மட்டும் இடம்பெறவில்லை. அந்த ஊர்களுக்கே ஆசிரியர் நம்மை அழைத்துச் செல்கின்றார்கள்.

அந்த ஊர்களில் வாழ்ந்தது போன்ற உணர்வுகளையும் தோற்றுவித்து விடுகின்றார்கள்.

திண்ணைப் பள்ளியில் நடைபெறும் சிறப்பான நிகழ்ச்சிகளாகப் பிள்ளையார் சதுர்த்தி, சரசுவதி பூசை ஆகிய இரண்டைச் சொல்லலாம் என்பது ஆசிரியர் கூறவரும் செய்தி. ஆனால் ஆசிரியர் அந்தச் செய்தியைத் தெரிவிப்பதோடு மட்டும் நில்லாது இவ்விரண்டு விழாக்களையும் ஏன் கொண்டாடுகின்றோம்? எவ்வாறு கொண்டாடுகின்றோம்? என முழு விவரங்களையும் தந்துவிடுகின்றார். இதேபோல் சிற்றூர்த் திருவிழாக்களாக கரக ஆட்ட விழா, கண்ணன் பிறப்பு, காமன் பண்டிகை போன்றவற்றைக் குறிப்பிட்டு அவற்றை விளக்குகின்றார்கள். கோலிகுண்டு, கிட்டிப்புள், பம்பரம், கார்த்திசுற்றுதல், பீச்சுக்குழல் ஆகிய சிறுவர் விளையாட்டுகளும் இதில் அழகாக இடம்பெறுகின்றன.

பேராசிரியர் ரெட்டியார் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பேராசியராகப் பணிபுரிந்தவர். அதில் பெற்ற பட்டறிவு கொண்டு தன் பள்ளிப் படிப்பு, கல்லூரிப் படிப்பைப் பற்றிக் கூறும்போது இன்றைய கல்விமுறைகள், கற்பிக்கும் முறைகள் பற்றிய விளக்கங்களைச் சுவையாக எடுத்துச் சொல்லித் தாம் படித்தபோதிருந்த நிலையுடன் ஒப்பிட்டு அவற்றின் குறை நிறைகளை எடுத்துக் காட்டுகின்றார்கள். அவருக்குப் பாடம் சொல்லித் தந்த ஆசிரியர்களை நினைவுகூரும் வகையில் அவர்கள் சொல்லித் தந்த பாடங்களை நூலாசிரியர் நமக்குச் சொல்லித் தந்துவிடுகின்றார். அதனால் அறப்பளீசுரசதகம், குமரேச சதகம், விவேக சிந்தாமணி, நல்வழி, நன்னெறி போன்ற நூல்களிலிருந்து பல பாடல்களுக்கான விளக்கங்களைப் பெற்று மகிழ்கின்றோம்.

தமிழாசிரியர் குமார வீரய்யர் "கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவ!" எனும் கம்பராமாயணப் பாடலை

அன்று இவருக்கு நடத்திய திறத்தைக் கூறி, இன்று நாமும் இப்பாடலின் பொருள் நயத்தை உணர்ந்து மகிழுமாறு செய்கின்றார்கள். கற்பிக்கும் முறையில் கற்பித்தால் கணக்குப் பாடத்தைவிட எளிதான பாடம் இல்லை எனலாம். ஆசிரியர் சரிவர விளக்கும் திறனில்லாதவராகும்போதுதான் 'கணக்கு பிணக்கு' என்னும் மொழி தோன்றுகின்றது. கணக்கைப் பிணக்கின்றி நடத்தியதால் இவருடைய கணித ஆசிரியர் திரு. கே. இராமச்சந்திர அய்யர் இவர் உள்ளத்தில் குறிக்கோள் ஆசிரியராக நிரந்தர இடத்தைப் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. அவருடைய கற்பிக்கும் ஆற்றலை இந்நூலாசிரியர் கூற்றாகவே அறிவது சிறப்பாம். "வரலாற்று ஆசிரியர் கதை சொல்லுவது போல் ஆரம்ப கணிதத்திலுள்ள கணக்கின் சூழ்நிலையை உண்டாக்கி விடுவார். இலாப நட்டம், கூட்டுவட்டி, வட்டிக் கணக்கு, கூட்டு வாணிகம் இவற்றைக் கற்பிப்பது அற்புதமாக இருக்கும். வகுப்பறையில் இருப்பதை மறந்து அங்காடித் தெருவில் இருப்பது போன்ற சூழ்நிலையை உண்டாக்கிவிடுவார். நாங்களே முதல் போட்டுக் கூட்டு வாணிகம் நடத்துவது போலவும், கந்து வட்டிக் கந்தசாமிக் கடையில் வட்டிக்குக் கடன் வாங்குவது போலவும், காஃபிப் பொடிக் கடையில் காஃபித் தூளில் சிக்கிரித் தூளைக் கலப்பது போலவும், சருக்கரை மூட்டைகள் போன்ற சரக்குகள் வண்டியில் வந்து இறங்குவது போலவும் உணர்ச்சியை எழுப்பி விடுவார்"—இவ்வாறு கற்பிக்கும் செய்திகளை வாழ்க்கையுடன் இணைக்கும்போது கருத்துகள் மனத்தில் ஆழமாகப் பதியத்தானே செய்யும்!

"இன்று பெரும்பாலும் இலக்கணம் மாணாக்கர் காதில் புகாத உலக்கையாகவே இருக்கின்றது. மாணாக்கர் இலக்கணத்தைச் சிம்ம சொப்பனமாகக் கருதுகின்றனர். இதற்கு இலக்கணம் காரணமன்று; கற்பிக்கும் ஆசிரியர்களே இந்நிலைக்குக் காரணம். இலக்கணத்தை அநுபவ முறையில்

இலக்கியப் பாடத்துடன் இணைத்துக் கற்பித்தால் மாணக்கர் கள் கட்டாயம் இலக்கணத்தை விரும்புவர். நல்ல முறையில் கற்பித்தால் ஏனைய பாடங்களைக் கற்பதுபோல் அதிக இன்பத்தையும் பெறுவர்'' என்கின்றார் இந்நூலாசிரியர். இவருக்கு இனிமையாக இலக்கணம் சொல்லித் தந்த ஆசிரியரை நினைக்கும்போது எனக்கு இலக்கணம் போதித்த ஆசிரியரும் என் நினைவுக் குமிழியில் தோற்றமளிக்கின்றார். என்னுடைய தமிழாசிரியர் வேற்றுமை உருபுகள் பற்றிப் பாடம் நடத்தும்போது முதல் வேற்றுமை உருபு, இரண்டாம் வேற்றுமை உருபு இன்னின்ன என்று சொல்லி நடத்தமாட் டார். ஒருகதை சொல்வதுபோலத் தொடங்குவார். ''ஒரு மன்னன், ஒரு மைந்தனைப் பெறும் விருப்பினால் தனக்குரிய மதுரை மாநகரின் நீங்கி மாதவத்தோரது மதங்கி வனத்தில் மலரவனே! மலரவனே! என மாதவம் புரிந்தனன்'' இதைச் சொல்லிப் பார்; இதில் எட்டு வேற்றுமைகளும் உள்ளன என்று விளக்குவார். ''மன்னன் — முதல் வேற்றுமை, மைந்தனை — 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு; பெரும் விருப்பினால் — 'ஆல்' மூன்றாம் வேற்றுமை உருபு; தனக்கு —'கு' நான்காம் வேற்றுமை உருபு; மதுரைமா நகரின்— 'இன்' ஐந்தாம் வேற்றுமை உருபு; மாதவத்தோரது—'அது, ஆறாம் வேற்றுமை உருபு; மதங்கி வனத்தில் —'இல்' ஏழாம் வேற்றுமை உருபு; மலரவனே! மலரவனே! —இது எட்டாம் வேற்றுமையாகிய விளி வேற்றுமை —தெரிகிறதா?'' என்பார். இவ்வாறு இலக்கணத்தைதச் சொல்லித் தந்தால் இலக்கணம் இனிப்பின் கொடுமுடியாக விளங்காதா?

தம் வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சொல்லிச் செல்லும் போது இலக்கியச் செய்திகளை இணைத்துச் சொல்வது இந் நூலாசிரியர்க்குக் கை வந்த கலையாக விளங்குகின்றது. சிற்றூரில் ஆரம்பக் கல்வி கற்ற இவரையும், இவர் அண்ணன் மகன் கணபதியையும் இவர்களின் ஆசிரியர் வி. கே.

அரங்கநாத அய்யர் அவர்களே முசிறிக்கு அழைத்துச் சென்று உயர்நிலைப் பள்ளியில் சேர்த்தார் என்பதை நயமாக எழுதுகின்றார். வசிட்டரிடம் கல்வி கற்ற இராம இலக்குமணர்களை விசுவாமித்திரர் வேள்வி காக்க அழைத்துச் சென்றார். இராம இலக்குமணர்கள் வசிட்டரிடம் பயிலாத சில அரிய வித்தைகளை இவரிடம் கற்றனர் என்பது இராமாயணம். பேராசிரியர் ரெட்டியாரையும், அவர் அண்ணன் மகனையும் அவர்களுடைய ஆசிரியா உயர்நிலைப் பள்ளியில் சேர்க்க முசிறிக்கு இட்டுச் சென்றது "வசிட்டரே இராம இலக்குமணர்களைக் கூட்டிச் சென்று" விசுவாமித்திரரிடம் விட்டது போன்று இருந்தது என எழுதி நயம் கூட்டுகின்றார்.

முதலில் புரியாதிருந்த ஒரு செய்தி பின்னர் புரிய வந்தது என்று கூறுமிடத்தில் "இந்தப் புதிர் அப்போது பிரம்ம சூத்திரம் போல் இருந்தாலும் நாளடைவில் அஃது பாஷியம் போல் விளக்கம் அடையும் என்பதை என்னால் அப்போது அறியக் கூடவில்லை" என எழுதுவதன் வாயிலாகச் சூத்திரம், பாஷியத்தின் இயல்பை நுண்மையாக விளக்குகின்றார்.

கல்லூரியில் படித்த காலத்தில் உணவு விடுதியில் தங்கியிருந்தபோது 'பிட்சு' எனும் இளைஞன் ஒருவன் அங்குப் பணியாளாக இருந்தான். அவன் சலிப்பு ஏதுமின்றி விருப்புடன் இவர்கள் இட்ட வேலைகளையெல்லாம் செய்தான். அதனை இலக்கிய நடையில் அவன் "பாரதியார் சித்திரிக்கும் 'கண்ணன்—என் சேவகனைப்" போன்றே பணியாற்றினான் என்பார்!

"எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்னும் முழக்கம் எம்மருங்கும் கேட்டாலும் நாம் சில சாதாரணப் பிழைகளைக் கூடக் களைவதில்லை. களைவதில் முயற்சி எடுத்துக் கொள்வதுமில்லை. அதனால் விளம்பரங்கள், அறிக்கைகள், வெளியீடுகள் இவை 'பிழை மலிந்த சருக்கங்களாகக்' காணப்

பெறுவதை நாம் எம்மருங்கும் பார்க்கிறோம்'' என்கின்றார். 'பிழை மலிந்த சருக்கம்' என்னும் தொடராட்சி நயத்தைத் தந்தாலும் இந்நிலை கவலைக்குரியதன்றோ? இதனைப் போக்கவேண்டுவது தமிழர் கடனன்றோ!

பேராசிரியர் ரெட்டியார் எப்போதுமே நகைச்சுவையாக உரையாடும் இயல்புடையவர். அவருடைய நகைச்சுவைப் பேச்சால் ஓயாது நகைத்த வண்ணமேயிருக்க வேண்டி யிருக்கும் என்பதை அவரிடம் உரையாடியோர் நன்கு உணர்வர். எழுத்திலும் அந்த நகைச்சுவை இழையோடுவதை நூல் முழுதும் காணமுடிகின்றது. அவர் சிறுபிள்ளையாகப் பாட்டி வீட்டில் வளர்ந்தபோது காலையில் பால்கறக்கும் போது முதலில் இவருடைய தம்ளரில்தான் கறந்துவிடுவார் களாம். சிறிது வெப்பத்துடன் உள்ள அந்தப் பசும்பாலை அப்படியே பருகுவாராம்! இதனை ''மகேசுவரப் பால் பூசை காலை ஆறு மணிக்குள் எனக்குத்தான் முதலில்'' என நயமாக எழுதிச் செல்கின்றார்.

இவருடைய துணைவியாரின் ஊரான பொட்டணத்தில் நல்லப்ப ரெட்டியார் என்று ஒருவர். அவர் வீட்டுத் திண்ணையில் அவருடன் நம் நூலாசிரியர் பேசிக் கொண் டிருப்பது பழக்கம். திரு நல்லப்ப ரெட்டியார் பேச்சில் வல்லவர். உலகியலை நன்கறிந்தவர். அவரால் உலகியல் பற்றிய எவ்வளவோ செய்திகளை அறிந்துகொள்ள முடிந்தது என்பதை ''இவர் திண்ணை ஒரு பி.டி.ஐ. (P.T.I.) அலுவலகம்போல் செயற்பட்டு வந்தது ' என்று நகைச்சுவை யாகக் குறிப்பிடுகின்றார்.

மற்றோர் இடத்தில் ''நூலின் தமிழ்நடை நன்றாக ஆற்றொழுக்காக அமையவில்லை; மேடு பள்ளங்களுள்ள சரளைச் சாலையில் நடப்பது போன்ற அநுபவத்தைத் தந்தது'' என்பார். 'மேடு பள்ளங்களுள்ள சரளைச் சாலை',

என்னும் சொல்லாட்சி பொருத்தமான உவமையாக அமைவ தோடு நடையைப்பற்றிய நகைப்பையும் உண்டாக்கி விடுகின்றது.

இடையிடையே வரும் முதுமொழிகளும் நயவுரைகளும் நடைக்கு உயிரூட்டுகின்றன. 'குருடன் இராஜ விழி விழிப்பது போல', 'சாணே ற முழஞ் சறுக்கியது', 'தப்பித்தது தம்பிரான் புண்ணியம்', 'பணம் பத்துவிதம் செய்யும்' 'கூட்டத்தில் கோவிந்தா போடுகிற மாதிரி', 'குருவிக்குத் தகுந்த இராமேசுரம்'. 'கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி; கடன் வாங்கியும் பட்டினி, 'பள்ளிக் கணக்கு புள்ளிக்கு உதவாது', 'கெடுமதி கண்ணுக்குத் தெரியாது', 'வினாச காலத்திற்கு விபரீத புத்தி', 'பூசாரியைப் பார்க்க முயல்வதைவிடச் சுவாமியைப் பார்ப்பது மேல்', 'பரம்பரை ஆண்டியோ பஞ்சத்தில் ஆண்டியோ' போன்ற மொழிகளைத் தக்க இடங்களில் பொருத்தமாகக் கையாண்டு செய்திக்குச் சுவைகூட்டி நடைக்கு விறுவிறுப்பூட்டியுள்ளார் ஆசிரியர்.

புகழ்ப் பட்டப் படிப்பில் (பி.எஸ்சி. ஆனர்ஸ்) சேர இவர் மறைத்திரு ஜெரோம் டி.செளஸா (முதல்வர்) அவர் களை அடிக்கடி நேரில் பார்த்துக் கெஞ்சினாராம். பத்து நாட்கள் தொடர்ந்து சென்று வந்ததை ''குழந்தைப் பேறு இல்லாத ஓர் இளம்பெண் அரச மரத்தைச் சுற்றி வழிபாடு செய்வதைப்போல் விடாமல் பாதிரியார் விடுதிக்குப் போவதும் வருவதுமாக இருந்தேன்'' என்றெழுதுவார். அவருடைய ஆர்வத்தையும் அக்கறையையும் காட்ட இதை விடச் சிறந்த உவமை ஏது?

'சாதி அமைப்பு ஒழிக்கப் பெறாதவரை நாட்டிற்குக் கதிமோட்சமே இல்லை' என்பது இவர் கொள்கை. தந்தை பெரியாரின் அடிச்சுவட்டை ஓரளவு பற்றியவரல்லவா?

பயிற்றிப் பலகல்வி தந்து—இந்தப்
பாரை உயர்த்திட வேண்டும்

என்பது பாரதியின்கல்வித்திட்டம். இந்தத்திட்டம் வெற்றிகர மாக நிறைவேற வேண்டுமானால் தாய்மொழியிலேயே எல்லாப்பாடங்களையும் கற்பித்தல் வேண்டும். விலைப்பாலை விட முலைப்பால் நல்லதல்லவா? என்பன போன்று இன்றைய வாழ்க்கைக்குத் தேவையான இன்றியமையாக் கருத்துகளை இடையிடையே பொதித்து வைத்துள்ளார்.

இளமைப் பழக்கம் எப்போதும் நிலைக்கும் என்பர். இவர் கல்லூரியில் படித்த காலத்தே ஒரு குயர் தாள் ஒன்றரை அணாவுக்குக் கிடைக்கும். இத்தாள்களை ¼ புல்ஸ்கேப் அளவில் வெட்டிக் கோப்புகளில் போடுவதற் கேற்பத் துளையிட்டு வைத்துக் கொள்வாராம். ஒரு நாளுக்குத் தேவையான தாள்களை வகுப்பிற்கு எடுத்துச் செல்லும் கோப்பில் கோத்துக் கொண்டு ஆசிரியர் கொடுக்கும் குறிப்புகளை தேதிபோட்டு எழுதும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தாராம். இந்தப் பழக்கம் இன்றும் இவரிடம் தொடர்கின்றது. அன்று (1934ல்) வாங்கிய துளையிடும் கருவி இன்றும் (1988ல்) அவரிடம் பயன்பட்டு வருவதைப் பெருமையுடன் எழுதிக் களிக்கின்றார்.

உரியவர்கள் படிக்க நேர்ந்தால் தம்மீது சினம் கொள்வார்களே என்பது பற்றியெல்லாம் கவலைப்படாமல் எதனையும் மறைக்காமல் தாம் சொல்ல நினைத்ததைச் சொல்லிவிடுகின்ற இயல்புடையவர் இவர்.

''என் தாய் மாமனுக்கு வாழ்க்கைப்பட்ட அம்மையாரும் சற்றுக் கடுமையானவர்கள். அவர்களின் சிரித்த முகத்தை நான் ஒருநாளும் பார்த்ததில்லை'' என் மாமன் மனைவி பற்றிக் கூறுவதும், ''இராமநாதபிள்ளை, கரும்பலகையில்

$$\frac{PV}{T} = \frac{P_1V_1}{T_1}$$

என்னும் வாய்ப்பாட்டை எழுதி விளக்கினார். அவருக்கு விளக்குவதற்கு வேண்டிய ஆங்கில

அறிவு இல்லையா அல்லது அவர் விளக்கத்தைப் புரிந்து கொள்ளுவதற்கேற்ற ஆங்கில அறிவு என்னிடம் இல்லையா என்பது அந்த ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். நான் 'விளங்கவில்லையே' என்றேன். மேடையிலிருந்து இறங்கி வந்து என் கன்னங்கள் வீங்குமளவுக்கு மாறி மாறி அறைந்தார். மீண்டும் மேடையேறி அதே பாடத்தையே படித்தார். சொல்வதையே சொல்லும் கிளிப்பிள்ளை யானாரேயன்றி வேறு விதமாக மாற்றிச் சொல்லும் திறமை அவரிடம் இல்லை என்பதை உணர்ந்தேன்'' எனத் தனக்கு வேதியியலைக் கற்பித்த ஆசிரியர் பற்றிக் கூறுவதும் இதற்குச் சான்றாகளாம்!

தலைமையாசிரியப் பணி கிடைத்தது என்பதோடு நூல் நிறைவுறுகின்றது. ஆசிரியப் பணி இவருடைய உள்ளம் கவர்ந்த பணி. ''ஆசிரியர் பணி என்பது கீதாசிரியனின் பொறுப்பைப் போன்றது. அப்பணியுடன் ஒரு பொறுப்பும் இணைந்தே வருகின்றது. நாம் என்றும் அப்பணிக்கு நம்மைப் பொருத்தப்பட அமைத்துக் கொள்வதே அது'' என்பது ஆசிரியப் பணி பற்றிய ஆசிரியர் கருத்து. ஆசிரியப் பணி ஏற்ற அவர் அதனைத் திறம்பட அனைவரும் போற்றும் வகையில் கடமையுணர்வுடன் செய்து வந்தார் என்பதை அனைவரும் நன்கு அறிவர்.

பேராசிரியர் ரெட்டியார் அவர்களிடம் காரைக்குடியில் அழகப்பர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் மாணவனாக இருக்கும் நற்பேறு எனக்குக் கிட்டியது. 1952-53இல் அவருடைய மாணவனாக இருந்தேன். ''நான் காரைக்குடி யில் பயிற்சிக் கல்லூரியில் பணியாற்றியபோது ஓரிருவரைத் தவிர எல்லோருமே உற்சாகமாக வகுப்புகளைக் கையாண் டோம். அதிகமாக நூல்களைப் பயின்றோம்; அற்புத மாகக் கற்பித்தோம்'' என்னும் பேராசிரியர் ரெட்டியார்

கூற்று நூற்றுக்கு நூறு உண்மை என்பதை அவரிடம் பயின்ற மாணவன் என்ற முறையில் என்னால் துணிந்து கூறமுடியும்.

அவருடைய மாணவன் என்னும் ஒரு தகுதி கருதியே எனக்கு இந்நூலுக்கு அணிந்துரை எழுதும் பெருவாய்ப் பினை ஆசிரியர் நல்கியுள்ளார். அவருக்கு என் உளமார்ந்த நன்றி.

இற்றைநாள் வரையிலான நிகழ்ச்சிகளையும் நினைவலைகளையும் ஆசிரியர் ஐந்து தொகுதிகளில் வெளியிட உள்ளார்கள். பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் எதுபற்றியும் எத்தனைத் தொகுதிகள் வேண்டுமானாலும் எழுதக்கூடிய அறிவும் ஆற்றலும் வாய்ந்தவர்கள். அவர்கள் எழுதும் அத்தனையும் முத்தனையதாகவே இருக்கும். இப் பெருந்தகை இன்னும் பல தொகுதிகளை நினைவுக் குமிழி களாக வெளியிடுகின்ற வகையில் நெடுநாள் வாழ்ந்து தமிழுக்குத் தொண்டாற்ற வேண்டுமெனும் என் பெருவிருப் பினைத் தெரிவித்து வணங்கி அமைகின்றேன்.

''குறளகம்''
சென்னை-600 108
15-12-1988

அன்புடன்,
**சு. செல்லப்பன்.**

# பாட்டுத்திறன்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

கவிதையின் தத்துவம், கற்பனை, சொல்வளம்,
யாப்புமுறை, அணிநலன், தொடைநயம்,
உண்மைப்பொருள் போன்ற செய்திகளை
திறம்படவும், நிரல்படவும்
உள்ளடக்கியது இந்நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939270-1-4




eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

சாதிகுலம் சமயம்எலாம் தவிர்த்தெனைமேல் ஏற்றித்
தனித்திரு அமுதளித்த தனித்தலைமைப் பொருளே!
ஆதிநடுக் கடைகாட்டா தண்டபகிர் அண்டம்
ஆருயிர்கள் அகம்புறம்மற் றனைத்தும்நிறை ஒளியே
ஓதிஉணர்ந் தவர்எல்லாம் எனைக்கேட்க எனைத்தான்
ஓதாமல் உணர்ந்துணர்வாம் உருவுறச்செய் உறவே!
சோதிமய மாய்விளங்கித் தனிப்பொதுவில் நடிக்கும்
தூயநடத் தரசே,என் சொல்லும் அணிந்தருளே!

—இராமலிங்க அடிகள்

இயற்கைப் பொருள்களிலும் வாழ்க்கையநுபவத்திலும் ஒரு வித இன்பத்தைக் கண்டு உள்ளத்தில் பூரிப்படைபவர்கள் ஒரு சிலரே. எல்லோரும் அவற்றில் இன்பத்தைக் காணுவதென்பது எளிதான செயலன்று. அவ்வாறு காண்பதற்கு உள்ளத்தில் கனிவு வேண்டும். சிறந்த ஞானியரும் யோகியருமே அந் நிலையை அடைதல் கூடும். பெரும்பாலோரின் மனம் புலன் களால் வளர்ந்து அமைந்து முற்றிலும் அவற்றிற்கு அடிமைப் பட்டிருப்பதே அதற்குக் காரணம் என்று கருதலாம். மேலான நனவு நிலையைப் (Superconscious) பெற்றுள்ள—உள்ளொளி யைப் பெற்றுள்ள—சிலரும் அந்நிலைக்குத் தக்க பயிற்சி அளித்து அதன்மூலம் தெய்விக நனவு நிலையை (Divine consciousness) எய்திய ஒருசிலருமே பெரும்பாலும் புலன் உணர்ச்சிகட்கு அதிகம் அடிமைப் படாமல் நேராக மனத்தின் மூலமே—நனவு நிலையி லேயே—அனைத்திலும் இன்ப நிலையைக் காணும் ஆற்றலைப் பெறுவர்.

கணந்தோறும் மாறிக் கொண்டிருக்கும் இயற்கையிலும், துன்பமும் இன்பமும் ஏக்கமும் இக்கட்டுகளும் நிறைந்துள்ள வாழ்க்கையிலும் பெரும்பாலோர் இன்பம் காணவேண்டும் என்ற உயரிய நோக்கத்தின் அடிப்படையிலேயே அறிஞர்கள் அதற்கு ஓரளவு சாதனங்களாக அமையக் கூடிய ஓவியம், சிற்பம், நாடகம், நாட்டியம், இசை, இலக்கியம் போன்ற கலைகளை வளர்த்திருக்கின்றனர். இசை தவிர மற்றக் கலைகளில் உணர்ச்சி, கற்பனை என்பவற்றோடு கருத்தும் ஓரளவு கலந்து கிடக்கும். இசைக் கலையில் மட்டிலும்—அதாவது, சொற்

களால் ஆன பாட்டுக் கலவாத கலையில் மட்டிலும்—கருத்திற்கு இடம் இல்லை. இசை தவிர ஏனையவற்றில் கருத்துகள் இருப் பினும் அவற்றிற்குச் சிறப்பிடம் இல்லை. நாடகத்திலும் இலக்கியத்திலும் கருத்துகள் பல இடம் பெறுகின்றன. எனினும், அவற்றில் உணர்ச்சி சிறப்பிடம் பெற்றிருப்பதால் அவை கலை களாகப் போற்றப்பெறுகின்றன. உணர்ச்சிமங்கிய வாழ்வைப் பெறுவதையே எல்லாக் கலைஞர்களும் ஒரு பொதுநெறியாக— கலை நெறியாகப்—போற்றி வருகின்றனர்.

மேற்கூறிய கலைகள் நாட்டுக்கு நாடு மொழிக்கு மொழி வேறுபடும் என்பதை நாம் அறிவோம். எனினும், ஓவியம் சிற்பம் இசை நாட்டியம் ஆகிய கலைகளை எல்லா நாட்டாரும் நுகர முடியும். அநுபவிக்க இயலும். நாடகக் கலையில் ஒரு பாதியே அனைவருக்கும் புலனாகும்; மொழி அறிந்தவருக்கே அக்கலையின் அநுபவம் ஏற்படும். இந்தி, ஆங்கிலம் போன்ற மொழி அறியாதவர்கள் அம்மொழிகளிலமைந்த திரைப்படங் களைக் காணும்பொழுது அவர்கட்கு இவ்வித அநுபவம் ஏற் படுவதை உணரலாம். இலக்கியக் கலை முற்றிலும் சொற் களால்—பொருள் குறித்த சொற்களால்—ஆனது. அதனை நுகர வேண்டுமாயின் அம்மொழியை நன்கு அறிந்திருத்தல் வேண்டும். இக்கலை மக்கள் மனத்தில் குடிகொள்ளும் இயல் பினதாதலால் அது நெடுங்காலம் வாழவல்லது. இலக்கியத்தின் சிறந்த பகுதி கவிதை; அதன் உயிர் நாடியான பகுதியும் அதுவே. அது நாடக வழக்கானும் உலகியல் வழக்கானும் அமைகின்றது.

கடந்த நாற்பதாண்டுகட்கு மேலாக இலக்கியத்தில்—சிறப் பாகக் கவிதை இலக்கியத்தில்—தோய்ந்து அவற்றை என் மனம் அநுபவித்துள்ளது. ஏற்கெனவே கவிதைக் கலையைப் பற்றித் திறனாய்வாளர்கள் கூறியுள்ளவற்றை ஓரளவு நடைமுறையில்— சொந்த அநுபவத்தில்—சரி பார்த்தும் உள்ளது. இயற்கையும் வாழ்க்கையும் கலையில்—கவிதையில்—வழங்கப் பெறுவதற்கு அவர்கள் மூன்று காரணங்களைத் தருகின்றனர்.

(1) புலன்களை அடிப்படையாகக் கொண்ட மனத் திற்கு இயற்கையிலும் வாழ்விலும் காணப்பெறும் முருகின்பம் தெளிவானதாக இராது. ஆதலின், மனம் அதில் நன்கு தோய்ந்து நுகர இயலுவதில்லை. அவற்றில் வேண்டுவனவும் வேண்டாதனவும், பொருந்துவனவும் பொருந்தாதனவும் கலந்திருப்பதே இதற்குக் காரணமாகும். இவ்வாறு குழம்பிய நிலையை மாற்றி அனைத்தையும்

நாடக வழக்காக அமைப்பின் மனம் அதனை நன்கு நுகா கின்றது.

(2) இயற்கையிலும் வாழ்விலும் பெறும் இன்பம் ‘‘பொய்யாய், பழங்கதையாய், கனவாய், மெல்ல மெல்லப்’’ போய் விடுகின்றது. நாம் விரும்பும் போது அவை கிடைப்ப தில்லை. நாம் வேண்டும்போது கிடைக்கக் கூடிய வகையில் கவிதை அதனைப் படைத்து நிலைக்கச் செய்கின்றது. எ-டு: கம்பனில் வரும் இருசுடர் தோற்றம், மருத நிலக்காட்சிகள், குறிஞ்சி நிலக்காட்சிகள் இவற்றை எப்பொழுது வேண்டுமா யினும் படித்து நுகரலாம்.

(3) நம்முடைய குழவிப் பருவத்தில் இயல்பான நிலையிலிருந்து புலன்கள் வாயிலாக அழகின்பத்தை நுகர்ந்த மனம் வாழ்க்கைச் சுமையும் உலோகாயத மனப்பான்மை யும் பெருகி வளர்ந்து செயற்கையான போக்கிற்கு அடிமைப் பட்டுப் பொறிபோல் இயங்கத் தொடங்குகின்றது. மரத்துப்போன இத்தகைய மனத்தையும் கவிதை ஈர்த்து நிறுத்தி விருந்து ஊட்டத் தக்கதாக அமைகின்றது.

2

இந்த நூல் உணர்ச்சியின் தத்துவம், கவிதையின் தத்துவம், புதுக்கவிதையின் தத்துவம் என்ற மூன்று பகுதிகளாக அமைந்து ‘பாட்டுத் திறன்’ என்ற கட்டுரை ‘நுதலிப் புகுதல்’ என்ற விதி யின் அடிப்படையில் நூலின் முன்னோடியாக இலங்குகின்றது. ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பத்தாண்டுகள் (1950—1960) பணியாற்றிய பொழுது உளவியல், கல்வியியல் பற்றிய கருத்து களிடையே ஆழ்ந்து கிடக்க நேரிட்ட பொழுது கவிதைக் கலை யில் நானாக ஈடுபட்டு உள்ளத்தை அதில் பறிகொடுத்து நுகர்ந்த பொழுது ‘பாட்டுத் திறன்’ பற்றிய ஒரு சில கருத்துகளை அறிந் தேன்.

திருப்பதியில் பதினேழு ஆண்டுகள் 1960-1977 பணியாற்றி 1978சனவரி முதல் சென்னையில் குடியேறிய பிறகு புதுக்கவிதை யில் ஈடுபட்டு அதனால் சில கருத்துகளையும் பெற்றேன். இவை யாவும் இந்நூல் வடிவம் பெற்றன. கவிதைக்கலையில் புக விழை வோருக்கு, அதன் நுட்பத்தை அறிய விழைவோருக்கு—குறிப் பாகத் தமிழ் முதுகலை வகுப்புகளில் பயில்வோருக்கு—இந்நூல் பெருந்துணையாக இருக்கும் என்பது என் கருத்து. கவிதையில்

தோய்ந்து இன்பம் நுகரவிரும்பும் ஆர்வம் மிக்க தமிழ் ஆர்வலர் கட்கும் இந்நூல் வழிகாட்டியாக அமைதல் கூடும்.

காலத்திற்கேற்ற அரிய பல தமிழ் நூல்களை அழகிய முறை யில் வெளியிட்டு நீண்ட நாட்களாகத் தமிழ் பணி ஆற்றிவரும் 'பதிப்புச் செம்மல்' திருகண. இராமநாதன் அவர்கள் (அதிபர், ஸ்டார் பிரசுரம், பெரியதெரு, திருவல்லிக்கேணி) இந்நூலை மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்காக அவருக்கும், நூலை நன் முறையில் அச்சிட்டுக் கற்போர் கரங்களில் கவினுடன் தவழச் செய்த பேராசிரியர் டாக்டர் சாலை இளந்திரையனுக்கும் (சாலை அச்சகம்) என் மனமுவந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கிச் சிறப்பித் தவர் என் கெழுதகை நண்பர் இளைஞர், டாக்டர் க. ப. அறவாணன்: தமிழ் இலக்கிய இலக்கணங்களை ஆழ்ந்து கற்றவர். சென்னை பச்சையப்பன் கல்லூரி, சென்னை இலயோலா கல்லூரி இவற்றில் பல்லாண்டுகள் பணியாற்றியவர். இடையில் சில ஆண்டுகள் செனகல் (ஆஃப்ரிக்கா) நாட்டில் தமிழ் பரப்பித் தாய்நாடு திரும்பி தற்சமயம் புதுவைப் பல்கலைக் கழகம் தமிழியல் துறைத்தலைவராகப் பணியாற்றி வருபவர். உழைப்புக்கு அஞ்சாதவர். இவரது அயரா உழைப்பால் கவிஞர் சுப்பிரமணிய பாரதி பெயரால் தொடங்கப்பட்டுள்ள தமிழ்த் துறை சிறந்து பொலிய வேண்டும். இவரும் இவர்தம் துணை வியாரும் டாக்டர் பட்டம் பெறுவதிலும் புதுச்சேரிப் பணியில் சேர்வதிலும் இறையருளால் என் தொடர்பு ஏற்பட்டது. நல்லொழுக்கம், நற்பண்பு, கடமையுணர்வு இவை நிரம்பப் பெற்ற இந்த இளைஞர் அணிந்துரை என்றும் நினைவுகூரும் வகையில் என் நூலில் அமைந்தது. அணிந்துரை வழங்கிய அன்பருக்கு என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது. இவர் மேன் மேலும் உழைக்கவும், அதற்கேற்ற உடல் நலமும் மன வளமும் நல்க என் இதயத்தில் நிரந்தரமாக இடம் பெற்று இருக்கும் ஏழுமலையப்பனை நினைந்து வாழ்த்துகின்றேன்.

பேராசிரியர் மு. நடேசமுதலியார் நான் திருச்சி புனித சூசை யப்பர் கல்லூரியில் இடைநிலை வகுப்பில் பயின்ற காலத்தில் (1934-36) எனக்கு வாய்த்த பெரும் பேராசிரியர். என்பால் நல்லொழுக்கம், நற்பண்புகள், ஓயாது உழைக்கும் பண்பு, கடமையுணர்வு முதலியவை அமைவதற்கு முதற்காரணமாக இருந்தவர் இப்பெருமகனார். கவிதையில் ஆழங்கால் படுவதற்கும், கட்டுரைகள் நன்முறையில் எழுதுவதற்கும் நற்பயிற்சிகள் தந்து வாழ்த்தியவர். கட்டுரைப் பயிற்சிகள்

தருவதில் கல்லூரிப் பேராசிரியர்களுள் இவர் அத்தி பூத்த மாதிரி, இவர் தந்த பயிற்சியே என்னை எழுத்துப்பணியில் வாழ்வித்துக் கொண்டுள்ளது. இதனை நினைவு கூரும் வகையில் 'பாட்டுத் திறன்' என்ற இந்நூலை இவருக்கு அன்புப் படையலாக்கி வணங்கி மகிழ்கின்றேன். மீளா உலகம் சென்ற இவர்தம் ஆசியின் கனம் என்றும் நிரந்தரமாக இருக்கும் என்பது என் திடமான நம்பிக்கை.

இந்த நூலை எழுதவும் எழுதிய பிறகு இதனை நல்ல வெளி யீட்டாளர் மூலம் வெளிவரவும், தமிழன்னையின் புதுவாழ்வில் ஒல்லும் வகையெல்லாம் பணியாற்றவும் சிறியேன் மேற்கொண்ட முயற்சியை நிறைவேற்றிவைத்த ''பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலாம்' ஏழுமலையப்பனை மனம் மொழி மெய்களால் வணங்கி வாழ்த்திச் சரண் அடைகின்றேன்.

'அகல கில்லேன் இறையும்' என் (று)
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம் மூன் (று)
உடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல் ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.

—நம்மாழ்வார்

'வேங்கடம்'
AD-13 (Plot 3354)
அண்ணா நகர்
சென்னை-600 040.
திசம்பர் 15, 1988.

ந. சுப்பு ரெட்டியார்
தொ. பே.: 615583

# நினைவுக் குமிழிகள் - 2

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சுயசரிதை

கால கட்டம் ,,,,,, 1941 ~ 1950 (துறையூர்)

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*

ISBN: 978-81-936450-2-4

*eBOOK* ~ *மின் நூல்*



# நூல்முகம்

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே யுறுதி,
அகத்திலே அன்பினோர் வெள்ளம்,
பொறிக ளின்மீது தனியர சாணை,
பொழுதெலா நினதுபே ரருளின்
நெறியிலே நாட்டம் கருமயோ கத்தில்
நிலைத்திடல் என்றிவை அருளாய்,
குறிகுணம் ஏதும் இல்லதாய் அனைத்தாய்க்
குலவிடு தனிப்பரம் பொருளே.[3]

— பாரதியார்

எம்பெருமான் ஏழுமலையான் கருணை வெள்ளம் கோத்து என்னைச் சூழ்வதால் இச்சிறியேனின் உயர்நிலைப் பள்ளிக் கல்விப்பணி நினைவுக்குமிழிகள்-2 என்ற தலைப்பில் இலக்கியமாகின்றது. நாடு விடுதலை பெறுவதற்குமுன் நம் நாட்டில் வேலை வாய்ப்புகள் மிகக் குறைவு. இந்நிலையில் துறையூரில் பெருநிலக் கிழவர் ஆதரவில் உயர்நிலைப் பள்ளி ஒன்று தொடங்கப் பெற்றது. பள்ளி தொடங்கப்பெற்ற ஆண்டும் என் ஆசிரியப் பயிற்சி நிறைவு பெற்று (சைதை ஆசிரியர் கல்லூரியில்) நான் எல்.டி. பட்டம் பெற்ற ஆண்டும் மாதம் நாள் உட்பட ஒன்றாக அமைந்தன. இறைவன் திருவுளக் குறிப்பில் பள்ளியின் முதல் தலைமையாசிரியர் பதவி எனக்கென்றே அமைந்தது. தெய்வத்தின் கட்டளைப் படி நான் அப்பதவியில் அமர்ந்தேன். கீதையின் கருத்துப்படி ஆசிரியப் பணி என் சுதர்மமாக அமைந்தது. இப்பணியி லிருந்து கொண்டே மேலும் மேலும் கற்றேன். 'கற்றனைத்து ஊறும் அறிவு' என்பது வள்ளுவம் அல்லவா? இதனால் என் தகுதியும் திறமையும் வளர்ந்தன. வளர்ச்சிக்கேற்றபடி பணி யிடங்களும் பணியின் போக்கும் மாறிமாறி அமைந்தன. ஆனால் சுதர்மம் மாறாமலே இருந்தது இறைவனின் திருவுளக் குறிப்பாகும்.

இங்ஙனம் இறையருளால் என் நீண்ட வாழ்க்கையில், ஒரு சமயம் என் அரிய நண்பர் பேராசிரியர் டாக்டர்

---

3. பாரதியார் கவிதைகள்-சுயசரிதை. 49

**க. அன்பழகன்** (கல்வியமைச்சர்) ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் 'மிஸ்டர் சுப்பு, உங்கள் புறவளர்ச்சி குன்றியதாகத் தோன்றினும் உங்கள் அகவளர்ச்சி இமயம்போல் வளர்ந்திருப்பதை யான் காண்கின்றேன்' என்று கூறியதை உன்னுகின்றேன்; மகிழ்கின்றேன். இந்நிலையில்,

ஆணவமாம் இருட்டறையில்
கிடந்தசிறி யேனை
அணிமாயை விளக்கறையில்
அமர்த்திஅறி வளித்து
நீணவமாம் தத்துவப்பொன்
மாடமிசை ஏற்றி
நிறைந்தஅருள் அமுதளித்து
நித்தமுற வளர்த்து
மாணுறஎல் லாநலமும்
கொடுத்துலகம் அறிய
மணிமுடியும் சூட்டியஎன்
வாழ்முதலாம் பதியே
ஏணுறுசிற் சபையிடத்தும்
பொற்சபையின் இடத்தும்
இலங்குநடத் தரசேஎன்
இசையும் அணிந் தருளே.[4]

என்ற அருட்பிரகாச வள்ளலாரின் திருவாக்கும் நினைவில் குமிழியிடுகின்றது, பணியிலிருந்து ஓய்வுபெற்ற நிலையிலும் ஆய்வுப் பணியில் ஊக்கத்துடன் கற்பதிலும் கற்ற அறிவின் ஒளியில் எழுதுவதிலும் ஈடுபடுத்திய கருணாநிதியாகிய இறைவனின் கருணைப்பெருக்கினை எண்ணி எண்ணிக் களிக்கின்றேன். சிறியேனின் வரலாறு **தன்வரலாறு** இலக்கியமாக மலர்ந்தது அருட்பெருஞ்சோதியின் தனிப்பெருங் கருணையினாலாகும்.

என் வாழ்க்கை வரலாற்றின் ஒரு பகுதி (இரண்டாம் பகுதி) வெளிவருமா? என்று எண்ணித் தவித்துக் கொண்டிருந்த நிலையில் எம்பெருமானின் கருணையினால் கருணாநிதியின் தமிழக அரசு சிறிது நிதி உதவியது. முட்டுவழியில் மூன்றில் ஒரு பங்குகூட இல்லையாயினும் இறையருளால் நூல் வெளிவருகின்றது. **நினைவுக்குமிழிகள்-2** என்ற இந்

---

4. திருவருட்பா - ஆறாம்திருமுறை - அருள்விளக்க மாலை-77.

நூல் துறையூரில் ஒன்பதாண்டுகள் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியனாகப் பணியாற்றியபோது அமைந்த வாழ்க்கை குமிழிகளாக அமைந்திருப்பது. இந்த நூல் வெளிவருவதற்குச் சிறிது நிதி உதவிய தமிழக அரசுக்குத் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின்மூலம் என் இதயங் கனிந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்த நூலுக்கு அணிந்துரை நல்கிய திரு. **ஆ. பன்னீர் செல்வம்** 16 ஆண்டுகளாக நெருங்கிப் பழகிய நண்பர். 'உடன் பிறப்பில்லா உடம்புபாழ்' என்ற பழமொழி உடன்பிறப் பின்றி ஒரேமகனாகப் பிறந்த அடியேனுக்குப் பல அன்பர்கள் இறையருளால் தம்பிகளாக அமைந்து எனக்கு ஆன்மிகப் பலத்தைத் தந்து கொண்டுள்ளனர். 'தம்பியுடையான் பகை(டை)க்கு அஞ்சான்' என் பொன்மொழிக்கு இலக்கண மாக அமைந்து நேர்மையான ஆதரவாளராக (Moral supporters) இருந்து வருகின்றனர் என்றாலும் திருப்பதியி லிருந்தபோது அங்குத் தமிழ் வளர்க்கவும் (பல்கலைக் கழகத்தில்) ஓய்வுபெற்றபிறகு (அக்டோபர் 24, 1977) சென்னையில் குடியேறிய நாள்முதல் (14-1-1978) அரசு தமிழ் வளர்ச்சித்துறை ஒல்லும் வகையெல்லாம் என் சொந்த முயற்சியால் தமிழ் வளர்க்கவும் உதவி புரிந்து வருவது என் தமிழ்ப் பணிக்கு ஊக்கம் தந்து கொண்டிருப்பதை என்றும் மறக்காமல் போற்றத் தகுந்த செயலாகும்.

பெரும்பாலான அரசு ஊழியர்கள் தம்மை 'எசமானர் கள்' என்று கருதிப் பொதுமக்களுக்கு உதவியாக இருப்ப தில்லை என்பது கண்கூடு. எனினும், பாலைவனத்திலும் இடைச்சோலை (Oasis) போல், அப்பர் சுவாமிகள் மரபில் வந்தவர்களாகச் சிலர் 'என் கடன்பணி செய்து கிடப்பதே' என்ற மனப்பான்மையுடையவர்களாக இருப் பதைக் காணாமல் இல்லை. நம்மாழ்வார் வேறோர் நோக்கத்தில்,

> தொண்டே செய்துஎன்றும்
> தொழுது வழியொழுக
> பண்டே பரமன்
> பணித்த பணிவகையே[5]

என்று கூறியிருந்தாலும் இவர்கள் தம்மைச் சமூகத் தொண்டர்களாகக் கருதுபவர்கள், சமூகம் தமது வரிப்

5. திருவாய் 10.4;5

பணத்தின்மூலம் தமக்கு 'வாழ்க்கைப்படி' அளப்பதால் தாம் சமூகத் தொண்டர்கள் என்று கருதுபவர்கள். தொண்டு செய்வதைவிட பாவனைதான் முக்கியம்.

நான் அறிந்து கொண்டவரை திரு. பன்னீர்செல்வம் சுமார் 30 ஆண்டுகளாக அரசுத் துறையில் உண்மை ஊழியராகத் திகழ்கின்றார். குறைவேண்டிவருபவர்கட்கு இன்முகத்துடன் பேசுவது, இயன்றவரை, குறைகளைத் தீர்ப்பது, அல்லது தம் செயலுக்கு அப்பாற்பட்டிருந்தால், அதுவும் உண்மையில் குறை என்று கண்டு விட்டால், மேலிடத்திற்குப் பரிந்துரைப்பது போன்ற செயல்களால் பொதுமக்களின் மதிப்பிற்கும் மரியாதைக்கும் உள்ளவராகத் திகழ்கின்றார். அறிவியல் பட்டதாரியாக இருப்பதால் எதையும் அறிவியல் நோக்கில் காண்பவராகவும் திகழ்கின்றார். வாழ்க்கையின் பிரச்சினைகளைப் புதிர்க்கதிர் (X-ray) பார்வையுடன் நோக்கித் தெளிந்து ஒல்லும் வகையெல்லாம் உதவுபவர். அமைதியான போக்குடைய இவர் நல்ல இலக்கியச் சுவைஞர்; இறையுணர்வு மிக்கவர். 'பண்புடையார் பட்டுண்டு உலகு' என்பதைத் தெளிந்தவர். இத்தகைய ஒரு பேரன்பர்—இந்த நூலுக்கு அணிந்துரை வழங்கியது இந்நூலின் பெறற்கரிய பேறாகும்; என் பேறுமாகும். அணிந்துரை வழங்கிய அன்பருக்கு என் இதயம் கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலை எழுதி வெளிவருவதற்குத் தோன்றாத் துணையாக நின்று உதவியவன் வேங்கடவெற்பில் குன்றின் மேல் விளக்குபோல் எழுந்தருளியிருக்கும் வேங்கட கிருஷ்ணன் என்னும் சீநிவாசன். இவனே எனக்கு உடல் நலமும் மனவளமும் எதையும் தாங்கும் இதயமும் நல்கியவன். என்னைப் பல்வேறு பாங்கில் தமிழ்ப்பணியில் ஈடுபடுத்தி வருபவன். சமய நூல்கள் வெளிவரக் கணிசமான அளவு திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தின்மூலம் நிதிவழங்கத் திருவருள் புரிந்தும், பிறநூல்கள் வெளிவரத் தமிழ் வளர்ச்சி இயக்ககம் மூலம ஏதோ ஓரளவு நிதி கிடைக்க வழியமைத்துத் தந்தும் என்னை வாழ்வித்து வருபவன். இந்த வேங்கடத்து எழில்கொள் சோதியினை,

> உளன்கண்டாய், நல்நெஞ்சே!
> உத்தமன்; என்றும்
> உளன்கண்டாய்; உள்ளுவார்
> உள்ளத்து உளன்கண்டாய்;

வெள்ளத்தில் உள்ளானும்,
வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான்என்று
ஓர்.[6]

என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தால் மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்கிச் சரண் அடைகின்றேன்.

'வேங்கடம்'
AD-13 (Plot 3354)
அண்ணாநகர்
சென்னை-600 040
31-12-1989
தொ. பே. 621 15 83

ந. சுப்புரெட்டியார்

---

6. முதல். திருவந். 99

# நினைவுக் குமிழிகள் - 3

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சுயசரிதை
கால கட்டம் ,,,,,, 1950 ~ 1960 (காரைக்குடி)

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-936450-3-1

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

தெளிவுறவே அறிந்திடுதல், தெளிவுதர
மொழிந்திடுதல், சிந்திப்பார்க்கே
களிவளர உள்ளத்தில் ஆனந்தக்
கனவுபலகாட்டல் கண்ணீர்த்
துளிவரஉள் ளுருக்குதல்இங் கெவையெல்லாம்
நீயருளும் தொழில்களன்றோ?
ஒளிவளரும் தமிழ்வாணீ! அடியனேற்(கு)
இவையனைத்தும் உதவுவாயே[4]

—பாரதியார்

திண்ணைப் பள்ளிக்கூட வாழ்வில் சுமார் நான்கு ஆண்டுக் காலம் கணபதியின் தாளைக் கருத்தினில் வைக்கும் வாய்ப்புகள் இடைவிடாமல் இருந்தன. சின்னப் பிள்ளைகளாகிய நாங்கள் விடாதுஅவன் புகழ்பாடினோம். அவனுடைய அருளால்தான் என் உட்செவி திறந்தது; அகக்கண் ஒளிர்ந்தது. அமுதமும் விளைந்தது. வித்தையும் வளர்ந்தது. வெற்றியையும் தோல்வியையும், நன்மையையும் தீமையையும் சமமாக ஏற்கும் துணிவும் என்பால் ஏற்பட்டது. அசையா நெஞ்சமும் அருளப் பெற்றேன். எதிர்பாராத நிலையில் மனம் துன்புற்றிருந்தபோது துணிவும் என்பால் இருந்தமைக்கு அவன் அருளே காரணம் என்பதை உணர்கின்றேன். இந்நிலையில் நான்கு நாட்கள் (1949—மார்ச்சு) காரைக்குடிக் கம்பன் திருநாளில் பார்வையாளனாகக் கலந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. இதனால் 'கம்பன் அடிப்பொடி' சா.கணேசனின் நட்பு கிடைத்தது. பழகியது சிறிது காலமே. எனினும் 'ஒரு நாள் பழகினும் பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்கும் வேர் வீழ்க்குமே' என்ற

4. பாஞ்சாலி சபதம்—சூதாட்டம்-154

அதிவீரராமபாண்டியனின் திருவாக்குப்படி அந்தக் கேண்மை அவர் உள்ளத்தில் ஆழப்பதிந்திருந்தது அந்தக் கற்பக விநாயகக் கடவுளின் கருணையே என்று இப்போது நினைந்து பார்க்கின்றேன். இந்தக் கருணையின் விளைவு தான் புதிதாகத் தொடங்கப்பெற்ற வள்ளல் அழகப்பரின் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பணி ஏற்கவும் காரைக்குடி வாழ்வு அமையவும் சா. கணேசன் அவர்கள் கருவியாக அமைந்தார்கள். பத்தாண்டுகள் தொடர்ச்சியாகவும் ஆறாண்டுகள் விட்டுவிட்டும் அமைந்த காரைக்குடி வாழ்வு தான் நினைவுக் குமிழிகள்—3 என்று இலக்கிய வடிவம் பெறுகின்றது.

காரைக்குடி வாழ்வில்தான் துறையூர் வாழ்வில் அங்குரித்த இலக்கிய வாழ்வு —அகவளர்ச்சி—பேராசிரியர் க. அன்பழகன் கூறியது போல் 'இமயம்போல்' வளர்வதற் கேற்ற சூழ்நிலை ஏற்பட்டது. இந்த நிலையை எண்ணும் போது,

தடித்தஓர் மகனைத் தந்தையீண் டடித்தால்
 தாயுடன் அணைப்பள்; தாய் அடித்தால்
பிடித்தொரு தந்தை அணைப்பன் ஈங்கெனக்குப்
 பேசிய தந்தையும் தாயும்
பொடித்திரு மேனி அம்பலத் தாடும்
 புனிதநீ ஆதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்
 அம்மைஅப் பாஇனி ஆற்றேன்[5]

என்ற வடலூர் வள்ளலாரின் திருவாக்கும் நினைவுக் குமிழியாகின்றது. என் வாழ்க்கையில் ஏற்பட்ட இக்கட்டு களைத் தகர்க்கும் பாங்கில் ஏற்பட்ட கல்லூரிப் பணி அமைந்தமைக்கு வான்வழியாக இலங்கைக்குத் தாவிச் சென்ற அநுமனுக்கு மகேந்திர மலை அமைந்ததுபோல்

5. திருவருட்பா—ஆறாம் திருமுறை—பிள்ளைச் சிறு விண்ணப்பம்—1

என் துறையூர் வாழ்வும் கடுமையான உழைப்பும் அமைந்தன என்று நீள நினைந்து பார்க்க முடிகின்றது.

என் வாழ்க்கை வரலாற்றின் இந்தப் பகுதி (மூன்றாம் பகுதி) வெளிவருவதற்கும் எம்பெருமானின் கருணையினால் கருணாநிதியின் தமிழகஅரசு சிறிது நிதிஉதவியது. 'தினைத் துணை நன்றி'யாகஇருக்கும் இந்த உதவியினைப் 'பயன் கருதிப் பனைத் துணையாகக்' கொள்கின்றேன். அரசின் சால்பு எவ்வளவு பெரிதோ அவ்வளவு பெரிதாயிற்று இந்த உதவியும்—'செயப்பட்டார் சால்பின் வரைத்து'. இங்ஙனம் உதவிய தமிழக அரசுக்குத் தமிழ் வளர்ச்சிஇயக்ககத்தின் மூலம் என் உளங்கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்த நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டு உதவிய ஸ்ரீ கோமதி அச்சக உரிமையாளர் திரு. சி. சரவணகுமார் அவர்கட்கும்; எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக் கட்டை தயாரித்து மூன்று வண்ணத்தில் அச்சிட்டு உதவிய கலைமன்னர் திரு. P. N. ஆனந்தனுக்கும்; நூலைக் கவின் பெறக் கட்டமைத்துத் தந்த அருமைத்தம்பி V. திருநாவுக்கரசுக்கும் என் உளங்கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அணிந்துரை நல்கிய டாக்டர் ச. மெய்யப்பன் என் நெடுநாளைய நண்பர். சுமார் முப்பது ஆண்டுகள் நெருங்கிப் பழகியுள்ளோம். அண்மையில் டாக்டர் பட்டம் பெற்றவர், பல்லாண்டுகட்கு முன்னமே பெற்றிருக்க வேண்டிய பட்டம் தாமதமாகப் வந்து சேர்ந்தது. எதையும் ஆழ்ந்து கற்பவர். ''உரைக்கப் படும் பொருள் உள்ளத்து அமைத்து விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து, கொள்வோன் கொள்வகை அறிந்து, அவன் உளங்கொளக்கோட்டமில் மனத்தில்'' கொடுக்கும் பண்பை இவருடைய மாணாக்கர்கள் பேசிக் கொள்வதைக் கேட்டு மகிழ்ந்ததுண்டு. 'செல்வத்துப் பயனே ஈதல்' என்ற ஆன்றோர் மொழியை மனத்தில் இருத்தி 'ஈத்துவக்கும் இன்பம்' கண்டவர். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் பல அறக்கட்டளைகளை

ஏற்படுத்திக் கல்வி முன்னேற்றத்தில் பேரார்வம் காட்டு பவர். 'நல்லவர்; மனத்தூய்மையுடையவர்.'; 'வல்லவர், விரைந்து செயற்படும் வேந்து.' என்பால் அளவற்ற அன்பும் மரியாதையும் காட்டி வருபவர். நகரத்தார் களிடம் காணப்படும் எல்லா நற்பண்புகளையும் இவரிடம் காணலாம். சோம்பல் ஒன்று மட்டும் இவரிடம் காண முடியாதது. பம்பரம்போல் சுழன்று பணியாற்றுபவர். இத்தகைய என் கெழுதகை நண்பரின் அணிந்துரை இந் நூலுக்குப் பெருமை அளிக்கின்றது. யானும் பேறு பெற்றது போன்ற பெருமை அடைகின்றேன். அணிந்துரை அளித்த அன்பருக்கு உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

ஓய்வு பெற்ற நிலையில் எனக்கு உடல் நலமும் மன வளமும் எதையும் தாங்கும் இதயமும் நல்கி என்னைத் தமிழ்ப் பணியில் ஈடுபடுத்தியும் சமய நூல்கள் வெளிவரக் கணிசமான அளவு திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தின் மூலம் நிதி வழங்கியும் தமிழ் வளர்ச்சி இயக்ககம் மூலம் ஏதோ ஓரளவு நிதி கிடைக்க உதவவும் வழியமைத்துத் தந்தும் என்னை வாழ்விக்கும் 'வேங்கடம் மேய விளக்கினை',

> இன்றுஆக நாளையே ஆக,இனிச் சிறிது
> நின்றுஆக நின்அருள் என்பாலதே; நன்றாக
> நான்உன்னை அன்றிஇலேன் கண்டாய்; நாரணனே!
> நீஎன்னை அன்றி இலை.[6]
>
> —திருமழிசையாழ்வார்

என்ற ஆழ்வார் பாசுரத்தால் மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்கிச் சரண் அடைகின்றேன்.

'வேங்கடம்'
AD-13; (Plot 3354)
அண்ணாநகர்
சென்னை—600 040

ந. சுப்புரெட்டியார்
தொ.பே. 62 155 83

நவம்பர் 29, 1989

6. நான்முகன் திருவந்தாதி—7

# சடகோபன் செந்தமிழ்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

நம்மாழ்வாரையும் அவர் தூயாசி விளங்கி ஈன்ற தமிழ் மறையையும்
ஒரு சேர இணைத்துப் பயில்கின்ற முயற்சியை எடுத்துக் காட்டுகின்றது
இந்நூல். அதனோடு கூட இலக்கியத்திற்கும் சமயத்திற்கும்
உள்ள பிரிக்க இயலாத உறவினைக் காட்டும் வகையிலும்,
இந்நூல் நம்மாழ்வாரின் பக்தியில் விளைந்த
பாசுரங்களை விளக்குகின்றது.

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*




ISBN: 978-81-939637-2-2

eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

*மறைப்பாற் கடலைத் திருநாவின்*
*மந்தரத் தாற்கடைந்து*
*துறைப்பாற் படுத்தித் தமிழா*
*யிரத்தின் சுவையமிர்தம்*
*கறைப் பாம்பணைப் பள்ளியான் அன்பர்*
*ஈட்டம் களித்தருந்த*
*நிறைப்பான் கழலன்றிச் சன்ம*
*விடாய்க்கு நிழலில்லையே*[2]

**— பிள்ளைப்பெருமாள் அய்யங்கார்**

பன்னிரண்டு ஆழ்வார்களைப்பற்றியும் அவர்களின் அருளிச் செயல்கள் பற்றியும் எளிய நடையில் நூல்கள் எழுதிப் பொதுமக்கட்குப் பக்தி விருந்தளிக்க வேண்டும் என்ற என்பேரவா நிறைவேறும் பாங்கில் **'சடகோபன் செந்தமிழ்'** என்ற தலைப்பில் நம்மாழ்வார்பற்றியும் அவர்தம் அருளிச் செயல்களை விளக்கும் பாங்கிலும் இது **ஐந்தாவது நூலாக** வெளிவருகின்றது.

இந்தநூல் பதினைந்து இயல்களாக அமைந்துள்ளது, முதல் இயல் ஆழ்வாரின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக உரைக்கின்றது. இரண்டு முதல் ஐந்து இயல் முடிய உள்ள இயல்கள் ஆழ்வார் முறையே சோழநாடு, பாண்டி நாடு, மலைநாடு, வடநாடு ஆகியவற்றிலுள்ள சில திவ்விய தேசங்களை மங்களாசாசனம் செய்ததைக் குறிப்பிட்டுப் பாசுரவிளக்கமும் தருகின்றன. ஆறாம் இயல் ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப்பற்றிச் சுருக்கமாக விளக்கம்

---

2. திருவரங்கக் கலம்பகம்—நம்மாழ்வார் துதி

தருகின்றது. ஏழாவது இயலில் ஆழ்வார் பாசுரங்களில் அமைந்துள்ள அகப்பொருள் தத்துவம் விரிவாக விளக்கப் பெறுகின்றது. எட்டாவது, ஒன்பதாவது பத்தாவது இயல்கள் திருவாய்மொழியிலும் திருவிருத்தத்திலும் அமைந்த தோழி, தாய், மகள் பாசுரங்களின் தத்துவத்தை விரிவாக விளக்குகின்றன. பதினொராவது இயலில் ஆழ்வாரின் தூது பாசுரங்கள் விளக்கம் பெறுகின்றன. பன்னிரண்டாவது இயலில் ஆழ்வாரின் இறையநுபவம் காட்டப்பெறுகின்றது. பதின்மூன்றாவது, பதினான்காவது, பதினைந்தாவது இயல்களில் முறையே வைணவதத்துவங்களாகிய அர்த்த பஞ்சகம், தத்துவத்திரயம், மந்திரங்கள் ஆழ்வார் பாசுரங்களின் அடிப்படையில் விளக்கம் பெறுகின்றன. பின்னிணைப்புகள் மூன்றும் நூலுக்குத் துணையாக அமைந்துள்ளன.

திருப்பதித் தமிழ்ப்பணியிலிருந்து ஓய்வு பெற்று 1978 சனவரி 14ஆம் நாள் சென்னையில் குடியேறியதிலிருந்து 'தேனாய், கன்னலாய், அமுதாய்'த் தித்திக்கும் ஆழ்வார்களின் பாசுரங்களை 'வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது' (நான். திருவந் 63) என்றவாறு என் காலம் கழிகின்றது. என் ஆராய்ச்சியின் போது ஆழங்கால் பட்ட பாசுரங்களை மீண்டும் மனத்தில் இருத்தி அசைபோடுவதற்குப் பெற்ற வாய்ப்பின் காரணமாக இந்நூல் வெளிவருகின்றது. என் அநுபவம் இப்பனுவலைப் படிப்போரிடமும் ஏற்படுமானால் அதனை யான் பெற்ற பெரும் பேறாகக் கருதுவேன்.

தமிழகத்தில் சுமார் இருபது ஆண்டுகளும் ஆந்திரத்தில் சுமார் இருபது ஆண்டுகளும் பணியாற்றி ஓய்வு ஊதியம் கூடப் பெறாது தவிக்கும் அடியேனுக்கு ஏழுமலையான் ஓரளவு நிதி வழங்கி (நூலின் முட்டுவழியில் சுமார் 50% விழுக்காடு) உதவி புரிந்திராவிடில் இந்நூல் அச்சுவாகனம் ஏறிக் கற்போர் கரங்களில் கவினுறத் தவழ்வதற்குவாய்ப்பே

இருந்திராது. 'செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல்' என்று பேருண்மையை அறிந்து செல்வச் சீமானாகத் திகழும் ஏழுமலையான் 'அகலகில்லேன் இறையும்' என்று அவன் திருமார்பை விட்டு அகலாதிருக்கும் செல்வச் சீயாட்டியைத் தாங்கிக் கொண்டிருப்பவன். இந்நிலையில் நாடோறும் எண்ணற்ற பக்தர்கள் அவனுடைய கருவூலகத்தை நிரப்பி வழியச் செய்து கொண்டுள்ளனர். இந்த உறுபெறுஞ்செல்வத்தை அவன் அடியார்கள்பற்றியும் அவனைப் பற்றியும் எழுதப் பெறும் நூல்கட்கு வரையாது வழங்கும் நிதி உதவித் திட்டத்தில் இந்நூலும் நிதி உதவிபெற்று வெளிவருகின்றது. இந்த 'வேங்கடம் மேவிய விளக்கு' **தாயுமான அடிகள், பரகாலன் பைந்தமிழ், வடலூர்வள்ளல், பட்டினத்தடிகள்** முதலான பக்திப் பனுவல்கட்கும் நிதி ஒளி காட்டி அவற்றை அச்சேறச் செய்வான் என்ற நம்பிக்கை என்பால் உண்டு. இவனது கருவியாக இயங்கிவரும் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாருக்கும் குறிப்பாக திரு I.L N. **சாஸ்திரி** திரு K. **சுப்பாராவ்,** திரு N.S. இராமமூர்த்தி ஆகியோருக்கும் என் அன்புகலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டு உதவிய கவின்கலை அச்சகத்தாருக்கும் கவிஞர் **நாரா. நாச்சியப்பனுக்கும்;** எழில்கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து நான்கு வண்ணத்தில் அச்சிடும் வரையில் பொறுப்பேற்று உதவிய ஓவிய மன்னர் திரு P.N. ஆனந்தன் அவர்கட்கும்; காப்புறை (Lamniation) போட்டு உதவிய மாருதி லாமினேஷன் உரிமையாவர் திரு **பார்த்திபன்** அவர்கட்கும்; இவ்வளவும் ஆனநிலையில் அழகிய முறையில் கட்டமைத்துக் கற்போர் கையில் கவினுறத்தவழச் செய்த திரு. V. **திருநாவுக்கரசுக்கும்** என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

இந்தப் பக்திப் பனுவலுக்குச் 'சிறப்புப் பாயிரமாலை' வழங்கிச் சிறப்பித்தவர் புதுவைப் பல்மருத்துவர் திரு. மு. இராதாகிருட்டிணன் என்பார். இளமையில் பாவேந்தர் பாரதிதாசனாரிடம் நன்னூல், யாப்பு, சிற்றிலக்கியங்கள் பயின்று கவிதைஇயற்றக் கற்றவர். புதுவையில் பல பெரியார் களிடம் தமிழ் இலக்கியங்கள், இலக்கணங்கள் இவற்றை முறையாகப் பாடங்கேட்டுப் பயின்றவர். வைணவப் பெரியார்களிடம் திவ்வியப் பிரபந்தம் முழுவதும் முறை யாகப் பாடங்கேட்டு உணர்ந்தவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'வித்துவான்' பட்டம் பெற்றவர். பிரெஞ்சுமொழி நன்கு பயின்றவர்; ஆங்கிலமும் நன்கு அறிவார்.

புதுவை அரசுப் பொது மருத்துவ மனையில் பல ஆண்டு பல் மருத்துவராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் இயற்றிய சித்த மருத்துவம் பற்றிய பல பாடல்களைக் கண்டு மகிழ்ந்த பாவேந்தர் இவருக்குச் 'சித்தன்' என்றே பெயரிட்டு வாழ்த்தியுள்ளார். பாவேந்தரின் 'குயில்' இதழில் இவர் பாடல்கள் வெளிவந்தன. அந்த இதழ்ப் பணியில் தம்மை ஐக்கியப்படுத்திக் கொண்ட பெருமகனார் இவர். இவர் கலந்து கொண்ட பாட்டரங்கங்கள் எண்ணற்றவை. ஆற்றிய சொற்பொழிவுகள்—குறிப்பாகச் சமயச் சொற் பொழிவுகள் கணக்கிலடங்கா. இவர் கலந்து கொள்ளாத வைணவ அரங்குகளே இல்லை எனலாம். இவருக்குக் கம்பனில் ஈடுபாடு மிக்குண்டு. கம்பன்விழாக் கவியரங்குகளில் இவர் கொண்ட பங்கு மிகப் பெரிது.

பல்லாண்டுகட்கு முன்னர் வைணவ சீலர் திரு இரா. தேசிகம்பிள்ளை அவர்களுடன் இணைந்து திருமால் திருநெறி மன்றத்தைச் சிறப்புடன் நடத்தியவர். கடந்த பதினொரு ஆண்டுகளாகப் புதுவை ஸ்ரீமத் இராமாநுஜ நாவலர் சுவாமி கள் மன்றத்தை அதன் செயலராக நின்று சீருடனும் சிறப்பு டனும் இயக்கி வருபவர். இவை தவிர புகழ்பெற்ற புதுவைக்

கல்விக் கழகத்தின் தலைவராகவும், ஸ்ரீவேதபுரீசர், ஸ்ரீவரத ராஜம் பெருமாள் நூல் நிலையத்தின் செயலராகவும் பணி யாற்றிப் பொதுத் தொண்டில் தம்மை உட்படுத்திக் கொண்டவர். இன்னும் புதுவையிலுள்ள பல்வேறு மன்றங் களில் இவருக்குப் பெரும் பங்கு உண்டு.

இத்தனைக்கும் மேலாம 'நல்ல மனிதர்', 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற வள்ளுவத்திற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்பவர். அடியேன்பால் மிக்க அன்புடையவர்.

இத்தகைய 'மாமனிதர்'—வைணவமாமணி—பல நூல் களின் ஆசிரியர் - இந்நூலுக்குச் 'சிறப்புப் பாயிரமாலை' வழங்கிச் சிறப்பித்தது இந்நூல் பெற்ற பெரும்பேறாகும்; அடியேனின் பேறுமாகும். இப்பெரியாருக்கு அடியேனின் இதயங் கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அணிந்துரை அருளிச் சிறப்பித்தவர் பேராசிரியர் டாக்டர் தி. வைத்தமாநிதி. சுருக்கமாகச் சொன்னால் இவர் வைகுந்த வாசியான பேராசிரியர் அ. சீநிவாசராகவனின் 'இலக்கிய -சமய வாரிசாகத்' திகழ்ப வர். கடந்த சுமார் நாற்பது ஆண்டுகளாகக் கல்லூரியில் இளங்கலை—முதுகலை ஆங்கிலத்துறையில் பேராசிரியராக வும் துறைத்தலைவராகவும் பணியாற்றியவர். பல நூல் களின் ஆசிரியர். அனைத்திந்திய ரீதியில் பல் வேறு கருத் தரங்குகளில் பங்கு கொண்டு ஆய்வுக்கட்டுரைகள் வழங்கி யவர். சில கருத்தரங்குகளைத் தாமே இயக்குநராக நின்று நடத்திப் பல அறிஞர்களின் கவனத்தை ஈர்த்தவர். பல ஒப்பீட்டு இலக்கியக் கருத்தரங்குகளில் பங்கு கொண்டு ஆங்கில—தமிழ் இலக்கிய அணங்குகளின் வளப்பங்களை அறிஞர்கள் முன்வைத்துத் தம் இரு மொழிப் புலமையினால் இரு அன்னையர்களின் புகழை ஒளி பெறச் செய்து வருபவர். கல்வி, இலக்கியம், புதினம், பக்தி இலக்கியம், ஆசிரியம்

போன்ற பல துறைகளில் ஈடுபாடு கொண்டு அவற்றின் மேம் பாட்டைத் தமிழ் உலகுக்கு தவறாமல் அளித்துக் கொண்டு வருபவர். கம்பனில் மிக்க ஈடுபாடு கொண்டவர். ஆழ்வார் அவதரித்த திருக்குருகூர் ''மண்ணின் மைந்தராதலால்'' ஆழ்வார்பாசுரங்களில் இயல்பாகவே ஈடுபாட்டுடன் வைணவ நெறியைத் தம்பேச்சாலும், எழுத்தாலும் ஒளிபெறச் செய்து கொண்டிருப்பவர். தற்சமயம் மதுரை—காமராசர் பல்கலைக் கழக திருக்குறள் ஆய்வு மையத்தில் திருக்குறள் பரிமேலழகர் உரையை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பணியில் ஈடு பட்டுள்ளார். அரைநூற்றாண்டாக என்பேரன்புக்கும் பெரு மதிப்பிற்கும் பாத்திரமான பேராசிரியர் பரமபதவாசி அ. சீநிவாசராகவனின் அணுக்கத்தொண்டர்; பருந்தும் நிழலும்போல் நின்று அவருடன் இணைந்து பல்வேறு பாங்குகளில் மொழி, இலக்கியம், கல்வி, போன்றதுறைகளில் அரும்பணி ஆற்றியவர். இப்போது சாத்தூர் அருளிச் செயல் ஆய்வகத் தலைவராகவும், நெல்லை மாவட்டக் கம்பன் கழகத் தலைவராகவும் இருந்து கொண்டு சமய, இலக்கியப் பணிகளை ஆற்றிவருபவர்.

இத்தகைய கற்றுத் துறைபோய வித்தகர் பழகுவதற்கு இனியர்; 'பண்புடையார் பட்டுண்டு உலகம்', 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்ற பொன்மொழிகட்கு எடுத்துக்காட்டாகத் திகழ்பவர். ஆயினும், 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்ற வள்ளுவர் வாக்கை அணிகலனாகக் கொண்டவர். வைணவ நெறியின் உயிர் நாடியும் இதுதான். அறிவோர்க்கழகு கற்றுணர்ந்து அடங்கல்தானே நம் முன்னோர் நமக்குக் காட்டிய ஒளி விளக்கு? இத்தகைய பேரன்பர், வைணவ சீலர், பெரும் பேராசிரியரின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பெரும் பேறு; அடியேனின் பேறுமாகும். அணிந்துரை அருளிய அண்ணலுக்கு என் இதயம் கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்,

பரமபதவாசி திரு. கே. சந்தானம் ரெட்டியார் தென் னார்க்காடு, மாவட்டம் சொர்ணாவூரைச் சேர்ந்தவர். 'குலத்தளவே யாகுமாம் குணம்' என்ற கூற்றுக் கேற்ப நற் குணங்கள் நிறையப் பெற்றவர். திருவரங்கம் பெரிய ஆச்ரமம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளின் ஆசிகட் கிலக்கானவர். நல்லோர் கூட்டத்தை என்றும் நாடி நிற்பவர். திருமால் திருவடிக்கே அற்றுத் தீர்ந்த நெஞ்சினர், திருமகள் திருவருள் நிறைந்தவர்; செல்வச் செழிப்புள்ளவர். ஒழுக்கத்தால் உயர்ந்த உயர்குணச் செம்மல். பூதூர் பெரும் புலவர் தி. வேங்கிடசாமி ரெட்டியார் (நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பதிப்பாசிரியர்) அவர்களின் புருஷகாரத்தால் திருவேங்கடத்தான் திருமன்றம் கண்ட திருவருட் செல்வர். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை நன்கு சோதித்து வெளி யிடுவதற்கு நிதியுதவி அளித்து முழுப் பொறுப்பையும் ஏற்றவர், 'செல்வத்துப் பயனே ஈதல்; துய்ப்போம் எனினே தப்புந பலவே' (புறந்-189) என்ற புறப்பாட்டின் பொருளை உணர்ந்த பொன்மனச் செம்மல். ஈத்துவக்கும் இன்பம் கண்ட ஏந்தல். திருவேங்கடவனை நெஞ்சில் நிறுத்திய நெறியினர். அவன் திருவடிவாரத்தில் அவன் பெயரால் நிறுவப்பெற்ற பல்கலைக் கலகத்தில் தமிழ்த்துறையில் இவர் ஓர் அறக்கட்டளை நிறுவி வைணவத்தையும் ஆழ்வார் பிரபந்தங்களையும் பரப்புவதில் பெருவிருப்பினர்; அதனைச் செய்யும் முன்னர் திருமால் திருவடியினைச் சென்றடைந் தவர். இவர்தம் குடிவழியினர் அதனை நிறைவேற்றினால் பரமபதத்தில் உள்ள இவர் ஆன்மா பூரித்து மகிழும்; மன நிறைவு கொள்ளும். இத்தகைய அன்பரின் அருந்தொண்டின் நினைவாக இந்நூலை அவருக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன்; பிரபந்தத்தை நன்முறையில் பதிப்பிக்கக் காரணமாக இருந்த இவர் ஆன்மா மன நிறைவு கொண்டு மகிழும் என்பது என் திடமான நம்பிக்கை.

'நம்மாழ்வார் தத்துவம்' பற்றி ஆய்ந்து ஆய்வுக் கட்டுரை யைப் பெரிய அளவில் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டு

டாக்டர் (பிஎச்.டி.) பட்டம்பெற்ற (1969-இல்)[3] அடியேனுக்கு நம்மாழ்வார் பற்றி ஈரத்தமிழில் ஒரு பெருநூல் எழுதி வெளியிட வேண்டும் என்ற பேரவா என்னிடம் அடிக்கடிக் குமிழியிட்டுக் கொண்டே இருந்தது. அதற்கு ஆண்டவன் அருளும் ஆழ்வார் ஆசியும் யான் அடைவதற்கு இருபது ஆண்டுகள் ஆயின. இந்த நூலை யான் வெளியிடுவதற்கு என் இதயத் தேரை நடத்தித் தமிழ்ப்பணி, அறிவியல் பணி, சமயப் பணி ஆற்றுவதற்கு நல்ல உடல் நலத்தையும் மன வளத்தையும் நல்கி அந்தர்யாமியாக என் இதயத்தில் எழுந்தருளியிருக்கும் முத்திக்கு வித்தகன் என்றே சுருதி முறையிடும் வேங்கடத்து அச்சுதனை'[4] மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்கிச் சரண் அடைகின்றேன்.

முன்னே பிறந்திறந்து
மூதுலகிற் பட்டவெல்லாம்
என்னே மறந்தனையோ
என்நெஞ்சே! — சொன்னேன்
இனிஎதிரா சன்மங்கள்
இன்றுமுதல் பூதூர்
முனிஎதிரா சன்பேர்
மொழி.[5]

— பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்

ந. சுப்புரெட்டியார்
தொ. பே. 615583

'வேங்கடம்'
AD-13, (பிளாட் 3354)
அண்ணா நகர், சென்னை-600 040
நாள் : காந்தி ஜயந்தி
2-10-1989.

3. திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் (திருப்பதி) மூலம். இந்த நூலைப் பல்கலைக் கழகமே வெளியிட்டுள்ளது.
4. திருவேங். அந். 33
5. நூற். திருப். அந். 3.

# நினைவுக் குமிழிகள் - 4

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சுயசரிதை

கால கட்டம் ,,,,,, 1960 ~ 1977 (திருப்பதி)

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*

ISBN: 978-81-936450-4-8

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

என்கண்ணை மறந்துன்இரு கண்களையே
என்னகத்தில் இசைத்துக் கொண்டு
நின் கண்ணாற் புவியெல்லாம் நீயெனவே
நான்கண்டு நிறைவு கொண்டு
வன்கண்மை மறதியுடன் சோம்பர்முதல்
பாவமெலாம் மடிந்து, நெஞ்சில்
புன்கண்போய் வாழ்ந்திடவே, கோவிந்தா
எனக்கமுதம் புகட்டு வாயே![4]

**1941**-ஆண்டு ஜூன் முதல் துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியனாகப் பணியாற்றிய காலம் முதல் பல்கலைக்கழகத்தில் பணியாற்ற வேண்டும் என்ற கனவு இருந்து கொண்டு வந்தது. இந்தக் கனவு 1950 ஜூலை மாதம் காரைக்குடிக் கற்பகநிலையவிநாயகமூர்த்தி (சா.க)யின்கருணையால் நான் சிறிதும் எதிர்பாராமல் புதிதாகத்தொடங்கப்பெற்ற அழகப்பாஆசிரியர்க் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியனாகப் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்ததால், சிறிது நனவாகியது. இங்குப் பணியாற்றிய பத்தாண்டுக் காலத்தில் அறிவியல், கல்வியியல், கல்வி உளவியல், சங்க இலக்கியங்கள், கம்பராமாயணம், வில்லி பாரதம் போன்றவற்றில்அதிகமாக ஆழங்கால்பட்டு நுணுகிப் பயின்றேன். பலதுறைகளில் ஏழு பெரிய நூல்கள் எழுதி மிகுபுகழ் பெற்றேன். இக்காலத்தில் 1958 தொடங்கிச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் நுழைய மூன்று முறை முயன்றேன். என் தகுதி—திறமையால் கிடைக்கும் வாய்ப்புகள் இருந்தும், பழம் நழுவிப் பாலில் விழாமல், கீழே வீழ்ந்தது. நான் திருப்பதியில் பணியாற்ற வேண்டிய வாய்ப்பு தருவதற்காகவே ஏழுமலையான்

4. பா. க. கோவிந்தன் பாட்டு—3

எனக்குக் கிடைக்காமல் செய்தான். என்னைத் தவிர வேறு எவரும் பத்து ஆண்டுகள் இன்னல்களைப் பொறுக்க முடியாது நழுவிப் போவர் என்பது என் கருத்து. அப்போது நிலவிய சூழ்நிலைகளை ஆராய்ந்தால் இது எளிதில் புலனாகும். 'நான் இல்லை எனில் திருப்பதியில் பல்கலைக் கழக மட்டத்தில் தமிழ் இல்லை' என்பது ஏழுமலையான் திருவுளப் பாங்காகும் என்ற நிலையை உருவாக்கினவன் அந்த 'பைந்தமிழ்ப் பின் சென்ற பசுங் கொண்டலா'கும். என் திருப்பதி வாழ்வின் இந்த வரலாறே முக்கியமாகக் குமிழிகளின் நான்காம் பகுதியாக இலக்கிய வடிவம் பெறுகின்றது.

திருப்பதி வாழ்வில் யான் சந்தித்த இன்னல்கள், இக்கட்டுகள், நண்பர்களாக இருந்து குடிலர்களாகவும் கட்டியங்காரர்களாகவும் இருந்து கொண்டு விளைவித்த சதிகள் என்னிடம் சுயநலம் மருந்துக்குக் கூடக் கிடைக்கா மையால் அவை ஆதவனைக்கண்ட பனிபோல் விலகின மையைச் சிந்திக்கும்போது,

> புண்ணிலே புகுந்த கோல்எனத் துயரம்
> புகுந்தெனைக் கலக்கிய போதும்
> கண்ணிலே எனது கருத்திலே கலந்த
> கருத்தனே நின்றனை அல்லால்
> மண்ணிலே வயங்கும் வானிலே பிறரை
> மதித்திலேன் மதிக்கின்றார் தமையும்
> நண்ணிலேன் வேறொன் றெண்ணிலேன் உனையே
> நம்பினேன் கைவிடேல் எனையே[5]

என்ற வடலூர் வள்ளலாரின் பாடலை என் நா நவிற்றி என்னையும் மறக்கச் செய்தது. ஒரு சில நாளில் (செப்டம்பர்—1969 என்பதாக நினைவு) ஏழுமலையான் திருவருளால் தமிழக அரசின் ஆண்டுதோறும் ரூ 10000/-

---

5. திருஅருட்பா— ஆறாந் திருமுறை. அபயத்திறன்-5 (3557)

வீதம் ஐந்தாண்டுகட்கு வழங்குவதாக உள்ள ஆணை வந்து சேர்ந்தது. இதனால் என்னிடம் புதிய உற்சாகம் பிறந்தது. இரவும் பகலும் கடுமையாக உழைத்து தமிழ்த் துறையை வளர்த்தேன். இந்தக் காலத்தில்தான் (1970—77) ஏழுமலையான் என்னை எண்ணற்ற சோதனைக்குள்ளாக்கி வாட்டி வளைவு எடுத்தான். எனினும், எதையும் தாங்கும் இதயத்தையும் அளித்தமையால் நன்கு பணியாற்ற முடிந்தது. திருப்பதியில் நண்பர்கள் பலர் நான் பட்ட துன்பங்களையும் தொல்லைகளையும் அறிவார்கள். ஆயினும், ஏழுமலையான் குன்றின் மேலிட்ட விளக்குபோல் தமிழகமெங்கும் என் புகழ் பரப்பினான். இந்தக் குறிப்புகளையெல்லாம் தாங்கிக் கொண்டு **நினைவுக் குமிழிகள்** (நான்காம் பகுதி) வெளி வருகின்றது. சில்வாழ் பல்பிணிச் சிறியேன் மறைந்த பிறகும் திருப்பதியில் தமிழ் வளர்க்க யான் மேற்கொண்ட முயற்சி வரலாறாக என்றும் நின்று நிலவும் என்பது என் திடமான நம்பிக்கை.

என் வாழ்க்கை வரலாற்றின் இப்பகுதி (நான்காம் பகுதி) பெரிதாக வளர்ந்தது; துறையூர், காரைக்குடியில் பணியாற்றிய காலத்தைவிட சற்றேறக்குறைய இரட்டிப்பான காலம் (17 ஆண்டுகள்) ஆதலால் நூல் வளர்ந்ததில் வியப்பில்லை. இப்பெரிய நூல் வெளிவருமா? என்று எண்ணித் தவித்துக் கொண்டிருந்த நிலையில் எம்பெருமானின் கருணையினால் கருணாநிதியின் தமிழக அரசு ரூ 8000/-நிதி உதவியது (இது அரசுத் திட்டத்தில் அதிகபட்ச உதவி). இது கிட்டத்தட்ட முட்டுவழியில் மூன்றில் ஒரு பங்காக இருந்தபோதிலும் இறையருளால் நூல் வெளி வருகின்றது. அரசின் சால்பு எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரிதாயிற்று இந்த உதவியும்—'செயப்பட்டார் சால்பின் வரைத்து'. இங்ஙனம் உதவிய தமிழக அரசுக்குத் தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின்மூலம் என் நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இந்த நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டு உதவிய ஸ்ரீ கோமதி அச்சக உரிமையாளர் திரு. சி. சரவணக்குமார் அவர்கட்கும், எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக்கட்டை தயாரித்து நான்கு வண்ணத்தில் அச்சிட்டு உதவிய கலை மன்னர் திரு P. N. ஆனந்தனுக்கும், நூலைக் கவின் பெறக்கட்டமைத்துத் தந்த அருமைத் தம்பி V. திருநாவுக்கரசுக்கும் என் உளங்கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அணிந்துரை நல்கிய பேராசிரியர் தானியேல் தேவ சங்கீதம் எம்.ஏ. வகுப்பு தொடங்கப்பட்ட ஆண்டில் (1970) முதலாவதாகச் சேர்ந்த முதல் மாணக்கர். கற்பதில் ஆர்வமும் அக்கறையும் காட்டி ஆசிரியர்களின் அன்பைக் கவர்ந்தவர். எம். ஏ.யில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ந்து திருவள்ளுவர் தங்கப் பதக்கத்தைப் பெற்றவர். நான் ஒருவனே துறையில் டாக்டர் பட்டம் பெற்றவன். எனக்கு மட்டிலுமே ஆய்வு மாணவர்கட்கு ஆய்வு நெறியில் வழிகாட்டும் தகுதி இருந்தது. 1971-சனவரியில் சித்தூர் அரசுக் கல்லூரியில் பேராசிரியர் பதவியை விட்டு விலகி எனக்குத் துணையாக விரிவுரையாளராகச் சேர்ந்த திரு P. சௌரிராஜனை ஆய்வு மாணவராகச் சேர்த்துக்கொண்டேன் (1971-ஜூன் முதல்). 1972-ஜூனில் திரு. தேவசங்கீதம் எம். ஏ. யில் தேர்ச்சி பெற்றதும் ஆய்வு மாணவராகச் சேர்த்துக் கொண்டு 'டாக்டர் மு. வ. புதினங்கள்' என்ற தலைப்பில் ஆயும்படி யோசனை கூற, அவரும் ஒப்புக் கொண்டார். டாக்டர் மு. வ. நூல்களை முதன் முதலாக ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொண்ட முதல் மாணவர் இவர் ஒருவரே. பல்கலைக் கழகம் தமிழ்த்துறைக்கு U G. C. மூலம் பெறும் ஆய்வு ஊதியம் (Fellowship) ஒதுக்கவில்லை; புதிதாகத் தொடங்கப் பெற்ற சிறு துறை என்று கருத்தில் கொண்டு ஒதுக்காதுவிட்டுவிட்டது. தெலுங்குத் துறையில் மூவருக்கு நிதி ஒதுக்கப் பெற்றது. அப்போது தெலுங்குத் துறைப் பேராசிரியராக இருந்தவர் டாக்டர் ஜி. என்.

ரெட்டி; பரந்த நோக்க முள்ள பெருமகன். மூன்றில் ஒன்றை எங்கள் துறைக்கு விட்டுக் கொடுக்குமாறு வேண்டினேன். அவரும் பெருமனம் கொண்டு விட்டுக் கொடுத்தார்; எங்கள் துறைக்குத் தருவதற்காகவே விட்டுக் கொடுப்பதாகப் பல்கலைக் கழகத்திற்கும் எழுதினார். பல்கலைக் கழகமும் அதனை ஒப்புக்கொண்டு அதனை எங்கள் துறைக்கு வழங்கியது. இதனால் தேவ சங்கீதத்திற்கு மாதந் தோறும் ரூ 500 ஆய்வு ஊதிய மாகவும் ஆண்டொன்றுக்கு இதர செலவுகளுக்கு ரூ 1500/-ம் கிடைத்தன. இந்த உதவி கிடைக்காவிடில் தேவசங்கீதம் டாக்டர் பட்டம் பெற்றிருக்க முடியாது. தமிழ்த்துறையும் முதல்தர மான மாணவர் ஒருவரைத்துறையின் முதல் ஆய்வு மாணவராகப் பெறும் வாய்ப்பையும் இழந்திருக்கும். இறையருள் துணை நின்றது என்பது என் கருத்து. இரண்டாம் ஆண்டு இத்தொகை ரூ 750/ ஆக உயர்ந்தது; இதர செலவுகளுக்கான தொகையும் 2000/ ஆக உயர்ந்தது. 1975—76 இல் துறையில் விரிவுரையாளராகவும் சேர்த்துக் கொண்டேன். இதுவும் இறையருளே. என் துறையில் எனக்கு அடுத்தவராக இருந்த அன்பர் இதற்குப் போட்ட முட்டுக்கட்டைகளைத் தகர்த்தெறியும் பணியும் இருந்தது. நான் ஓய்வு பெற்ற பிறகு டாக்டர் சங்கீதம் துணைப் பேராசிரியரானார். இதற்கும் எதிர்ப்பு தெரிவித்தார் என் நண்பர்; இதனைத் தகர்த்தெறியவும் என் பங்கு சிறிது இருந்தது. சென்ற ஆண்டு (1989 ஜூலை முதல்) பேராசிரியர் பதவி வந்த போது தமிழக அரசு மானியம் (ஆண்டு ஒன்றுக்கு 75, 000/-) பெறுவதற்குப் பெரிதும் முயன்று பெறுவதில் நேர் பங்கு கொண்டேன். இதற்கும் திருப்பதியில் துறையிலிருக்கும் ஒருவரால் போடப்பெற்ற முட்டுக் கட்டைகளையும் தகர்த்தெறிய வேண்டி இருந்தது. கல்வி அமைச்சரும் முதல்வரும் பெருமனம் கொண்டு இதனை வழங்கினார்கள். கலைஞர் முதல்வராக இருந்த காலத்தில் தான் (1969) என் பத்தாண்டு முயற்சியால் முதன்

முதலாகத் திருவேங்கடவன் பல்கலைக் கழகம் தமிழ் வளர்ச்சிக்காக ஆண்டொன்றுக்கு 10000/ வீதம் மானியம் பெற்றமை நினைவு கூரத்தக்கது. டாக்டர் தேவசங்கீதம் நல்ல உழைப்பாளி; நன்கு பாடம் சொல்பவர்; ஆய்வில் விருப்பம் மிக்கவர். மாணவர்கள் நலனை நாடுபவர். நேர்மைக்கும் ஒழுக்கத்திற்கும் பேர்போனவர். இத்தகைய நன் மாணாக்கர்பால் வில்லிபுத்தூரார் தம் மகன் வரந்தருவாரிடம் சிறப்புப் பாயிரம் பெற்றாற் போல ஓர் அணிந்துரை பெறவேண்டும் என்ற என் விருப்பத்திற் கிணங்க அணிந்துரை வழங்கியுள்ளார்.

> தன்னா சிரியன் தன்னொடு கற்றோன்
> தன் மா ணாக்கன் தகுமுறை காரனென்று
> இன்னோர் பாயிரம் இயம்புதல் கடனே[6]

என்பதும் இலக்கண மரபு அன்றோ? அணிந்துரை அளித்த மாணாக்கருக்கு என் நன்றியும் வாழ்த்தும் ஆசியும் என்றும் உரியவை.

இந்த நூலை எழுதி நான் வெளியிடு வதற்குத் தோன்றாத் துணையாக நின்று உதவியவன் வேங்கட வெற்பில் எழுந்தருளியிருக்கும் சீநிவாசன். இவனே எனக்கு எல்லா நலமும் அவன் விரும்பும் வண்ணம் வழங்கி வருபவன். என்னைப் பல்வேறு பாங்கில் தமிழ்ப் பணியில் ஈடுபடுத்தி வருபவன். சமய நூல்கள் வெளிவரக் கணிசமான அளவு திருமலை—திருப்பதி தேவஸ்தானத்தின் மூலம் நிதி வழக்கத் திருவருள் புரிந்தும் பிற நூல்கள் வெளிவரத் தமிழ் வளர்ச்சி இயக்ககம் மூலம் ஏதோ ஓரளவு நிதி கிடைக்க வழியமைத்துத் தந்தும் என்னை வாழ்வித்து வருபவன். இந்த வேங்கடத்தின் எழில் கொள் சோதியினை,

---

6. நன்னூல்—51

உளன்கண்டாய் நன்னெஞ்சே!
உத்தமன் என்றும்
உளன்கண்டாய் உள்ளுவார்
உள்ளத்—துளன் கண்டாய்
விண்ணொடுங்கக் கோடுயரும்
வீங்கருவி வேங்கடத்தான்
மண்ணொடுங்கத் தானளந்த
மன்.[7]

— பேயாழ்வார்

என்ற பேயாழ்வார் பாசுரத்தால் மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்கிச் சரண் அடைகின்றேன்.

'வேங்கடம்'
A—D 13 (Plot 335¼)
அண்ணா நகர்
சென்னை—600 040
மே 9, 1990
சித்திராபௌர்ணமி.

ந. சுப்புரெட்டியார்
தொ. பே. 621 15 83

7. மூன். திருவந் 40

புதுவை(மை)க்கவிஞர்

# சுப்பிரமணிய பாரதியார்

## ஒரு கண்ணோட்டம்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

மகாகவி பாரதியை ஏழு கோணங்களில் – பாட்டுக்கு ஒரு
புலவர், நாடு மொழி பற்றாளர், கல்விச்
சிந்தனையாளர், வைணவச்செல்வர், சக்திதாசர்,
சமரச நோக்கர், புதுக்கவிதை நாயகர் –
திறனாய்வு செய்யும் ஓர் அரிய நூல்

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*




ISBN: 978-81-939317-2-1

eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

எனக்கு வேண்டும் வரங்களை
　　இசைப்பேன் கேளாய் கணபதி !
மனத்தில் சலனம் இல்லாமல்
　　மதியில் இருளே தோன்றாமல்
நினைக்கும் பொழுது நின்மவுன
　　நிலைவந் திடநீ செயல்வேண்டும்,
கனக்கும் செல்வம் நூறுவய(து),
　　இவையுந் தரநீ கடவாயே[1]

— பாரதியார்

இளமை முதல் இன்றுவரை அடிக்கடி படித்து, சிந்தித்து, ஆழங்கால் பட்டு வரும் பாரதியாரின் படைப்பு களை மீட்டும் ஒருமுறை படிக்கவும் சிந்திக்கவும் வாய்ப் பளித்தது புதுச்சேரி பல்கலைக் கழகம். அந்த வாய்ப்பே திரு. **ஆனந்தரங்க, கிருட்டிணசாமி பிள்ளை - திருமதி அம்சம்மாள்** அறக்கட்டளைச் சொற்பொழிவாக வடி வெடுத்தது. அந்தச் சொற்பொழிவு வடிவமே இன்று அச்சு வடிவம் பெறுகின்றது. சொற்பொழிவு நிகழ்த்த வாய்ப்பும் வசதியும் அளித்த பல்கலைக் கழகத்திற்கு— குறிப்பாக அதன் துணைவேந்தர் (டாக்டர் கி. வேங்கட சுப்பிரமணியம் அவர்கட்கு) என் மனமுவந்த நன்றியை யும் வணக்கத்தையும் புலப்படுத்திக் கொள்வதுடன் இப் பொழிவை என் பொறுப்பில் அச்சிட்டுக் கொள்ள இசை வளித்தமைக்கு மீண்டும் ஒருமுறை நன்றி கூறுகின்றேன்.

இளமைத்துடனும் தமிழ் உணர்வுடனும் நல்ல நூல் களை வெளியிட்டு வருபவர் தேன்மழைப் பதிப்பக உரிமையாளர் திரு. **வெள்ளையப்பன்** அவர்கள். இந்தச் சிறு நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கும், புதுவைப் பல்கலைக் கழகம் விரும்பியபடி **ஐம்பது படிகள்** அன்பளிப்பாகத் தருவதற்கு மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டமைக்கும் என் சார்பாகவும் பல்கலைக் கழகத் துணைவேந்தர் சார்பாகவும் என் இதயம் கலந்த நன்றி யைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

---

1. விநாயகர் நான்மணி மாலை - 7

இந்தச் சிறு நூலும் ஒருவரது அணிந்துரையுடன் வெளிவரவேண்டும் என்பது என் அவா. பெரும்பாலும் என் நூல்கள் நான் அறிந்த பெரியவர்கள், அறிஞர்கள், புலவர்கள், உடன் பணியாற்றியவர்கள், நண்பர்கள், என் மாணவர்கள் இவர்களின் அணிந்துரைகளைப் பெற்று வெளி வருதலை ஒரு மரபாகப் போற்றி வருகிறேன். அந்த முறையில் என் அருமை மாணவர் —இலக்கண மொழியில் சொன்னால் தலைமாணாக்கர் டாக்டர் **என். கடிகாசலத்தின்** அணிந்துரை பெற்று இந்நூல் வெளிவருகின்றது. திருப்பதியில் நான் பணியாற்றியது போது இவர் எம். ஏ. பயின்றபோது (1971-73) என் மாணவர்; கற்பதை அக்கறையுடன் கற்றதால், முதல் வகுப்பில் முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்று இரண்டு தங்கப் பதக்கங்களைப் பெற்றார். பின்னர்ப் பல்கலைக் கழக மானிய ஆணையத்தின் படிப்பூதியம் பெற்று மூன்று ஆண்டுகள் என்னை வழிகாட்டியாகக் கொண்டு ஆய்ந்து பிஎச்.டி. பட்டமும் பெற்றார். ஆய்வில் வியத்தகு அக்கறை காட்டினார். அக் காலத்தில் அனைத்திந்திய நிலையில் பல மாநிலங்களில் நடைபெற்ற கருத்தரங்குகளில் நான் கலந்துகொண்டபோதெல்லாம் இவரை என்னுடன் இட்டுக் கொண்டு செல்வேன். அக் கருத்தரங்குகளில் ஆய்வுக் கட்டுரைகளைப் படிக்கவும் செய்வேன். அற்புதமாகக் கட்டுரைகள் தயாரித்துக்கொண்டு வருவார்; அறிஞர்களின் பாராட்டுதல்களையும் பெறுவார். என் அபிமான புத்திரன்போல் வயது முதிர்ந்த எனக்கு நான் ஏவும் சில செயல்களைச் செய்து உதவுவார். அவர் பட்டம் பெறுவதற்குமுன் நான் ஓய்வு பெற்றுவிட்டபடியால் அவரை நான் என் கீழ் விரிவுரையாளராகச் சேர்த்துக்கொள்ள முடியாத நிலை ஏற்பட்டுவிட்டது. இல்லையென்றால் திருப்பதிப் பல்கலைக் கழகத்தில் பணியாற்ற வேண்டியவர். எனக்குப் பின்னர் ஏற்பட்ட விரும்பத்தகாத சூழ்நிலையில் இவர் அங்குப் பணியாற்ற ஏழுமலையானே விரும்பவில்லை என்று நினைத்துக் கொண்டேன்.

இறையருளால் என் சிறு உதவியால் 1979 முதல் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் முதுநிலை ஆய்வாளராகப் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது. தமிழ் உணர்வும் உழைப்பின் சின்னமாகவும் இருந்த முதல் இயக்குநர் திரு. **ச. வே. சுப்பிரமணியன்** இவருக்கு நல்ல

பயிற்சி அளித்தமையாலும் அவரோடு நன்கு ஒத்து உழைத்தமையாலும் சிறந்த அறிஞராகத் திகழ்கின்றார். இடையில் நிறுவனத்தின் இசைவும் பணி உரிமையும் பெற்று ஐந்து ஆண்டுகள் (1983-88) சீனநாட்டு வானொலியில் தமிழ் மொழி வல்லுநராகப் பணியாற்றி நற்பெயருடனும் புகழுடனும் திரும்பி மீண்டும் நிறுவனத்தில் சேர்ந்துள்ளார். இவருடைய நல்லொழுக்கம், உழைப்பு, நிர்வாகத்துடன் ஒத்துப்போகும் பண்பு, உடன் பணியாற்றுவோரிடம் அன்புடன் பழகும் நற்பண்பு ஆகியவை இவர் உயர்பதவிகள் பெறுவதற்குப் பெருந்துணையாக அமையும். இத்தகைய நல்லவர், வல்லவர் அணிந்துரை வழங்கினமைக்கு என் நன்றியும் ஆசியும் என்றும் உரியவை.

இந்த நூல் வெளிவரக் காரணமாக அமைந்தும் எனக்கு உடல் நலத்துடனும் மன வளத்துடனும் பணியாற்றுவதற்கு அருள் புரிந்தும் வரும் என் மனத்தில் எழுந்தருளியிருக்கும் ஏழுமலையான் திருவடிகளைச் சிந்திக்கின்றேன்.

'வேங்கடம்'
AD-13 (Plot-3354)
அண்ணா நகர்,
சென்னை-600 040
20-7-1990

ந. சுப்பு ரெட்டியார்

தொ.பே. : 62 11 583



## உள்ளுறை

# பரகாலன் பைந்தமிழ்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

திருமங்கையாழ்வாரின் திருத்தலப்
பயணங்களையும், அவரது பாடல்களின்
அருமை பெருமைகளையும், நயங்களையும்
தமிழ் கூறும் நல்லுலகிற்கு தூய, எளிய
தமிழில் வழங்குகிறது இந்நூல்

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939270-5-2

*eBOOK ~ மின் நூல்*



## நூல் முகம்

மின்னிலங்கு திருவுருவும்,
பெரிய தோளும்,
கரிமுனிந்த கைத்தலமும்,
கண்ணும் வாயும்,
தன்னலர்ந்த நறுந்துழாய்
மலரின் கீழே
தாழ்ந்திலங்கும் மகரம்சேர்
குழையும் காட்டி,
என்னலனும், என்னிறையும்
என்சிந்தையும்,
என்வளையும் கொண்டு;
என்னை ஆளும்கொண்டு
பொன்னலர்ந்த நறுஞ்செறுந்திப்
பொழிலி னூடே
புனலரங்கம் ஊரென்று,
போயினாரே.'[3]

—திருமங்கையாழ்வார்

அடியேனது நல்வினைப் பயனாக '**நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்—நம்மாழ்வார் தத்துவம்**' என்ற பொருளை ஆய்ந்து டாக்டர் பட்டம் (பி.எச்.டி) பெற்றேன் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் (1969). பல்கலைக்கழக ஆய்வின் பயன் பொதுமக்களை அடைய

---

3. திருநெடுந். 25

வேண்டும் என்பது பல்கலைக் கழக மானிய ஆணையத்தின் கொள்கையாக இருந்து வருவது. இதனை நடைமுறைப் படுத்த வேண்டும் என்பது அடியேனின் விழைவு. ஆய்வு 'இறைவன்—தத்துவம்' ஆக இருப்பதால் இப்பணி 'புண்ணியமும் புருஷார்த்தமுமாக' அமைந்தது. இதற்கு முன்னும் (1977க்கு முன்னும்) இப்பணி செய்து வரினும் (1970 முதல்) ஓய்வு பெற்றதற்குப் பின்னர்தான் (நுகர் வினை — பிராரப்தம் — நீண்டு வருவதால்) என் பணி மும்முமரமாக நடைபெற்று வருகின்றது. அடியேன் எழுதி வரும் சமய நூல்களை வெளியிட சிறிதளவு மானியமும் அளித்து வருகின்றான் ஏழுமலையப்பன். பதினேழு ஆண்டுகள் (1960—1977) அவன் திருவடி வாரத்தில் தங்கிப் பணியாற்ற வாய்ப்பளித்தவன்; பணிக்காலத்தில் அடியேன் வாழ்வில் பல தடைக் கற்களை நிர்வாகத்தின் மூலம் எழுப்பி[4] அடியேனைக் கசக்கிப் பிழிந்தவன். இந்தத் தொல்லைகளையெல்லாம் தாங்கும் இதயத்தைத் தந்து தாக்குப் பிடிக்கும் ஆற்றலையும் அருளினான்.

*என்சொலால் யான்சொன்ன*
*இன்கவி என்பித்துத்*
*தன்சொலால் தான்தன்னைக்*
*கீர்த்தித்த மாயன் (திருவாய் 7.9:2)*

என்று சடகோபனைத் திருத்தித் திருப்பணிகொண்டது போல, ஸ்ரீ சடகோபன் பொன்னடி'[5] யான அடியேனையும் தன்னைப்பற்றியே எழுதுமாறு திருத்திப் பணி கொண்டுள்ளான். இந்த வாய்ப்பினால் 16 வைணவ நூல்களைப்

---

4. **நினைவுக் குமிழிகள்** பகுதி 4 (என் திருப்பதி வாழ்க்கை) என்ற நூலால் இவற்றை அறியலாம்.

5. பண்ணுருட்டி வைணவப்பேரவை (1987) வழங்கிய விருது.

படைக்கச் செய்தான்.[6] இந்நூல் 17வது படைப்பாக அமைகின்றது. இவை தவிர, சைவசமயத்திலும் ஆழங்கால் படச்செய்து ஐந்து நூல்களைப் படைக்கச் செய்தான்.

பரகாலன் பற்றிய இந்நூலுக்கு முன்பதாக **'கலியன் குரல்'** (அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு 1989)[7] என்ற நூல் கலியனை (திருமங்கையாழ்வாரை)ப் பற்றிச் சுருக்கமாக அமைந்தது. பெருங்கவிஞரும் ஆழ்வாருமான கலியனை விரிவாக எழுதவேண்டும் என்ற எண்ணமே இந்நூல் அமையக் காரணமாயிற்று; இதுவும் ஏழுமலையான் திருவருளாலேயே எழுதி வெளிவரக் காரணமாக அமைந்தது. இதன் பயனைப் படிப்போர்தாம் மதிப்பீடு செய்யவேண்டும்.

இந்த நூலைச் செவ்விய முறையில் அழகுற அச்சிட்டு உதவிய திரு **வெள்ளையப்பன்** (அதிபர் ஸ்ரீ வேங்கடசிவரா அச்சகம்), அட்டை ஓவியம் வரைந்தும் அச்சுக் கட்டைகள் தயாரித்தும், அட்டையை நான்கு வண்ணங்களில் அச்சிட்டும், அதற்குக் காப்புரை (Lamination) அமைத்தும் உதவிய ஓவிய மன்னர் கலையரசர் திரு. P.N. **ஆனந்தன்** அவர்கட்கும் இதற்கு நன்முறையில் கட்டமைத்து கற்போர் கரங்களில் கவினுறத் தவழச் செய்த திரு V. **திருநாவுக்கரசுக்கும்** என் உளங்கனிந்த நன்றியைப் புலப் படுத்திக் கொள்ளுகிறேன்.

இந்தப் பெரிய நூலுக்குச் **'சிறப்புப் பாயிரமாலை'** வழங்கிய பேரராசிரியர் **டாக்டர் பு. மு. சாந்தமூர்த்தி** என் தலைமாணாக்கர்களுள் ஒருவர். எல்லோருமே சாந்தீபினி முனி

---

6. இந்நூலின் இறுதிலுள்ள நூற்பட்டியலைக் காண்க.
7. அப்பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய மூன்று பொழிகள் அடங்கியது.

வருக்குக் கண்ணன் மாணவனாக வாய்த்தது போல் எனக்கு வாய்த்தனர் எனக் கொள்வேன்.

டாக்டர் சாந்தமூர்த்தி 1939 இல் (21-8-1939) பிறந்த வர் (நான் பி. எஸ் சி பட்டம் பெற்ற ஆண்டு). சௌ ராஷ்டிரத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர். பள்ளிக் கல்வியை மதுரை சௌராஷ்டிர மேல்நிலைப் பள்ளியிலும் கல்லூரிக் கல்வியை மதுரை தியாகராசர் கல்லூரியிலும் பெற்றவர். 1965—67இல் மதுரைக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகத் திறமையுடன் பணியாற்றி நற்பெயர் பெற்றதால் 1967-முதல் மதுரை சௌராஷ்டிரக் கல்லூரி யில்தமிழ்த்துறைத் தலைவர் பணி தானாக வந்தமைந்தது; அன்றிருந்து நாளிதுவரை பெரும் புகழுடன் பணியாற்றி வருகின்றார். நான் திருப்பதியில் பணியாற்றி வந்த இறுதிக் காலத்தில் (1977) மதுரை—காமராஜர் பல்கலைத்தில் நான் தலைவனாக இருந்த மூதறிஞர் குழுவில் இவர் பிஎச் டி. பட்டத்திற்குப் பதிவு செய்து கொண்டு ஆய்வு நடத்திக் கடுமையாக உழைத்துப் பட்டமும் பெற்றார்.

சௌராஷ்டிரக் கிளைமொழிகளின் பேச்சு நடை பற்றி விரிவாக ஆய்வு செய்யும் திட்டத்தைக் குறிக் கோளாகக் கொண்டுள்ளார். கவியரங்கம், பட்டிமன்றம், வழக்காடுமன்றம், 'இலக்கியச் சொற்பொழிவுகள்' இவற்றில் பங்கு கொள்கின்றார். சங்க இலக்கியம், இடைக் கால இலக்கியங்கள், புதுக்கவிதை, புதினம், சிறு கதை, திறனாய்வு இவற்றிலெல்லாம் மிக்க ஈடுபாடு கொண்டவர். மதுரை—காமரசர் பல்கலைக்கழகக் கல்விப் பேரவையில் அரசு நியமன உறுப்பினராகக் இருந்து வந்ததுண்டு. சௌராட்டிரம் தாய்மொழியாக இருந்த போதிலும் தமிழகத்தில்—அதுவும் சங்கங்கள் தோன்றித் தமிழ் வளர்த்த மதுரையில்—வாழ்ந்து தமிழை ஆர்வத்துடன் பயின்றவர் சிறந்த தமிழறிஞராகத் திகழ்ந்து வருவதில் வியப்பில்லை. இவ்வளவு சிறப்

யையும் பெற்றுத் திகழும் இவர் என் நூலுக்கு **சிறப்புப் பாயிர மாலை** வழங்கியது இந்நூல் பெற்ற பேறு; என் பேறுமாகும். இதற்கு என் நன்றி. 'பண்யே பரமன் துதி' என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு நோய் நொடியின்றி நீடு வாழ்ந்து பல் புகழ் பெற வேண்டும் என்பது என் ஆசி; வாழ்த்து.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய பேராசிரியர் டாக்டர் A. V. அரங்காச்சாரியரின் நட்பு கிடைத்தது தில்லை கோவிந்தராசரின் திருவருள் என்பது என் நம்பிக்கை. சௌலப்பிய, சௌசீல்ய வடிவமாகத் திகழும் பேராசிரியர் பொருளாதாரத் துறையில் உழைப்பினால் உயர்ந்த செம்மல்; திருச்சித்திர கூடத்தைச் சேர்ந்தவர். 'பொருளல்ல வரையும் பொருளாகச் செய்யும்; பொருள் அல்ல தில்லை பொருள்' என்ற வள்ளுவர் போற்றும் பொருளாதாரத் துறையில் பணியாற்றி வருகின்றார். அதனைத் தெய்வப் பணியாகக் கொண்டு அத்துறை பிரகாசிக்கும் பொருட்டுப் பல ஆய்வு நூல்களையும் ஆய்வுக் கட்டுரைகளையும் படைத்துப் புகழ் பெற்றவர். இந்தப் பணி தேகயாத்திரையின் பொருட்டுத் தில்லை கோவிந்தன் இட்டவழக்கு — உலகியலை ஒட்டி.

இதற்கு மேலாக இப்பெருமகனாரைத்—பிறவியிலேயே ஸ்ரீவைணவப் பிறவியுடையவரைத்—தில்லை கோவிந்தன் திருத்திப் பணிகொண்டு ஆன்மயாத்திரைக்கு ஆயத்தம் செய்து வருகின்றான் என்பது அடியேனின் கருத்து. ஆழ்வார் அருளிச் செயல்களிலும் ஆசாரிய வியாக்கியானங்களில் இரகசிய கிரந்தங்களிலும் ஆழங்கால் பட்டு அவற்றை இவர் மூச்சாகவும் பேச்சாகவும் அவன் அநுபவிக்கச்செய்து விட்டான் என்று எனக்குப்படுகின்றது. இவர் மேற்கொண்டுள்ள பல்வேறு வைணவப் பணிகள் இக்கருத்தினை அரண் செய்வனவாக அமைகின்றன.

இவர் எழுதி வெளியிட்ட நூல்கள்: (1) நாத—யாமுன வைபவப் பிரகாசிகை, (2) ஞானப் பிரான் வைபவப் பிர காசிகை (3) சக்கரவர்த்தித் திருமகன் வைபவப் பிர காசிகை, (4) எம்பார் வைபவப் பிரகாசிகை, (5) திருக் கோட்டியூர் நம்பிகள் வைபவப் பிரகாசிகை, (6) பெரிய வாச்சான் பிள்ளை இரகசிய நூல்கள், (7) கலியன் அருளப் பாடு, (8) திருவாலி—திரு நகரித் தல வரலாறு, (9) காட்டு மன்னார் கோவில் தலவரலாறு, (10) தில்லை திருச் சித்திர கூட வரலாறு, (11) வளையமாதே வித்தல வரலாறு, (12) பரகால ஸூரிவர சுப்ரபாதம், (13) திருப்பாவை விளக்கவுரை, (14) மற்றும் பல மணி விழா வெளியீடுகள். இவை தவிர பல வைணவ மாநாடுகளில் பங்குகொண்டு சிறப்புரை, தலைமையுரை, பலநூட்கட்கு மதிப்புரை அணிந்துரை வழங்கி இறைப்பணி ஆற்றி வருபவர்.

மணவாள மாமுனிகள் ஏற்படுத்திய அஷ்டகோத்ரம் —இராமாநுசர் நிறுவின 74 சிம்மாசனாதிபதிகளில் ஒன்றான குமாண்டூர் இளைய வில்லி பரம்பரையில் வந்த வராகையாலே, ''குலதர்மம் செழிசக'' இப்பெரு மகனார் தில்லை கோவிந்தராச சுவாமி தேவஸ்தானத்தின் வழிவழி அறங்காவலராகவும், இதுதவிர, காட்டு மன்னார் கோவில் ஸ்ரீநாத முனிகள்—ஸ்ரீஆளவத்தார் திருக்கோவில், தில்லை கோதண்ட ராமர் திருக்கோவில் அறங்காவலராகவும் கைங்கரியம் புரிந்து வருகின்றவர்,

இவை தவிர, (1) ஆழ்வார் திருநகரி இராமநுசர் திருக்கோவில், (2) திருக்கோளூர் மதுரகவிகள் திருக் கோயில், (3) சிக்கில் கிடாரம் ஸ்ரீமணவாள மாமுனிகள் அவதரித்த தல சந்நிதி, (4) ஸ்ரீவல்லிபுத்தூர் ஸ்ரீமந்நாத முனிகள் சந்நிதி, (5) சேங்கனூர் பெரியவாச்சான் பிள்ளை சந்நிதி, (6) குருகைக் காவலப்பன் சந்நிதி, (7) ஸ்ரீநாத முனிகள் அவதரித்த சந்நிதி, (8) திருவாலி திருநகரி திரு

மங்கையாழ்வார் சந்நிதி, (9) திருக்கோவலூர் உலகளந்த பெருமாள் சந்நிதிமற்றும் பல திருக்கோவில்களின் திருப் பணி, திருக்குட முழுக்கு விழா நடத்தி கைங்கரியம் புரிந்து 'கைங்கரிய மணி'யாகத் திகழ்கின்றார்.

திருக்கோட்டியூர் ஸ்ரீ நம்பிகளின் 1000-வது ஆண்டு விழாவையும் மதுரமங்கலம் ஸ்ரீ எம்பார் 960-வது ஆண்டு விழாவையும் முன்னின்று நடத்திப் பெரும்புகழ் பெற்ற வர். இங்ஙனம் வைணவ தத்துவத்தின் சிகரமாக விளங்கிக் கைங்கரியத்தைப் புரிந்து வரும் இப்பெருமகனார் சிறியே னின் நூலுக்கு அணிந்துரை வழங்கியது இந்நூலின் பேறு; அடியேனின் பேறுமாகும். 'நாடும் நகரமும் நன் கறிய' தொண்டக் குலத்தைச் சிறப்பிக்கும் இப்பெருமக னாருக்கு என் இதயம் கலந்த நன்றியைப் புலப்படுத்து கின்றேன்.

வைணவச் செல்வர் ஜஸ்டிஸ் **நெலவாய கிருட்டிணசாமி ரெட்டியாரின்** அரிய நட்பு கிடைத்தது இறையருள் என்றே சொல்ல வேண்டும். 'தொண்டை நாடு சான்றோர் உடைத்து' என்று வழங்கப்பெறும் நாட்டைச் சார்ந்தவர். 1973 ஆகஸ்டில் 'தொண்டை நாட்டுத் திருப்பதிகள்' என்ற என் நூலுக்கு அரியதோர் அணிந்துரை நல்கி ஆசி கூறியவர்.

'மக்கள் நீதிபதி' என்று எல்லோராலும் போற்றப் பெறும் ஜஸ்டிஸ் ரெட்டியார் 1913இல் செங்கற்பட்டு எம். ஜி. ஆர் மாவட்டத்தில் ரெட்டிப்பாளையம் என்ற சிற்றூரில் பிறந்தவர். செங்கற்பட்டில் உயர் நிலைப் பள்ளிக் கல்வியை முடித்துக் கொண்டு சென்னை கிறித்து வக் கல்லூரியில் பட்டப் படிப்பையும் சென்னை சட்டக் கல்லூரியில் சட்டப் படிப்பையும் முடித்துப் பட்டங்கள் பெற்றவர். செங்கற்பட்டில் 1940இல் வக்கீல் தொழிலைத் தொடங்கியவர். 1949இல் இந்திய அரசு பிறர் பொருளை

மோசம் செய்யும் வழக்குகளை விசாரிக்கும் பொறுப்பில் அவற்றை நடத்துவதற்கு சிறப்புநிலை அரசு வழக்குரை ஞராக நியமித்தது. 1950—56 இல் செங்கற்பட்டு மாவட்ட அரசு வழக்குரைஞராகப் பணியாற்றினார். இக்காலத்தில் மூன்று பெரிய வழக்குகளை நடத்தும் சிறப்பு நிலை அரசு வழக்குரைஞராகப் பணியாற்றினார். 1960—64 வரை மாநில அரசு வழக்குரைஞராகவும், 1964—66 வரை அட்வோகேட் ஜெனரலாகவும், 1966—75வரை சென்னை உயர்நீதி மன்ற நீதிபதியாகவும் பணி யாற்றி ஓய்வு பெற்றவர்.

ஓய்வு பெற்ற பின்னர் 1977—1980 வரை தேசிய காவலர் ஆணையத்தில் சட்டச் சார்பான உறுப்பின ராகவும், 1978—1981 வரை சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழு (syndicate) உறுப்பினராகவும், வக்கீல்கள்—காவலர்கள் சமாதானக் குழு, கோவில் நகைப்பாது காப்புக் குழு, அர்ச்சகர் பயிற்சித் திட்டக்குழு, கோவில் நிர்வாகக் குழு-ஆகியவற்றின் தலைவராகவும் (Chairman) பணியாற்றிப் பெரும் புகழ் பெற்றவர்.

தற்சமயம் பொது நல சம்பந்தமான 12 முக்கிய குழுக் களின் தலைவராகப் பணியாற்றி வருகின்றார். தமிழ் நாடு அரசு இலவச சட்ட விசாரணை வாரியத்தின் தலைவராக இருந்து பணியாற்றி வருவது குறிப்பிடத்தக்கது. இதில் பல சிக்கலான வழக்குகளைத் தீர்த்து வைக்கும் அற்புதங் களை நிகழ்த்தி ஏழை எளியவர்களின் பாராட்டுதல்கட்கு உரியவராகத் திகழ்கின்றார்.

பழுதற ஓதிப் பாங்குடன் நடந்துவரும் இப்பெரியா ரைத் தமிழுலகம் சிறப்பாக வைணவ உலகம் நன்கு அறியும். 'தீதில் நன்னெறி'யுடன் திகழும் இப் பெரியார் தம்முடை பக்திச் சுவை நிறைந்த பேச்சால் தமிழ்ப் பெரு மக்களின் உள்ளங்களைக் கவர்ந்து அங்கு நிரந்தர இடம்

பெற்றவர்கள். இவருடைய ஆணித் தரமான பேச்சில் இவருடைய உயிர் நாடி பேசும். "நாடு நகரமும் நன்கு அறிய நமோ நாராயணா என்று பாடும் மனமுடைய பக்தர்."[8] இவர்; சீலம் நிறைந்த பண்புடைச் செல்வர். "உயர் திணை என்பனார் மக்கட்புட்டே"[9] என்ற தொல் காப்பியக் கருத்திற்கு எடுத்துக் காட்டாகத் திகழும் உயர் குணச் செம்மல். இறையன்பிலும் மெய்ப்பொருள் கருத்து களிலும் ஆழங்கால் பட்டு நிற்கும் இப்பெரியாருக்கு இந்தப் பக்திப் படையலைச் செய்து பெரும் பேறு பெற்ற வனாகின்றேன். இவர் ஆசியால் இன்னும் பல பக்திப் பனுவல்களைப் படைக்கும் ஆற்றலைப் பெறுவேன் என்பது என் அதிராத நம்பிக்கை.

இந்த நூலை எழுதவும், அது அச்சேறி வெளிவரவும் அருள் புரிந்து அடியேனின் இதயத்தில் நிரந்தரமாக எழுந் தருளி அடியேனைந் 'தீதில் நன்னெறி'யில் இயக்கி வரும் 'மின்னு மாமுகில் மேவு தண் திருவேங்கடமலை கோவில் மேவிய' விளக்கினை மனம் மொழிமெய்களால் வாழ்த்தி வணங்கிச் சரண் அடைகின்றேன்.

வந்தாய்; என் மனம்
புகுந்தாய்; மன்னிநின் றாய்;
நந்தாத கொழுஞ்சுடரே!
எங்கள் நம்பீ!

---

8. திருப்புல்லாணி—4.
9. தொல்—சொல்—நூற்பா.

*சிந்தா மணியே!*
*திருவேங் கடம் மேய*
*எந்நாய்! இனியான்*
*உன்னை என்றும்வி டேனே!*[10]

—*திருமங்கையாழ்வார்*

‘வேங்கடம்’
AD-13 (பிளாட் 3345)
அண்ணா நகர்,
சென்னை-6000 40
திசம்பர் 25, 1992

**ந. சுப்பு ரெட்டியார்**
தொ. பே. 62 11 583

---

10. பெரி. திரு 1.10:9

# வாய்மொழியும் வாசகமும்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இக்கட்டுரைகள் இறையுண்மை, இறைத்தன்மை, இறையநுபவம் எனும்
முப்பெரும் உண்மைகளை அருளாளர்களின் திருவாக்கு,
ஆசாரியர்களின் மெய்யுணர்வு, அறிவியலாரின் ஆய்வு நோக்கு
எனும் முத்திறக் கோணங்களின் வழி ஆய்ந்து தெளிவிக்கும்
நோக்கத்தை அடி நாதமாகக்கொண்டு விளங்குகின்றன.

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939685-1-2

eBOOK ~ மின் நூல்



# நூல்முகம்

நோற்றேன் பல்பிறவி;
நுன்னைக்காண்பதோ ராசையினால்
ஏற்றேன்; இப்பிறப்பே
இடருற்றனன்—எம்பெருமான்!
கோற்றேன் பாய்ந்தொழுகும்
குளிர்சோலைசூழ் வேங்கடவா!—
ஆற்றேன், வந்தடைந்தேன்;
அடியேனையாட் கொண்டருளே[1]

—திருமங்கையாழ்வார்

திருப்பதிப் பல்கலைக் கழகத்திலிருந்து ஓய்வு பெற்றுச் (அக்டோபர் 24, 1977) சென்னையில் குடியேறின பின் 'வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது'[2] என்ற பக்திசாரர் வாக்குப்படி இலக்கியங்களைப் படித்தல், சிந்தித்தல் அநுபவத்தல் என்ற பயனுடைய பாங்கில் காலங்கழித்த போது பல்வேறு இடங்களில் (வானொலி உட்பட) உரையாற்றவும், சில நண்பர்களின் மணிவிழா மலர்கள், பெரியோர் களின் நூற்றாண்டு விழா நினைவு மலர்கள் சில இதழ்களின் சிறப்பு மலர்கள் ஆகியவற்றில் கட்டுரைகள் வரையவும் வாய்ப்புகள் ஏற்பட்டன. அந்த உரைகள், கட்டுரைகளின் தொகுப்பே இந்த இனிய நூலாக வடிவம் பெறுகின்றது.[3]

---

1. பெரி திரு. 1.9: 8
2. நான். திருவந் : 63
3. இவற்றின் விவரம் அந்தந்தக் கட்டுரைகளின்கீழ் அடிக்குறிப்பாகக் காட்டப் பெற்றுள்ளது.

இந்தத் தொகுப்பு நூலை அன்புடன் ஏற்று வெளியிட முன் வந்தவர் சென்னை உமா பதிப்பக (58, ஐயப்பசெட்டி தெரு, மண்ணடி, சென்னை-600 001) உரிமையாளர் திரு. இராம இலட்சுமணன் அவர்கள். இதனைச் சிறந்த முறையில் அச்சிட்டு உதவியவர் சரவணா வண்ண அச்சக (19, பார்த்தசாரதி நாயுடு தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5) உரிமையாளர் அவர்கள், இவர்கள் இருவருக்கும் என் இதயம் கனிந்த நன்றி.

இந்த நூலுக்குச் 'சிறப்புப் பாயிரம் பாமாலை' வழங்கிச் சிறப்பித்தவர் என் நெடுநாள் நண்பர் திரு. K.M. வேங்கட ராமய்யாவின் அருமைப் புதல்வர் பேராசிரியர் டாக்டர் மா. வே. பசுபதியவர்கள் தற்சமயம் திருப்பனந்தாள் ஆதினம் கலைக் கல்லூரியில் பேராசிரியராகவும் முதல்வ ராகவும் பணியாற்றி வருபவர். நினைப்பிற்கெட்டாத நெடுங்காலமாகத் தமிழகத்தைத் தம் பிறப்பிடமாகக் கொண்டவராதலாலும் தமிழ்மொழி, இலக்கியங்களை ஆர்வமாக ஆழ்ந்து கற்றவராதலாலும் இந்தத் தெலுங்குச் சான்றோர் தமிழ்ப் புலமை மிக்கவராகத் திகழ்பவர்.

வித்துவான், பண்டிதம் (புலவர்), எம். ஏ., முதலிய பல பட்டங்களையும், வித்யா ரத்னம், தமிழருவி முதலிய பல விருதுகளையும் பெற்றுத் திகழ்பவர். 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்ற பொன்மொழியை உணர்ந்த வராதலால் அடக்கத்தை அணிகலனாகக் கொண்டவர். எவருடனும் இன்முகத்துடன் உரையாடி மகிழ்விப்பவர். 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற வாய்மொழிக்கு இலக்கியமாகத் திகழ்பவர்.

வளம் மிக்க கவிதை படைக்கும் இச்சான்றோர் உலகத் தமிழ் மாநாட்டுக் கவியரங்கு உட்பட 500க்கு மேற் பட்ட கவியரங்குகளில் பங்கு கொண்டு வளம் மிக்க தம் கவிதைகளால் கேட்போர் அனைவரையும் கவிதை யநுபவத்தில் ஆழங்கால்படச் செய்பவர். பேச்சாற்றல்

மிக்க இவர் பட்டிமண்டபம், வழக்காடு மன்றம், சிந்தனை மேடை, கருத்தரங்கு முதலிய நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு கேட்போர் அனைவரையும் மகிழ்விப்பவர்: என்பால் அளவற்ற அன்பு கொண்டவர்.

எழுத்தாற்றல் மிக்க இப்பெருமகனார் ஆனந்த விகடன், கல்கி போன்ற தமிழக முன்னணி இதழ்களிலும், தமிழ்நேசன், மலைமகள் முதலிய அயல் நாட்டு இதழ்களிலும், பல நினைவு மலர்களிலும் நவீன முறையில் தம் எழுத்தோவியங்களை வெளியிட்டு வாசகர்களின் இதயத்தைக் கொள்ளை கொண்டவர். பல்லாண்டுகளாக 'ஸ்ரீ குமர குருபரர்' என்ற திங்கள் இதழ்களின் ஆசிரியராகப் பணிபுரிபவர். 'இதுதான் உலகம்', 'நீதித் தெளிவு' முதலிய 27 கவிதை நூல்களையும் 'யாப்பருங் கலக் காரிகை' முதலிய நான்கு உரை நூல்களையும், வெளியிட்டவர். திருச்சி, கோவை, சென்னை, பாண்டி ஆகிய வானொலி நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றவர். இத்தகைய வல்லவர்—நல்லவர்—இந்நூலுக்கு 'சிறப்புப் பாயிரப் பாமாலை, வழங்கிச் சிறப்பித்தது இந்நூலின் பேறு; என் பேறுமாகும். இந்த இனியவருக்கு என் இதயம் கனிந்த நன்றி உரித்தாகின்றது.

இந்த நூலுக்கு அரியதோர் அணிந்துரை நல்க ஒப்புக் கொண்டவர் சென்னைப் பல்கலைக்கழக தமிழ் மொழித் துறைப் பேராசிரியர் டாக்டர் **அ. அ. மணவாளன்** அவர்கள். கருவிலே திருவுடைய இப்பெருமகனார் வழிவழி வைணவக் குடும்பத்தைச் சார்ந்தவர். என் உடன் பிறவாச் சோதரர் போன்றவர். சத்துவகுணம் மிக்க இப்பெருமகனர், அடியேனைப் போலத் தெலுங்கைத்தாய் மொழியாக்க கொண்டு வீட்டில் தெலுங்கு பேசுபவர். எங்கட்குத் தெலுங்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஆனால் நினைப்பிற் கெட்டாத நெடுங்காலமாகத் தமிழ் நாட்டில் வாழ்ந்தவர்களாதலின் தமிழையே தாய்மொழியாகக்

கொண்டு அதனை முறையாகக் கற்றுப் புலமை எய்தினோம். எம்போன்ற 'தெலுங்கர்கள்' தமிழ் மொழிக்கு ஆற்றிய தொண்டு பெரிது; மிகப் பெரிது.

இப்பெருமகனாரின் தனிச் சிறப்பு தமிழ் எம். ஏ., பண்டிதம், வித்துவான் முதலிய தமிழ்ப் பட்டங்களைப் பெற்றதுடன், எம். ஏ, (ஆங்கிலம்), விசாரத் (இந்தி), மொழியியல் பட்டங்களையும் பெற்றுத் திகழ்கின்றவர். சரளமாக ஆங்கிலத்தைப் பேச்சிலும் எழுத்திலும் கையாளும் தனித்தமிழ்ப் பேராசிரியர். பிறமொழிகளின் மீது அன்பு கொண்டவர்; காழ்ப்பில்லாதவர். தமிழ் மொழியின்மீது ஆராக் காதலுடன் அதனைப் போற்றி வளர்ப்பவர்; மொழி வெறியர் அல்லர். இந்த உயர் பண்புகளை இவரிடம் பழகுவோர் நன்கு அறிவர்; இவர்தம் எம். ஏ. மாணவர்கள், ஆய்வு மாணவர்கள் பறைசாற்றுவதன்மூலம் இவற்றை அறியலாம். பல மட்டங்களில் உயர்நிலைப் பள்ளி உட்பட கற்பிக்கும் வாய்ப்புகள் பெற்றவராதலால் மாணவர்களின் இதயப் பாங்கை நன்கு அறிந்தவர். ஆய்வில் கண்டிப்பானவர்; ஆய்வு மாணவர்களிடம் கடுமையான உழைப்பை எதிர் பார்ப்பவர்; வற்புறுத்தி உழைக்கச் செய்பவர். ஆய்வு மாணவர் படிக்கும்போது சிறிது முணுமுணுத்தாலும், படிப்பை முடித்து வெளியேறியபின் இவர்தம் பெருமையைப் போற்றுவதை அறிவேன். சற்றேறக் குறைய நாற்பதிற்கும் மேற்பட்ட மாணவர்கள் இவர்வழி நின்று எம்.ஃபில் பி எச். டி. பட்டம் பெற்றவர்கள்.

இலக்கியத் திறனாய்வு, இலக்கியக் கொள்கைகள், ஒப்பிலக்கியம், மொழி பெயர்ப்பு, அகராதித்துறை இவற்றில் நாட்டம் கொண்டு உழைத்துத் தனித்திறமை யுடன் திகழ்பவர். ஆங்கிலத்திலும் அருந்தமிழிலும் அறுபதிற்கு மேற்பட்ட ஆய்வு கட்டுரைகள் எழுதி வெளியிட்டுப் பெருமை பெற்றவர்; தமிழ்ப் பல்கலைக் கழகம், சாகித்திய அகாடமி ஆசிய ஆய்வுக் கழகம்

ஆகியவை வெளியிட்டுள்ள கலைக் களஞ்சியங்களில் நாற்பதிற்கும் மேற்பட்ட கட்டுரைகளை வழங்கியவர்,

அமெரிக்கா (ஆறு பல்கலைக்கழகங்கள்), இங்கிலாந்து (இலண்டன்) இவற்றுடன் தொடர்புள்ளவர். இங்கெல்லாம் ஒப்பிலக்கியம் பற்றி பல விரிவுரைகளை நிகழ்த்தி அறிஞர்களின் பாராட்டைப் பெற்றவர். Indo-US Cultural Exchange Fulbright Fellowship Programme (1988-89) என்ற அரியதோர் திட்டத்தில் பங்கு பெற்றவர். பொதுவாக மாணவர்களின் நலமே தம் நலமாகக் கொண்டு பணியாற்றுபவர். தாம் வாழ்க்கையில் சந்திக்கும் இக்கட்டுகளையும், தொல்லைகளையும் பொறுமையுடன் தாங்குபவர். எவரையும் குறை கூறாது, பழி சுமத்தாது, அனைத்தும் தம் நுகர்வினையின் விளைவு எனச் சிரித்து மகிழ்பவர். "இடுக்கண் வருங்கால் நகுக" என்ற வள்ளுவத்தைக் கடைப்பிடிப்பவர். "பண்புடையார் பட்டுண்டு உலகம்" என்ற வள்ளுவத்திற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்பவர். எதனையும் இறைவன் விட்ட வழியாகக் கொள்பவர், இவற்றால் பல நன்மாணாக்கர்களின் வீர வழிபாட்டிற்கு உரியவராகத் திகழ்வதில் வியப்பொன்றும் இல்லை. இத்தகைய நல்லுள்ளம் படைத்த நண்பரின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு; அடியேனின் பேறுமாகும் இதனை வழங்கிய என் சோதரருக்கு என் உளங் கனிந்த நன்றி என்றும் உரியது.

பேராசியர் டாக்டர் **சை. வே. சிட்டிபாபு** அவர்கள் (பிறப்பு 7-11-1920) பள்ளி, கல்லூரிகளில் நற்கல்வி பெற்று, சிறந்த முறைகளில் தேர்ச்சியடைந்து முன்னணியில் நின்றவர். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் வரலாற்றுப் பேராசிரியராகப் பணியேற்று (1942) தம்முடைய கடுமையான உழைப்பாலும் நேர்மையான பணியாலும் நல்லோர் பலருடைய கவனத்தைக் கவர்ந்தவர். இதன் பயனாக அரசுக் கல்வித்

துறையில் பேராசிரியராகப் (1947) புகுந்தார். அங்கும் நேரிய உழைப்பால் முதல்வர், மண்டலக் கல்வி ஆய்வாளர், துணைக் கல்வி இயக்குநர், இணைக்கல்வி இயக்குநர், பள்ளிக்கல்வி இயக்குநர், கல்லூரிக் கல்வி இயக்குநர், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் என்று பல கல்வி நிறுவனங்களில் பணியாற்றி அங்கங்கெல்லாம் தம் புகழ் நிறுவியவர். இப்பணிகட்கிடையில் இந்தியப் பல்கலைக் கழகங்களின் சங்கத் தலைவராகவும், தமிழ்நாடு சாரண இயக்கத் தலைவராகவும் பணியாற்றினார். தம் பணிக் காலத்தில் உலகெங்கும் பல்வேறு நாடுகளில் நடைபெற்ற கருத்தரங்குகள், உயர் மட்டக் குழுக்கள், பல்கலைக் கழக மானியக்குழு இவற்றில் பங்கு பெற்றவர். பல ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியவர். தம் வாழ்நாளில் பல்வேறு விருதுகளைப் பெற்றவர். '**சொற்கலைச் செல்வர்**' (அனைத்திந்திய பல்கலைக் கழக ஆசிரியர் கழகம் வழங்கியது) என்ற விருது மகுடமாகத் திகழ்ந்து ஆங்கிலத்திலும் தமிழிலும் உரையாற்றுவதில் வல்லவர் என்பதைப பறைசாற்றுகின்றது. தற்சமயம் உயர்நிலைக் கல்விச் சீர்திருத்தக் குழுவின் துணைத்தலைவராக இருந்து வருகின்றார். S. I. V. கல்வி அறத்தின் தலைவராகவும் இருந்து பணியாற்றி வருகின்றார்.

இந்த இனிய அறிஞரை 1975 முதல் நன்கு அறிவேன். நெருங்கிய பழக்கமும் உண்டு. என்னுடைய வளர்ச்சியையும் வளமையையும் அவர் நன்கு அறிந்தவர். அடியேனும் அவருடைய பணியையும் வளர்ச்சியையும் நன்கு அறிந்தவன். அண்டினவர்கட்கெல்லாம் நேர்மை தவறாது உதவுபவர்; கண்ணோட்டம் மிக்க சிறந்த பண்பாளர். இவர் என் நூலில் ஏதோ ஒரு வகையில் இடம் பெற வேண்டும் என்பது என் நெடுநாளைய அவா. இந்த நூலை அவருக்கு அன்புப் படையலாக்கிப் பெருமிதம்

கொள்ளுகின்றேன். இதனால் என் அவாவும் நிறைவு பெறுகின்றது. இவரது நல்லெண்ணத்தால், ஆசித்தால், இந்நூல் தமிழகத்தில் வாசகர்களிடையே சிறந்த புகழுடன் உலவும் என்பது என் அதிராத நம்பிக்கை.

இந்த நூல் சிறந்த முறையில் வெளி வருவதற்கு எனக்கு என்றென்றும் தோன்றாத் துணையாக நின்று கருணை மழை பொழியும் வேங்கடவாணனின் திருவடிகளை சரண் அடைகின்றேன்.

**வந்தாய்; என்மனம் புகுந்தாய்; மன்னி நின்றாம்**
**நந்தாத கொழுஞ் சுடரே! எங்கள் நம்பீ!**
**சிந்தா மணியே! திருவேங் கடமிமேய**
**எந்தாய்! இனியான் உன்னை என்றும் விடேனே.**[4]

—திருமங்கையாழ்வார்

'வேங்கடம்'
AD-13, அண்ணாநகர்,
சென்னை-600040

ந. சுப்பு ரெட்டியார்

---

4. பெரி-திரு. 1.10:9

# அர்த்த பஞ்சகம்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

வைணவ சமயத்தில், அந்தந்த சம்பிரதாயங்களையும்,
தத்துவங்களையும் நன்கு அறிந்து
அவற்றின்படி வழிபடுவோமேயானால், இறைவன்
பதமாகிய முக்தி எளிதில் கிட்டும் என்பதனை
துய்த்துணர வழி செய்கிறது இந்நூல்

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939317-0-7




*eBOOK* ~ *மின் நூல்*

## நூல் முகம்

கருமுகில் அனைய வடிவமும் செய்ய
 கண்மலர்க் கருணையின் எழிலும்
திருவளர் மார்பும் பங்கயக் கரமும்
 திருநடம் புரியும்இங் கிதமும்
மருவளர் வெண்ணெய் அருந்திய வாயும்
 மகிழ்ந்திடு முறுவலின் இயல்பும்,
இருபொழு தின்னும்என் இதயம்உற்று ஆளும்
 தாளும்,எந் நாளும்நான் மறவேன்.[3]

— வில்லிபுத்தூராழ்வார்

**'சிலப்பதிகாரம்'**, **'மணிமேகலை'** என்றவை **'இரட்டைக் காப்பியங்கள்'**. இவை ஒரே காலத்தில் இரண்டு பெரிய நல்லிசைப் புலவர்களால் இயற்றப் பெற்றன. இவற்றைப் போலவே ஒரே காலத்தில் (1993-1994) பிள்ளை உலக ஆசிரியர் அருளிச் செய்த மணிப் பிரவாள நடையிலுள்ள **'நவவிதசம்பந்தம்'**, **'அர்த்தப் பஞ்சகம்'** என்ற இரண்டு இரகசியங்கட்கும் சிற்றறிவுடையேனான அடியேன் ஒருவனால் விளக்கம் எழுதப்பெற்று வெளியிடப் பெற்றன. 'நவவிதசம்பந்தம்' எழுதப் பெற்றமைக்கு ஒரு சிறு வரலாறு உண்டு. அந்த வரலாற்று நிகழ்ச்சி எம்பெருமான் ஏழுமலையானால் ஏற்படுத்தப் பெற்றது.[4] அந்த நூல் முற்றுப் பெற்ற நிலையில் **'அர்த்த பஞ்சகம்'** என்பதன் விளக்கத்தையும் எழுதுமாறு ஏழுமலையப்பன் பணித்த தாகச் சிரமேற்கொண்டு எழுதி முடித்து வெளியீடு

---

3. வி. பா : கீசகவதைச் சருக்கம். ஏட்டுப் படி ஒன்றில் காப்பாக உள்ளது.

4. நவவிதசம்பந்தம் — நூல் முகம் காண்க.

கின்றேன். இதனை எழுதி முடிப்பதற்கும் ஏறக்குறைய நாற்பது நாட்கள் (நாள்தோறும் பத்து மணிப் பணி) ஆயின. இந்த நூலுக்கும் ஏழுமலையான் கடைக் கண் நோக்காகவே மானியம் கிடைத்தது. சற்றுக் குறைவாகவே கிடைத்தது. முட்டுவழிச் செலவில் மூன்றில் இரண்டு பங்கிற்குச் சற்றுக் குறைவாகவே உதவியது. மீதிப் பணம் அடியேனின் கையைக் கடித்தது. ஒருவாறு நூலும் அச்சு வடிவம் பெற்றது. மானியம் வழங்கிய திருமலை-திருப்பதி தேவஸ்தானத்திற்கு என் இதயம் கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டு உதவிய திரு முனிசாமி (மேலாளர், ஸ்ரீவேங்கடேசுவரா அச்சகம்) அவர்கட்கும் அட்டை ஓவியம் வரைந்து அச்சுக் கட்டைகள் தயாரித்தும், அட்டையை மூன்று வண்ணங்களில் அச்சிட்டும், அதற்குக் காப்புரை (Lamination) அமைத்தும் உதவிய ஓவிய மன்னர் திரு.P.N. **ஆனந்தன்** அவர்கட்கும், இதற்கு நன்முறையில் கட்டமைத்துக் கற்போர் கரங்களில் கவினுறத் தவழச் செய்த திரு. V. **திருநாவுக்கரசுக்கும்** என் உளங்கனிந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன்.

**புலவர் வீர. அரங்கனார்** எம் குலத் தோன்றல். ரெட்டி குலத்தைச் சொல்லவில்லை; புலவர் குலத்தைச் சொல்லுகின்றேன். தெலுங்கு பேசும் எம் பக்கத்து ரெட்டி குல இளைஞர்கள்—இளமையில் ஆங்கிலக் கல்வி பெறும்வாய்ப் பிழந்தவர்கள் - வீறுசால் தமிழை- **'தமிழ், தமிழ்'** என்று சொல்லுந்தோறும் நாவுக்கு **'அமிழ்தம்'** என இனிக்கும் இனிய தமிழின்மேல் எல்லையற்ற காதல் கொண்டு திருவையாறு சென்று அங்குள்ள அரசர் கல்லூரியில் ஐந்தாண்டுகள் பயின்று வித்துவான்பட்டம் பெற்றார்கள். அவர்களுள் ஒருவர் **வீர. அரங்கனார்.** எங்கட்கெல்லாம் முன்னோடியாகத் திகழ்ந்தவர். சேலம் மாவட்டம் நாமக்கல் வட்டத்திலுள்ள வரகூர், பவித்திரம், நாவலடிப் பட்டி சிற்றூர்கள் ரெட்டியார் பாகவதர்கள் அதிக

எண்ணிக்கையுள்ளவை. அங்ஙனமே, வரகூர் திருவை யாற்றில் படித்த அதிக எண்ணிக்கையுள்ள புலவர்கள் கொண்டது. அந்த ஊரைச் சார்ந்தவர் திரு வீர. அரங்க னார். இவ்வளவு எண்ணிக்கையில் உள்ள புலவர்கட் கெல்லாம் வழிகாட்டியாக இருந்து நெறிப்படுத்தியவர் **திரு. பு. ரா. புருடோத்தம நாயுடு** அவர்கள். இவர்கட் கெல்லாய் கலங்கரை விளக்காகத் திகழ்ந்தவர் மயிலை முனிவர் பன்மொழிப் புலவர் **திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார்** அவர்கள்.

இவர்களில் பெரும்பாலோர் ஊர்ப் பக்கங்களிலேயே தமிழாசிரியர்களாகப் பணியாற்றி தம் ஊர் களிலேயே அடங்கிப் போனவர்கள். நால்வர் பல இடங் களில் பணியாற்றி ஓய்வுபெற்று நற்புகழுடன் வேற்றூரில் குடியேறி நிலையாக வாழ்பவர்கள். திரு. வீர அரங்கனார் விழுப்புரத்தில் தமிழாசிரியராகப் பணியாற்றி அப்பக்கத் திலுள்ள ஒரு பெண்ணை மணந்து கொண்டு இல்லம் அமைத்துக்கொண்டு விழுப்புரத்தில் தங்கியுள்ளவர். படித்த காலத்தில் துடிப்புள்ள புலமை மிக்க இளைஞர்; பணியாற்றிய காலத்தில் 'நல்லாசான்' என்ற புகழுடன் திகழ்ந்தவர்; நற்பழக்கங் கள் உள்ளவர்; சமூக உறவுகள் அதிகம் கொண்டவர். கடுமையாக உழைப்பவர். புலவர்களில் உயர்நிலைப்பள்ளி முதல் தலைமையாசிரியராக உயர்ந்து புகழ் பெற்றவர். இவர், என் முதல் மகன்பொருட்டு என்னுடன் பெண் தேடி தென் ஆர்க்காட்டு மாவட்டத்தில் அலையும் போது எனக்கு உறுதுணையாக இருந்தவர். பழகுவதற்கு இனியர்; பண்பாடு மிக்கவர். 'பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்' என்ற பொன்மொழிக்கு இலக்கிய மாகத் திகழ்பவர். இத்தகை பண்பாளர் இந்த நூலுக்கு சிறப்புப் பாயிரப் பாமாலை நல்கியது இந்நூலின் பேறு; அடியேனின் பேறுமாகும். இதனை நல்கிய என் உடன் பிறவாச் சோதரர் திரு வீர. அரங்கனாருக்கு என் உளங் கனிந்த நன்றி உரித்தாகும்.

இந்த நூலுக்கு அணிந்துரை நல்கிய பேராசிரியர் டாக்டர் **இராம. மகாதேவன்** தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்தவர். ஆம்பனைக்கொம்பன் அரிசிச் சோறு உண்டு தண்பொருநையாற்று நீரைப் பருகிய தால் அறிவுக் கூர்மையுள்ள வடமொழிப் புலவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் வடமொழியில் எம்.ஏ., (1957), பூனா டெக்கான் கல்லூரியில் (1964) பி.எச்.டி (மொழியியல்) பட்டங்கள் பெற்றவர். பூனா கல்லூரியில் மொழியியலில் முதுநிலை பட்டங்கள் (1959, 61) பெற்றவர். புதுக்கோட்டை அரசர் கல்லூரி முஸ்ஸவுரி, திருப்பதி வடமொழி வித்தியா பீடம் முதலிய பல இடங் களில் பேராசிரியராகப் பணியாற்றியவர். ஆய்வு அநுபவம் இவருக்கு நிறைய உண்டு. டெக்கான் கல்லூரி மைசூர் இந்திய மொழிகளின் ஆய்வு மையம் ஆகிய இடங்களில் (1959, 1961, 1965, 1968, 1976) பல் வேறு ஆய்வுகளை மேற்கொண்டு பல் புகழ் ஈட்டியவர். நான்கு ஆய்வு நூல் கலையும் பத்துக்கு மேற்பட்ட அகழ் ஆய்வுக்கட்டுரை களையும் வெளியிட்டு ஆய்வுலக அறிஞர் களின் கவனத்தை ஈர்த்தவர். இறைவன் இங்ஙனம் பல் வேறு அநுபவங்களையும் அளித்ததோடு துன்பங்களையும் தெல்லைகளையும் இடைஇடையே வழங்கினான். இவற்றையெல்லாம் டாக்டர் மகாதேவன் நுகர்வினை (பிராரத்தம்) எனப் பொறுமையுடன் தாங்கி மகிழ் ந்தவர். துன்பத்திலும் இன்பங்காணும் பண்பை இவருக்கு இறைவன் வழங்கியுள்ளான்.

பழகுவதற்கு இனியவர்; அடக்கம் இவரது அணிகலன்; நிறைகுடம் தளும்பாதல்லவா? அடியேன் திருப்பதியில் ஓய்வு பெறுவதற்கு முன்பே (அக்டோபர்-1977) இவர் வடமொழி வித்யாபீடத்தில் துணைப் பேராசிரியராகப் பதவி ஏற்றிருந்தாலும் (நவம்பர் 1976) நெருங்கிப்பழகும் வாய்ப்பு ஏற்படவில்லை. இந்த ஆண்டு அவர் இராஸ்டிரிய வித்யாபிடத்தின் (Deemed University) துணை

வேந்தராக இருந்தபோது (மார்ச்சு-1994) அடியேன் அங்கு தேர்வாளராகச் சென்றபோது ஒருநாள் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. எங்கள் இதயங்கள் பேசின ஒரு நாள் பழகினும் பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்க வேர்வீழ்க்குமல்லவா? எங்கள் உறவு அப்படியாகிவிட்டது. இந்நூலுக்கு அரியதோர் அணிந்துரை பெறவும் வாய்பபளித்தான் ஏழுமலையப்பன். அணிந்துரை பெற்றது இந்நூலின் நற்பேறு; அடியேனின் பேறுமாகும். அணிந் துரை வழங்கிய அன்பர் மகாதேவனுக்கு அடியேனின் நன்றி என்றும் உரியது.

திருவாளர் A. இராமச்சந்திர ரெட்டியார் வடஆர்க்காடு மாவட்டம் வந்தவாசி வட்டம் தேசூரைச் சேர்ந்தவர்; வழி வழி வைணவ மரபினர்; நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்த நிலக்கிழார்; ஏழை எளியோர்க்கு இரங்கும் இயல்பினர். திருமால்பால் பக்தி நிறைந்த பண்பினர். ரெட்டி குலத்தினரிடம் இயல்பாகக் காணப்பெறும் விருந்தோம்பும் பண்பு இவரிடம் நிறைய உண்டு. எவருட னும் இன்முகத்துடன் பழகி இன்சொல் உதிர்க்கும் பெருமகனார்.

கடந்த பத்தாண்டுகளாக இவரும் இவரோடு ஒத்து ழைக்கும் சில வைணவப் பெருமக்கள் சிலரும் வந்தவாசி நகரில் ஸ்ரீமந் நாதமுனிசுவாமிகள் வைணவ சபையைத் தோற்றுவித்து அதன் தலைவராக நின்று அரும்பணிகள் ஆற்றி வைணவத்தைக் குன்றாது பாது காப்பவர். ஆண்டு தோறும் சூலைத் திங்களில் (ஆடித்திங்கள் முதல் அல்லது இரண்டாவது சனி, ஞாயிறு) ஆண்டு-விழாவைணவமா நாடுநடத்தி அறிஞர்களைக்கொண்டு சொற்பொழிவுகள் நிகழச் செய்துத்தீபாராதனை நடத்தியும்பெருந்தொண்டு ஆற்றிவருபவர். கடந்த எட்டு ஆண்டுகளாக ஞாயிறு தோறும் பிற்பகல் 2 மணி அளவில் பகவத் விஷயகாலட் சேபம் நடைபெறச் செய்துவருபவர்.

இப்பெருமகனாரை முன்வைத்து இரெட்டியார் சமூகம் ஆண்டுதோறும் ஆறு ஆண்டுகளாக ஸ்ரீ பெரும் புதூரில் உடையவர் ஊர்வலத்தில் (47 தேரடித்தெருவில்—ஸ்ரீராமாநுஜ கைங் காயசபை, என்ற பெயரில்) ஆறுநாள் ததியாராதனை நடத்திவருகின்றது இங்ஙனமே காஞ்சியில் வரதராசர் பெருவிழாவில் (வைகாசியில்) ஆறு ஆண்டுகளாக கருட சேவையிலிருந்து எட்டுநாள் (82 மலையாளத் தெரு, விஷ்ணுகாஞ்சி) 'பேரருளாளர் பெருமாள் சபை' என்ற பெயரில் ததியாராதனை நடத்தி வருகின்றது. சாதி வேறுபாடு இன்றி எல்லோருக்கும் ததியாராதனை உண்டு. இங்ஙனம் பல்வேறுவகையில் கைங்கரியத்தைப் பிறவிப் பேறாக நடத்திவரும் இப் பெருமகனாருக்கு இந் நூலை அன்புப் படையலாக்கி என்வாழ்க்கையைப் புனித மாக்கிக் கொள்ளுகின்றேன். சிறந்த வைணவ அடியாராகிய இவர் ஆசியால் என் வைணவப்பணி மேலும் மேலும் வளர்ந்தோங்கும் என்ற நம்பிக்கை என்பால் உண்டு.

''என்றைக்கும் என்னை உய்யக் கொண்டு போகிய, அன்றைக்கு அன்று என்னைத் தன்னாக்கி, (திருவாய்7.9:1) என்னுளே நின்று இந்நூலை எழுத வழி காட்டினான் ஏழுமலையப்பன். அந்தப் பெருமான் 'வேங்கடம் மேவிய விளக்காக' என்னுள்ளே நிரந்தரமாக எழுந்தருளியிருந்து கொண்டு புகல் ஒன்று இல்லா அடியேனுக்கு எல்லா நலன்களையும் ஈந்தும் இந்நூல் வெளிவரவும் ஓரளவு அப்பெருமான் பொருளுதவிமாசெய்தும் உதவினான். திருவடிகளைப் போற்றிச் சரண் அடைகின்றேன்.

> தேடிய அகலிகை சாபம் தீர்த்ததாள்;
> நீடிய உலகுஎலாம் அளந்து நீண்டதாள்;
> ஓடிய சகடுஇற உழைத்து, பாம்பின்மேல்
> ஆடியும் சிவந்ததாள்; என்னை ஆண்டதாள்.[5]

— **வில்லிபுத்தூராழ்வார்**

வேங்கடம்
AD—13 (மனை எண் 3354)
அண்ணா நகர்,
சென்னை-600 040
17-7-1994

**ந. சுப்புரெட்டியார்**

5. வில்லிபந்தம் : நான்காம் போர்ச் சருக்கம் காப்பு.

# நவவித சம்பந்தம்

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

ஸ்ரீவைணவர்கள் அவசியம் தெரிந்து கொள்ளவேண்டிய எம்பெருமானுக்கும் ஜீவாத்மாக்களுக்கும் உள்ள ஒன்பது விதமான உறவுகளைப்பற்றித் தனியாகவும், விரிவாகவும், ஆராய்ச்சி முறையிலும் விளக்கி ஒப்பற்ற விரிவான நூலை முதன்முறையாக இயற்றி வெளியிடுகிறார் பேராசிரியர்.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939502-3-4

*eBOOK ~ மின் நூல்*



# நூல் முகம்

கண்ணா ரிரம்பெற்ற கோன்உல
கோங்கிய கற்பகக் காத்
தண்ணாரும் பூவையும் வேண்டிலம் ;
வேண்டித் தலைக்கணிப்பூ
எண்ணார்க் கிருளன்ன வேங்கடத்
தான்தொண்டர் ஏவற்றொழில்
பண்ணாசைத் தொண்டரவர் தொண்டர்
தொண்டர் பதமலரே[1].

—முத்தமிழ்க்கவி வீரராகவ முதலியார்

'நவவித சம்பந்தம்'[3] என்ற இந்நூல் எழுந்ததே ஒரு சிறு வரலாற்றை உட்கொண்டது. 1993-சூலையில், வந்தவாசி நாதமுனிகள் சபையின் ஒன்பதாவது மாநாட்டில் கலந்து கொள்ளும் வாய்ப்பை அளித்தான் ஏழுமலையப்பன். 'தோழி, தாய், மகள்' என்ற பொருள் பற்றி உரையாற்றினேன். கற்றுத்துறை போய வித்தகர் ஏந்தூர் சுவாமிகள் 'நவவித சம்பந்தம்' பற்றி ஆற்றிய சொற்பொழிவையும் செவிமடுக்க வாய்ப்பு ஏற்பட்டது. சுவாமிகள் மிக அற்புதமாகப் பேசினார்கள். சுவாமிகளின் ஞானத்தை எட்டிப்பிடிக்கும் ஆற்றல் சபையோருக்கு இல்லாமையாலும், சபையோர் மனநிலைக்கு சுவாமிகள் இரங்கி வர முடியாமையாலும் சுவாமிகளின் பேச்சு சபையினருக்கு எட்டாப் பழமாகவே இருந்தது. சபையில் எழுந்தருளியிருந்த கரந்தை தாமோதரன் என்ற வைணவச் செல்வர் இந்த இரகசியத்தை எவரும் புரியும் வண்ணம்

2. திருவேங்கடக் கலம்பகம்-100

3. பிள்ளை உலக ஆசிரியரால் அருளிச் செய்யப் பெற்ற அஷ்டாதச ரகசியம் நூலிலுள்ள 11-ஆவது இரகசியம். பரிபாஷைச் சொற்கள் மலிந்த செறிவான மணிப்பிரவாள நடையில் $6\frac{1}{2}$ பக்கத்தில் அமைந்தது.

எழுதக் கூடியவன் அடியேன் ஒருவனே என்று என் பெயரைக் குறிப்பிடவே, சபையோர் இத்தெய்வப் பணியை எனக்கு இட்டனர். ஒருவித பெருமித உணர்வால் ஒப்புக்கொண்டேன். பொருளின் அருமைப் பாட்டையும் அடியேனின் அறிவுக் குறைவையும் எண்ணினேன் இல்லை.

மாநாடு முடிந்து சென்னைக்குத் திரும்பிய அன்றே திருப்பணியில் இறங்கினேன். எம்பெருமான் ஏழுமலையான் திருவருளும், எம்பெருமானார் பேரருளும், பிள்ளை உலகாசிரியரின் ஆசியும் துணை நிற்க, நாடோறும் பத்து மணி நேரம் வீதம் நாற்பது நாட்கள் உழைத்து நூலை ஒருவாறு நிறைவு செய்தேன். உடனே முறைப்படி திருமலை-திருப்பதி தேவஸ்தானத்திற்கு மானியம் கோரி விண்ணப்பித்தேன். ஏழுமலையான் கடைக்கண் திறக்கவே மானியமும் கிடைத்தது. மூட்டு வழிச் செலவில் மூன்றில் இரண்டு பங்கிற்கு உதவியது. மீதிப்பணத்தை அடியேன் பொறுப்பாகக் கொண்டு நூல் ஒருவாறு அச்சு வடிவம் பெற்றது.

இந்த நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டு உதவிய சுந்தரம் ஆர்ட் பிரிண்டர்ஸாருக்கும் குறிப்பாக அதனைச் செவ்விய முறையில், கண்ணும் கருத்துமாக அச்சிட்டு உதவிய மானேஜர் திரு. M. பலராம் ரெட்டியார் அவர்கட்கும், இந்த நூல் அச்சுத் தொடங்கிய முதல் அச்சு முடியும் வரை ஏட்டு படிவங்கள், பக்கப் படிவங்கள் முதலிய பல நிலைகளில் கருத்தூன்றி, பார்வைப் படிகளை நுணுகி, பிழைபார்த்து நூல் செப்பமுற வடிவமைப்பிற்கும் துணையாய் நின்ற செல்வி M. B. சியாமளா தேவி, M.A., M.Phil. (Ph.D.) அவர்களுக்கும் (திரு. M. பலராம் ரெட்டியாரின் அருமைப் புதல்வி) நன்றி என்றும் உரியது. எழில் கொழிக்கும் முறையில் அட்டை ஓவியம் வரைதல், அச்சுக் கட்டை தயாரித்து மூன்று வண்ணங்களில் அச்சிட்டு உதவிய ஓவிய மன்னர் திரு. P. N. ஆனந்தன் அவர்கட்கும், நூலைச் கவின் பெறக் கட்டமைத்துத் தந்த அருமைத் தம்பி V. திருநாவுக்கரசுக்கும் என் உளங் கனிந்த நன்றி என்றும் உரியது.

திரு. அரங்க சீனிவாசனார் 29-9-1929-ல் பர்மிய நாட்டில் பெரு மாவட்டத்திலுள்ள சுவண்டி என்ற சிற்றூரில் உழவர் குடியில் பிறந்தவர். சிறு வயதிலேயே இலக்கிய ஆர்வம் அரும்பியது. கவிதை இயற்றும் ஆற்றலும் அரும்பியது. இவரது இருபது அகவைக்குள் பத்து நூல்கள் வெளி வந்தன. 1942—2-ஆம் உலகப் பெரும் போரின்போது கால் நடைப் பயணமாகவே தாய் நாடு புறப்பட்ட இவர் பல இடையூறுகளுக்கும், நோய்களுக்கும், குண்டர்களின் தாக்குதல் களுக்கும் ஆளாகினமையால் கௌகாத்தியில் பல திங்கள் மருத்துவ மனையில் தங்க நேர்ந்தது. "காந்தி காதை" என்ற பெருங்காப்பியம் படைத்து பாரதீய வித்யா பவனம் நிறுவிய இராஜாஜி முதல் நினைவு பரிசும், தமிழக சிறப்புப் பரிசையும் பெற்றார். பேரறிஞர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பெருந்திருவாளர். திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் இவரது கவனத்திற்கு இலக்கானார்கள். இதனால் பரிசுகளும், பாராட்டுகளும் வந்து குவிந்தன. "காவடி சிந்தும் கவிஞன் வரலாறும்" என்ற வரலாற்று ஆய்வு நூல் தமிழக அரசின் முதல் பரிசு பெற்றது. நாற்பதிற்கு மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். அவற்றுள் வங்கத்துப் பரணி, வழிகாட்டும் வான் சுடர், காவடி சிந்தும் கவிஞன் வரலாறும் கடவுள் வரலாறும் முதலியவை குறிப்பிடத்தக்கவை.

பல நிறுவனங்களின் பாராட்டுகள், பரிசுகள், ஆசிகள் பெற்ற புண்ணியனார். இவற்றுக்கு மேலாகி எவருடனும் இனிமையாகவும், எளிமையாகவும் பழகுபவர். மனத்தினாலும் பிறருக்குத் தீங்கு எண்ணாதவர். 1979 முதல் இவர் எனக்கு நன்கு அறிமுகமானவர். இவரது அடக்கமுடமை, புலமைச் செருக்கு இல்லாமை, இன்முகத்துடன் பழகும் தன்மை என்னைக் கவர்ந்த பெருங்குணங்கள். இவரது புலமைக்கும், அடக்கமுடைமைக்கும் அரசவைக் கவிஞர் என்ற முறையில் இவரைத் தமிழ் நாடு அரசு ஏற்றுக் கொண்டு பெருமைப் படுத்தி யிருக்க வேண்டும்; தவற விட்டது. அரசின் கவனமின்மை

இனிமேல்யாகிலும் தமது முதுமைக் காலத்தில் வாழ்க்கை வசதியில்லாது தவிப்பவர் ஆதலால், இன்றும் இன்னும் அவருக்கு 'அரசவை கவிஞர்' என்ற விருதையும் வழங்கி அவர் வாழ்நாள் வரை தக்க ஊதியமும் கொடுத்து காப்பது அரசின் கடமை. குறிப்பாக, ஈத்துவக்கும் இன்பம் கண்ட தமிழக முதல்வர் செல்வி ஜெயலலிதா அவர்கள் இவற்றை உணர்ந்து வாழ்த்துவார்கள் என்ற நம்பிக்கையுண்டு. இத்தகைய பெரியார் இந்த வேதாந்த நூலுக்குச் சிறப்புப் பாயிரமாலை வழங்கி என்னைச் சிறப்பித்தமைக்கு அடியேனது இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

இந் நூலுக்கு அணிந்துரை நல்கிய பேராசிரியர். வித்யா வாரிதி. N.S. இராமாநுச தாத்தாசாரிய ஸ்வாமிகள் திருப்பதியில் பணியேற்றிய நாள் முதல் (ஆகஸ்டு 1960) அடியேனுக்கு நன்கு அறிமுகமானவர். தமிழில் தனித் தமிழ் வித்துவான் தேர்வு பெற்றவர். வடமொழியில் நான்கு சாஸ்திரத்தில் சிரோமணி பட்டம் பெற்றவர். தவிர நியாயம் வியாகரணம் வேதாந்த சாத்திரங்கள் இவற்றுக்கு உரையெழுதி வெளியிட்டவர். ஸ்வாமி தேசிகன் அருளிய நியாய சித்தாஞ்சனம் என்ற வடமொழி நூலை தமிழில் மொழி பெயர்த்தார். துணைப் பேராசிரியர், முதல்வர் என்ற பல நிலைகளில் பணியாற்றி நற்பெயரும், நற் புகழும் எடுத்தவர். தம்முடைய திறமையினாலும் உலகத்து ஒழுக்க சீலத்தினாலும் மிகமிக உயர்ந்து மத்திய அரசின் கவனத்தையும் கவர்ந்தவர். இதனால் திருப்பதியில் மத்திய அரசு நிறுவிய இராஷ்டிரிய சமஸ்கிருத வித்யா பீடம் (வடமொழி பல்கலைக் கழகம்) என்ற நிறுவனத்திற்கு இவரை முதல் துணை வேந்தராக நியமனம் செய்தது. இவரது நியமனத்தினால் துணை வேந்தர் பதவியும் பெரும் புகழ் பெற்றது. பல்கலைக் கழகமும் இவரது இருப்பினால் நாடு புகழ் எய்தியது. 'வடகலை' வைணவ மரபைச் சார்ந்தவராயினும் தென்கலை மரபையும் போற்றிக் காப்பவர். அங்ஙனமே, பிறசமயங்களிலும் காழ்ப்புக் கொள்ளாது அன்புடன் அக்கொள்கைகளை ஏற்பவர்.

உலகில் படித்தவர்கள், அறிஞர்கள், வல்லுநர்கள் இவர்கள் நிறைய உள்ளனர். கற்றடங்கிய சான்றோரைக் காண்டல் அரிது. இவர் ஒரு நிறை குடம். 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்ற வள்ளுவத்திற்கு இலக்கியமாகத் திகழ்பவர். "பணியுமாம் என்றும் பெருமை" என்ற வள்ளுவர் வாய் மொழிக்கு இக்கணமாகத் திகழ்பவர். 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற வள்ளுவத்திற்கு இலக்கியமாகத் திகழ்பவர். அடியேன் திருப்பதி சென்றது முதல் அடியேனின் உழைப்பை யும், வளர்ச்சியையும் நன்கு அறிந்தவர். அவர்தம் வளர்ச்சி யையும் அறிய அடியேனுக்கு வாய்ப்புகள் இருந்தன. இத்தகைய பெரியார் அடியேனது இந்த நூலுக்கு அணிந்துரை அருளியது இந்நூல் பெற்ற பேறு; அடியேனது பேறுமாகும். அணிந்துரை நல்கிய இந்த சீலருக்கு அடியே னுடைய இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூல் எழுதத் தொடங்கிய அன்றே எத்தூர சாமியவர்கட்கு அன்புப்படையலாக்க எண்ணினேன். இறை யருளால் அது நிறைவேறுகின்றது. இந்தச் சாமி தென்னார்க் காடு மாவட்டம் எத்தூர் என்ற சிற்றூரில் தோன்றியவர்; பெற்றோருக்கு ஒன்பதாவது பிள்ளை. திண்ணைப் பள்ளியில் முறையாகப் பயின்றது இரண்டாம் வகுப்புவரை தான். இள வயது முதல் சமயக் கல்வியில் நாட்டம். சிறுவயதிலேயே இராமாநுச நூற்றந்தாதி மனப்பாடம். இராமாயணம் பாரதம் முதலிய உரைநடை நூல்களில் ஆழங்கால் பட்டுப் பயின்றவர். தனிமையில் திண்டிவனம் பழநிசாமி சிவாச்சாரி யாரிடம் ஐந்திலக்கணம் பயின்றவர். பல வைணவர்களிடம் முமுட்சுப்படி, தத்துவத்திரயம், பகவத்விஷயம் முதலிய நூல் களைப் பாடங்கேட்டுக் காலட்சேபம் செய்தவர். பன்னிரண்டு வயதில் பஞ்ச சம்ஸ்காரம் செய்யப் பெற்றவர். சுயமாக அஷ்டப் பிரபந்தம் உட்படப் பல இலக்கியங்கள் பயின்றவர். கலைமகள் கடைக்கண் நோக்காலும் ஆராதன தெய்வம் ஸ்ரீ வேணுகோபால் சுவாமியின் திருவருளாலும் கவிதை இயற்றும் ஆற்றல் பெற்றவர். திருவாய்மொழிக் கலம்பகம்,

அலர்மேல் மங்கையந்தாதி, சடகோப நான்மணி மாலை முதலிய கவிதை நூல்களின் ஆசிரியர். திருவாய்மொழி உரை இவர்தம் அண்மைக் காலக் கைங்கரியம். பல வைணவ மேடைகளில் வைணவம் பற்றி உரையாற்றி வருபவர். அகந்தைக் கிழங்கை அகற்றியவர். அடக்கம் இவர்தம் உயர் பண்பு. 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்ற வள்ளுவர் வாய் மொழிக்கு இலக்கியமாகத் திகழ்பவர். அடியேன்பால் பேரன்பு கொண்டவர்; பல ஐயங்களைத் தெளிவித்தவர். இத்தகைய பெரியார் ஏந்தூர் சுவாமிகட்கு இந்த நூலை அன்புப்படைய லாக்கிப் பெறற்கரிய பேறு பெற்றவனாகின்றேன். இவருடைய ஆசியால் மேலும் வைணவ கிரந்தங்களில் புத்தொளி பெறு வேன் என்ற நம்பிக்கை உண்டு.

" தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்தமாயன் " (திருவாய். 7.9:2) என்னுள்ளே நின்று இந்நூலை எழுத வழி காட்டினான். என்னுள்ளே நிரந்தரமாக எழுந்தருளி யிருந்து கொண்டு எனக்கு எல்லா நலங்களையும் ஈந்துவரும் 'வேங்கடம் மேவிய விளக்கு' இந்நூல் வெளிவரவும் ஓரளவு துணை செய்தான். அப்பெருமான் திருவடிகளைப் போற்றிச் சரண் அடைகின்றேன்.

வெற்பென்று வேங்கடம் பாடினேன்; வீடுஆக்கி
நிற்கின்றேன்; நின்றுநினைக் கின்றேன்; கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண்!

—திருமழிசையாழ்வார்

'வேங்கடம்'
AD-13 (மனை எண். 3354)
அண்ணா நகர்,
சென்னை-600 040.
18—2—1994.

ந. சுப்பு ரெட்டியார்

4. நான்முகன் திருவந்தாதி-40

# இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இலக்கியங்களின் பல்வேறு வகைகளையும் ஆராய்ந்து
இக்கால இலக்கிய வளர்ச்சி பற்றியும், ஆழ்ந்த
புலமையோடு எளிய முறையில் சிந்தனைப்
பொறிகள் தெறிக்க மிக சிறப்பாக இந்நூல்
வடிவமைக்கப் பெற்றுள்ளது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939353-9-2




eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

ஏத்திமத மெல்லாம்
　　எதையறிந்தோம் என்னும்? எதைச்
சாத்திரங்கள் நன்காய்ந்து
　　சல்க்கும்? எதை—நாத்திகமோர்
சற்றுமே ஓர்ந்திலதரச்
　　சாதித்திடும்? அதையே
பற்றுவாய் நெஞ்சே! பரிந்து[1]

—வெ.ப. சுப்பிரமணிய முதலியார்

சென்னைப் பல்கலைக் கழகத்தில் கல்கி நிறுவனம் அமைத்த கல்கி அறக்கட்டளைச் சொற்பொழிவு (1996க்குரியது) நிகழ்த்துமாறு பேராசிரியர் பொன். கோதண்டராமன் (தலைவர், தமிழ் இலக்கியத்துறை) அவர்களிடமிருந்து அழைப்பு வந்தது; தலைப்பையும் அவர்களே தந்துவிட்டார்கள். ஒப்புக் கொண்டேன். காரணம், கல்கியின் இயல்பான துணிவும், அவர் தம் வரலாற்றுப் புதினங்களின் கம்பீரமான நடையும் கதைமாந்தர்களின் படைப்பும் அடியேனை இளமையிலிருந்தே கவர்ந்தன. அப்பெரியாரின் நினைவாகப் பேசுவதில் பெருமிதம் ஏற்பட்டமையால், உரிய காலத்தில் தமிழ் இலக்கியத் துறையிலேயே சொற்பொழிவையும் நிகழ்த்தினேன். முன்னமேயே இத் தலைப்பு பற்றிய சிந்தனைகளை அடியேனது 'தொல் காப்பியம் காட்டும் வாழ்க்கை' (1963), 'அகத்திணைக் கொள்கைகள்' (1981), 'புதுக்கவிதையின் போக்கும் நோக்கும்' (1983) பாட்டுத்திறன் (1988) என்ற நூல் களில் பதிவு செய்திருந்தமையால் இப்பணி அடியே னுக்கு எளிதாக அமைந்தது. இந்நிகழ்ச்சிக்கு கல்கி கிருட்டிண மூர்த்தியின் திருக்குமாரர் 'கல்கி' ஆசிரியர் திரு கி. இராசேந்திரன் அவர்கள் வருகை தந்து நிகழ்ச்சியைச் சிறப்பித்தது அடியேனுக்கு அள

1. அகலிகை வெண்பா—காப்பு.

வற்ற மகிழ்ச்சியைத் தந்தது. முதலில் அன்னாருக்கு என் உளம் நிறைந்த நன்றி.

நடைமுறையில் இத்தகைய நிகழ்ச்சிகட்கு வெளியார் தலை காட்டுவது மிக அரிது. ஒரு சிலரே வருவதுண்டு. வாழ்க்கைச் சிக்கல் நிறைந்த இந்த உலகில் கால தேச வர்த்தமானங்கள் இடந்தருவதில்லை. துறைக்குரிய மாணவர் சமுகந்தான் வந்து குவியும். பிறமொழித் துறைக்குரிய மாணவர்களும் தலைகாட்டுவதில்லை. அவர்கட்கு எத்தகைய அலுவல்களோ? யார் அறிவார்?

எண்பது அகவையைத் தாண்டி நிற்கும் (82) அடியேன் இளமைக் காலம் முதல் இன்றுவரைபுத்தகங்களையே 'கட்டிக்கொண்டு அழுது' காலங்கழிப்பவன். இல்லை, இல்லை; மறைந்த பேரறிஞர்களிடம் மானசீகத் தொடர்பு கொண்டு மகிழ்ச்சிப் பெருக்கால் திளைத்துக் கொண்டிருப்பவன்; ஆனந்தக் கண்ணீர் விடுபவன்.

படித்த கருத்துகளை எளிய முறையில் எழுதுவது, எழுதியவற்றை அச்சுக்குக் கொணர்வது என்கின்ற பணியில் ஆழ்ந்து கிடப்பவன். அதிக எண்ணிக்கையில் என் வெளியீடுகளைக் கண்ட வைணவ அன்பர் பண்ணுருட்டியைச் சார்ந்தவர் திரு. சீனிவாசம் பிள்ளையவர்கள், அடியேன்பால் மிக்க அன்பும் மரியாதையும் கொண்டவர். அடியேனுக்கு புக் (Book) ரெட்டியார் என்று சாட்டுத் திருநாமம் வழங்கிச் சிறப்பித்தார், அடியேனது இல்லத்திற்கு அடிக்கடி வரும் என் அபிமான புத்திரி செல்வி டாக்டர் மு. ப. சியாமளா எம்.ஏ. எம்ஃபில், பி.எச்.டி மற்றும் அன்பர்கள் அடியேனைச் சூழ்ந்த நூல்கள் நிறைந்த கண்ணாடி அடுக்குகளையும் "இருந்து எழுதுவதும், சோர்வு வந்தால் உடனே சாய்வதுமான" புத்தகங்கள் சூழ்ந்து கிடக்கும் கட்டிலையும் கண்டு பண்ணுருட்டிப்

பிள்ளையவர்கள் சாற்றிய சாட்டுத் திருநாமத்திற்கு இச்சூழ்நிலை அரணாக அமைந்தது என்று மகிழ்ச்சி தெரிவித்தனர். 'இஃதுதான் இறைவன் அடியேனுக்கு விட்டவழி' என்று நினைந்து கொண்டிருப்பவன். அடியேனை அறியாதவர்களுக்கு இது 'சுய புராணக்' குறிப்பு!

இத்தகைய இயல்புடைய அடியேனுக்கு 'பொற்கோ'வின் அழைப்பு கரும்பு தின்னக்கூலி கொடுப்பதாக அமைந்தது. பொதுவாக இத்தகைய பேச்சுக்கு எழுத்து வடிவம் தந்தபிறகே பேச்சில் ஈடு படுவேன். அந்த முறையில் இப்பேச்சு எழுத்து வடிவம் பெற்றது. அறையில் உருவான எந்த எழுத்து வடிவத்தையும் அச்சுவடிவமாக்கி அம்பலத்திற்குக் கொண்டு வருவது அடியேனது மற்றோர் இயல்பு. அந்த முறையில் இப்பேச்சு அச்சு வடிவம் பெற்று தமிழ் கூறும் நல்லுலகத்தில் உலவும் பேறும் பெற்றுத் தமிழன்பர்கட்கு விருந்தாகவும் அமைகின்றது.

இந்த நூலை தம் அணிந்துரையால் அழகு செய்யும் மூத்த வழக்கறிஞர் இரா. காந்தி அவர்கள் நாடறிந்த நல்லவர்; சமூகத்தொண்டர். அநீதி தலை எடுக்கும் இடங்களில் எல்லாம் அவசரமாகத் தலையிட்டு அவற்றைக் களைய ஒல்லும் வகையெல்லாம் உதவும் ஒழுக்கசீலர். இவர்தம் அரிய தொண்டையும் சீரிய ஒழுக்கத்தையும் கண்ட தமிழக ஆளுநர் சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக்குழுவில் பெயர் குறிப்பிட்டு இடம் பெறச் செய்தார். அங்கும் பல்லோரும் போற்றும் வகையில் அநீதிகளை எதிர்த்து அவை தலைதூக்காமல் விழிப்புடன் செயலாற்றுபவர். இத்தகைய அன்பர், என் அரிய நண்பர், இந்நூலுக்கு அணிந்துரை அருளியது இந்நூலின்பேறு; அடியேனின் பேறும் ஆகும். இத்தகைய நல்ல நண்பருக்கு அடியேனின் நன்றி என்றும் உரியது.

பாரதிதாசன் பல்கலைக் கழகத்திலும், அதற்கு முன்னர் சென்னைப் பல்கலைக் கழகத் திருச்சி மையத்திலும் இயற்பியல் துறைப் பேராசிரியராகவும் துறைத் தலைவராகவும் நற்பணி ஆற்றி அதனால் அனைவர் கவனத்தையும் ஈர்த்தமையால் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பொறுப்பு அவருக்குத் தானாகவே வந்தடைந்தது.

துணைவேந்தர் மரபு வழிப்பண்பாட்டு நிறுவனத்தின் தலைவர் (Ex-officio). நிறுவனத்தின் பொறுப்பு அவருடையது. இந்த நிறுவனம் நிதிவசதி இன்மையால் நொண்டி நடை போட்டுக் கொண்டிருந்தது. அடியேனுக்கு 'இயக்குநர்' பொறுப்பை வழங்கி உயிரியம் போன்ற பொருளாதாரத்தைச் சரிப்படுத்துமாறு பணித்தார் தலைவர். இறையருளால் பொருளாதாரம் சீர்படும் என்ற நம்பிக்கை உள்ளது. இப்போது நிறுவனம் பல்வேறு நிகழ்ச்சிகளால் கம்பீர நடை போடுகிறது. நிதிபெருகின பிறகு நிகழ்ச்சிகள் வேகமாக அரச நடை போட்டு இயங்கும். அறிஞர் உலகத்தையும் கவரும். நிறுவனத்தின் குறிக்கோள்களும் 100 விழுக்காடு நிறைவு பெறும். இத்தகைய நல்வினையாற்றிய நம்பி பேராசிரியர் ப. க. பொன்னுசாமி அவர்கட்கு அப்பர் பெருமான் ஞானசம்பந்தப் பெருமான்மீது கொண்டுள்ள அன்பு, பரிவு, பாசங்களுக்கு ஈடாக அடியேன் கொண்டுள்ளமையால் அவற்றை நினைவு கூரும் வகையில் இந்நூலை அவருக்கு அன்புப் படையலாக்கிப் பெருமிதம் அடைகின்றேன்.

கைப்படியை அன்புடன் ஏற்று இந்நூலை அழகுற அச்சிடச் செய்து கற்போர் கரங்களில் கவின்பெறத் தவழச் செய்த ஐந்திணைப் பதிப்பக உரிமையாளர் குழந்தைக் கவிஞர் குழ. கதிரேசன் அவர்கட்கும் என் அன்புகனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

அறக்கட்டளைப் பேச்சை எழுத்து வடிவம் பெறவும், அது மேலும் அச்சு வடிவம் பெறவும் "தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன்" (திருவாய். 7,9:2) அடியேனுள்ளே நின்று வழி காட்டினான். அடியேனின் இதயத்தில் நிரந்தரமாக எழுந்தருளியிருந்து கொண்டு எனக்கு எல்லா நலன்களையும் ஈந்துவரும் 'வேங்கடம்மேய விளக்கு' எல்லா வகையிலும் துணை செய்தான். "அவனன்றி ஓர் அணுவும் அசையா'தல்லவா? அப்பெருமான் திருவடிகளை நினைந்து சரண் அடைகின்றேன்.

தேடிய அகலிகை சாபம் தீர்ந்ததாள்;
நீடிய உலகுஎலாம் அளந்து நீண்டதாள்;
ஓடிய சகடுஇற உதைத்துப் பாம்பின்மேல்
ஆடியும் சிவந்ததாள்; என்னை ஆண்டதாள்![2]

—வில்லிபுத்துராழ்வார்

ந. சுப்புரெட்டியார்

'வேங்கடம்'
AD-13, அண்ணா நகர்
சென்னை-600 040
5-8-1997

---

2. வில்லிபாரதம்—நான்காம் போர்ச்சருக்கம்—காப்பு.

# வாழும் கவிஞர்கள்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியர் ‘திறனாய்வு நோக்கில் வாழும் கவிஞர்களின் கதைகள்’
எனும்பொருளில் மரபுக்கவிதை, புதுக்கவிதை என்ற
இரு தலைப்பில்இராமசாமி தமிழ்க்கல்லூரியில் சொற்பொழிவு
நிகழ்த்தினார். அப்பொழிவு ‘வாழும் கவிஞர்கள்’
எனும் நூலாக வெளியிடப்பெற்றது.

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939685-8-1




eBOOK ~ மின் நூல்

# நூலாசிரியர் உரை

காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியில் கவிச்செம்மல் டாக்டர். ரெ. முத்துக்கணேசனார் தம் பெயரில் அமைத்துள்ள தமிழ் அறக்கட்டளைச் சொற்பொழிவை 1998 பிப்பிரவரியில் நிகழ்த்த வேண்டுமென அக்கல்லூரியினர் என்னை விரும்பிக் கேட்டபோது மகிழ்ந்தேன், இசைவும் தந்தேன்.

வாழும் கவிஞர்களின் கவிதைகளைத் திறனாய்வு செய்யவேண்டுமென்ற என் நெடுநாளைய உணர்வுக்கு இவ்வாய்ப்பைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டேன். அதனால் திறனாய்வு நோக்கில் வாழும் கவிஞர்களின் கவிதைகள் என்ற பொருளில் மரபுக்கவிதை, புதுக்கவிதை என்பதாகப் பிரித்துக் கொண்டு கவிஞர்களின் படைப்புக்களைத் திரட்டினேன்.

அவைகளில் அள்ள அள்ளக் குறையா அற்புதங்களைக் கண்டு களித்தேன். நான் இன்புற்றதை உலகின்புறச் செய்யவிரும்பி அறக்கட்டளைச் சொற்பொழிவாக உரையாற்றியதோடு அவ்வறக்கட்டளை விதிப்படி "வாழும் கவிஞர்கள்" என்ற தலைப்பில் நூலாக எழுதியும் தந்தேன். நூலின் ஒருபகுதி (மரபுக்கவிஞர்கள்) இராமசாமி தமிழ்க்கல்லூரியினரின் மெய்யம்மை பதிப்பகத்தாரால் அச்சாகி வெளிவருவது கண்டு மகிழ்கின்றேன்.

இந்நூல் வெளிவரக் காரணமாயிருந்த என் அரியநண்பர் கவிஞர் ரெ. முத்துக்கணேசருக்கும் தமிழ்க்கல்லூரித் தலைவர் பெரி. பெரியகருப்பன், செயலர் பெரி. வீரப்பன் ஆகியோர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடியேன்பால் பெரிதும் கருணை கூர்ந்து அன்பு பாராட்டும்

தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல தேசிக சுவாமிகள் அவர்கள் என்னை வாழ்த்தி இந்நூலுக்கு அருளார்ந்த அணிந்துரை நல்கியருளியமைக்குப் பெரிதும் நன்றியுடையேன்.

நூலாக்கத்திற்கு நூல்கள் தந்து உதவிய அனைவர்க்கும் என் நன்றி. இந்நூலை எழுதுவதற்கேற்ற ஆற்றலையும் நீண்ட ஆயுளையும் நல்ல உடல் நிலையுடன் (கண்ணொளி உள்பட) மனவளத்தையும் தந்து என்னைக் காத்துவரும் "பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப்பசுங்கொண்டல்" ஏழுமலையானைப் பணிந்து வாழ்த்தி வணங்கி இந்நூலினை ரெ. மு. அவர்களின் அருமைத் தந்தையார் முத்தர் வெ. பெரி. சா. ரெங்கநாதன் செட்டியார் அவர்கட்குக் கீழ்க்கண்டவாறு அன்புப் படையலாக்குகின்றேன்.

சேந்தணி யார்வீட் டொருபுகழ் பெரும!
செம்மையே அணியே அன்னான்
ஏந்தெழில் முத்துக் கணேசநா யகனை
இயற்றமிழ்க் கொப்படைத் தளித்தாய்;
ஆழ்ந்தநின் படைப்புத் திறனை வியந்தேன்
ஆக்கிய இச்சிறு நூலைத்
தாழ்ந்துநின் றிறைஞ்சிப் படைத்தனன் நினக்கே
தகுதிசால் அரங்கநா தய்யா!

இங்ஙனம்
ந. சுப்புரெட்டியார்.

"வேங்கடம்"
ஏ.டி:13. மனை 3354
அண்ணாநகர் – சென்னை.40.

# நீங்காத நினைவுகள் - 1

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இருபது பெருமக்கள் — முதலமைச்சர், கல்வி அமைச்சர், பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், பல்கலைக் கழகத் துறைத்தலைவர்கள், பேராசிரியர்கள், நீதி அரசர், கல்வி நிறுவனங்களின் பொறுப்பாளர்கள், பொதுவாழ்க்கையில் ஈடுபட்டவர்கள், மாணாக்கர் — தொடர்பான பல்வேறு நிகழ்ச்சிக் குறிப்புகள் சுவைபட தொகுக்கப்பெற்றுள்ளன.

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939502-5-8




eBOOK ~ மின் நூல்

# நூல்முகம்

நாடிப் புலங்கள் உழுவார் கரமும்,
நயவுரைகள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவும்,
செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும்,
உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலே! உன் பாதம்
அடைக்கலமே![1]

- கவிமணி

காலவெள்ளத்தில் தோன்றியும் மறைந்தும் வரும் மனிதர் கூட்டங்களில் யானும் ஒருவன், மூன்றாண்டுப் பருவத்தில் தந்தையை இழந்து என் அன்னையால் பராமரிக்கப் பெற்றவன். திண்ணைப்பள்ளி முதல் கல்லூரிப் படிப்பு வரையில் இறையருளால் எனக்கு வாய்த்த நல்லாசிரியர்களால் உருவாக்கப் பெற்றவன். சிற்றினம் சேராமல் இறையருளால் காக்கப் பெற்றவன். நல்ல நண்பர்கள் வாய்க்கப் பெற்றவன்.

என் நீண்டவாழ்வில் (அகவை 83) எத்தனையோ பெரியார்களுடன் பழகியவன். ஏற்கெனவே முப்பது பெரியார்களுடன் பழகியதால் நேரிட்ட நினைவுகளை "மலரும் நினைவுகள்" (1989) என்ற தலைப்பில் நூலாக வெளியிட்டுள்ளேன். இப்போது "நீங்காத நினைவுகள்" என்ற தலைப்பில் இருபது பெரியார்களுடன் பழகியதால் ஏற்பட்ட நினைவுகள் பதிவு செய்யப்பெற்று நூலாக வடிவம் பெறுகின்றன. இப்பெரியார்களில் நிலக்கிழார் ஒருவர்; தன வணிகர்கள் இருவர்; பேராசிரியர்கள் மூவர்;

---

1 மலரும்மாலையும் - 1

பள்ளித் தாளாளர் இருவர், அமைச்சர் இருவர்; வழக்குரைஞர்கள் இருவர்; ஆசிரியர் ஒருவர்; தமிழாசிரியர் ஒருவர்; மாணாக்கர் ஒருவர்; உச்சநீதிமன்ற நீதிஅரசர் ஒருவர்; துணைவேந்தர் நால்வர்

இந்த நூலுக்கு அணிந்துரை நல்கிய முன்னாள் அமைச்சர் திரு. இராம. வீரப்பன் அவர்களின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு; என் பேறும் கூட இவர் பெருமையைப் பேசுவது கொல்லத் தெருவில் ஊசிவிற்ற கதையாகும். சுதந்திரம் பெற்ற பிறகு நாட்டையாண்ட நல்லமைச்சர்கள் சிலருள் இவர் முன்னணியில் நிற்பவர். பொது அறிவு மிக்கவர். இவருக்கு என் நன்றி.

இந்தநூல் அச்சாகுங்கால் பார்வைப் படிகளை மூலப்படியுடன் ஒப்புநோக்கியும் பார்வைப்படிகளில் எழுந்த பிழைகளைக் களைந்தும் உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.ப. சியாமளாவுக்கு என் அன்பு கலந்த நன்றி.

இந்நூலை புகழ்பெற்ற அறிவியலறிஞரும் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தருமாகிய, பேராசிரியர் பெ.த. மனோகரன் அவர்கட்கு அன்புப் படையல் செய்து அவர்பால் யான்கொண்ட அன்பையும் மரியாதையும் புலப்படுத்திக் கொள்கின்றேன். இவர்தம் நேர்மையான பணியால் முன்னாள் துணைவேந்தர் தாமரைச் செல்வர் நெ.து. சுந்தரவடிவேலுவை ஒப்ப புகழ் எய்துவர் என்பது என் கணிப்பு. அப்பெருமைப் பேறுபெற இறையருள் துணைநிற்க அவன் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்

இவ்வரிய நூல் வெளிவருவதற்கு தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் மூலம் ரூ. 8000/= நிதிஉதவி புரிந்த தமிழக அரசுக்கும் இதனை சிறந்த முறையில் வெளிவர ஒல்லும் வகையெலாம் உதவிபுரிந்த பால்நிலா பதிப்பகத்தாருக்கும் என் உளம்கனிந்த நன்றி.

என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு இருபது பெரியார்களுடன் யான்கொண்ட தொடர்புகளை நினைவிற்குக்

கொணர்ந்து அவை இலக்கியமாவதற்கு திருவருள் புரிந்த தருமமிகு சென்னையில் கந்த கோட்டத்து வளர்தலம் ஓங்கும் கந்தவேளை - சண்முகத்துய்ய மணி, உண்முகச் சைவமணி, சண்முகத் தெய்வமணியை - வாழ்த்தி வணங்குகிறேன். இந்நூல் நன்முறையில் வெளிவருவதற்குத் துணையாக இருந்த திருவருளையும் சிந்திக்கின்றேன்.

**புல்லும் பசுவிற்காம்; பூண்டும் மருந்திற்காம்;**
**கல்லும் திருக்கோயில் கட்டுதற்காம்;**
**ஏழை - எளியேன் எதற்காவேன்? செந்திநகர்**
**வாழும் வடிவேல வா![2]**

**-கவிமணி**

அடியேன்
**ந. சுப்புரெட்டியார்**

சென்னை-40
வைகுண்ட ஏகாதசி

---

2 மலரும் மாலையும் - முருகன் புகழ் மாலை-1

# பாவேந்தரின் பாட்டுத் திறன்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

கற்பனைத்திறன், கவிதைவளம், யாப்புநெறி,
உவமைத்திறன், வருணனைத்திறன் முதலியவை
குறித்து விரிவாக எடுத்துரைக்கும் இந்நூல்,
தமிழ்ச்சமுதாய மக்கள் அனைவரும் கற்றுத்
தெளிந்து, சுவைத்து, உணர்ந்து மகிழத்தக்கது

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939270-9-0

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

**தெளிவுறவே அறிந்திடுதல்; தெளிவுதர**
**மொழிந்திடுதல் சிந்திப் பார்க்கே**
**களிவளர உள்ளத்தில், ஆனந்தக்**
**கனவுபல காட்டல், கண்ணீர்த்**
**துளிவரஉள் உருக்குதல், இவையெல்லாம்**
**நீஅருளும் தொழில்கள் அன்றோ!**
**ஒளிவளரும் தமிழ்வாணீ! அடியனேற்கு**
**இவையனைத்தும் உதவு வாயே!***

- பாரதியார்

கரும்புச்சாறும் இனிக்கின்றது; கற்கண்டும் இனிக்கின்றது. முன்னது உரைநடையையொத்தது; பின்னது கவிதையையொத்தது. என் இருபது வயது முதல் கவிதையை நானாகப் படித்து அனுபவிக்கத் தொடங்கினேன். பாரதி, கவிமணி, பாவேந்தர் இவர்தம் கவிதைகளே, என் அநுபவப் பொருளாக அமைந்தன. எனினும், அக்காலத்தில் எனக்குக் கிட்டிய பாவேந்தரின் கவிதைகளின் முதற்றொகுதிதான் என்னைக் கவிதையுலகிற்குக் கொண்டு சேர்த்தது.

பாரதியின் நூற்றாண்டு விழாவை அவர் பற்றி நான்கு திறனாய்வு நூல்களை எழுதி வெளியிட்டுக் கொண்டாடியதுபோல் பாவேந்தரின் நூற்றாண்டில் அவர் பற்றி மூன்று நூல்கள் எழுதினேன். 'பாவேந்தர் பாரதிதாசன் - ஒரு கண்ணோட்டம்' என்ற நூல் மட்டிலும்தான் அச்சு வடிவம் பெற்றது (1991). ஏனைய இரண்டும் அடைகாக்கப் பெறவில்லை. அவற்றை வாங்கிய ஒரு பதிப்பகத்தார் தம் இயலாமையைக் கூறி கைப்படிகளைத் திருப்பித் தந்து விட்டார். ஒரு வைணவ மாநாட்டில் கலந்துகொண்டு வந்தபோது திரு. சுப்புராஜ் (சுரா பதிப்பகம்) அவர்களின் நட்பு கிடைத்தது. வெளியிடப் பெறாது இருந்த 'பாண்டியன் பரிசு - ஒரு மதிப்பீடு', 'பாவேந்தரின் பாட்டுத்திறன்' என்ற இரண்டின் படிகளையும் பெற்று

---

* பாஞ்சாலி சபதம் - சூதாட்டச் சருக்கம் - 164

அடைகாத்தார். இப்போது இரண்டும் இறகு முளைத்து ஒன்றன் பின் ஒன்றாக வெளி வருகின்றன. இப்பெருமகனாருக்கு மிக்க நன்றி.

டாக்டர் கலைஞர் கருணாநிதியை, அவர் குழித்தலைத் தொகுதியில் (திருச்சி மாவட்டம்) சட்டமன்ற வேட்பாளராக நின்று வெற்றி பெற்ற காலம் முதல் (அவர் என்னை அறியாவிட்டாலும்) நான் அறிவேன். நான் அப்பொழுது துறையூர் உயர் நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராக இருந்த காலம். அவர்தம் அரசியல் வாழ்வை இன்றுவரை கணித்து வருபவன். கல்லூரி எல்லையை மிதியாமல் தமிழ் எல்லையைக் கண்டு கொண்டவர். சங்க இலக்கியம், திருக்குறள் இவை பற்றிய அவர்தம் பதிப்புகள் இதனைப் பறைசாற்றும். திருப்பதி பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை தோன்றியது இவர்தம் ஆட்சிக் காலத்தில்தான். தமிழுக்காக வாரி வழங்குவதில் இவருக்கு நிகர் இவரே. இத்தகைய தமிழுள்ளம் கொண்டுள்ள தமிழ்ப் பெருமகனார் இந்நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்தமை இந்நூலின் பேறு; என்னுடைய பேறும்கூட. இந்த உழுவலன்பருக்கு என் இதயங்கலந்த நன்றி என்றும் உரியது.

பேராசிரியர் க. அன்பழகனாரை, அவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் எம்.ஏ., பயின்ற நாள் முதல் நான் நன்கு அறிவேன். நான் துறையூரில் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியனாகப் பணியாற்றிய காலம் (1941-50) அது. மாணவப் பருவம் முதல் இன்று வரை பாரதிதாசன் கவிதைகளில் மிக்க ஈடுபாடு கொண்டவர் என்பதை நான் நன்கு அறிவேன். ஆழ்ந்த தமிழ்ப் பற்றுடன் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் சில ஆண்டுகள் பேராசிரியராகப் பணிபுரிந்து, வள்ளுவர் வழி நின்று அரசியலுக்கு வந்தவர். இன்றும் மனச்சான்றுக்கு இடம் அளித்து கலைஞருடன் இணைந்து பணியாற்றுபவர். அவர்தம் வாழ்விலும், தாழ்விலும் இணைபிரியாதிருப்பவர். அவர் கல்லூரியில் பயின்ற நாள்முதல் நாளிது வரை அன்பு கொண்டிருப்பவர். என்னுடைய தமிழ்ப் பணியை தொடர்ந்து நன்கு மதிப்பிட்டு வருபவர். இத்தகைய நல்லுள்ளம் கொண்ட பேராசிரியர் மீது யான் கொண்டிருக்கும் மதிப்புக்கும், மரியாதைக்கும் நினைவாக இந்நூலை அவருக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன், பெருமிதமும் கொள்கிறேன்.

இந்நூல் அச்சேறுங்கால் பார்வைப் படிகளைச் சரிபார்த்துச் செப்பம் செய்ய உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.ப. சியாமளாவுக்கு என் நன்றி கலந்த வாழ்த்துக்கள்.

இந்நூலை எழுதவும், வெளியிடவும் ஆற்றல் அருளிவரும் எம்பெருமான் வேங்கடம் மேயவிளக்கினை நினைந்து வாழ்த்தி, வணங்கி, வழிபட்டு அமைகின்றேன்.

**எனக்கு வேண்டும் வரங்களை**
**இசைப்பேன் கேளாய் கணபதி!**
**மனத்திற் சலன மில்லாமல்**
**மதியில் இருளே தோன்றாமல்**
**நினைக்கும் பொழுது நின்மவுன**
**நிலைவந் திடநீ செயல்வேண்டும்;**
**கனக்கும் செல்வம் நூறுவயது**
**இவையும் தரநீ கடவாயே![2]**

- பாரதியார்


ந. சுப்பு ரெட்டியார்

'வேங்கடம்'
ஏ.டி-13, அண்ணா நகர்,
சென்னை - 600 040.

30.4.2000

2. பா.க. விநாயகர் நான்மணிமாலை - 7

# தந்தை பெரியார்
# சிந்தனைகள்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

தந்தை பெரியாரின் கருத்துக்களை, சிந்தனைகளை எடுத்து
ஆய்வு செய்வதில் பல சிக்கல்கள் தோன்றுவது இயல்பு.
ஆனால் பேராசிரியர் மிக அருமையாக இந்த
ஆய்வின் வாயிலாக தமிழ் மக்களுக்கு தெரிவிக்க வேண்டிய
கருத்துக்களை மிகச் சிறப்பாக வழங்கியிருக்கின்றார்.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939637-7-7

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

*எவன் உயிர்க்கு உயிராய் எள்ளும்எண் ணெயும்போல்*
*எங்கணும் இடையுறா நின்றான்*
*எவன்அனைத்து உலகும் என்றுகாத் தளிக்க*
*இறைமைசால் மூவுருவு எடுத்தான்*
*எவன்முதல் இடைஈறு இன்றிஎஞ் ஞான்றும்*
*ஈறிலா மறைமுடி இருப்பான்*
*அவன்எனைப் புறக்கத் திருக்களா நீழல்*
*அமர்ந்தருள் புரிந்தனன் உள்ளே*

**-அதிவீரராம பாண்டியன்**

தந்தைப் பெரியாருடன் என் இளமைக் காலத்திலிருந்து அவர்தம் சொற்பொழிவைக் கேட்டும், நேரில் உரையாடியும், வாதிட்டும் பழகியவன். அதனால் வள்ளுவரின் 'பெரியாரைத் துணைக்கோடல்' (அதி. 45) குறிப்பிடும் 'பெரியாருக்கு' இவர் இலக்கியமாகின்றார் என்பது என் அசைக்க முடியாத முடிவு. அத்தகைய பெரியாரைப்பற்றி அண்ணா பொது வாழ்வியல் மையத்தில் (சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் டாக்டர் சி.அ.பெருமாள் அறக்கட்டளைப் பொழிவுகளாகப் 2001) பேசும் வாய்ப்பு தந்தமைக்குத் துணைவேந்தர் பேராசிரியர் பொன்.கோதண்டராமன் அவர்கட்கும் மையத்தின் துறைத் தலைவர் பேராசிரியர் இரா.தாண்டவன் அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். தேசிய சொத்தாக வழங்கியுள்ள இராமாநுசர், தாயுமானவர், இராமலிங்க அடிகள், இராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றவர்களின் படைப்புகளை அறிஞர்கள் ஆராய்ந்து வருவதைப் போல் தந்தை பெரியாரின் எழுத்து, பேச்சுகளை அறிஞர்கள் என்றும் ஆய்ந்து வர வேண்டும் என்பது என் அகத்தில் படிந்துள்ள ஆழமான விழைவு. அவரை 'நாத்திகன்' என்று ஒதுக்கிவிடுவது அறியாமை.

இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய திரு இராம. வீரப்பன் (எம்.ஜி.ஆர். கழகத் தலைவர்) அவர் அமைச்சராக இருந்த காலம்

---

1. திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி - 16

முதல் நான் அறிவேன். சுதந்திரத்திற்குப் பிறகு நாட்டையாண்ட நல்ல அமைச்சர்கள் சிலருள் இவர் முன்னணியில் நிற்பவர். எம்.ஜி.ஆர்.ஐப் போலவே விரிந்த மனம் உள்ளவர். ஏழை, எளியவர்கள்பால் பாசமும் நேசமும் மிக்கவர். அவர்கள் வாழ்வு செழிக்க வேண்டும் என்ற பெருநோக்கம் கொண்டவர். பெரியார் வழி நின்று சாதி வேறுபாட்டைக் கடிபவர். பெரியார் கொள்கைகளுள் பலவற்றை ஏற்று நடப்பவர். பொது அறிவு (common sense) மிக்கவர். தமிழ்ப்பற்று மிக்கவர். தமிழ் வளர்ச்சிக்காகத் தம் வீட்டையும் ஈந்தவர் (வள்ளல் அழகப்பரைப் போல்). இத்தகைய பேரன்பர் இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கியது இந்நூலின் பேறு; என் பேறும் கூட. வாழ்த்துரை வழங்கிய வள்ளலுக்கு என் மனங்கனிந்த நன்றி உரியது.

இந்த நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்தவர் அண்ணா பொதுவாழ்வியல் மையப் பேராசிரியர் துறைத் தலைவர் டாக்டர் இரா.தாண்டவன் அவர்கள். பேராசிரியர் துறைத் தலைவராக இருந்து ஆற்றும் பணிகளைப் போல்- அவற்றை விடவும்- பொதுத் தொண்டு ஆற்றி வருவது அதிகம். அறிஞர் அண்ணாவைப்போல் விரிந்த மனத்துடன் தம்மிடம் வரும் அனைவருக்கும் அவர்கள் எத்துறையைச் சார்ந்தவர்களாயினும்- வேண்டிய உதவிகளைச் சிறிதும் தயங்காது செய்து வருபவர். ஒருமுறை ஒரு மூன்றாண்டுக் காலம் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவிலும் (Syndicate) இடம் பெற்றுச் செய்த தொண்டினை அனைவரும் அறிவர். இத்தகைய அன்பர்- நல்லவர்- வல்லவர்- இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியது நூலின் பேறு; என் பேறும் கூட. இத்தகைய பண்பாளருக்கு என் நெஞ்சு நெகிழ்ந்த நன்றி என்றும் உரியது.

கைப்படியை அன்புடன் ஏற்று நூலைக் கற்போர் கைகளில் கவின் பெற்றுத் திகழும் முறையில் அழகுற அச்சிடச் செய்த யாழ் வெளியீட்டாளர் திருமதி நாச்சம்மைக்கும் நூலை அழகுறக் கோப்பிட்ட சிவா கிராஃபிக்ஸ் நிறுவனத்தாருக்கும் என் இதயங் கலந்த நன்றி.

இந்நூல் அச்சாகுங்கால் பார்வைப்படிகளை மூலப்படியுடன் ஒப்பு நோக்கியும் பார்வைப் படிகளில் எழுந்த பிழைகளைக் களைந்தும் உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.ப.சியாமளாவுக்கு என் அன்புகலந்த நன்றி.

இந்த நூலைப் பெரியார் வழிநின்று வாழ்ந்த- வாழும்- வாழப் போகும் பெரியார் அன்பர்கட்கு அன்புப் படையலாக்கியதில் பெருமையும் பெருமிதமும் கொள்கின்றேன்.

இந்நூலை எழுதவும், வெளியிடவும் என்னையும் ஒரு கருவியாகக் கொண்டு இயக்கிய திருவருளை நினைந்து வணங்கி வாழ்த்தி அமைகின்றேன்.

*களியுற்று நின்று, கடவுளே! இங்குப்*
*பழியற்று வாழ்ந்திடக்கண் பார்ப்பாய்—ஒளிபெற்றுக்*
*கல்விபல தேர்ந்து கடமையெலாம் நன்காற்றித்*
*தொல்வினைக்கட் டெல்லாம் துறந்து!*

*—பாரதியார்*

-ந.சுப்புரெட்டியார்

'வேங்கடம்'
AD-13, அண்ணா நகர்,
சென்னை - 600 040.
அக்டோபர் 2, 2001
[காந்தி பிறந்த நாள்]

2. பா.க.தோ.பா.விநாயகர் நான்மணிமாலை-9

# சைவசித்தாந்தம்
## ஓர் அறிமுகம்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சைவசித்தாந்தைப்பற்றி தெரிந்துகொள்ள
வேண்டுமென்று விழையும் இளையோரும்,
முதியோரும் பெருமளவு பயன்படும்
வண்ணம் பல செய்திகளை தன்னகத்தே
உள்ளடக்கியது இந்நூல்

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939270-4-5




*eBOOK ~ மின் நூல்*

# நூல் முகம்

எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போது உணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணிய னே.[1]

*—நாவுக்கரசர்*

'வைணவமும் தமிழும்' எழுதி முடித்தபின் என் உள்ளிருந்து இயக்கும் கந்தவேள் **'சைவமும் தமிழும்'** எழுதுமாறு பணிக்க அந்த ஆணை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக அதிபர் திரு இரா.முத்துக்குமாரசுவாமியின் மூலம் என்னை வந்தடைந்தது. அவனருள் இருந்தமையால் அத்தெய்வப்பணி யாதொரு இடையூறுமின்றி இனிதே நிறைவெய்தியது. சைவசித்தாந்தம் - ஓர் அறிமுகம் என்ற பெயரில் நூல் அமைந்து வெளிவருகிறது.

பக்தி இயக்க காலத்திற்கு முற்பட்டே காரைக்கால் அம்மையார் தொடங்கி, பக்தி இயக்க காலத்தில் பெருகி வளர்ந்த திருமுறை நூல்களின் பரப்பு மிக விரிந்தது; அவற்றையொட்டித் தோன்றிய சித்தாந்த சாத்திர நூல்களும் மிக விரிந்து பெருகின: கால வெள்ளத்தில் இன்று அதன்

1. அப். தே. 6.99:1

வளர்ச்சியில் தளிர் விட்டுக் கொண்டிருப்பதைக் காணலாம். சைவ இலக்கியமும் சாத்திரமும், வைணவ இலக்கியம், சாத்திரம் ஆகியவற்றை விடப் பன்மடங்கு விரிந்து பெருகியுள்ளமையால். அவற்றையெல்லாம் உள்ளடக்கி எழுத வேண்டிய இன்றியமையாமையால் இந்த நூலின் அளவும் பெருகி வளர்ந்து விட்டது. தென்னாட்டில் வைணவப் பெருமக்களின் தொகையை விட சைவப்பெரு மக்களின் தொகையும் பன்மடங்கு மிக்கிருப்பதும் கண்கூடு.

இந்த நூலுக்கு அணிந்துரை நல்கியவர் என் அரிய நண்பர் பேராசிரியர் டாக்டர் டி.கிருஷ்ணன் அவர்கள் சமய இலக்கியங்களிலும், சாத்திர நூல்களிலும் ஆழ்ந்த புலமையோடு மிக்க ஈடுபாடும் உடையவர். சைவ சித்தாந்தத்துறைத் தலைவராகப் பொறுப்பேற்ற நாள் முதல் துறையைக் கண்ணெனப் போற்றி வளர்ப்பவர். பயிலும், ஆய்வு செய்யும் மாணாக்கர்பால் பேரன்பு கொண்டு நன்மாணாக்கர்களை உருவாக்குவதில் கண்ணும் கருத்துமாகக் கவனம் செலுத்துபவர். பலதுறைப் பேராசிரியர்களிடமும், ஆய்வு மாணவர்களிடமும், பொதுமக்களிடமும் மிக்க அன்பாகக் கலந்து பழகும் பண்பாடு மிக்கவர். இத்தகைய என் நண்பர் அன்பர் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்தமைக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

பிற சமயக்காழ்ப்பின்றி எல்லாச சமயங்களையும் சமமாகப் பாவிக்கும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந்த நூலை அன்புடன் ஏற்று வெளியிட்டமைக்குக் கழகத்திற்கு என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது. இந்த நூலை அச்சிடுங்கால் பார்வைப்படிவங்களைக் கைப்படியுடன் ஒப்பிட்டுச் சரிபார்த்த என் அருமையான புத்திரி டாக்டர் M.B.சியாமளா தேவிக்கு என் உளங்கனிந்த நன்றியும். ஆசியும் உரியவை

இந்த நூல் சைவ சமயத்தைச் சார்ந்த மக்களுக்கும் சைவ சமயத்தைச் சாராத பிறருக்கும், கல்லூரி மாணவர்கட்கும் பயன்படக் கூடியது. சைவ சித்தாந்தத்தை அறிந்து கொள்ள விழையும் ஆர்வலர்கட்குப் பெரிதும் பயன்படக் கூடியது.

சிவனருள் இருந்தமையால் இந்நூல் என்னைக் கருவியாகக் கொண்டு எழுதப்பெற்றது. எழுதுங்கால் என்னுளே என இதயத்தில் நிரந்தரமாக எழுந்தருளியிருக்கும் அரி–அரன் (ஹரிஹரன்) எனக்கு நல்ல உடல் நலத்தையும் மன வளத்தையும் அருளி என்னை ஊக்குவித்தான். அத்தகைய இறைவனின் திருவடிகளை நினைந்து வழுத்தி வணங்கி அமைகின்றேன்.

வேண்டத் தக்க தறிவோய் நீ
    வேண்ட முழுதும் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய்நீ
    வேண்டி என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயாது அருள்செய்தாய்
    யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
    அதுவும் உன்றன் விருப்பன்றே.[2]

*மாணிக்கவாசகர்*

'வேங்கடம்'
AD-13, அண்ணாநகர்,
சென்னை – 600 040.

இங்ஙனம் அடியேன்
**ந.சுப்புரெட்டியார்**
(மெய்கண்டார் அடியன்)

---

2. திருவா. குழைத்தபத்து - 9

# தாயுமானவர்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூலைப் பயிலுங்கால், குருவருளும் திருவருளும்
பெற்ற தாயுமானவர்சைவ உலகிற்குக் கிடைத்த
மெய்ஞ்ஞானச் செல்வர் என்பதையும், அவர்
அருளிய தெய்வமணம் கமழும் பாடல்கள்
உயிர்வளர்க்கும் ஞானப்பாடல்கள்
எனபதையும் மிகத் தெளிவாக உணர முடிகிறது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939835-4-6

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

எடுத்த தேகம் பொருள்ஆவி மூன்றும்நீ;
　　'எனக்கொன்று இல்லை' எனமோன நன்னெறி
கொடுத்த போதுகொ டுத்துஅன் றோன்?பின்னும்
　　குளறி நான்என்று கூத்தாட மாயையை
விடுத்த வாறும்,கண் ணீரொடு கம்பலை
　　விலகு மாறும்,என் வேட்கைப்ர வாகத்தைத்
தடுத்த வாறும் புகலாய்; சிரகிரித்
　　தாயு மான தயாபர மூர்த்தியே![1]

— **தாயுமான அடிகள்**

நான் திருச்சியில் புனித சூசையப்பர் கல்லூரியில் பயின்ற போது (1934-36) மலைக்கோட்டைக்கருகிலுள்ள காசியப்பா ராவுத்தர் ஸ்டோர்ஸ் எடுத்த விடுதியில் தங்கியிருந்தபோது வாரம் ஒரு முறை ஞாயிறன்று தாயுமானவர் திருக்கோவில் பெருமானை யும், உச்சிப் பிள்ளையாரையும் தவறாது வழிபட்டு வந்ததுண்டு. அப்போது என் தமிழறிவு சுமார்தான். தாயுமானவர் பாடல்களில் பராபரக் கண்ணி முதலான கண்ணிகள்தாம் என் மனத்தைக் கவர்ந் தன. என் அறையில் (வனப்பட்டறைத் தெருவிலுள்ள என் அறை யில் (1937-39)

*அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்*
*இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே![2]*

என்ற பாடலை எழுதி வைத்திருந்தது நினைவிற்கு வருகிறது. அங்ஙனமே நான் மாலை நேரங்களில் சில சமயம் காவிரிக் கரையிலுள்ள நீராகார மடத்துச் சாமியாரை (எங்கள் ஊரைச் சார்ந்தவர்) பார்த்து அளவளாவச் செல்வதுண்டு. அந்த மடத்து வெளிப்புறத்து வாயிலின் சுவர்மீது வருகிறவர் கண்ணில் படுமாறு

1. எடுத்ததேகம் - 1
2. பராபரக்கண்ணி - 155

*கொல்லா விரதம் குவலயம்எல் லாம்ஓங்க*
*எல்லார்க்கும் சொல்லுவதுஎன் இச்சை பராபரமே*[3]

என்ற பாடலையும், உட்புறச் சுவரில் இரண்டு இடங்களில்,

*கொல்லா விரதம்ஒன்று கொண்டவரே நல்லோர்மற்று*
*அல்லாதார் யாரோ அறியேன் பராபரமே*[4]

*எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே*
*அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே*[5]

என்ற பாடல்களையும் எழுதி வைத்து பலரை மகிழ்வித்ததையும் நினைவுகூர முடிகின்றது. அதன்பிறகு வேறு பல அலுவல்களால் தாயுமானவர் பற்றிய சிந்தனையே இல்லாது போய்விட்டது.

திருப்பதியில் பணியாற்றியபோது தாயுமானவர் பற்றி ஒரு பிஎச்.டி. ஆய்வு மாணவருக்கு வழிகாட்டியாக இருக்கும் பொறுப்பு வந்தது (1972-75). அப்போது அடிகளின் பாடல்களைப் படித்து நன்கு அநுபவித்தேன்; அவ்வநுபவம் என் மனநிலையை அதிகமாக மாற்றியது. அடிகளின் படைப்புக்களைப் பற்றி ஒரு விளக்க நூல் எழுத வேண்டும் என்ற எண்ணம் என் ஆழ்மனத்தில் இருந்து வந்தது. 1984-85இல் அப்பணியில் இறங்கி சில இயல்கள் எழுதி னேன். அவையும் அறைகுறைதான்.

இந்நிலையில் 'நீர்வழிப்படும் புனைபோல்' திருப்பதியில் மூன்று திங்கள் பணியும் அடுத்து தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் - காஞ்சித் தத்துவ மையத்தில் 18 மாதப் பணியும் வந்தன என். கவனம் திசை திரும்பியது. மீண்டும் வைணவத்தில் ஆழங்கால்பட நேர்ந்தது. 1200 பக்கத்தில் 'வைணவச் செல்வம்' என்ற நூல் உருவாயிற்று. அடுத்து சென்னைப் பல்கலைக் கழகத்தில் இலக்கியத் துறையில் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர் பணியும் (ஆகஸ்டு 1990), அடுத்து தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபுவழிப் பண்பாட்டு நிறுவநன மதிப்பியல் இயக்குநர் பணியும் (பிப்ரவரி 1996) வந்தன. புதிய துறைகளாதலால் மூச்சுமுட்டும் வேலை; இங்ஙனம் மூன்றாண்டுகள் கழிந்தன.

3. பராபரம் - 54
4. மேலது - 192  5. மேலது - 221

இடையில் சிறிது ஓய்வு இருந்தது; தாயுமானவர், மீது கவனம் சென்றது. மிகக் கடுமையாக உழைத்து 13 இயல்களில் தாயுமானவர் (விளக்க நூல்) நிறைவு பெற்றது!

முறைவழிப்படும் ஆருயிர் ஆதலால் எதிர்பாராத விதமாக கலைஞன் பதிப்பகத்திலிருந்து திரு. **முத்துக்குமாரசுவாமி** அவர்கள் என்னைச் சந்தித்துத் தம்மை அறிமுகம் செய்து கொண்டு[6] தாயுமான வர் கைப்படியையும் பெற்றுச் சென்று நூலை அச்சேற்றி விட்டார். அவருக்கு மிக்க நன்றி.

இந்த நூல் அச்சாகுங்கால் மூலப் படியுடன் பார்வைப் படிவங் களை ஒப்பிட்டுச் சரிபார்த்து அச்சிட உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.ப.சியாமளாவுக்கு என் இதயங்கலந்த ஆசியுடன் கூடிய நன்றி என்றும் உரியது.

இந்நூலுக்கு **அணிந்துரை** வழங்கியவர் என் நீண்டநாள் அருமை நண்பர் புலவர் **த.இராமலிங்கம்** (ஓய்வு பெற்ற தலைமை யாசிரியர் குருசாமி முதலியார் மேனிலைப் பள்ளி, சென்னை). புலவர் பட்டத்துடன் நின்று விடாது தமிழ் எம்.ஏ., எம்.எட். பட்டம் பெற்று புலமையை வளர்த்துக் கொண்டவர். தமிழாசிரியராகப் பணியேற்று மேனிலைப் பள்ளித் தலைமையாசிரியராக உயர்ந்து பல்லோர் வியக்கப் பணியாற்றியவர். சைவத்திலும் ஆழ்ந்த புலமை யுடன் திகழ்பவர். பல்கலைக் கழகத்தில் இருக்க வேண்டியவர் ‘முறைவழிப்படாது’ பின் தங்கிவிட்டார். ஆசிரியப் பண்பு பிறவிப் பண்பாகப் பெற்றவர். இப்பண்பு மாநில மைய அரசுகளால் நல்லாசி ரியர் என்ற முத்திரையிட்டுச் சிறப்பிக்கப் பெற்றது. பல்வேறு பொதுத் தொண்டுகளில் பங்கு கொண்டிருப்பவர். பல்வேறு விருது கள் வரிசை வரிசையாக வந்து தம்மைச் சிறப்பித்துக் கொண்டன. நேர்மை இவர்தம் உயிர் நாடி. இன்முகத்துடன் பழகும் பெற்றியர். சுவைபடப் பேசும் சொல்லின் செல்வர். மலேசியா சைவ மாநாட்டில்

6. நான் முசிறி உயர்நிலைப் பள்ளியில் படித்தபோது என்னுடன் நெருங்கிய வகுப்புத் தோழர்கள் சிலர். அவர்களுள் ஒருவர் மணல்மேடு என்ற ஊரைச் சேர்ந்த தங்கவேல் என்பவர் ஒருவர். அவர்தம் சகோதரியின் மகன்தான் திரு. முத்துக்குமார சுவாமி என்பவர். இவர் மூலம் என் பல நூல்கள் வெளிவர உள்ளன.

கலந்து கொண்டு ஆய்வுக் கட்டுரை வழங்கியவர். பல நற்பண்புகளு டனும் நல்ல புலமையுடனும் திகழும் இந்த இனிய நண்பரின் அணிந்துரை பெற்றது இந்த நூலின் பேறு. ஏன்? என் பேறுங்கூட. இப்பெருமகனாருக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

1934-39 திருச்சியில் புனித சூசையப்பர் கல்லூரியில் பயின்ற போது என் ஆங்கிலப் பேராசிரியர் **அருள் தந்தை ஜெரோம் டி சௌஸா** அவர்கள். கல்லூரி முதல்வரும் அவரே. மாணாக்கர்கள் பால் தந்தையனைய பாசம் காட்டுபவர். 1936இல் இயற்பியலில் B.Sc., (Hon) சேர்ந்து ப்டித்து உடல்நிலை கேடுற்றமையால் படிப்பு நின்றது; ஓராண்டு வீணாயிற்று. இடைநிலை வகுப்பு முடிந்து நாலாண்டுகளில் B.Sc., (Hon.) முடிக்கவேண்டும் என்ற விதி இருந்தமையாலும், ஓராண்டு கொன்னே கழிந்தமையாலும் மீண்டும் ஒருகால் உடல்நிலை கெட்டால் வாழ்வே கெடும் என்று கூறி மறுக்கப் பெற்று வேதியியல் B.Sc., படிப்புக்கு இடம் தந்தார். முதல் வகுப்பில் முதல்நிலையில் தேர்ச்சி பெற்று கல்லூரிக்கு நற்பெயரும் என் வாழ்வுக்கு நந்நிலையுமாக அமைந்தது.

அருள்தந்தை மாணாக்கர்பால் மிக்க அக்கறை கொண்டவர் என்பதற்கு இரண்டு நிகழ்ச்சிகள் சான்றுகளாக அமைகின்றன.

(1) நான் நன்மாணாக்கன் என்ற பேர் பெற்றவன். என் போன்ற ஐவருடன் கல்லூரிக்கு அருகிலுள்ள ஓர் விடுதியில் தங்கியிருந் தேன். அவ்விடுதி ஓய்வு பெற்ற ஒரு கல்லூரிப் பேராசிரியருக்குச் சொந்தமானது. சில நாட்களில் மாலை நேரங்களில் தாழ்வாரத்தில் அமர்ந்து கொண்டு அரட்டை அரங்கம் நடத்தும்போது மகிழ்ச்சி ஒலி ஏற்படுவதுண்டு. விடுதி உரிமையாளர் வகுப்பு ஆசிரியர்போல் எங்களை அடக்க முயன்றார. 'நாங்கள் நன்மாணாக்கர்கள். உங்கள் வகுப்பு ஆதிக்க முறையை எங்களிடம் காட்ட வேண்டா?' என்று மரியாதையாகத்தான் கூறினோம். இதனைப் பொறுக்க மாட்டாத அப் '**பெருமகனார்**' தேர்வு 15 நாள் இருக்கும்போது அறைகளைக் காலி செய்ய வேண்டும் என்று வக்கீல் அறிவிப்பைப் பதிவு அஞ்சலில் அனுப்பச் செய்தார். எங்களுக்கு ஒரே கவலை - தேர்வு நெருங்கி வரும் நிலையில் இங்ஙனம் நேரிட்டதென்று. நான் அருள் தந்தை ஜெரோம் டி சௌஸாவுக்கு அன்புக்குரியவனாதலால் என்னை அத்தந்தையாரிடம் சொல்லி இந்த இக்கட்டு நிலைக்குக்

கழுவாய் காணுமாறு வேண்டினர் நண்பர்கள். நான் தந்தையாரிடம் இதனை விண்ணப்பிக்கவே, அவர் மிக்கச் சினங்கொண்டு பதில் அறிவிப்பு அனுப்புமாறு தம் கல்லூரி வக்கீல் P.S. கிருஷ்ணமூர்த்தி அய்யருக்கு ஒரு குறிப்பு அனுப்ப, அவரும் கல்லூரி சார்பில் எங்கட்காக ஒரு பதில் அறிக்கை அனுப்பினார். விடுதி உரிமையாளர் வாயடைத்துப் போனார். எங்கள் கவலை ஒழிந்தது.

(2) படிப்பை முடித்துக் கொண்டு பணியிலமர்ந்து பல ஆண்டு கட்குப் பின்னரும் தேவைப்படுங்கால் இயன்ற அளவு உதவிய பெருமை அருள் தந்தை ஜெரோம் அவர்கட்கு உண்டு. மூன்று ஆண்டு ஆசிரியப் பணியின் அநுபவம் பெற்றவர்கள் தனிமையாக மேல்படிப்புக்கான தேர்வு எழுதி பட்டம் பெறும் சலுகை இருந்தது. பி.எஸ்சி., எல்.டி. பட்டம் பெறற யான் மூன்றாண்டு தலைமையாசிரியர் அநுபவத்துடன் தமிழ் எம்.ஏ. தேர்வு எழுத விழைவு கொண்டேன் (1944). அதற்கான விண்ணப்பம் உரிய கட்டணத்துடன் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பினேன். பி.எஸ்சி., பட்டதாரி எம்.எஸ்சி., தேர்வு எழுதலாமேயன்றி (சோதனைச் சாலை அநுபவத்தைத் தகுதியாக்கிக் கொண்டு) எம்.ஏ., பட்டத் தேர்வுக்கு அநுமதி இல்லை என்று (பி.எஸ்சி., பட்டப் படிப்பில் பகுதி-2 தமிழ் படிக்கும் வாய்ப்பு இல்லாததால்) பல்கலைக் கழகம் மறுத்தது. என்னை இடைநிலைத் தேர்வு பெற்ற ஆசிரியனாகக் கருதி பி.ஏ. தேர்வு எழுத அனுமதிக்குமாறு விண்ணப்பித்தேன். எந்தப் பட்டமும் இல்லாதாருக்குத்தான் இச்சலுகை உள்ளதேயன்றி ஒரு பட்டம் உள்ளவருக்கு அனுமதிக்கும் மரபு இல்லை என்று பல்கலைக் கழகம் மறுத்துவிட்டது. இம்மரபு ஆசிரியரின் அடிப்படை உரிமையை மறுத்ததாகும். இஃது அறிவியல் சிந்தனையிலடிப்படையில் அமைந்ததன்று என்று பன்முறை வாதாடி எழுதியும் பல்கலைக கழகம் தன் கொள்கையில் விடாப்பிடியாக இருந்தது.

அருள் தந்தையிடம் இந்த நேர்மையற்ற கொடிய நிலையை எடுத்துக் கூறி இதற்குக் கழுவாய் காண வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தேன். இதனைச் செவிமடுத்த அருள் தந்தையார் பக்குவமாகப் பல நிலைகளை எடுத்துக்காட்டி (1944) மூன்றாண்டுகள் முயன்று (1944-47) ஆட்சிக் குழுவின் மூலம் புது விதியைப் பிறப்பிக்கச் செய்தார். நானும் 1947இல் பி.ஏ. தேர்வு (பகுதி-1

ஆங்கிலம், பகுதி 2 தமிழ்) எழுதி தமிழில் முதல் வகுப்பு மாநிலத்தில் முதல் நிலையில் தேர்ச்சி பெற்றேன். பல்வேறு பணி நெருக்கடி நிலைகளால் 1951இல் தான் தமிழ் எம்.ஏ. தேர்வு எழுதி வெற்றி பெற முடிந்தது. 1950 முதல் காரைக்குடி பணி (1960 வரை).

(3) திருச்சியில் பயின்றபோது (1938 என்பதாக நினைவு) ஒருமுறை இரத்தினவேலு தேவர் மன்றத்தில் டாக்டர் சி.ஆர். ரெட்டிக்கும் (ஆந்திரப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக இருந்தவர்) அருள்தந்தை ஜெரோம் அவர்கட்கும் **Religions Examined** என்ற தலைப்பில் ஒரு சொற்போர் **(Debate)** நடைபெற்றது. இரண்டு சொல் சிங்கங்கள் மோதிக் கொண்ட காட்சியைக் காண முடிந்தது. ஆங்கிலச் செழுமையை அறிய முடியாவிடினும் கருத்து வளத்தைக் காணும் மதிநுட்பம் என்பால் இருந்தது. அருள் தந்தை யாரின் சமயப் பொறையையும் கிறித்தவ சமயமே உலகிலே முதன் முறையாக மனித சமுதாயத்தின்மீது மிக்க அக்கறை கொண்டு (1) கல்வி, (2) மருத்துவம் ஆகிய இரண்டு திசைகளில் தொண்டாற்றி சமுதாயத்தில் ஒரு விழிப்புணர்ச்சியை உணடாக்கியது என்பதை அற்புதமாக விளக்கினார். இக்கருத்து என் உள்ளத்தில் ஆழப்பதிந் தது.

(4) தாயுமான அடிகளின் கம்பீரமான கவிதைச் சொற் பெருக் கும் அருள் தந்தை ஜெரோம் அவர்களின் கம்பீரமான ஆங்கிலச் சொற்பெருக்கும் ஒற்றுமையுடன் திகழ்வதாக அறிய முடிந்தது. இரண்டும் என் உள்ளத்தை நெகிழ்விப்பதாக இருந்தன. இக்கார ணங்களால் **'தாயுமானவர்'** என்ற ஆய்வு விளக்க நூலை அருள் தந்தையாரின் இணைத்தாமரை அடிகளில் வைத்து வணங்கி வீட்டுல கில் வாழும் அவரது ஆசியைப் பெற்றுவிட்டதாக மனநிறைவு பெற்று உடல் புளகாங்கிதம் அடைகிறேன்.

இந்நூலைத் தொடர்ந்து (1) பட்டினத்தடிகள், (2) அருட்பிர காச இராமலிங்க வள்ளல், (3) இராமாநுசர், 94) காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள் ஆகியோரைப்பற்றியும் எழுத எண்ணியுள்ளேன். இவற்றை நிறைவேற்றும் வரையில் உடல்

நலத்துடனும் மனவளத்துடனும் நான் வாழ்வேன் என்ற மனவுறுதி என்பால் உண்டு. இதற்குத் திருவருள் துணை இருக்கும் என்ற திடமான நம்பிக்கையும் கொண்டுள்ளேன்.

இத்தகைய சமய இலக்கியப் பணியில் ஈடுபாடும் அதனை நிறைவேற்றும் மனஉறுதியும் தந்து உதவும் பரம்பொருளை வாழ்த்தி வணங்கி அமைகின்றேன்.

*அருளாலே எவையும் பார்என்றான் - அத்தை*
*அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்*
*இருளான பொருள்கண்டது அல்லால் - கண்ட*
*என்னையும் கண்டிலன் என்னேடி தோழா*

*என்னையும் தன்னையும் வேறா - உள்ளத்து*
*எண்ணற்ற வண்ணம் இரண்டுஅற நிற்கச்*
*சொன்னது மோஒரு சொல்லே - அந்தச்*
*சொல்லால் விளைந்த சுகத்தை என்சொல்வேன்*

**— தாயுமானவர்**

வேங்கடம்'
AD-13 அண்ணாநகர்
சென்னை - 600 040
விசயதசமி
26.11.2001

**ந. சுப்பு ரெட்டியார்**

7. ஆனந்தக் களிப்பு - 13,14.

# சைவமும் தமிழும்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

சைவத்திற்கு ஓர் உயர்விடத்தை, ஆராய்ச்சியாளர்கட்கு
நல்லதொரு புள்ளிவிவரங்களை, தமிழ்
ஆர்வலர்களுக்கு வளம்கொழிக்கும்
தமிழ்ச்சுவையை அள்ளித்தரும்
பெட்டகமாகத் திகழ்கின்றது இந்நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939270-3-8

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

உருவாகி நிற்றி; அருவாகி நிற்றி;
உயிரோடு வைக்கும் உரவோய்
மருவாகி நிற்றி; மலராகி நிற்றி;
மறையாகி நிற்றி; மறையின்
பொருளாகி நிற்றி; உனையான்அ றிந்து
புகழ்கின்ற வாறும் அறியேன்;
கருவா புரிக்குள் உறைதேவ தேவ!
கதியேதுஎ னக்கு மொழியே[1]

*—அதிவீர ராமபாண்டியார்*

***'சைவ சித்தாந்தம் – ஓர் அறிமுகம்'*** *என்ற நூலை நிறைவு செய்த நிலையில்* ***'சைவமும் தமிழும்'*** *என்ற தலைப்பில் ஆதி முதல் இன்று வரை சைவ இலக்கியங்கள் தோன்றி நின்று நிலவுவதை சைவ அன்பர்கட்கும் சைவ இலக்கியங்களை அறிய அவாவி நிற்கும் ஆர்வலர்கட்கும் ஓர் அறிமுக நூல் வரைந்தால் பேருதவியாக இருக்கும் என்று என் உளத்தில் நிறைந்திருக்கும் சிவனருள் சிந்திக்க வைத்துச் செயற்படவும் செய்தது. அதன் விளைவாக இந்நூல் எழுந்தது.*

*இந்நூல் தொல்காப்பிய காலம் முதல் திருமுறை இலக்கியங்கள் காலம் முடிய 'முற்கால இலக்கியங்கள்' என்று முதற் பகுதியாகவும், திருமுறை இலக்கியங்கட்குப் பின் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை காலம் முடிய 'பிற்கால இலக்கியங்கள்' என்று இரண்டாம் பகுதியாகவும் அமைந்துள்ளது.*

---

1. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி-52

சமயக் காழ்ப்பின்றி எல்லாச் சமய நூல்களை வெளியிட்டு சமயத் தமிழை வளர்த்துப் புகழோங்கச் செய்யும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் குறிப்பாக அதன் அதிபர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் இந்நூல் கைப்படியையும் அன்புடன் ஏற்று வெளியிட்டமைக்கு என் உளங்கனிந்த நன்றி.

இந்நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்த குஜராத் உயர்நீதிமன்ற தலைமை நீதியரசர் (ஓய்வு) பி. ஆர். கோகுல கிருஷ்ணனை அறியாத தமிழர்களே இலர். தம் மாணாக்கப் பருவம் முதலே தமிழார்வம் மிக்கவர். தமிழ் முனிவர் திரு. வி. க. மீது அளவற்ற மதிப்பும் மரியாதையும் கொண்டு மாணக்கப் பருவ காலத்திலேயே 'மணவழகர் மன்றம்' நிறுவி இன்று வரை பல்வேறு இலக்கியக் கூட்டங்களை நடத்தி வருபவர். தமிழ்ப் பற்றும் சமயச் சிந்தனையும் அவர் மேற்கொண்டிருந்த நீதித்துறைப் பணியை மனத்தூய்மையுடன் நிறைவேறச் செய்தது என்பது அடியேனின் கருத்து. மேலும் இவையே சென்னைப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தத்துறை, வைணவத்துறையை நிறுவச் செய்தமைக்கு உந்து விசையைத் தந்தது. துறையொன்றுக்கு இருபது லட்சம் வீதம் நன்கொடைகள் மூலம் திரட்டி வழங்கித் துறைகளை உருவாக்கினார். இவர் வழியைப் பின்பற்றியே சைன சமயத் துறை, கிறித்தவ சமயத்துறை, கிறித்தவ இலக்கியத்துறை, அண்ணா பொது வாழ்வியல் துறை போன்றவைகள் தோன்றின. என் வாழ்வில் சிறு பருவம் முதல் இன்று வரை நல்லோர் இணக்கம் இறைவன் திருவருளால் ஏற்பட்டது என்பது என் துணிவு. அரசியல் அறிஞர்கள் ஓரிரு நல்லவர்களின் இணக்கத்தைத் தவிர பெரும்பாலும் நீதியரசர்களின் இணக்கமே அதிகமாக ஏற்பட்டதும் என் நல்லூழே காரணமாக அமைந்தது. நீதியரசர்களிலும் அதிகமாக இணக்கம் ஏற்பட்ட நீதியரசர் பி. ஆர். கோகுல கிருஷ்ணனின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு;

என் பேறும் கூட. அணிந்துரை வழங்கிய பெருமகனாருக்கு என் நெஞ்சம் நெகிழ்ந்த நன்றி என்றும் உரியது.

இந்த அரிய நூலினை சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில் எட்டைத் தமிழ் மொழியில் படைத்து உதவிய 'உமாபதி சிவம்' என்ற அருளாளர் திருவடியில் சமர்ப்பித்து அவர்தம் ஆசியைப் பெறுகின்றேன்.

இந்நூல் அச்சேறுங்கால் மூலப்படியுடன் பார்வைப் படிமங்களை ஒப்பு நோக்கிச் சரிபார்த்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு. ப. சியாமளாவுக்கு என் நன்றி கலந்த ஆசி என்றும் உரியது.

இந்நூலை எழுதுவதற்கு நல்ல உடல் நலனும் மன வளமும் நல்கிய சிவனருளைச் சிந்தித்து அமைகின்றேன்.

சிந்தனை உனக்குத் தந்தேன்;
திருவருள் எனக்குத் தந்தாய்;
வந்தனை உனக்குத் தந்தேன்;
மலரடி எனக்குத் தந்தாய்;
பைந்துணர் உனக்குத் தந்தேன்;
பரகதி எனக்குத் தந்தாய்;
கந்தனைப் பயந்த நாதா!
கருவையில் இருக்கும் தேவே![2]

—அதிவீரராம பாண்டியன்

—ந. சுப்புரெட்டியார்
(உமாபதிசிவத்தின் அடியன்)

'வேங்கடம்'
AD-13, அண்ணாநகர்,
சென்னை—600 040.

2. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி - 63

# அறிவியல் நோக்கில்

## இலக்கியம், சமயம், தத்துவம்


பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்




எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

**அறிவியல் தோற்றமும் வளர்ச்சியும், சமயங்களின் தோற்றமும் வளர்ச்சியும், அறிவியல் நோக்கில் சமயம் தத்துவம்** எனும் மூன்று தலைப்புகளில் அடங்கியுள்ள மிகவும் இன்றியமையாத பல்வேறு உட்பிரிவுகளைக் குறித்து மிகத்தெளிவாகவும் விரிவாகவும் விளக்கியுள்ளார் பேராசிரியர்.


ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939835-4-6





*eBOOK* ~ *மின் நூல்*

# நூல் முகம்

'ஒருமொழியே பலமொழிக்கும் இடங்கொ டுக்கும்;
ஒருமொழியே **மலம்ஒழிக்கும் ஒழிக்கும்'** என்ற
ஒருமொழியைக் கருத்தினிலே நிறுத்தும் வண்ணம்
ஒருமொழி 'ஓம் நமச்சிவாய' என்பர்;
'அரிஅரி'என் றிடினும்அ:.தே; 'ராம ராம'
'சிவசிவ'வென் றிட்டாலும் அ:.தே யாகும்;
தெரிவுறவே 'ஓம்சக்தி' என்று மேலோர்
செபம்புரிவது அப்பொருளின் பெயரே யாகும் [1]

- பாரதியார்

**டாக்டர் எஸ். இராதாகிருட்டிணன்** உயர்வுறு தத்துவ ஆய்வு நிறுவன இயக்குநர் டாக்டர் **இரா. கோபாலகிருட்டிணன்** அவர்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க, **நிமிஷகவி கே. சுப்பைய நாயுடு அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்** - 1996-97 திட்டத்தில் (1) அறிவியல் நோக்கில் - தமிழ் இலக்கியம், (27-1-1997), (2) அறிவியல் நோக்கில் - சமயம், தத்துவம் (28-1-1997) என்னும் தலைப்புகளில் நிகழ்த்திய **இரு** சொற்பொழிவுகள் இப்போது அச்சேறி நூல் வடிவம் பெறுகின்றன.

இப்பொழிவுகளின் கைப்படியைப் **'பழனியப்பா பிரதர்ஸ்'** நிறுவனத்தின் பங்காளர் **திரு. செ.மெ. பழனியப்பச் செட்டியார்** அவர்கள் அன்புடன் ஏற்று, அழகிய முறையில் அச்சிட்டு, நூல் வடிவமாக்கித் தமிழ்கூறு நல்லுலகில் உலவ விட்டமைக்கு அச்சான்றோருக்கு என் நன்றி கலந்த வணக்கங்கள் உரியன.

---

1. பா.க. சுயசரிதை - 63

இந்த அரிய நூலுக்கு அழகியதோர் அணிந்துரை நல்கி நூலுக்குப் பொலிவும் சிறப்பும் பெருமையும் ஏற்படுத்திய பெரியார் நீதியரசர் **என். கிருட்டிணசாமி ரெட்டியார்**, ஓய்வு பெற்ற சென்னை உயர்நீதி மன்ற நீதிபதியாவார். அரசு வக்கீலாக இருந்தபோது நீதிக்கு வாதாடியவர். நீதிபதியான பின்னர் நீதி வழங்கியவர். எண்பது அகவையைக் கடந்து நிற்கும் இப்பெருமகனார் பதினைந்துக்கும் மேற்பட்ட கல்வி, மருத்துவ, சமூக, சமய நிறுவனங்களின் தலைமையாக இருந்து கொண்டு ஆற்றிவரும் தெய்வப்பணிகள் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பெறவேண்டியவை. இவற்றுள் குறிப்பிடத்தக்கவை சுமார் ஐம்பது கோடி மதிப்புடைய பதினைந்து உயர்நிலை, மேனிலைப் பள்ளிகளைக் கொண்ட விவேகாநந்த கல்வி நிறுவனம், தாம்பரம் இந்து மருத்துவப் பணி மன்றம், சங்கர நேத்திராலய நிறுவனம், காஞ்சி காமகோடி மடத்தைச் சார்ந்த இந்து சமயப் பணிமன்றம் ஆகியவை ஆகும். இத்தகைய நிறுவனங்களின் பணியைத் தம் இகவாழ்வுக் குறிக்கோளாய்க் கொண்டு பணிபுரியும் நீதி அரசரின் அணிந்துரை பெற்றது இந்த நூலின் பேறு; என் பேறுமாகும்; அணிந்துரை நல்கி ஆசி கூறிய பெருமகனாருக்கு என் நன்றி கலந்த வணக்கங்கள் உரியவை.

இந்த நிறுவனத்தின் முதல் இயக்குநர் **திரு.T.M.P. மகா தேவன்** அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய அத்துணைத் தத்துவ நூல்களிலும் அடியேன் ஆழங்கால்பட்டு மிகுபயன் பெற்றவன். தத்துவத்தைத் தெளிவான எளிய ஆங்கில நடையில் எழுதிய மாபெரும் மேதை. அடியேன் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் ஓய்வு பெற்று சென்னைக்கு வந்த அதே ஆண்டு (1978) அவர் இல்லத்தில் நடைபெற்ற சிறப்புக் கூட்டமொன்றில் சில ஆழ்வார் பாசுரங்களைக்கொண்டு அத்வைதத் தத்துவத்தை விளக்குமாறு பணித்தார். கடந்த இருபதாண்டு காலமாய் (1960-1980) ஆழ்வார் பாசுரங்களை விசிட்டாத்வைத நோக்கில் ஆய்ந்த அடியேனை இப்பணி திக்குமுக்காடச் செய்தது. பரம்பொருளின் அருளாலும் பணித்த பெருமகனாரின் ஆசியின் கனத்தாலும் நான்கைந்து பாசுரங்களைக்கொண்டு விளக்க முயன்றேன். என் பேச்சை உன்னிக் கவனித்த பெருமகனார் ‘நன்று நன்று’ என்று பாராட்டி ஆசி கூறினார்.

அப்பெருமகனார்பால் அடியேன் கொண்டிருக்கும் பெருமதிப்பிற்கும் மரியாதைக்கும் அறிகுறியாய் இந்தப் பனுவலை அவருக்கு அன்புப் படையலாக்கிப் பெருமிதம் கொள்கின்றேன். முத்தியுலகில் இருக்கும் அவருடைய ஆன்மா அடியேனுக்குத் தொடர்ந்து ஆசி கூறிக்கொண்டிருக்கும் என்பது அடியேனின் அதிராத நம்பிக்கை.

நூல் அச்சாகும்போது, மூலப்படியுடன் பார்வைப்படியை ஒப்பிட்டு நோக்கி உதவிய என் அபிமான புத்திரி **டாக்டர் மு. ப. சியாமளா**வுக்கு என் ஆசியுடன் கூடிய நன்றி.

இந்த நூலை உருவாக்கி வெளியிட என் இதய கமலத்தில் நிரந்தரமாய் அந்தர்யாமியாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் ஏழுமலையானின் இணைத்தாமரை அடிகளை வாழ்த்தி வணங்கி அமைகின்றேன்.

"புல்லும் பசுவிற்காம்; பூண்டும் மருந்திற்காம்;
கல்லும் திருக்கோயில் கட்டுதற்காம் - தொல்லுலகில்
ஏழை எளியேன் எதற்காவேன்? செந்திநகர்
வாழும் வடிவேல வா!"

- தேசிகவிநாயகம் பிள்ளை

**- ந. சுப்பு ரெட்டியார்**

'வேங்கடம்'
AD-13, அண்ணா நகர்,
சென்னை - 40.
9-03-2001
தொ.பே. 6211583

---

2. தே.வி. மலரும் மாலையும் - முருகன் புகழ்மாலை - 1. அடியேனுக்கு எல்லாக் கடவுளரின் வடிவங்களும் பரப்பிரம்மமாகவே (பெரிய பொருளாகவே) காட்சியளிக்கும்.

# கவிமணியின் தமிழ்ப்பணி

## ஒரு மதிப்பீடு

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

கவிமணி காட்டும் இயற்கைக் காட்சிகளையும்,
படிமக் காட்சிகளையும் வரலாற்றுப் போக்கிலும்,
ஒப்பீட்டு முறையிலும் தமக்கே உரித்தான
முறையில் பேராசிரியர் திறனாய்ந்து
படைத்த ஓர் ஒப்பற்ற நூல்

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939317-5-2




*eBOOK* ~ *மின் நூல்*

# நூல் முகம்

**கா**னல்நீர் விழைந்த மான்என உலகக்
கட்டினை நட்டுழன்று அலையும்
ஈனவஞ் சகசெஞ் சகப்புலை யேனை
ஏன்றுகொண் டருளும்நாள் உளதோ
ஊனம்ஒன்று இல்லா உத்தமர் உளத்தே
ஓங்குசீர்ப் பிரணவ ஒளியே
வேல்நவில் கரந்தோர்க் கினியவா சித்தி
விநாயக விக்கினேச் சுரனே (11) [1]

சங்கம்வளர்த் திடவளர்ந்த தமிழ்க்கொடியைச்
சரசுவதி தன்னை அன்பர்
துங்கமுறக் கலைபயிற்றி உணர்வளிக்கும்
கலைஞானத் தோகை தன்னைத்
திங்கள்நுதல் திருவைஅருட் குருவைமலர்
ஓங்கியபெண் தெய்வந் தன்னைத்
தங்கமலை முலையாளைக் கலையாளைத்
தொழுதுபுகழ் சற்று நிற்பாம் [2]

— **இராமலிங்க வள்ளல்**

என் வாழ்நாளில் கல்லூரி வாழ்க்கை தொடங்கி என் மனத்தை அதிகமாக ஈர்த்தது அறிவியல்; அஃது இன்றும் தொடர்ந்து நடைபெறுகின்றது. 1941 ஜூன் முதல் நாள் தொடங்கி துறையூரில் புதிதாகத் தொடங்கப் பெற்ற உயர்நிலைப் பள்ளி முதல் தலைமையாசிரியர் பணியை ஏற்ற நாள் முதல் மக்கள் உணர்வைக் கல்வியின்பால் ஈர்க்கச் செய்வதற்குத் துணையாயிருப்பதற்கு உதவுவது மக்கள் பேசும் மொழி தமிழ் என்பதனை உணர்ந்தேன். நான் உயர்நிலைப் பள்ளி மாணவனாக 5,6ஆம் படிவங்களில் பயின்றபோது தமிழ் கற்பித்த இரு தமிழாசிரியர்கள் ஊட்டிய, உறங்கிய நிலையிலிருந்த தமிழுணர்வு இப்பொழுது கிளர்ந்தெழத் தொடங்கியது.

1. திருஅருட்பா - மூன்றாம் திருமுறை - சித்தி விநாயகர் பதிகம் - 11.
2. மேலது - மேலது - கலைமகள் வாழ்த்து - 2

சிறுவனாகிய என் கவனத்தை காந்தியடிகளின் வாழ்க்கை ஈர்த்தது. 1932ல் நான் முசிறியில் 5ஆம் படிவ மாணவனாக இருந்தபோது ஒரு சில மாணவர்களுடன் திருச்சி வந்த காந்தியடிகளைப் பார்க்க வந்து திருச்சி தேசிய கல்லூரி வளாகத்தில் அப்பெருமானைக் கண்டு மகிழ்ந்தேன். 1942 ஆகஸ்டு புரட்சி என் மனத்தை ஈர்த்தது. குறைந்த தமிழறிவுள்ள நான் பாரதியின் பாடல்களில் ஆழங்கால் பட்டேன்.[3] 1943 முதல் தந்தை பெரியாரிடம் ஈடுபாடு கொண்டு நேரில் பழகியவனாதலால் சுயமரியாதை இயக்கம் என்னை ஈர்த்தது. பாவேந்தர் பாடல்களில் ஆழங்கால் பட்டு அநுபவித்தேன். 1948இல் பாவேந்தரை ஒரு வாரம் விருந்தினராக என் இல்லத்தில் தங்க வைத்து அவருடன் அளவளாவி மகிழ்ந்தேன். அவர்தம் தீவிர கொள்கை எனக்கு உடன்பாடு இல்லாத போதிலும், அவர்தம் பாடல்கள் என் உள்ளத்தை ஈர்த்ததால் அவர்தம் நூற்றாண்டு விழாவில் அவர் பாடல்களைப் பற்றி மூன்று திறனாய்வு நூல்களை எழுதி முடித்தேன்.[4]

இதற்கிடையில் புதுமைப் பதிப்பகம் ''மலரும் மாலையும்'' என்ற தேசிக விநாயகம் பிள்ளையின் பாடல்களை வெளியிட்டது (1944 மூன்றாம் பதிப்பு). சத்துவகுணம் மிக்க எனக்கு சத்துவ குணமே வடிவாகவுள்ள பிள்ளையவர்களின் பாடல்கள் மிகவும் இனித்தன. பன்முறைப் படித்துப் படித்து மகிழ்ந்தேன். காரைக்குடி சென்றதும் (1950 சூலை முதல்) டி.கே.சி.யின் தொடர்பும் அவர்தம் பாடல்களைப் பற்றி அதிகமாக மேடைகளில் பேசிவந்த பேராசிரியர் ஆ.முத்துச்சிவம் தொடர்பும் ஏற்பட்டதால் மேலும் அவர்தம் பாடல்களில் ஈடுபாடு அதிகமாயிற்று. திருப்பதி சென்ற பிறகு தே.வி.யின் பாடல்களை தமிழ் எம்.ஏ.க்குரிய பாடத் திட்டத்தில் சேர்ந்து கற்பிக்கும் வாய்ப்பையும் பெற்றேன். அவர்தம் அனைத்துப் பாடல்களையும் கொண்ட பாரி நிலைய வெளியீடு (சனவரி, 1967) எனக்குக் கிடைத்தது. இப்பதிப்பு மிகவும் பயனுள்ளதாக அமைந்தது.

3. பிற்காலத்தில் பாரதி நூற்றாண்டு விழா நினைவாக பாரதியின் பாடல்களைப் பற்றி நான்கு திறனாய்வு நூல்களை வெளியிட்டு மகிழ்ந்தேன்.
4. ஒன்று அப்பொழுது வெளிவந்தது; இரண்டு இப்பொழுது (2002) வெளிவருகின்றன.

உலகத் தமிழ் மாநாடு (எட்டாம் அமர்வு) தஞ்சையில் நடைபெற்றபொழுது அதில் தே.வி.யின் பாடல்களைப் பற்றி ஆய்வுக் கட்டுரை வழங்கினேன். தொடர்ந்து **'கவிமணியின் தமிழ்ப் பணி - ஒரு மதிப்பீடு'** என்ற தலைப்பில் எழுதி முடித்தேன் (1995). அதன் கைப்படியைப் பெற்று திரு. ப.முத்துக்குமாரசாமி அவர்களின் பரிந்துரையால் கலைஞன் பதிப்பகம் மூலம் வெளிவருகிறது. வெளியிட்டவருக்கும் 'புருஷகாரம்' செய்தவருக்கும் மிக்க நன்றி.

நான் இன்று நன்னிலையிலிருப்பதற்கு இறையருளும் (விநாயகர், முருகன், ஏழுமலையான்) நான்கு பெரியவர் களின்[5] ஆசிகளும் காரணம் என்பது என் அதிராத நம்பிக்கை.

இந்த நூலுக்கு அணிந்துரை வழங்கிய **டாக்டர் (திருமதி) இராதா செல்லப்பன்** (பேராசிரியர், துறைத் தலைவர், பாரதிதா சன் பல்கலைக் கழகம், திருச்சி) பேராசிரியர் எஸ்.வையாபு ரிப் பிள்ளை அவர்களின் அருமைப் பேத்தியாவார். பாட்டனா ரின் எல்லா நற்குணங்களும் மொழி இலக்கியப் புலமையும் கைவரப் பெற்றவர். என்பால் மதிப்பும் மரியாதையும் கொண்ட இப்பெருமாட்டி இந்நூலுக்கு அணிந்துரை அருளி யது இந்நூலின் பேறு; என் பேறும் கூட. அணிந்துரை வழங்கிய அன்பருக்கு என் இதயங்கலந்த நன்றி.

பேராசிரியர் மு. **சண்முகம்பிள்ளை** அவர்கள் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களின் அருமைச் சீடர். பருந்தும் அதன் நிழலும்போல் அப்பெருமகனாரிடம் ஒட்டிக் கொண்டிருப்பவர். பிள்ளையவர்களின் அருங்குணங்க ளனைத்தும் மெய்ப்புகள் (Proofs) திருத்தும் திறனும் இவரிடம் அமைந்தன. பல்லாண்டுகள் சென்னைப் பல்கலைக் கழக திருக்குறள் இருக்கையை அலங்கரித்திருந்தவர். சத்துவ குணம் மிக்க சீலர். என்பால் மிக்க மதிப்பும் மரியாதையும் கொண்டவர். கவிமணியின்பால் பெருமதிப்பு கொண்டவர். தம் இல்லத்திற்குக் 'கவிமணியின் இல்லம்' என்று பெயரிட்டு

5. திரு.வி.க. 1934 முதல் அவர் மறையும் வரை **தவத்திரு சித்பவாநந்த அடிகள்** (1943 முதல் அவர் தம் பூத உடல் நீங்கும் வரை); **பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை** (1944 முதல் அவர் மறையும் வரை); **தந்தை பெரியார்** (1944 முதல் அவர் மறையும் வரை)

வழங்கியவர். கவிமணியின் கவிதைகளிலும் மிக்க ஆழங் கால் பட்டவர். இத்தகைய உழுவலன்பருக்கு இந்நூலை அன்புப் படையலாக்கிப் பெருமிதம் கொள்ளுகின்றேன்.

இந்நூல் அச்சேறும்போது மூல படியைப் பார்வை படிக ளுடன் ஒப்பிட்டு சரி பார்க்கவும், மெய்ப்புகளைக் கவனத்து டன் திருத்தவும் எனக்கு உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.ப.சியாமளாக்கு என் அன்பு கலந்த ஆசிகள் என்றும் உரியவை.

இந்நூல் எழுதவும், வெளியிடவும் (காலங்கடந்த போதி லும்) எனக்கு எல்லா வகையிலும் அருள் சுரந்த என் நெஞ்சில் நிலையாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் ஏழுமலை யான் இணையடித் திருத்தாமரைகட்கு எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள் - புருஷகாரபூதையின் மூலம்.

பொன்னிலும் மணிகளிலும் - நறும்
 பூவிலும் சாந்திலும் விளக்கினிலும்
கன்னியவர் நகைப்பினிலும் - செழுங்
 காட்டிலும் பொழிலிலும் கழனியிலும்
முன்னிய துணிவினிலும் - மன்னர்
 முகத்திலும் வாழ்ந்திடும் திருமகளைப்
பன்னிநற் புகழ்பாடி - அவர்
 பதமலர் வாழ்த்திநற் பதம் பெறுவோம் (1)[6]

— பாரதியார்

'வேங்கடம்'
AD-13 அண்ணாநகர்
சென்னை - 600 040
15.07.2002

**ந. சுப்பு ரெட்டியார்**

6. பா.க. தோ.மா. திருமகளைச் சரண்புகுதல்

கவிஞர் **வாலி**யின்

# பாண்டவர் பூமி
# ஒரு மதிப்பீடு

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

ஒரு படைப்பு வந்ததும் அதனை உடனே
திறனாய்வு செய்து நூல் வெளியிடும்
நல்லதொரு மரபினை அடியெற்றி
படைக்கப்பெற்றது இந்நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-938927-4-9

eBOOK ~ மின் நூல்



# நூல்முகம்

என்கண்ணை மறந்துஉன்இரு கண்களையே
    என்அகத்தில் இருத்திக் கொண்டு
நின்கண்ணால் புவியெல்லாம் நீஎனவே
    நான்கண்டு நிறைவு கொண்டு
வன்கண்மை மறதியுடன் சோம்பர்முதல்
    பாவம்எல்லாம் மடிந்து நெஞ்சில்
புன்கண்போய் வாழ்ந்திடவே கோவிந்தா!
    எனக்கமுதம் புகட்டு வாயே![1]

—*பாரதியார்*

*'கவிஞர் வாலியின் அவதார புருஷன்—ஒரு மதிப்பீடு' என்பதைத் தொடர்ந்து 'கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி—ஒரு மதிப்பீடு' என்ற என் நூல் தமிழுலகத்திற்குப் 'பிரவேசம்' ஆகிறது. முன்னது இராமனது 'மெய்யைத்' திறனாய்ந்தது; பின்னது கிருட்டிணனது 'பொய்யைத்' திறனாய்கின்றது. 'இரண்டுமே நமக்குத் தஞ்சம்' என்பது வைணவ சம்பிரதாய நம்பிக்கை.*

*கண்ணனைப் பற்றிப் பாரதியார் கூறுவது:*

பிறந்தது மறக்குலத்தில்—அவன்
    பேதமற வளர்ந்ததும் இடைக்குலத்தில்[2]

*கண்ணன் அம்புலிக் குலத்தில் பிறந்தவனாயினும் வளர்ந்தது ஆயர்கள் நடுவே ஆயர்பாடியில். அவன்*

---

1. பா. க. தோ. பா. கோவிந்தன் பாட்டு-3
2. கண்ணன் பாட்டு-கண்ணன் என் தந்தை-4

மக்கள் மனத்தில் காட்சியளிப்பது இடையனாகவே. ஆழ்வார் பெருமக்களும் இந்நோக்கில்தான் கண்ணனைப் பற்றி அதிகமாகப் பாடியுள்ளனர். பாரதக் கதையில் ஏனைய காவிய மாந்தர்கள் ஆற்றிய பங்கைவிட கண்ணன் ஆற்றிய பங்குதான் பன்மடங்கு அதிகமானது. கண்ணனைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புகள்தாம் இலக்கியங்களிலும் அதிகமாக இடம்பெற்றுள்ளன. இதனால்தான் பாரதியாரும் கண்ணனைக் கதாநாயக னாகக் கொண்டு 'கண்ணன் பாட்டு' என்ற நெஞ்சை நெகிழ வைக்கும் இலக்கியத்தைப் படைத்தருளினார். கண்ணன் இல்லையென்றால் 'பாரதமே' இல்லை என்ற அளவுக்குக் கண்ணன் பெரும் புகழ் பெறுகின்றான்.

இராமன் கதை—இராம காதை; இராமாயணம். பாண்டவர்—கௌரவர் கதை பாரதம். கண்ணனைப் பற்றி தனிக் கதை இல்லையாயினும் (பாகவத புராணத்தைத் தவிர) பாரதத்தை நினைக்கும்போது கண்ணனே நம் மனக்காட்சியில் தென்படுகின்றான். 'தூது போனவன் ஏற்றம் சொல்வது பாரதம்' என்ற ஸ்ரீவசனபூஷண வாக்கும் எழுந்தது. சௌலப்பியமே வடிவெடுத்தவன் தேவகிமைந்தன்; நந்தகோபனின் வளர்ப்புப் பிள்ளை.

பூமியைப் பற்றிய வழக்கு காரணமாக எழுந்த பாரதத்திற்கு வாலியார் 'பாண்டவர் பூமி' என்ற பெயரிட்டு வழங்கினார். கௌரவர் தோற்று பூமி பாண்டவர் வசப்பட்டதால் 'பாண்டவர் பூமி' என்ற பெயர் நன்கு பொருந்துவதாயிற்று.

வில்லியும் நல்லாப் பிள்ளையும் புலவர்கட்கு மட்டும் விருந்தாக இருந்தனர். நம் அருமை இராஜாஜி அவர்கள் மக்கள் மனத்திற்கு உகந்த உரைநடையில் 'வியாசர்

விருந்து' என்ற தலைப்பில் பொதுமக்கட்கு எட்டச் செய்தார்கள். இன்று நவீன இலக்கிய தளமாக அமைந்த புதுக்கவிதையில் 'பாண்டவர் பூமி'யைப் படைத்து பொதுமக்கள் விருந்தாக்கியுள்ளார் கவிஞர் வாலி. அகிலம் புகழும் ஆனந்தவிகடனில் வாரந்தோறும் தொடர்ச்சியாக கிட்டத்தட்ட மூன்றாண்டு காலம் வெளிவந்த போதே இதன் நாடியை பொதுமக்கள் அறிந்து கொண்டார்கள். அத்தொடர்கள் ஒன்றுதிரண்டு நூல் வடிவத்தால் பொதுமக்கட்குக் கிட்டுகின்றது. இராமாயணத்தை விட பாரதம் பெரிய இதிகாசம். 'பன்னி யுரைக்கில் பாரதம்' என்ற ஆழ்வார் வாக்கும் இதனை உறுதிப்படுத்தும். ஆதலால் அக்கதை திருப்பதி 'பெரிய லட்டு' போல் பொதுமக்கள் கைக்குக் கிடைத்துள்ளது.

சிறுவயது முதல் (பத்தாண்டுப் பருவம்) இன்றுவரை பொதுவாக இலக்கியங்களிலும் சிறப்பாக பக்தி இலக்கியங்களிலும் ஈடுபடச் செய்து வருகின்றான் எம்பெருமான் ஏழுமலையான். 'பாண்டவர் பூமி'யில் ஆழங்கால் பட்டு அநுபவித்த அநுபவமே இப்போது 'கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி—ஒரு மதிப்பீடு' என்ற மகுடத்தில் வெளிவருகின்றது. கோலார் தங்கவயலில் கிடைக்கும் தங்கத்திற்கு 'காரட்டு மாற்று' அமைப்பது போல் கவிஞர் வாலியின் உள்ளத்திலிருந்து வெளிவந்த 'பாண்டவர் பூமி'க்கு ஒரு மதிப்பீடு இது. பன்னிரண்டு நோக்குகளில் மிக்க கவனத்துடன் நோக்கப் பெற்றதன் விளைவு இது. இதன் எழுத்துப்படியை முற்றும் நோக்கி அச்சேறிய நிலையில் பார்வைப் படிமங்களையும் சரிபார்த்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் M. B. சியாமளா எம்.ஏ.,எம்.ஃபில், பிஎச்.டிக்கு அடியே னின் ஆசி கலந்த நன்றி.

'காரட் மாற்று' கண்ட இந்த 'ஆற்றுப்படை' நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கிச் சிறப்பித்தவர் பேராசிரியர் டாக்டர் வா. ஜெயதேவன் (பேராசிரியர்–துறைத்தலைவர் தமிழ் மொழித்துறை) அவர்கள். இவர் 1975–இல் நான் வல்லுநர் குழுவில் இருந்தபொழுது விரிவுரையாளராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றவர். அதன் பிறகு நான் 1978–இல் திருப்பதியில் ஓய்வு பெற்றுச் சென்னை வந்தபிறகு என்னுடன் நெருங்கிப் பழகியவர். இலக்கியத்துறையில் நான் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியராகப் பொறுப்பேற்றபிறகு இவருடன் மேலும் பழக்கம் நெருக்கமாயிற்று. படிப்படியாக இவரும் தம் உழைப்பின் காரணமாக துணைப் பேராசிரியர், என்று உயர்ந்துள்ளார். இவர்தம் சமத்துவ குணம் என்னை மிகவும் கவர்ந்தது. எவருடனும் இன்முகத்துடன் பழகும் பெற்றியர். அதிர்ந்து பேசார். விதிகட்குப் புறம்பாக யார் நடந்தாலும் சீற்றத்துடன் எதிர்ப்பவர். இத்தகைய நல்லவர், வல்லவரின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு; ஏன்? என் பேறுங்கூட. அணிந்துரை நல்கிய அரிய நண்பருக்கு என் இதயங்கனிந்த நன்றி என்றும் உரியது.

திருவரசு புத்தக நிலையத்தார் இந்நூலின் கைப் படியை அன்புடன் ஏற்று சிறப்புடன் வெளியிட்டமைக்கு அடியேனின் நன்றி என்றும் உரியது. 'பாண்டவர் பூமி'க்கு ஆற்றுப்படை போல் அமைந்த இந்தத் திறனாய்வு நூலுக்கு தமிழ்கூறும் நல்லுலகில் நல்ல வரவேற்பு இருக்கும் என்பது அடியேனின் அதிராத நம்பிக்கை.

எண்பத்தாறு அகவை வரையிலும் தமிழ்த் தொண்டு புரிவதற்காகவே இவ்வுலகில் நல்ல உடல் நலத்துடனும் கண் ஒளியுடனும் அடியேனை வைத்திருக்கும் 'வேங்கடம் மேவிய விளக்கு'–'அகலகில்லேன் இறையும் என்று

அலர்மேல் மங்கை உறை மார்பன்'–இத்தகைய பல நற்பணிகளுக்காகவே வைத்திருக்கின்றான் என்பது அடியேனின் அதிராத நம்பிக்கை. அப்பெருமானுக்கு எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

கண்ணன் திருவடி
எண்ணுக மனமே
திண்ணம் அழியா
வண்ணம் தருமே [3]

அடியேன்
ந. சுப்பு ரெட்டியார்

AD—13, அண்ணா நகர்
சென்னை–600 040
26–12–2001
(வைகுண்ட ஏகாதசி)

3. பா. க. தோ. பா. கண்ணன் திருவடி-1

# பல்சுவை விருந்து

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இலக்கிய ஆய்வு, அறிவியல், வள்ளுவரின் கருத்துக்கருவூலம்,
சுவை பற்றிய கருத்து, சீர்திருத்தம், புதுக்கவிதை, பெரியார்கள்
பற்றிய நினைவுக்குறிப்புகள், சாதி சமயக் குறிப்புகள்,
சமுதாய சீர்கேடுகள், இன்னபிற பொருட்கள் குறித்தும்
பதிமூன்று கட்டுரைகளை தன்னகத்தே கொண்ட
ஓர் அரிய தொகுப்பு.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939561-2-0

*eBOOK ~ மின் நூல்*



# நூல் முகம்

துடித்தலோர் மகனை தந்தைஈண்டு அடித்தால்
  தாயுடன் அணைப்பள்; தாய் அடித்தால்
பிடித்தொரு தந்தை அணைப்பன்; இங் கெனக்குப்
  பேசிய தந்தையும் தாயும்
பொடித்திரு மேனி அம்பலத் தாடும்
  புனிதநீ ஆதலால் என்னை
அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்
  அம்மைஅப் பா!இனி ஆற்றேன்[1]

*- இராமலிங்க வள்ளல்*

**'பல்சுவை விருந்து'** என்ற இந்நூல் பல்வேறு சந்தர்ப் பங்களில் ஆழ்ந்த சிந்தனையுடன் எழுதப் பெற்ற **பதின்மூன்று** கட்டுரைகளின் தொகுப்பாகும். 'ஒன்றேகுலம் ஒருவனே தேவன்' என்பது முதல் கட்டுரை; 'வைணவசிகரப் பேரொளி' என்பது இறுதிக் கட்டுரை, எழுதப் பெற்ற சந்தர்ப்பங்கள் அந்தந்த கட்டுரையின் கீழ்க் குறிக்கப் பெற்றுள்ளன.

இலக்கிய ஆய்வு, அறிவியல், வள்ளுவர் பெருமான் கருத்துக் கருவூலம், சுவை பற்றிய கருத்து, சீர்திருத்தம், புதுக்கவிதை, பெரியார்கள் பற்றிய நினைவுக் குறிப்புகள் ஆகிய பல்வேறு பொருள்களைப் பற்றிய கட்டுரைகள் கொண்டு இலங்குவதால் **'பல்சுவை விருந்து'** என்ற திருநாமம் பெற்று வாசகர்களிடையே உலா வருகின்றது. கட்டுரைகள் தனித்தனிப் பொருளைத் தாங்கி முடிவு பெறுவதால் படிப்போர் எதை வேண்டுமானாலும் எடுத்துப் படித்து ஒவ்வொரு கட்டுரையைப் படித்தலால் முழு மனநிறைவு பெறலாம். வாயினால் உண்ணப் பெறும் விருந்து புலன்கள்மூலம் மனத்திற்கு எட்டி மகிழ்ச்சி தரும்; மனத்தினால் நேரே உண்ணப்படும் இக்கட்டுரை விருந்து நேரே மனத்திற்கு மகிழ்வூட்டும். முன்னைய விருந்து தெவிட்டும்; பின்னைய விருந்து தெவிட்டாது.

அறையில் 'அறிதுயிலுடன்' உறங்கிக் கிடந்த இந்த நூலின் கைப்படியை தமிழ்ப்பணியே தெய்வப் பணி என்ற குறிக் கோளை முன் வைத்துப் பணியாற்றி வரும் நிவேதிதா பதிப்பகம் அன்புடன் ஏற்று அச்சு வடிவத்தால் அம்பலத்திற்குக் கொணர்ந்து நாடெங்கும் நடையாடவிட்டமைக்கு சத்துவ குணமும் இறையுணர்வும் இயல்பாகக் கொண்ட பதிப்பக அதிபர் திரு. எஸ்.ஆர். சுவாமிநாதன் அவர்கட்கும் அவருடன் இணைந்து சிறப்புடன் பணியாற்றும் திருமதி தேவகி அவர்கட்கும் என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூல் அச்சாகும் போது மூலப்படியுடன் பார்வைப் படியை ஒப்பிட்டுத் திருத்தம் செய்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் **மு.ப. சியாமளாவுக்கு** என் ஆசி கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கியவர் **அரிமா துரை சுந்தர ராஜுலு** அவர்கள் தமிழக அரசில் பல்வேறு நிலைகளில் சிறப்புடனும் திறமையுடனும் பணியாற்றி (1960-1977) நற்புகழ் ஈட்டித் தமிழ் நாடு சட்டமன்றச் செயலகத்தில் இணைச் செயலராக ஓய்வு பெற்றவர். IAS ஆகியிருக்க வேண்டியவர்; அது கிட்டாதது தீயூழே. எனினும் IAS அதிகாரியை விடப் ப்ன்மடங்கு திறமை வாய்க்கப் பெற்றவர் என்பதை அரசும் அறியும்; மக்களும் அறிவர். அரசுப் பணியிலிருக்கும் போதே மக்கள் தொண்டே மகேசுவரன் தொண்டாக மதித்துப் பணியாற்றியவர். ஓய்வு பெற்றபின் அரிமாசங்கம், அண்ணாநகர் நல்வாழ்வு மன்றம், சின்மயா நற்பணிமன்றம், ஓய்வூதியப் பெருமக்கள் மன்றம், அண்ணாநகர் தமிழ்ச்சங்கம் போன்ற பல்வேறு நிறுவனங்களில் வாழ்நாள் உறுப்பினராக இருந்து கொண்டு பல்வேறு நிலைகளில் நற் பணியாற்றிப் புகழ் ஆரங்கள் சூட்டப்பெற்றவர். அண்ணாநகர் தமிழ்ச்சங்க செயலாளராகப் பணியாற்றிய குறுகிய காலத்தி லேயே இவர்தம் ஒப்பு உயர்வற்ற தன்னலமற்ற அற்புதப் பணி அறிஞருலகத்தையே மருள வைத்து விட்டது. ஓரிலட்ச ரூபாய் சங்கத்திற்குச் சொத்தாகச் சேர்த்த திறம் அனைவரையும்

வியப்படையச் செய்து விட்டது. வயது முதிர்ந்து தளர்ச்சியுற்ற அடியேனைப் பல இடங்கட்கும் இட்டுச் சென்ற உதவி என் ஆயுள் உள்ளவரை மறக்க ஒண்ணாதது. இத்தகைய திறமை மிக்க ஒல்லும் வகையெல்லாம் உவப்புடன் பணியாற்றி வருபவரும் அறிஞர் உலகின் பாராட்டுதலைப் பெற்றவரும் இறையன்பும் பண்பாடும் மிக்க இந்தப் பெருமகனாரின் அணிந்துரை பெற்றது இந்த நூலின் பேறு; அடியேனின் பேறுங்கூட. அணிந்துரை வழங்கிய பெருமகனாருக்கு என் உளங்கனிந்த நன்றி என்றும் உரியது.

டாக்டர் **கி. வேங்கட சுப்பிரமணியன்** அவர்களை அறியாத தமிழர்களே இலர். பல்வேறுவகைப் பதவிகளில் இருந்து செயலாற்றும்போது விருப்பு வெறுப்பற்று, சாதி சமய வேறுபாடுகளைக் கருதாது 'பணியே பரமன் பணித்த தெய்வப் பணி' என்று கருதி ஆற்றிவந்ததைத் தமிழகம் நன்கு அறியும்; ஏன்? பாரத பூமியே தெளிவாக அறியும். மாவட்டக் கல்வி அதிகாரியாகப் பதவியேற்று (1950களில்) படிப்படியாக பதவிகளில் உயர்ந்து கல்வித்துறை இயக்குநராகப் பணியாற்றிய நாளிலிருந்து அடியேன் நன்கு அறிவேன். காமராசர் ஆட்சியில் தாமரைச் செல்வர் **நெ.து. சுந்தரவடிவேலு** அவர்களுடன் இணைந்து பணியாற்றியபோது உயர்நிலைப் பள்ளி வரை இலவசக் கல்வி, சீருடை - மதிய உணவுத் திட்டங்களைச் செயற்படுத்தி ஆற்றிய அற்புதப் பணியை நாடாளுமன்றமே போற்றிப் புகழாரம் சூட்டியதை நாடே நன்கு அறியும். அக்காலத்தில் ஒரு சிலவற்றில் அடியேனையும் இணைத்துக் கொண்டார். அடுத்து பாண்டிச்சேரி மத்தியப் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தராகப் பதவியேற்றுப் பணியாற்றிய போது அதனை நாடே போற்றும் வகையில் பணியாற்றிப் படிப்படியாக அதனைப் பன்முக வளர்ச்சியடையச் செய்து இந்திய நாட்டின் கவனத்தை ஈர்க்கச் செய்ததை நாம் அறிவோம். இந்தப் பல்கலைக் கழகம் தொடங்கிய நாள்தொட்டு அடியேனைப் பல்வேறு குழுக்களில் பொறுப்புகளைத் தந்தமையால் இவர்தம் செயலாற்றும் திறனை நேரில் கண்டு மகிழ அடியேனுக்கு வாய்ப்பு இருந்தது. வேங்கட மேய விளக்கின் திருவருள் என்று

கருதி அடியேனால் இயன்றவரை அவருடன் ஒத்துழைத்து உவப்புடன் பணியாற்றி மகிழ்ந்தேன். சிறுவயது முதற்கொண்டே அடியேன் ஆற்றிய பல்வேறு பொறுப்புள்ள பணிகளை ஆற்றும் போது அடியேனின் பொதுநலப் போக்கினைக் கவனித்தவராதலால் அடியேனுக்குப் பல குழுக்களில் இடம் தந்து பணியாற்றச் செய்தார். இவர்தம் தெய்வப் பணி உலகளாவிய நாடுகளும் பெற்று புகழாரங்களை ஈட்டியுள்ளன. இவற்றால் பல்வேறு விருதுகளும் இவரை அடைந்து சிறப்பெய்தின. இறையன்பும் பண்பாடும் மிக்க இந்தப் பெரியாரிடம் மதிப்பும் மரியாதையும் கொண்ட அடியேன் இந்த அரிய நூலை அப்பெருமகனாருக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன். இவருடைய ஆசியால் இந்நூலும் அனைத்துலக நாடுகளிலும் உலாப்போகும் என் நம்பிக்கை என்றும் என்பால் உண்டு.

பல்வேறு காலத்துப் பல்வேறு நிலையில் பல்வேறு பொருளைப் பற்றி சிந்திக்கவும் அச்சிந்தனைகட்கு உருவங் கொடுக்கவும் பேரருள் சுரந்து கருணை காட்டிய அருட்பெருஞ்சோதியை உள்ளத்தில் நிறுத்தி அஞ்சலி செய்து அமைகின்றேன்.

**இருளைக் கெடுத்தென் எண்ணமெலாம்**
**இனிது முடிய நிரம்புவித்து**
**மருளைத் தொலைத்து மெய்ஞ்ஞான**
**வாழ்வை அடையும் வகைபுரிந்து**
**தெருளைத் தெளிவித் தெல்லாஞ்செய்**
**சித்தி நிலையைச் சேர்வித்தே**
**அருளைக் கொடுத்தென் தனைஆண்டோய்!**
**அடியேன் உன்றன் அடைக்கலமே.**[2]

- இராமலிங்க வள்ளல்

"வேங்கடம்"
AD - 13, அண்ணாநகர்
சென்னை - 600 040
10-12-2002

**ந. சுப்புரெட்டியார்**
**(வள்ளலார் அடிப்பொடி)**

2. ஆறாம் திருமுறை - அடைக்கலம் புகுதல் - 11

# பாண்டியன் பரிசு

## ஒரு மதிப்பீடு

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

தலைமைக் காவிய மாந்தர்கள், துரோகியான
எதிர்த் தலைவன், துணைக்காவிய மாந்தர், காவிய நடை,
காவியத்தில் படிமங்கள், காவியம் உணர்த்தும் உண்மைகள்
முதலான தலைப்புகளில் புரட்சிக்கவிஞரின் படைப்பு நலன் விளங்க
திறனாய்வு செய்யப் பெற்ற ஓர் அரிய நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939317-3-8




eBOOK ~ மின் நூல்

# நூல் முகம்

**எனக்கு வேண்டும் வசங்களை**
**இசைப்பேன் கேளாய் கணபதி!**
**மனத்திற் சலனம் இல்லாமல்**
**மதியில் இருளே இல்லாமல்**
**நினைக்கும் பொழுது நின்மவுன**
**நிலைவந் திடச்செயல்வேண்டும்**
**கனக்கும் செல்வம் நூறுவயது:**
**இவையும் தரநீ கடவாயே[1].**

- பாரதியார்

பாரதியார் நூற்றாண்டு விழா நாடெங்கும் கொண்டாடப் பெற்றது. அதன் நினைவாகப் பாரதியார் பற்றி நான்கு நூல்களை எழுதி வெளியிட்டு அந்த விழாவைச் சிறிய அளவில் கொண்டாடிச் சிறப்பித்தேன். குருவிக்குத் தகுந்த இராமேசுவரம் தானே அல்லவா? பாரதிதாசன் நூற்றாண்டு விழாவில் அதனைச் சிறப்பிக்கும் வழியில் மூன்று நூல்கள் எழுதினேன். அவற்றில் 'பாவேந்தர் பாரதிதாசன் - ஒரு கண்ணோட்டம்' என்ற ஒன்றுதான் வெளிவந்தது (1991). ஏனைய இரண்டையும் ஒரு வெளியீட்டாளர் ஆறு ஆண்டுகள் வைத்திருந்துவிட்டு இயலாமையை வருத்தத்துடன் தெரிவித்து கைப்படிகளைத் திருப்பித் தந்துவிட்டார்.

அடியேன் ஒரு வைணவ மாநாட்டில் கலந்து கொண்டு திரும்பும்போது எம்பெருமான் ஏழுமலையான் திருவருளால் திரு. வீ.வீ.கே. சுப்புராசு அவர்களின் (சுரா வெளியீடுகள்) நட்புக் கிடைத்தது. 'இறகு முளைக்காமல் கிடந்த' இந்த இரண்டு நூல்களையும் வெளியிட மனமுவந்து ஒப்புக் கொண்டார். வெளியிடப் பெறாதிருந்த 'பாண்டியன் பரிசு - ஒரு மதிப்பீடு', 'பாவேந்தர் பாட்டுத்திறன்' என்ற இரண்டின் படிகளையும் பெற்று அடைகாத்தார். இரண்டும் இறகு முளைத்து ஒன்றன் பின் ஒன்றாக வெளிவருகின்றன. வெளியிட்ட இப்பெருமகனாருக்கு என் மனங்கனிந்த நன்றி.

---

1. பா.க: தோ.பா: விநாயகர் நான்மணி மாலை - செய். 7.

பேராசிரியர் க. அன்பழகனார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பயின்ற நாள் முதல் நான் நன்கு அறிவேன். துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியனாகப் பணியாற்றிய காலம் (1941-1950) அது. 'மாணவப் பருவம் முதல் இன்றுவரை பாவேந்தர் படைப்புகளில் மிக்க ஈடுபாடு கொண்டவர்' என்பதை நான் நன்கு அறிவேன். ஆழ்ந்த தமிழ்ப் பற்றுடன் தமிழ்ப் பாசறை சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் சில ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்து, வள்ளுவர்வழி நின்று, அரசியலுக்கு வந்தவர். இன்றும் மனச்சான்றுக்கு இடம் அளித்து கலைஞருடன் இணைந்து பணியாற்றுபவர். அவர்தம் வாழ்விலும், தாழ்விலும் இணை பிரியாதிருப்பவர். அவர் கல்லூரியில் பயின்ற நாள் முதல் நாளிதுவரை என்பால் அன்பு கொண்டிருப்பவர். என்னுடைய தமிழ்ப் பணியைத் தொடர்ந்து மதிப்பிட்டு வருபவர். இத்தகைய நல்லுள்ளம் கொண்ட பேராசிரியர், இந்த நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்தமை இந்நூலின் பேறு; என்னுடைய பேறுங்கூட, இந்த உழுவலன்பருக்கு என் உளங்கலந்த நன்றி என்றும் உரியது.

டாக்டர் கலைஞர் கருணாநிதியை அவர் குழித்தலைத் தொகுதியில் (திருச்சி மாவட்டம்) சட்டமன்ற வேட்பாளராக நின்று வெற்றி பெற்ற காலம் முதல் (அவர் என்னை அறியாவிட்டாலும்) நான் அறிவேன். என்னுடைய உயர்நிலைப்பள்ளி மாணாக்கர்களில் பலர் அவர்தம் விசிறிகள். சிலர் அவர்தம் படத்தை சில குறிப்புகளுடன் **இளைஞர் அறிவுச்சுடர்** என்ற பள்ளி ஆண்டு மலரில் வெளியிட்டு மகிழ்ந்தனர். பள்ளித் தலைமையாசிரியனாக இருந்த அன்றுமுதல் இன்றுவரை அவர்தம் அரசியல் பணியைக் கணித்து வருபவன். கல்லூரி எல்லையை மிதியாது தமிழ் எல்லையைக் கண்டு கொண்டவர். அவர்தம் அரசியல் அஞ்ஞாதவாச காலத்தில் சங்க இலக்கியம், திருக்குறள் இவைபற்றிய அவர்தம் படைப்புகளும், பின்னர் எழுதிவரும் கவிதைத் துணுக்குகளும் கட்டுரைகளும், அவர்தம் தமிழிப்பற்றையும், தமிழ்ப் புலமையையும் பறைசாற்றும். திருப்பதிப் பல்கலைக் கழகத்தில் இவர் ஆட்சிக் காலத்தில்தான் (அடியேனின் இடையறாத ஒன்பதாண்டு முயற்சியால்) பட்டப் படிப்புவரை இருந்த தமிழ்த்துறை முதுகலை ஆய்வு நிலை (எம்.ஃபில், பிஎச்.டி வரை) ஆகிய வசதிகளுடன் வளர்ந்தது. தமிழுக்காக வாரி வழங்குவதில் இவருக்கு நிகர் இவரே.

அண்மைக் காலத்தில், தமிழ் வளர்ச்சிக்காகக் 'குறள் பீடம்' நிறுவியமை இவர்தம் தமிழ்ப்பணியின் இமயக்கொடுமுடி. இத்தகைய தமிழுள்ளம் கொண்ட தமிழினத் தலைவர்பால் அடியேன் கொண்டிருக்கும் மதிப்புக்கும் மரியாதைக்கும் அறிகுறியாக இந்நூலை அவருக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன்; பெருமிதமும் கொள்கின்றேன்.

என் வாழ்வுக்கும் தாழ்வுக்கும் காரணமாக இருப்பவன் ஏழுமலையான். நல்லது நேரும்போது, மகிழ்ச்சி மயக்கத்தில் தள்ளப் பெறாமலும் அல்லது நேருங்கால் தொல்லையுள்சிக்கி மனம் வருந்தாமலும் உள்ள மனநிலையைத் தந்து வாழ்விப்பவன். பல்லோர் உதவியும் இணக்கமும் பெறுவதற்கும் இவனே காரணன் - 'கருமமும் கரும பலனும் ஆகிய காரணன்' (திருவாய் 35 : 10) என்பது நம்மாழ்வாரின் திருவாய்மொழியன்றோ ? இத்தகைய பெருமானை வாழ்த்தி வணங்கிச் சரணம் அடைகின்றேன்.

**நோற்றேன் பல்பிறவி நுன்னைக்**
**காண்பதோர் ஆசையினால்**
**ஏற்றேன் இப்பிறப்பே இடர்உற்**
**றனன்எம் பெருமான்**
**கோல்தேன் பாய்ந்து ஒழுகும்**
**குளிர் சோலைசூழ் வேங்கடவா!**
**ஆற்றேன் வந்தடைந் தேன்அடியேனை**
**ஆட்கொண்டு அருளே[2].**

- திருமங்கையாழ்வார்

- ந. சுப்பு ரெட்டியார்

'வேங்கடம்'
ஏ.டி. 13, அண்ணாநகர்,
சென்னை - 600 040.

2. பெரி - திரு. 1.9 : 8

# தமிழில் அறிவியல் செல்வம்

## பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூலில் கதிரவன், அணு செய்யும் அற்புதங்கள், விண்வெளி
ஆய்வின் வளர்ச்சி, மருத்துவத்துறை நவீன வேளாண்மை
முதலியவற்றில் அணுவின் பயன்பாடு பற்றி பொது
மக்களுக்கும் புரியும்படி அறிவியல் உண்மைகளை
எளிய நடையில், இனிய தமிழில்
விளக்கியுள்ளார் பேராசிரியர்.

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939637-4-6

*eBOOK ~ மின் நூல்*



# நூல்முகம்

ஏத்திமத மெல்லாம் எதையறிந்தேம் என்னும்? எதைச்
சாத்திரங்கள் நன்காய்ந்து சலிக்கும்? எதை - நாத்திகமோர்
சற்றுமே ஓர்ந்திலதாச் சாதித் திடும்? அதையே
பற்றுவாய் நெஞ்சே பரிந்து[1]

*- வெ.ப. சுப்பிரமணிய முதலியார்*

இடையின்றி அணுக்க ளெலாம் சுழலுமென
 இயல்நூலார் இசைத்தல் கேட்டோம்;
இடையின்றிக் கதிர்களெலாம் சுழலுமென
 வானூலார் இயல்பு கின்றார்;
இடையின்றித் தொழில் புரிதல் உலகினிடைப்
 பொருட்கெல்லாம் இயற்கை யாயின்
இடையின்றிக் கலைமகளே! நினைதருளில்
 எனதுள்ளம் இயங்கொ ணாதோ?[2]

*- பாரதியார்*

**'தமிழில் அறிவியல் செல்வம்'** என்ற இந்தநூல் அறிவியல் தமிழ்பற்றிப் பேசுவதற்காக ஏற்படுத்தப்பெற்ற அறக்கட்டளையில் பேசப்பெற்ற இரண்டு சொற்பொழிவுகளின் வடிவமாகும். முதற்பொழிவு இயற்பியல் நோக்கிலும், இரண்டாவது பொழிவு உயிரியல் நோக்கிலுமாக அமைந்தவை. மாணவர்களிடையேயும் பொதுமக்களிடையேயும் அறிவியில் உணர்வும் ஆர்வமும் ஏற்படவேண்டும் என்ற நோக்கத்தால் ஏற்படுத்தப் பெற்ற அறக்கட்டளையாகும் இது.

முதற்பொழிவில் 'ஆதவனே ஆற்றல் மூலம்', அண்மைக்கால அறிவியல் முன்னேற்றத்தில் கண்டறியப் பெற்ற 'அணுவின் ஆற்றல்', அறிவியல் உலகத்தையே அதிர்ச்சியுடன் கலக்கிவரும் 'விண்வெளிப்பயணம்' என்பவைபற்றி விரிவான செய்திகள் விளக்கம் அடைந்தன. இரண்டாவது பொழிவில் 'மருத்துவ மாணவர்கள் மட்டிலும் கேட்டு ஆழங்கால்படும் 'மானிடப் பிறப்பியல்' பற்றிய செய்திகளும், மக்கள் பிறப்பில் காணப்பெறும்

---

1. அகலிகை வெண்பா - கடவுள் வாழ்த்து
2. பா.க: பாஞ்சாலி சபதம் - இரண்டாம்பாகம் - கலைமகள் வணக்கம்.

பல்வேறு மக்களின் தோற்ற வேறுபாடுகள் பற்றி விளக்கும் கால்வழிஇயல் (Gentics) பற்றிய செய்திகளும் விளக்கம் அடைந்தன. அறையில் கேட்கப்பெறும் செய்திகள் அம்பலத்துக்கு வந்தால்தான் அறக்கட்டளை நிறுவிய அன்பரின் நோக்கம் முற்றிலும் நிறைவேற்றப்பெற்றதாக அமையும். மூன்றாண்டுகட்கு மேல் பிறந்தமேனியாகக் கிடந்த இந்த அறிவியல் குழந்தையை வெளியுலகில் நடையாடவிட்டது மணிவாசகர் பதிப்பகம். காலத்திற் கேற்ற கோலமாகப் பல்வேறுவகை நூல்களை வெளியிட்டுத் தமிழ்வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்டுவரும் மணிவாசகர் பதிப்பக நிறுவனர் பதிப்புச்செம்மல் டாக்டர். ச. மெய்யப்பன் அவர்கள் இந்தச் சொற்பொழிவுகளின் கையெழுத்துப் படியை அன்புடன் ஏற்று அச்சுப் படியாக்கினமைக்கு என் இதயம் கலந்த நன்றி என்றும் உரியது.

இந்தநூல் அச்சாகும்போது மூலப்படியுடன் பார்வைப் படிவங்களை ஒப்பிட்டுச் சரிபார்த்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர். மு.ப. சியாமளாவுக்கு என் அன்பும் ஆசியும் கலந்த நன்றி.

இந்த அறிவியல் நூலுக்கு அணிந்துரை அருளியவர் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் அருள்தந்தை டாக்டர். ச. இன்னாசி மூத்து அவர்கள். இயேசு சபையைச் சார்ந்த கிறித்தவ சந்நியாசியாகிய இப்பெருமகனார் அறிவியல் கற்று அத்துறையில் எம்.எஸ்சி., பிஎச்.டி., டி.லிட் பட்டங்கள் பெற்றுத் திகழ்பவர். இயேசுநாதரிடம் கொண்ட பக்தி ஒருபக்கம் இருந்தாலும் தமிழின்பாலும் அறிவியலின்பாலும் 'ஆராக் காதல்' கொண்டவர். 'பணியே பரமன் வழிபாடு' என்ற கொள்கையைக் கடைப்பிடித்து ஒழுகும் கண்கண்ட தொண்டர். விருப்பு வெறுப்பற்ற முறையில் சமூகநலன் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றி வருபவர். என் வீர வழிபாட்டுக்குரியவர். கலை ஆர்வமும் பண்பட்ட பரிவும் கொண்டு பணியாற்றிவரும் அறிவியல் மேதையாகிய சந்நியாசிப் பெருமகனாரிடம் அணிந்துரை பெற்றது இந்நூலின்பேறு; கிட்டத்தட்ட வாழ்க்கை யின் இறுதிக்கட்டத்தில் (அகவை 87) அவரின் கீழ்ப்பணியாற்றும் என் பேறுங்கூட. அணிந்துரை அருளிய அருள்தந்தை அவர்கட்கு என் இதயங் கனிந்த நன்றி என்றும் உரியது.

அறிவியல் மேதை பாரத ரத்னா டாக்டர். ஏ.பி.ஜெ. அப்துல் கலாம் அவர்கள் சகோதரத்துவத்தை உலகிற்குப் பிரகடனம் செய்த

நபிநாயகத்தின் சமயத்தைத் தழுவியவர். உலகமக்கள் அனைவரையும் 100 விழுக்காடு சகோதரர்களாகப் பாவித்துவரும் ஒழுக்கசீலர். மரக்கறி உணவு உண்பவர். புலாலைத் தவிர்த்தவர். இத்தகைய பெருமகனார் மக்களாட்சி நடைபெற்று வரும் நாட்டின் தலைவராக - குடிமக்களின் தலைவராக - தேர்ந்தெடுக்கப் பெற்றதை நினைந்து நாடே - ஏன் உலகமே - பெருமிதம் கொள்ளுகிறது. இந்த நூலை எழுதிய காலத்திலேயே இவருக்கு அன்புப் படையலாக்கக் கருதினேன். அக்கருத்து இன்று நடைமுறைக்கு வருவதால் பெருஞ்சிறப்பு அடைகின்றது. நூல் எழுதியவர் பலதுறை அறிவியல் கற்றுத்தெளிவு பெற்றவர். அணிந்துரை அருளிய அருள் தந்தையோ அறிவியல் கற்று அதனால் ஆய்வுப் பட்டங்களைப் பெற்ற அருங்கலை விநோதர். நூலை அன்புப் படையலாகப் பெறுபவரோ உலகம் நன்கறிந்த இராக்கெட்டு அறிவியல் மேதை. இந்த மூன்று பெருமைகளையும் பெறுகின்றது 'தமிழில் அறிவியல் செல்வம்'.

வாழ்க்கையின் இறுதிக்கட்டத்தில் இத்தகைய அரிய நூலை வரையவும், அதனைச் சொற்பொழிவுகளாக எதிர்காலத் தலைவர்களாக வரக்கூடிய மாணவர்கள் முன்னர் நிகழ்த்தவும், அவை நூல்வடிவாக வெளிவரவும் என் இதயத்தில் நிரந்தரமாக எழுந்தருளி அருள் பாலிக்கும் வேங்கடம் மேவிய விளக்கிற்கு அருள்வடிவமாய் புருஷகார பூதையாய்ச் செயற்படும் பெரிய பிராட்டியார் மூலம் எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

> **புல்லும் பகலிற்காம்; பூண்டும் மருந்திற்காம்;**
> **கல்லும் திருக்கோயில் கட்டுதற்காம்; - தொல்லுலகில்**
> **ஏழை எளியேன் எதற்காவேன்? செந்திநகர்**
> **வாழும் வடிவேல வா![3]**

- ***கவிமணி***

'வேங்கடம்'
AD-13, அண்ணாநகர்,
சென்னை - 600 040.
13-9-2002
(விநாயகர் சதுர்த்தி)

இங்ஙனம்,
ந. சுப்புரெட்டியார்
தொ.பே: 6211583

---

3. மலரும் மாலையும் - முருகன் புகழ்மாலை-1

# அண்ணல் அனுமன்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூலில் காணப்பெறும் ஒவ்வோர் இயலும், ஒவ்வொரு கோணத்தில் அநுமனை முழுவதுமாய்க் காட்டிடும் புதிய பார்வை வீச்சுகள்; முழுப்பார்வை முயற்சிகள்; பேருருவ தரிசனங்கள். அநுமனின் மனோ பலத்தையும், அநுமனின் வாக்கு பலத்தையும், அநுமனின் காய பலத்தையும், மொத்தத்தில் அநுமனின் பேருருவைக் கண்ட மகிழ்ச்சியை நம்முள் உண்டாக்குவன.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939430-5-2




*eBOOK* ~ *மின் நூல்*

## நூல் முகம்

"அஞ்சிலே ஒன்று பெற்றான்,
அஞ்சிலே ஒன்றைத் தாவி,
அஞ்சிலே ஒன்று ஆறுஆக,
ஆர்உயிர்க் காக ஏகி,
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக்கண்டு, அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்,
அவன்நம்மை அளித்துக் காப்பான்" [1]

- கவிநாயகன் கம்பன்

இராம காதையில் வரும் கதை மாந்தர்களுள் ஈடும் எடுப்பும் அற்றவன், அநுமன். வீடு பேற்றையும் வேண்டாத விறலினன்; இராமபிரானின் புகழ் பாடி, இராம நாமத்தை உச்சரித்துக்கொண்டு சிரஞ்சீவியாக நம்மிடையே இன்றும் இருப்பவன்; என்றும் இருந்துகொண்டிருப்பவன். இவனைப் பற்றி எழுத நினைத்தது 1948இல். அஃது இராமபிரான் அருளால் இரண்டாயிரம் ஆண்டு முடிந்து மூன்றாயிரம் ஆண்டுத் தொடக்கத்தில் என் முதல் நூலாக (121ஆவது நூலாக) வெளிவருவது இராமபிரானின் சித்தம் போலும்!

காலத்திற்கேற்ற நூல்களை வெளியிட்டுத் தமிழ் நாட்டில் சிறந்த முறையில் தமிழ்ப்பணியாற்றிவரும் பழநியப்ப சகோதரர்கள், இந்தச் சிறிய நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அவர்கட்கும், நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டுக் கற்போர் கரங்களில் கவினுடன் தவழச் செய்த ஏஷியன் அச்சகத்தாருக்கும் என் மனமுவந்த நன்றி என்றும் உரியது.

கம்பன் புகழ் பாடிக் கன்னித்தமிழ் வளர்க்கப் பிள்ளையார் சுழி போட்டுப் பல்லாண்டுகளாகக் கம்பன் திருநாள் நடத்தி வந்த 'கம்பன் அடிப்பொடி' சா.கணேசனாருக்குப் பின்னர், முக்கிய வில் விசையாக இருந்து நடத்தி வருபவர் 'கம்பன் அடிசூடி' பழ. பழநியப்பன்.

---

1. கம்பராமாயணம் - காப்பு

இவர் சென்னைக் கம்பன் கழகச் செயலராக இருந்து நடத்தி வரும் விழாக்களின் சிறப்பைச் சென்னை நகர் கம்பன் சுவைஞர்களும் பிற இடங்களிலுள்ள கம்பன் பக்தர்களும் நன்கு அறிவர். அடியேன் காரைக்குடியில் வள்ளல் அழகப்பர் நிறுவனம் ஒன்றில் பணியாற்றிய காலம் முதல் (1950 முதல்) இவர்தம் தந்தையார் பழநியப்பச் செட்டியாரை நன்கு அறிவேன். அவர்தம் ஒரே மகன், நம்மிடையே உள்ள இந்தப் பழ. பழநியப்பன். பள்ளியில் படிக்கும்போது நான் இவரிடம் கண்ட துடிப்பும் சுறுசுறுப்பும் இன்னும் குறையாமல் இருந்து வருவதைக் கண்டு மகிழ்பவன்; பெருமை கொள்பவன். இந்தக் கம்பன் அடிசூடியின் அணிந்துரை இந்நூலை அணி செய்வது இந்நூலின் பேறு; அடியேனின் பேறுங்கூட.

நீதியரசர் **டாக்டர் மு.மு.இஸ்மாயீல்** உயர்குணச் செம்மல். மேலிடத்தின் கருத்து வேறுபாட்டின் காரணமாகத் தலைமை நீதிபதிப் பதவியைத் துச்சமாக எண்ணி உதறித் தள்ளிச் 'சித்திரத்தின் அன்றலர்ந்த செந்தாமரை' முகத்துடன் திகழும் குணப்பெருமகனார். கடந்த ஐம்பதாண்டுகட்குமேல் கம்பன் காவியத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்த சுவைஞர் மாமணி. இவர் சென்னைக் கம்பன் கழகம் கண்டு, அதன் தலைவராக இருந்துகொண்டு, விழாக்களைச் சீரும் சிறப்புமாக நடத்தி வருபவர். தவிர, மாவட்டந்தோறும் கம்பன் கழகங்கள் அமைய முதற்காரணமாக இருந்து, அவை சிறப்புடன் இயங்கிவரக் கண்காணித்து வருபவர். அடியேன் திருப்பதியிலிருந்த காலம் (1960-77) முதல் இவரை நன்கு அறிவேன்; சென்னையில் குடியேறிய பிறகு (1978 சனவரி முதல்) இவரிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் பெற்றவன். எல்லோரிடமும் இன்முகத்துடன், சமயக் காழ்ப்பற்று மனித நேயத்துடன் பழகிவரும் டாக்டர் ஜஸ்டிஸ் அவர்கட்கு இந்நூலை அன்புப் படையலாக்கிப் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்; இதனைப் பெரும் பேறாகவும் கருதுகின்றேன்.

அடியேனுக்கு எல்லா நலன்களையும் ஈந்து, உடல் நலத்துடனும் மனவளத்துடனும் வாழ அருள் சுரந்து, எட்டெழுத்து மந்திரம் போல் எட்டு இயல்களாக அமைந்த இந்நூல் எழுதவும் வெளிவரவும் நிமித்த காரணமாக

*இருந்து, என் இதயத்தில் நிரந்தரமாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் ஏழுமலையப்பன் திருவடிகளை வாழ்த்தி வணங்கி அமைகின்றேன், கம்பனின் கடவுள் துதியுடன்.*

"ஒன்றே என்னின் ஒன்றேயாம்;
பலவென்று உரைக்கின் பலவேயாம்;
அன்றே என்னின் அன்றேயாம்;
ஆம்என்று உரைக்கின் ஆமேயாம்;
இன்றே என்னின் இன்றேயாம்;
உளதுஎன்று உரைக்கின் உளதேயாம்;
நன்றே நம்பி குடிவாழ்க்கை
நமக்குஇங்கு என்னோ பிழைப்பம்மா !" [2]

'வேங்கடம்',
ஏடி - 13, அண்ணா நகர்,
சென்னை - 600 040.
தொ.பே. : 26211583

ந. சுப்பு ரெட்டியார்

---

*2. கம்ப. யுத்த. கடவுள் வாழ்த்து*

# பட்டினத்தடிகள்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியர் பதினொராந் திருமுறைப் பனுவல்களில் தோய்ந்து
அழகிய பகுதிகளை எடுத்து மிக அழகாக விளக்குகிறார்.
பட்டினத்தடிகளின் வரலாறு, அவரின்
அருளிச்செயல்கள் ஆகியவை யாவரும் கற்று
உணரும் வகையில் எளிய இனிய தமிழ் நடையில்
ஆய்வுநோக்கில் தரப்பெற்றுள்ளன.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939561-5-1

*eBOOK ~ மின் நூல்*



# நூல்முகம்

மலஞ்செய்த வல்வினை நோக்கி
உலகை வலம்வரும்அப்
புலஞ்செய்த காட்சிக் குமரற்கு
முன்னே புரிசடைமேல்
சலஞ்செய்த நாரைப் பதிஅரன்
தன்னைக் கனிதரவே
வலஞ்செய்து கொண்ட மதக்களி
றே!உன்னை வாழ்த்துவனே [1]

— நம்பியாண்டார்நம்பி

என்னுடைய கல்லூரி வாழ்க்கை திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியில் (1934-39) நடைபெற்றது. அருள்தந்தை ஜெரோம் டி சௌசா என் ஆங்கில பேராசிரியர்; அவர் வாரம் ஒரு மணி நேரம் நல்லொழுக்க வகுப்பு எடுத்து நடத்துவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அவர் கூறிய கருத்துகளில் சில என் பிஞ்சு மனத்தில் ஆழப் பதிந்தன. அக்காலத்தில் விடுமுறை நாட்களில் (புதன், ஞாயிறு) உணவு விடுதியில் உணவு கொண்டு திரும்பும்போது வழியில் இருந்த மாவட்ட வாரிய நூல் நிலையத்தில் ஒரு மணி நேரம் நூல்களை புரட்டிப் பார்ப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தேன். அப்படிப் புரட்டுவதில் தாயுமானவர், பட்டினத்தார், திரு. வி.க. நூல்கள் பழக்கமாயின. முன்னவர் இருவர் நூல்களிலுள்ள ஒரு சில பாடல்கள், கண்ணிகள் என் கவனத்தை ஈர்த்தன. அவற்றில் மனப்பக்குவ நிலையில் ஈடுபட்டதாகச் சொல்ல முடியாது. ஏதோ ஆன்மிகத் துறையில் பக்குவம் ஏற்படாத ஒரு கல்லூரி மாணவன் நிலையில் அவற்றில் ஈடுபாடு கொள்ள நேர்ந்தது. தாயுமானவர் பாடல்களில் ஒரு சில கண்ணிகளை வண்ணக் காம்புகளைக் கொண்டு அழகாக எழுதி என் அறையிலும் எங்களூரைச் சேர்ந்த சகோதரர் இருவரால் நடத்தப் பெற்றுவந்த நீராகார மடத்தின்

1. திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை - 8

(காவிரியாற்றுக் கரையருகில் சாலையோரத்தில் இன்றளவும் இருந்து வருகிறது) சுவர்களிலும் எழுதி வைத்து மகிழ்ந்த துண்டு.

இந்தப் பழக்கத்தால் ஏற்பட்ட தாக்கம்தான் பிற்காலத்தில் (1970க்கு மேல்) ஆன்மிகத் துறையில் ஈடுபாடு கொள்ளச் செய்தது போலும் என நீள நினைத்து பார்க்கின்றேன். ஆழ்வார் பெருமக்கள் அருளிச் செயல்களிலும் சைவ சமய குரவர் நால்வரின் அருளிச் செயல்களிலும் பல நூல்கள் (30க்கும் மேற்பட்டவை) எழுதி வெளியிட்ட பிறகு **'தாயுமானவர்'** என்ற நூலை எழுதி வெளியிட்டு (நவம்பர் 2001) மகிழ்ந்தேன்.

இப்பொழுது **'பட்டினத்தடிகள்'** என்ற நூல் எழுதப் பெற்று வெளிவருகின்றது.

> **ஒட்டுடன் பற்றுஇன்றி**
> **உலகைத் துறந்துசெல்வப்**
> **பட்டினத்தார் பத்திரகிரி**
> **பண்புணர்வது எந்நாளோ?** [1]

என்ற கண்ணிதான் இந்நூல் எழுதத் தூண்டியது. இக்காலம் ஆன்மிகத் துறையில் ஆழங்கால்பட்டு ஓரளவு மனப்பக்குவம் ஏற்பட்ட நிலை (அகவை 87).

இச்சிறுநூல் **ஆறு** இயல்களாக அமைகின்றது. **முதல் இயல்** தோராணவாயில். இங்கு பருந்து நோக்காகச் சிலச் செய்திகள் சுட்டப்பெறுகின்றன. இந்த இயலில் செட்டிநாட்டுப் பகுதியில் மிகுந்த பண்பாட்டுடனும் மிகுந்த பக்தியுடனும் சைவப் பெருமக்களாக, ஒன்பது கோயில் பிள்ளையார்களைக் குலதெய்வமாகக் கொண்டு ஒரே குலத்தவர் போல் சிறப்புடன் வாழ்ந்து வரும் **'நகரத்தார்'** பெருமக்கள் பட்டினத்தடிகளின் மரபில் வந்தவர்களே என்பது துணிவுடன் வற்புறுத்தப் பெறுகின்றது.

1. **தா.பா. எந்நாட்கண்ணி - அடியார்வணக்கம் -5**

**இரண்டாம் இயலில்** இந்த மகானின் வாழ்க்கை மக்கள் இயல்பைக் கடந்த செய்திகளும் விநோதக் கதைகளும் பல்கி 'மூடுபனிபோல்' இருக்கும் தெளிவற்ற நுலை சுட்டப் பெறு கின்றது. கிடைத்த மூலங்கள் **மூன்றும்** 'பஞ்சாமிருதம்' போல் - அவியல்' போல் - இருக்கும் நிலை காட்டப் பெறுகின்றது. இவர் புலவர்கட்கு மட்டிலும் எட்டும் புகழ்மிக்க புலவராகத் திகழ்வதைக் காண்கின்றோம்.

**மூன்றாம் இயலில்** பட்டினத்தடிகள் வரலாற்றுடன் வட மொழி - தமிழ் கலந்த மணிப்பிரவாளம்போல் பின்னிப் பிணைந்து கலந்து திகழும் பத்திரகிரியாரின் வரலாறு அமை கின்றது. இவர்தம் திருப்புலம்பலிலுள்ள பாடல்களில் பல சித்தாந்தக் கருத்துகள் கலந்து இருப்பதால் சித்தாந்த சாத்திரங் கள் தோன்றிய காலத்திற்கும் பிற்பட்டதாகக் கருதவேண்டிய நிலை பொருந்துவதாக அமைகின்றது இவர் காலம் என்பது குறிப்பிடப் பெற்றது.

**நான்காம் இயலில்** பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவராகக் கருதப் பெறும் - நம்பியாண்டார் நம்பியின் காலத்தில் உள்ளவரான ஐந்து பிரபந்தங்கள் படைத்த பெரும் புலவர் பெருமான் பட்டினத்தடிகள் என்ற பெயருடன் திகழ்ந்த ஒருவரின் வாழ்க்கைக் குறிப்புகளும் பிரபந்தங்களின் சிறப்புகளும் ஆராயப் பெறுகின்றது.

**ஐந்தாம் இயலில்** 'பிரபந்தத் திரட்டு' படைத்த பட்டினத் தடிகளின் வரலாற்றுக் குறிப்புகளும் பாடல்களின் புகழ்மிக்க சிறப்புகளும் விவரமாக ஆராயப் பெறுகின்றன. இவர்தம் பாடல்கள்தாம் மக்கள் வாழ்வுடன் பின்னிப் பிணைந்த மாணிக்கங்களாகத் திகழ்வதும் சில பாடல்கள் அவர்கள் நாவில் நளினமாக நடனமாடுவதுமான செய்திகள் விரிவாக விளக்கம் அடைகின்றன. இந்த இரு பெரியார்களும் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து வந்தவர்களே.

**ஆறாம் இயலில்** செருகு கவிதைகளிலிருந்து அவதரித்த ஒரு கற்பனைப் படைப்பு அமைகின்றது; 'பல அநாமதேயங் கள்' கலந்த 'பட்டினத்தார்' என்ற திருநாமத்துடன் நடமாடும் ஒரு **'கற்பனைப் பெரியார்'** காட்டப் பெறுகின்றார். முதலிருவ ரைப் போல் ஓர் அன்னை வயிற்றிலிருந்து பிறந்து வளர்ந்து புகழ் பெற்றவர் அல்லர் இவர் என்பது விளக்கப் பெறுகின்றது.

இந்த அரிய சிறிய நூலுக்கு 'அணிந்துரை' வழங்கியவர் என்கெழுதகை நண்பர், ஒரு பொறியாளர், தொழிலதிபர்; இத்தனைக்கும் மேலாக ஒரு சைவ சித்தாந்தி; சைவ சமய நூல்களில் ஆழங்கால்பட்டவர். முத்து விழாக் கண்டவர் (அகவை 70). தொழில் துறையில் பல்வேறு தொழில் நிறுவனங்களின் தலைவராக இருப்பவர். வெளிநாடுகளுக்கு (அமெரிக்கா, இரஷ்யா, ஜெர்மனி, பிரிட்டன், ஃபிரான்ஸ், ஏமன், ஜப்பான், துபாய் போன்றவை) நாடுகளில் நடை பெற்ற தொழில் துறை மாநாடுகளில் பங்கு கொண்டு நடைமு றையில் பயன்படும் பல ஆய்வுக் கட்டுரைகளை வழங்கி உலகப் புகழ் பெற்றவர்; பலப்பல விருதுகளையும் பெற்றவர். தவிர, கனடாவில் உள்ள யார்க் பல்கலைக் கழகத்திலும், பிற இடங்களிலும் சைவ சித்தாந்தத்திலும் பல ஆய்வுக் கட்டுரை கள் வழங்கிய தமிழ் இலக்கியப் புலவர். அண்ணாநகர் தமிழ்ச் சங்கம் பல்லாண்டுகட்கு முன்னரே இவரை என்கெழுதகை நண்பராகச் சேர்த்து வைத்தது. என்னுடைய **'நினைவுக் குமிழிகள்'** என்ற நூல் ஒன்றினை இவரால் வெளியிடும் அரிய வாய்ப்பினையும் பெற்றேன். இப்பொழுது இந்நூலுக்கு 'அ ணிந்துரை' பெறும் வாய்ப்பினையும் பெறுகின்றேன். பண் பாட்டுக்கு இலக்கியமாகத் திகழும் இவ்அரிய நண்பருக்கு என் இதயங்கலந்த நன்றி' உரியது.

இந்த நூலை பல்லாண்டுகள் நகரத்தார் பெருமக்களுடன் சேர்ந்து வாழவும், அவர்தம் பண்பாட்டுடன் கூடிய பக்தி நெறிகளில் கலந்து நுகரவும் வாய்ப்பு பெற்ற அப்பெருமக்க ளுக்கு அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன்.

இந்த நூலை 87-ஆம் வயதில் அருளாசிரியர்களின் அருளிச் செயல்களில் ஆழங்கால்பட்டு நெஞ்சு நெக்குருகக் கண்ணீர்த் துளிகள் சிந்திய நிலையில் அவற்றை நுகரவும் அந்த நுகர்ச்சியை நூல் வடிவமாக்கவும் என்னுளே தோன்றாத் துணையாக எழுந்தருளியிருக்கும் மாதொரு பாகனாகிய கயிலைநாதனுக்கு எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

**வேண்டத் தக்க தறிவோய்நீ;**
**வேண்ட முழுதும் தருவோய்நீ;**
**வேண்டும் அயன்மாற்கு அரியோய்நீ;**
**வேண்டி என்னைப் பணிகொண்டாய்;**
**வேண்டி நீயா தருள்செய்தாய்**
**யானும் அதுவே வேண்டினல்லால்**
**வேண்டும் பரிசொன்று உண்டுஎன்னில்**
**அதுவும் உன்றன் விருப்பன்றே**[2]

**— மாணிக்கவாசகர்**

'வேங்கடம்
AD-13, அண்ணாநகர்
சென்னை - 600 040.
தொலைபேசி: 26211583

ந.சுப்புரெட்டியார்

2. திருவா குழைத்த பத்து - 6

# இராமலிங்க அடிகள்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

வள்ளற்பெருமானது சமய சமரசக் கொள்கையும் ஒளிவழி பாடும், சாதி சமய சழக்கினை விடவேண்டும் என்ற கருத்தும் இன்றைய சமுகத்திற்கு மிகவும் அவசியமானவை ஆகும். அவரது பெருமைகளையும் அவரது கொள்கைகள் பற்றிய அவசரமும் அவசியமும் நாடெங்கும் பரப்பப்படுதல் வேண்டும். இதற்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978-81-939637-1-5




eBOOK ~ மின் நூல்

# நூல்முகம்

*உள்ளமும் உயிரும் உணர்ச்சியும் உடம்பும்*
*உறுபொருள் யாவும்நின் தனக்கே*
*கள்ளமும் கரிசும் நினைந்திடா துதவிக்*
*கழல்இணை நினைந்துநின் கருணை*
*வெள்ளம்உண் டிரவு பகல்அறி யாத*
*வீட்டினில் இருந்துநின் னோடும்*
*வள்ளல்இல் லாமல் கலப்பனோ சித்தி*
*விநாயக விக்கினேச் சுரனே*[1]

*சங்கம் வளர்த் திடவளர்ந்த தமிழ்க்கொடியைச்*
*சரச்சுவதி தன்னை அன்பர்*
*துங்கமுறக் கலை பயிற்றி உணர்வளிக்கும்*
*கலைஞானத் தோகை தன்னைத்*
*திங்கள்நுதல் திருவைஅருட் குருவைமலர்*
*ஓங்கியபெண் தெய்வந் தன்னைத்*
*தங்கமலை முலையாளைக் கலையாளைத்*
*தொழுதுபுகழ் சாற்று கிற்பாம்.*[2]

'ஆற்று நீர்வழிப் படூஉம் புணைபோல முறைவழிப்படூஉம் ஆருயிர்' (புறம்-192) ஆதலால் என் வாழ்வின் நடுப்பகுதியில் சைவத் திருமுறைகள்பற்றியும் ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் பற்றியும் சில விளக்க நூல்கள் எழுதி வெளியிடும் பேறு பெற்றேன். என் வாழ்க்கையின் இறுதிப் பகுதியில் பிற்கால அருளாசிரியர்கள்பற்றி எழுதி வெளியிடும் பேறு இருந்தமையால் *தாயுமானவர்*பற்றி எழுதவும் அதனைக் கலைஞன் பதிப்பகம் மூலம் வெளியிடவும் திருவருள் கூட்டியது. இதனைத் தொடர்ந்து *'இராமலிங்க அடிகள்'* பற்றி எழுதவும் அதே பதிப்பகம் மூலம் வெளிவரவும் திருவருள் கூட்டுகிறது. தொடர்ந்து *பட்டினத்தடிகள், இராமாநுசர்,* பிரதிவாதி பயங்கரம் *அண்ணங்கராசாரிய சுவாமிகள்*பற்றி எழுதவும் வெளியிடவும் திருவருள் கூட்டுவிக்கும் என்ற நம்பிக்கை உண்டு.

1. *திருவருட்பா - மூன்.திரு. சித்திவிநாயகர் பதிகம் - 4*

2. *மேலது - மேலது - கலைமகள் வாழ்த்து - 2*

நாயன்மார்களும் ஆழ்வார் பெருமக்களும் தலங்கள்தோறும் சென்று அங்கு கோயில் கொண்டிருக்கும் மூர்த்திகளை நேரில் தரிசித்து அவ்வப்போது எழும் உணர்வுகளுக்கேற்பப் பாடல்களை யும் பாசுரங்களையும் பாடி வழிபட்டு மகிழ்வர். ஆனால், நம் அடிகளும் அவ்வாறு சென்று மூர்த்திகளை தரிசித்தபோது, தரிசித் ததுடன் மன அமைதி பெறுவர். இருப்பிடம் திரும்பியவுடன் தியானத்தில் இறங்குவர். தியானம் முடிந்து விழிப்பு நிலையில் பாடத் தொடங்குவர். அப்பாடல்களில் இறைவன் தமக்குக் கனவு நிலையிலும் நனவு நிலையிலும் காட்சி தந்து அருளிய நிகழ்ச்சிக ளும் பயின்றுவரப் பெற்றிருப்பதைக் கண்டு மகிழலாம். பாடல்க ளும் நாயன்மார் ஆழ்வார் அருளிச் செயல்களில் பதிகங்களும் அவற்றில், 10, 11 பாடல்களின் தொகைகளும் மாறாமல் இருப்ப தைக் காணலாம். நம் வள்ளற் பெருமான் பதிகங்களில் எந்தவித வரையறைகளும் இல்லாமல் இருப்பதைச் சிறப்பாகக் காணலாம்.

நாயன்மார் ஆழ்வார் பாடல்கள், பாசுரங்களைப் பயிலும்போது அவர்கள் அநுபவித்த இறையநுபவம் மட்டிலுமே நம் மனத்தில் எழும். ஆனால் வள்ளற் பெருமான் பாடல்களில் ஈடபட்டுப் பாடி மகிழும்போது இறையநுபவத்துடன் பெருமானின் சொந்த அநுப வமும் *'கலந்து'* நம் மனத்தில் எழும். நம்மிடமும் வள்ளல் பெருமானாகவே மாறும் மனநிலையும் தோன்றத் தொடங்கும். மணிவாசகப் பெருமானின் *'திருவாசகத்தைத் தான் கலந்து பாடுங் கால்'* அவருக்கு ஏற்பட்ட 'நற்கருப்பஞ்சாற்றினிலே, தேன் கலந்து பால் செழுங்கனித் தீஞ்சுவை கலந்து என், ஊன் கலந்து உயிர் கலந்து, உவட்டாமல் இனிப்பதை' அடிகள் உணர்ந்ததைப்போல், நாம் வள்ளற் பெருமான் பாடல்களில் ஈடுபட்டு அநுபவிக்கும் போது அத்தகைய அநுபவத்தைப் பெற்றதை உணர்ந்ததுண்டு. இந்த அநுபவம் பாடல்களில் ஈடுபட்டுப் பயிலும்போது அனைவ ருக்கும் ஏற்படும் என்பது என் உறுதியான நம்பிக்கை.

இந்த நூல் நான் அடிகளாரின் பாடல்களில் அதிகமாக ஈடுபட்டுப் பாடி அநுபவித்த பாடல்களில் சிலவற்றைத் திருமு றைகள் தோறும் தேர்ந்தெடுத்த தொகுப்பும் பதிகந்தோறும் நான் எழுதிய குறிப்பும் கொண்டவை. முதல் கட்டுரை அடிகளாரின் வரலாறும், இறுதியாக நூலின் நிறைவுரையும் நூலில் சேர்ந்துள்

ளன. ஆறு திருமுறைகளையும் உரையிருப்பினும் அதனோடு சேர்த்து திரு முறைகள் முழுவதையும் அனைவரும் படித்தல் என்பது நடைமுறையில் இயலாததொன்று. ஆயினும் வள்ளல் பெருமானின் சில பாடல்களையாவது படித்து அநுபவித்து அவர் தம் கொள்கைகளைக் கடைப்பிடித்து அவற்றின்படி வாழ்வது சமூக நலத்திற்கு உகந்தது. சமயப் பிணக்கும் சாதி வேற்றுமையும் தலைதூக்கிக் கொந்தளிப்பை ஏற்படுத்தியுள்ள இக்காலத்திற்கு மிகவும் பொருந்தக் கூடிய ஒன்று. இந்த நோக்கத்துடன் இந்நூல் தொகுக்கப் பெற்று வெளிவருகின்றது.

நான் பெற்ற அநுபவத்தையே பொதுமக்களும் பெற்று அநுப வித்தால் சமயப் பிணக்கு ஒழிந்து சமரச நிலை ஏற்படும் என்ப தும், அடிகளாரின் கொள்கைகளைக் கடைப்பிடித்து மனநிறைவுட னும் அமைதியுடனும் வாழ்ந்தால் நாமும் அடிகளாரைப் போல் அருட் பெருஞ்சோதியில் கலக்கவும் வழி அமையும் என்பதும் என் எதிர்பார்ப்புகள். அப்படி நேர்ந்தால் புதியதொரு சமூகமும் உருவாக வழி ஏற்படும் என்பதும் என் நம்பிக்கை.

தரமான நூல்களை வெளியிட்டுப் புகழ்பெற்று வரும் கலை ஞன் பதிப்பகம், *கவிமணியின் தமிழ்ப்பணி - ஒரு மதிப்பீடு* என்ற நூலை வெளியிட்ட நிலையில் இந்நூலையும் ஏற்று வெளியிட இசைவு தெரிவித்த பதிப்பகத்தாருக்கும் புருஷகாரம் செய்வித்த திரு.ப.முத்துக்குமார சுவாமிக்கும் என் இதயங்கலந்த நன்றி என்றும் உரியது.

இந்நூல் அச்சாகுங்கால் மூலப்படியுடன் பார்வைப் படிவங் களை ஒப்பிட்டுச் சரிபார்த்து, அச்சிட உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.ப.சியாமளாவுக்கு என் அன்பு கலந்த ஆசியுடன் கூடிய நன்றி என்றும் உரியது.

இந்நூலுக்கு *அணிந்துரை* வழங்கியவர் சில ஆண்டுகளாக நெருங்கிப் பழகி என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அருமை நண்பர் பொறிஞர் *சி.எஸ். குப்புராஜ்* (முன்னாள் தலைமைப் பொறியாளர், பொதுப்பணித் துறை) ஆவர். பொதுப் பணி பொறி யியல் துறையில் பணியாற்றி வந்த காலத்திலேயே பொதுமக்கள்

சேவையில் ஆர்வங் கொண்டு பணியாற்றியவர். அருட்பிரகாச வள்ளற் பெருமான்பாலும் அவர்தம் அருளிச் செயல்பாலும் ஆராக் காதல் கொண்டவர். அவர்தம் கொள்கைகளைக் கடைப்பிடித்தும் மக்களிடையே பரப்பியும் வருபவர். பல்லாண்டுகளாக சைவ சித்தாந்தப் பெருமன்றத் துணைத் தலைவராகப் பணியாற்றிய காலத்தில் சைவசித்தாந்தக் கருத்துகளில் அதிக ஈடுபாடு கொண் டிருந்த இப்பெருமகனாரிடம் வள்ளற் பெருமானின் கொள்கைக ளும் தலைதூக்கி நின்றன. கூட்டங்களில் 'தென்னாடுடைய சிவனே போற்றி... எந்நாட்டவருக்கும் இறைவா போற்றி' என்று சொல்வதற்குப் பதிலாக சில சைவச் சான்றோர்களின் வெறுப்பை யும் பொருட்படுத்தாது 'அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி, தனிப் பெருங்கருணை அருட்பெருஞ்சோதி' என்று சொல்லுவார். இவர்தம் மூதாதையர் ஒருவர் வள்ளற் பெருமானின் நேரடிச் சீடர். *'குடும்ப கோரம்'* என்ற வள்ளல் பெருமானின் அருளிச் செயல் இவர்தம் குடும்ப வரலாறு கொண்டது. இத்தகைய பெருமகனாரி டம் சிறுவயது முதற்கொண்டே வள்ளல் பெருமானின் அருளிச் செயல்களில் ஈடுபாடு கொண்ட அடியேன் அவர்தம் கொள்கை யின் உந்தலால் தூண்டப் பெற்று எழுதிய இத்தொகுப்பு நூலுக்கு *அணிந்துரை* பெற்றது இந்நூலின் பேறு; என் பேறும் கூடத்தான். என்பால் உழுவலன்பு கொண்டு அணிந்துரை வழங்கிய இப்பெரு மகனாருக்கு என் இதயங்கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலை வள்ளல் பெருமான் பாடல்களில் ஈடுபட்டுப் படித்தும் அவர்தம் கொள்கைகளைக் கடைப்பிடித்தும் வாழ்ந்தும் வாழும் வள்ளல் பெருமானின் முன்னைய, இன்றைய, எதிர்வரும் காலத்து அடியார்கள் அனைவருக்கும் அன்புப் படையலாக்கிப் பெருமிதம் கொள்ளுகின்றேன்.

1941 - 1950இல் துறையூரில் உயர்நிலைப் பள்ளித் தலை மையாசிரியனாகப் பணியாற்றிய காலத்தில் திருச்சி மாவட்டம் பெரம்பலூர் வட்டத்தில் சில ஊர்களில் ரெட்டி குலப் பெருமக்க ளால் தவறாமல் ஆண்டுதோறும் இலவச உணவு அளித்து நடைபெறும் வள்ளல் பெருமான் பிறந்த நாள் விழாவில் பலமுறை பங்கு கொண்டு பேசியதுண்டு. திருவருட்பாவில் ஈடுபாடு கொண்டு முறையாகப் படிக்காவிட்டாலும் அவ்வப்போது சில

பாடல்களைப் படிப்பதுண்டு. 1960 முதல் நாளிது வரை திருவருட்பாவிலும் அவர் கொள்கைகளிலும் என் ஈடுபாடு அதிகரித்துக் கொண்டே வருகின்றது.[3] சில ஆண்டுகட்குமுன் சென்னைப் பல்கலைக் கழகத்தில் வள்ளலார் அருளிச் செயல்களில் ஒரு கருத்தரங்கு நடத்தி மகிழ்ந்ததுண்டு. கடந்த ஓராண்டுக் காலமாக திருவருட்பாவில் அதிக ஈடுபாடு கொண்டு ஆழங்கால் பட்டதன் விளைவாக இந்த நூலும் உருவாயிற்று. வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் வள்ளல் பெருமானின் கொள்கையைக் கடைப்பிடிக்கும் ஊழும் இருந்தது அப்பெருமான் ஆசி எனக் கருதுகின்றேன்.

என் வாழ்நாளின் இறுதிக் காலப் பகுதியில் (அகவை 88) இந்த நூல் எழுதுவதற்குரிய சிந்தனையும், எழுதுங்கால் நல்ல உடல்நிலையையும் கண்ணொளியையும் நல்கிவரும் என்னுளே நிலையாக எழுந்தருளியிருக்கும் பரம்பொருளை வாழ்த்தி வணங்கி அமைகின்றேன்.

*புரிசைவான் உலகில் பூவுல கெல்லாம்*
*புண்ணிய உலகமாய்ப் பொலிந்தே*
*கரிசெலாம் தவிர்த்து களிப்பெலாம் அடைந்து*
*கருத்தொடு வாழவும் கருத்தில்*
*துரிசெலாம் தவிர்க்கும் சுத்தசன் மார்க்கம்*
*துலங்கவும் திருவருட் சோதிப்*
*பரிசெலாம் பெற்றேன் எனக்கிது போதும்*
*பண்ணிய தவம்பலித் ததுவே![4]*

— *வள்ளல் பெருமான்*

'வேங்கடம்'
AD-13, அண்ணாநகர்
சென்னை - 600 040.
தொலைபேசி: 26211583

**ந.சுப்புரெட்டியார்**

3. *கடந்த பத்தாண்டுகளாக உதவும் கரங்கள் நிறுவனத்தின் ஆதரவில் உள்ள 100 அனாதைப் பிள்ளைகளுக்கு என் பிறந்த நாள் நினைவாக (ஆகஸ்டு 27) ஆயிரம் ரூபாய் அளித்து அன்றைய காலை உணவில் செலவிடுமாறு ஏற்பாடு செய்து வருகின்றேன். (சீவகாருண்ய கொள்கை கடைப்பிடிப்பு)*

4. *திருவருட்பா - 6-ஆம் திருமுறை - சிவ புண்ணியப் பேறு - 8*

# மூவர் தேவாரம்
## புதிய பார்வை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

தேவாரம் ஓர் இலக்கியமாக, இசை நூலாக
தமிழர்களின் வாழ்விற்குப் பயன்படுகின்ற
ஒரு பண்பாட்டுப் பெட்டகமாக விளங்கும்
பாங்கினைத் துய்த்துணரும்
ஓர் அரிய பெருநூல்

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-938927-5-6

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
　　பிள்ளை யைப்பெறும் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
　　உயிரை மேவிய உடல்மறந் தாலும்
கற்ற நெஞ்சகம் கலைமறந் தாலும்
　　கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
　　நமச்சி வாயத்தை நான்மற வேனே.[3]

*- இராமலிங்க அடிகள்*

மறைமலையடிகள் அறக்கட்டளைப் பொழிவுகள் (2002-2003) பற்றிய அழைப்பு சென்னைப் பல்கலைக்கழக இசைத்துறையிலிருந்து வந்ததும் (பிப்ரவரி 22, 2003), அந்தப் பொழிவுகள் மூவர் தேவாரம் பற்றியே இருக்க வேண்டும் என்ற குறிப்பிட்டிருந்ததை அறிந்ததும் ''மூவர் தேவாரம் - புதிய பார்வை'' என்ற தலைப்பில் பேசுவதாக உறுதிசெய்து என் பேச்சை எழுத்து மூலம் தயாரிக்கத் தொடங்கி விட்டேன்.

இந்த நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய திரு. இராமவீரப்பன் (சென்னைக் கம்பன் கழகம், எம்.ஜி.ஆர் கழகம் - இவற்றின் தலைவர்). அவர் அமைச்சராக இருந்த காலம் முதல் நான் அறிவேன். இவர் அமைச்சராக இருந்த காலத்தில் தான் மதுரை - காமராசர் பல்கலைக் கழகம் அடியேனுக்கு தமிழ்ப் பேரவைச் செம்மல் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. சுதந்திரத்திற்குப் பிறகு நாட்டை ஆண்ட நல்ல அமைச்சர்கள் சிலருள் இவர் முன்னணியில் இருப்பவர் எம்.ஜி.ஆர்.ஐப் போலவே விரிந்த

---

3. திருஅருட்பா - இரண்டாந் திருமுறை - நமச்சிவாய சங்கீர்த்தனலகரி - 7

மனம் உள்ளவர் ஏழை எளியவர்களின்பால் பாசமும் நேசமும் மிக்கவர். அவர்கள் வாழ்வு செழிக்க வேண்டும் என்ற பெரு நோக்கம் கொண்டவர். தந்தை பெரியார்வழி நின்று சாதி வேறுபாட்டைக் கடிபவர். பெரியார் கொள்கைகள் பலவற்றை ஏற்று நடப்பவர். பொது அறிவு **(Common sense)** மிக்கவர். தமிழ்ப்பற்று மிக்கவர். தமிழ் வளர்ச்சிக்காகத் தம் இல்லத்தையும் ஈந்தவர் (வள்ளல் அழகப்பரை போல). நான் சில ஆண்டுகள் (1995-2003) மதிப்பியல் இயக்குநராகப் பணியாற்றிய தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் பண்பாட்டு நிறுவனத்தில் பாரத ரத்னா டாக்டர் சி. சுப்பிரமணியத்திற்குப் பிறகு சில ஆண்டுகள் காப்பாளராக இருந்து நிறுவனத்தின் வளர்ச்சிக்குப் பல்வேறு ஆலோசனைகளை வழங்கி என் பணிக்குத் துணையாக இருந் தவர். இத்தகைய பேரன்பர் இந்நூலுக்கு வழங்கியது இந்நூலின் பேறு; என் பேறுங்கூட; வாழ்த்துரை வழங்கிய வள்ளலுக்கு என் இதயம் கனிந்த நன்றி என்றும் உரியது.



இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியவர் **டாக்டர் எம். பிரமீளா** குருமூர்த்தி (பேரா சிரியர் இந்திய இசைத் துறைத் தலைவர்) இராணி மேரிக் கல்லூரியில் கற்று M.A. தேர்வில் முதல் நிலைகளில் தேறி பல பரிசுகள் பெற்றுப் புகழ்பெற்ற புகழ்வாய்ந்த கதா காலட் சேபத் தலைப்பில் ஆராய்ந்து பிஎச்.டி (1988) பட்டம் பெற்றவர்கள். தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, இந்தி, ஆங்கிலம் ஆகிய ஐந்து மொழிகளில் பயிற்சி பெற்றவர்கள், இவர்தம் இசைப் புலமையைப் பாராட்டி இராமலிங்கர் பணிமன்றம் 'இசைக் கலைச் செல்வர்' என்ற விருதையும் (1997), ஐம்ப தாண்டு சுதந்திரம் நிறைவு விழா 'ஸ்ரீரத்னா' விருதையும் (1998) வழங்கிச் சிறப் ித்தன. இத்தகைய புகழ்பல பெற்ற அம்மையார் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியது. இந்நூலின் பேறு; என் பேறும் கூட. அணிந்துரை வழங்கியமைக்கு ஏன் இதயங்கனிந்த நன்றி என்றும் உரியது.



**டாக்டர் இராமநாதன்** அவர்களை ஈண்டு குறிப்பிடாமல் இருக்க முடியாது. தம் தலைமைப் பதவியை தம்முடன் பணி யாற்றும் பேராசிரியர் ஒருவருக்கு அவர் முன்னேற்றம் கருதி விட்டுக் கொடுத்த தியாக உணர்வு பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பெற வேண்டிய தொன்று. இப்பெருமகனாரை நான் 1996 - முதல்தான் அறிவேன். நான் பணியாற்றும் தெற்கு தென்-கிழக்கு ஆசிய நாடுகளின் மரபுவழிப் பண்பாட்டு நிறு வனத்தின் ஆலோசகராக இருந்து வருவதால்[4] நன்கு அறிவேன். அவர்தம் சுறுசுறுப்புணர்வும் சேவை மனப்பான்மையும், பிறருக்கு உதவும் பண்பும், எல்லோருக்கும் எடுத்துக் காட்டாக இருக்க வேண்டிய நேர்மையும் என்னை அதிகமாகக் கவர்ந்தன. பண்பாட்டு நிறுவனத்திற்கு ஒல்லும் வகையெல்லாம் உதவி வரு பவர். நிறுவனத்தின் ஆதரவில் நான் நடத்தும் எல்லா இலக்கிய விழாக்களில் இறைவணக்கம், தமிழ்த்தாய் வாழ்த்து பாடவும் இசைத்துறை மாணவிகளை அனுப்பி வைத்து உதவியது மிகவும் குறிப்பிடத்தக்கது.

இந்த நூலின் கைப்படியை அன்புடன் ஏற்று வெளியிடு வதற்கு உதவிய நிவேதிதா பதிப்பக உரிமையாளர் திருமதி தேவகி இராமலிங்கத்திற்கு என் அன்புகலந்த நன்றி என்றும் உரியது. வெளியிடும் செலவு ஒன்றுக்குப் பத்தாகப்

---

4. திருப்பதியில் ஓய்வு பெற்ற பிறகு சென்னையில் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் வெளியீடாகிய தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் முதன்மைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியபோது (1978 பிப்பிரவரி முதல் 1979 ஜூன் வரை - 18 மாதங்கள்) அருகிலிருந்த இசைத் துறையுடன் தொடர்பு இல்லை. 1978 முதல் டாக்டர் இராமநாதன் இசைத்துறையில் பணியாற்றியிருந்தும் அவரைப் பார்க்க எந்தவித வாய்ப்புகளும் ஏற்பட வில்லை. நானும் 1979 முதல் வெளியூர் நிறுவனங்களில் பணியாற் றியமையால் செ.ப.க த்துடன் எந்தவிதத் தொடர்பும் ஏற்படவில்லை.

பெருகியுள்ளதையும் பொருட்படுத்தாது வெளியிட்டமை இந் நூலின் பேறு; என் பேறுங் கூட.

இந்த நூல் அச்சேறுங்கால் மூலக் கைப்படியுடனும் பார்வைப் படிவங்களுடனும் ஒப்பு நோக்கிச் சரிபார்த்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.பு. சியாமளாவுக்கு என் அன்பும் ஆசியும் கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த அரிய நூலை இந்திய இசைத் துறை முதல் பேராசிரியர் துறைத் தலைவர் பி. சாம்பமூர்த்தி அவர்கட்கு அன்புப் படைய லாக்கிப் பெருமிதம் அடைகின்றேன். 1960 ஜூலை முதல் திருப்பதியில் பணியாற்றியபோது ஆறு ஆண்டுகள் குடும்ப மின்றித் தனிமையாக இருந்த காலத்தில் இசைக் கல்லூரியில் பணியாற்றிய ஜானகி ராமன் (கண்ணொளி இல்லாதவர்) தம் மனைவியுடன் அடுத்த தெருவில் வாழ்ந்தவர். அவரைப் பார்க்க அடிக்கடிச் செல்வதுண்டு. அக்கல்லூரி பல்கலைக் கழகம் உள்ள சாலையின் ஓரத்தில் அமைந்திருந்ததால் அடிக்கடி திரும்பும் போது அங்குச் சென்று வருவதுண்டு. இதனால் திரு. பசுபதி என்ற இசைப் பேராசிரியரும் தமிழ் பேசும் பிறரும் நண்பர் களானார்கள். அப்போது பேராசிரியர் பி. சாம்பமூர்த்தியும் (1964-66) நண்பரானார். அவரிடம் தெலுங்கில்தான் பேசுவேன். இதனால் நெருக்கம் அதிகமாயிற்று (அவர் வயது முதிர்ந்த நிலை); அவர் வீட்டிலும் சென்று பழகுவதுண்டு.[5] 1970க்குப் பிறகு திருப்பதி பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை தொடங்கப் பெற்று வளரும் நிலையில் பல்வேறு விழாக்கள் நடைபெறும் போது பெரும்பாலும் பேராசிரியர் பசுபதி அவர்களே இறை வணக்கம் பாடுவதற்கு ஏற்பாடு செய்து வந்தேன். சில சமயம் திரு ஜானகிராமன் அவர்களும் பாடுவதுண்டு. (அவர் தம் தந்தையார் இலால் குடி உயர்நிலைப்பள்ளியில் கணித ஆசிரிய ராகப் பணியாற்றி ஓய்வு பெற்றபின் தன் மகனுடன் வாழ்ந்து

5. இதற்குப் பிறகு அவர் தொடர்பு இல்லை.

வந்தவர். இசையின்றி பக்தி இலக்கியம் இல்லையாதலால் இசைத் துறை தொடர்பு நெருக்கமாகவும் இருந்தது. இவற்றையெல்லாம் நினைந்தவண்ணம் பேராசிரியர் பி. சாம்பமூர்த்திக்கு இந்த நூலை அன்புப் படையலாக்கி மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன்.

இந்நூலையும்[6] இது போன்ற பலநூல்களை எழுதுவதற்கும் தமிழ்ப்பணியே தெய்வப் பணியாக கருதி வாழும் அடியேனுக்கு நல்ல உடல் நிலையும் 87-ஆம் அகவையிலும் கண்ணொளி கெடா நிலையும் வழங்கி என்னுளே தோன்றாத்துணையாக அந்தர் யாமியாக எழுந்தருளியிருக்கும் வேங்கடம் மேய விளக்கிற்குப் பெரிய பிராட்டியார் மூலம் எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

**புல்லும் பசுவிற்காம்; பூண்டும் மருந்திற்காம்;**
**கல்லும் திருக்கோயில் கட்டுவதற்காம்; - தொல்லுலகில்**
**ஏழை எளியேன் எதற்காவேன்? செந்நிகர்**
**வாழும் வடிவேல வா.**[7]

*- கவிமணி தே.வி.*

**'வேங்கடம்'**
**AD-13, அண்ணாநகர்**
**சென்னை - 600 040**

**ந. சுப்புரெட்டியார்**
**தொ.பே : 26211583**

---

6. இதுதான் இசைத்துறையில் முதன் முதலாக அச்சேறி வெளிவந்த முதல் அறக்கட்டளைச் சொற்பொழிவு நூலாகும்.

7. மலரும் மாலையும் - முருகன் புகழ் மாலை - 1

# வைணவ புராணங்கள்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூலில் இதிகாச பாகவதம், புராண பாகவதம், திருக்குருகை மான்மியம், கூடற்புராணம், இரு சமய விளக்கம் எனும் ஐந்து நூல்களைப் பற்றிய ஒருநிலையான ஆய்வுகள் உள்ளன. புராணங்கள் பல்வேறு மதங்களில் எப்படியெல்லாம் உள்ளன என்பன போன்ற செய்திகளை உடலுக்கு ஒரு முகம் போல் விளக்குகின்றார் பேராசிரியர்.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939685-4-3

*eBOOK* ~ *மின் நூல்*



# நூல் முகம்

*ஒண்மிதியில் புனல் உருவி ஒருகால் நிற்ப,*
*ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து*
*எண்மதியும் கடந்து, அண்ட மீது போகி,*
*இருவிசும்பி னூடுபோய் எழுந்து, மேலைத்*
*தண்மதியும் கதிரவனும் தவிர ஓடி,*
*தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு*
*மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை*
*மலர்புரையும் திருவடியே வணங்கி னேனே*[1]

பரந்தாமன் பார்த்தன் தேரை இயக்கினதுபோல் ஒவ்வொருவர் இதயகமலத்திலும் அவன் வீற்றிருந்து இவ்வுடலாகிய தேரை இயக்கிச் செயற்படுத்துகின்றான். அங்ஙனமே ஒவ்வொரு மனிதனும் செயற்படுகிறான். அந்த இயக்கத்தின் அடிப்படையில்தான் இந்நூலும் எழுகின்றது. இதில் ஐந்து முக்கியமான புராணங்கள் மட்டிலுமே விளக்கப் பெற்றுள்ளன. இவை வழக்கிலில்லாதவை.[2]

என் அரிய நண்பரும் வைணவ சீலருமான திரு. வீ.வீ.கே. சுப்புராசு அவர்கள் (அதிபர், சுரா நூல் வெளியீட்டகம்) ஒரு சமயம் 'வைணவ புராணங்கள்' பற்றி ஒரு நூல் எழுதுமாறு பணித்தார்கள். அதை அவர் மறந்தே போனார். அந்த 'ஆணை' என் மனத்தை உறுத்திக்கொண்டே இருந்தது. பல்வேறு இலக்கியப் பணிகளில் ஈடுபட்டுக் கிடந்த அடியேனுக்கு சிறிது ஓய்வு கிடைத்தமையால் இந்நூல் எழுதத் துணிந்து அவனருளால் நிறைவு பெற்றது. பணித்த பண்பாளரும் இதனை உடனே அச்சேற்றி அடியார்களிடையே நடையாட விட்டமைக்கு என் அன்பு கலந்த நன்றி என்றும் உரியது.

ஆழ்வார் பாசுரங்களில் ஈடுபாடு கொண்டவரும், திருமழிசை பிரான், கலியன் பாசுரங்களில் ஆழங்கால் பட்டு ஆய்ந்து முறையே எம்ஃபில் டாக்டர் பட்டம் பெற்றவளும் என் அபிமான புத்திரியுமான

---

1 திருநெடுந்தாண்டகம் - 5

2 இன்று புழக்கத்திலுள்ள 'திருவேங்கடத் தல புராணம்', 'கோலாசல புராணம்' போன்றவை எடுத்துக்கொள்ளப் பெறவில்லை.

டாக்டர் மு.ப. சியமளா மூலப்படியையும், பார்வைப் படிமங்களையும் ஒப்பிட்டுச் சரிபார்த்தமைக்கு என் ஆசி கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கியவர் என் நெடுநாள் நண்பரும், சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி ஒய்வு பெற்றவரும், தம் வாழ்க்கையைத் தம் துணைவியுடன் வைணவத் தொண்டிற்கே அர்ப்பணித்தவரும், '**வைணவம்**' என்ற திங்கள் இதழின் ஆசிரியருமான டாக்டர் ஜெ. பார்த்தசாரதியாவார். அவர் இந்த நூலுக்கு அணிந்துரை நல்கியது இந்த நூல் பெற்ற பேறு; அடியேன் பேறும்கூட. அணிந்துரை அருளிய அன்பருக்கு என் இதயம் கனிந்த நன்றி என்றுமே உரியது.

இந்த நூல் அமரர் நீதியரசர் என். கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கட்கு (1913-2002) அன்புப் படையலாக்கப் பெறுகின்றது. பிறந்து, (21.12.1913) ஏழு நாட்களில் அன்னையை இழந்த நிலையில் சுவாமி இராமகிருஷ்ண பரமகிருஷ்ண சுவாமிஜி அவர்களால் வளர்க்கப் பெற்று கல்வி கற்பிக்கப்பெற்றமையால் அவர்தம் வாழ்க்கை ஆன்மிகம், நாட்டுப்பற்று, நடைமுறை உலக வாழ்க்கை, ஒழுக்க முறைகள் அனைத்தும் கைவரப்பெற்று சிறந்த குடிமகனாகத் திகழ வாய்ப்புகள் பெற்றுத் திகழ்ந்தார். 1939ல் சட்டப் படிப்பை முடித்து 1940ல் வக்கீல் தொழில் தொடங்கி 1950 முதல் பல்லாண்டுகள் அரசு வக்கீலாகப் பணியாற்றினார். 1958ல் முத்து இராமலிங்கத் தேவர் வழக்கையும், கோயம்புத்தூர் கிருஷ்ணன் கள்ள நோட்டு வழக்கையும் கையாண்ட நிகழ்ச்சிகள் பரபரப்பானவை; மக்கள் மனத்தைக் கவர்ந்தவை. இன்னொரு வழக்கு - பொய்யான அவதூறு வழக்கு - இராஜாஜியின் அருமை மகள் கைம்பெண் நாமகிரியைப் பற்றியது; 'சிவப்பு நாடா' என்ற மஞ்சள் இதழில் வெளிவந்தது. மனம் உடைந்த இராஜாஜி வழக்கு தொடுத்து கடுமையான தண்டனை வாங்கித் தருமாறு திரு. ரெட்டியாரை வேண்டிக்கொண்டார். அதனை அவ்வாறு செய்யாமல் வேறுவிதமாகக் கையாண்டார். "இப்படி இனி தொடர்ந்து எழுதினால் **விசாரணையின்றி** கடுமையான தண்டனையை ஏற்க ஒப்புக் கொள்கிறேன்" என்று எழுதிய வாசகத்தின் கீழ் கையெழுத்து வாங்கினார். இப்படிச் செய்தால் நிரந்தரமாகப் பிரச்சினை எழாது என்று இராஜாஜிக்கு விளக்கினார். இதனைத் தொலைபேசியில் கேட்ட இராஜாஜி அவர்கள் அடக்க முடியாத சிரிப்பால் ரெட்டியார்

அவர்களின் கூர்ந்த மதியைப் பாராட்டினாராம். 1960ல் தமிழக அரசு வக்கீலாகவும், 1964ல் அட்வொகேட் ஜெனரலாகவும், 1966ல் சென்னை உயர்நீதிமன்ற நீதியரசராகவும் நியமிக்கப்பட்டார்.

நீதியரசராகப் பணியாற்றிய காலத்தில் எம்.ஆர்.இராதா எம்.ஜி.ஆரைச் சுட்ட வழக்கைக் கையாண்ட முறையை நாடே வியந்து கவனித்தது. நீதியரசராகப் பணியாற்றியபோது ஏழை மக்களின் நலத்தைக் கருத்தில் கொண்டு சட்டத்தின் போக்கு கெடாமலும் அவர்கள் நலம் பெறும் வகையிலும் தீர்ப்பு கூறியதால் **'மக்கள் நீதிபதி'** என்று நாடே புகழ்ந்தது. இக்காலத்தில்தான் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் 'இல்லற நெறி' என்ற என் நூலை இவர் கையால் வெளியிடச் செய்தேன். 'தொண்டை நாட்டுத் திருப்பதிகள்' என்ற என் நூலுக்கு அணிந்துரையும் பெற்றேன். நீதிபதியாக இருந்தபோது இவர் வழங்கிய தீர்ப்புகளைப் பொது மக்கள் நன்கு கவனித்தனர்.

1975, டிசம்பரில் நீதியரசர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றபின், பொதுத் தொண்டில் தீவிரமாக இறங்கி நாடே வியக்கும் வண்ணம் பணி புரிந்தார். பொதுவாக நீதியரசர்கள் ஓய்வுபெற்றபின் ஒதுங்கியே வாழ்வது வழக்கு. ஆனால் அதற்கு விதிவிலக்கு நம் நீதியரசர் ரெட்டியார் அவர்கள். இக்காலத்தில் அவர்தம் திருப்பணி மகத்தானது; பெரும் புகழ் வாய்ந்தது. அருள் ஞானப்பெருவழி, இந்து மருத்துவமனை, பசு காப்பகம், ஜெய்கோபால் கரோதியா பள்ளிகள், வள்ளுவர் குருகுலம் மகளிர் உயர்நிலைப் பள்ளிகள், விசுவ இந்து பரிசத், தமிழ்நாடு வித்தியா பாரதி, விவேகானந்தர் கல்வி நிறுவனம், விவேகானந்தர் கல்வி அறக்கட்டளை, விவேகானந்தர் கலை ஆசிரம அறக்கட்டளை ஆகிய பல்வேறு நிறுவனங்களின் பொறுப்பு இவர் பார்வையில் இருந்தன. அனைத்திற்கும் மகுடம் வைத்தாற்போன்றது தமிழ்நாடு இலவச வழக்கு வாரியத்தின் தலைவராக இருந்து பல்லாண்டுகள் பணியாற்றிய காலப் பகுதியாகும். இக்காலத்தில் அமைதியாக அநீதியை அநுபவித்துக்கொண்டு வாழும் ஏழைகள் இலவசமாக வழக்கு விசாரணை பெறும் திட்டம் ஒன்றைச் செயற்படச் செய்ததாகும். தேசிய காவலர் ஆணையத்திலும் உறுப்பினராக இருந்து பணியாற்றியது சிறப்பாகும். இங்ஙனம் பணியாற்றிய பெருமகனார் தமது 89வது அகவையில் வைகுண்ட பதவியை அடைந்த அன்று (7.12.2002) இத்தனை நிறுவனத்திற்குரியவர்கள்

இவர்தம் இல்லங்களில் கண்ணீர்க் கடலில் மூழ்கியிருக்கும் காட்சி நெஞ்சை உருக்கியது. நூற்றுக்கணக்கான மாணவர் அழுத கண்ணீருடன் வந்து போன காட்சி கல் நெஞ்சத்தையும் உருக்கும் தன்மையது. (9.12.2002) காலை 9.30 மணிக்கு அண்ணா நகர் மின்சார மயானத்தில் ஈமச் சடங்கும் நிறைவு பெற்றது.

இங்ஙனம் பல்வேறு வகையில் தொண்டாற்றி நிறை வாழ்வு வாழ்ந்த பெருமகனாருக்கு - வைணவ சீலருக்கு - '**வைணவ புராணங்கள்**' என்ற இந்த நூலை அன்புப் படையலாக்கி என் மதிப்பையும் மரியாதையையும் புலப்படுத்திக் கொள்கின்றேன்.

என்னை 87 அகவை வரை இவ்வுலகில் நல்ல உடல் நலத்துடனும் மன வளத்துடனும் வாழ வைத்து இந்நாள் வரை கண்ணொளி கெடாமல் படிக்கவும், எழுதவும் வாய்ப்புகள் நல்கி என் இதயத்தில் என்றும் நிலையாக எழுந்தருளியிருக்கும் வேங்கடம் மேய விளக்கிற்குப் பெரிய பிராட்டியின் மூலம் எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

*இடிக்குரல் யானை வெண்கோடு*
*இறுத்தவன் இணைப்பொற் றாளின்*
*கடித்துணர் புணையாக் கைகள்*
*கையறு கைக ளாமால்;*
*பொடித்தசெங் கதிர்போற் காந்தி*
*பொழிமணிச் சூட்ட ராவின்*
*நடித்தவன் நாமம் பாடா*
*நாவழுங் காத நாவே*[3]

- செவ்வைச் சூடுவார்

'வேங்கடம்'
AD-13, அண்ணா நகர்,
சென்னை - 600 040.

- ந. சுப்பு ரெட்டியார்

---

3 இதிகாச பாகவதம்

# வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

திருக்குறளை ஆழ்ந்து நுட்பமாக கற்கும்போது ஒருசில கருத்துகள்
முரண்பாடாகத் தென்படும் என ஒரு சிலர் கூறுவர்.
முரண்பாட்டை பேராசிரியர் சான்றுகளுடன்
வன்மையாக மறுக்கின்றார். திருக்குறள் நெறியை
எக்காலத்தும் எவ்விடத்தும் எவராலும்
வழிபட இயலும்.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939685-6-7

*eBOOK* ~ *மின் நூல்*



# நூல் முகம்

இருக்கினும் நிற்கும் போதும்
　இரவுகண் துயிலும் போதும்
பொருக்கென நடக்கும் போதும்
　பொருந்திஊண் துய்க்கும் போதும்
முருக்கியல் கனிவா யாரை
　முயங்கிநெஞ்சு அழியும் போதும்
திருக்களா உடைய நம்பா !
　சிந்தைஉன் பால தாமே [1]

- அதிவீர ராம பாண்டியனார்

பள்ளி, கல்லூரிகளில் ஆசிரியர்கள் மூலம் கற்ற சில குறள்களைத் தவிர திருக்குறளை முறையாகக் கற்கத் தொடங்கியது 1939-இல். 'ஓதற் கெளிதாகி உணர்தற் கரிதாகி' இருக்கும் குறட்பாக்களை அசை போட்ட வண்ணம் இருந்தேன். எந்த நூலைப் படித்தாலும் அப்போதெல்லாம் கூட குறட்பாக்கள் அடிக்கடித் தலைகாட்டிக் கொண்டே இருக்கும்.

2001-இல் 'திருக்குறள் தெளிவு' என்ற நூல் வெளியிட்டேன். அது தொடங்கி அவ்வப்போது தோன்றும்

1. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி - ம2.

வாழ்வுபற்றிய சிந்தனைகள் வள்ளுவர் பெருமான் கருத்தின் அடிப்படையில் சிறு சிறு கட்டுரைகளாக உருவம் பெற்றன. சில சமயம் தனிக்குறட்பாவும் சிந்தனையில் இடம் பெற்று விளக்கம் அடையும். அவையும் சில விளக்கக் கட்டுரைப் போல் இடம் பெற்றன. இவ்வாறு கிடந்த முப்பத்தாறு சிறுசிறு கருத்துக் கோவைகளை ஒருநாள் எடுத்துத் தொகுத்து நோக்கினபொழுது அவை நூல் வடிவம் பெற்று நாட்டில் உலவினால் பலருக்குப் பயன்படக் கூடும் என்று எண்ணிய எண்ணமே இந்த நூல் வெளிவரக் காரணமாயிற்று.

பல அரிய நூல்களைப் பதிப்பித்து வேகமாக முன்னேறி வரும் திருமதி R. தேவகி அவர்களை உரிமை யாளராகக் கொண்ட அவ்வை பதிப்பகம் இந்த நூலின் படியை அன்புடன் ஏற்று பதிப்பித்து தமிழ்கூறு நல்லுலகில் நடையாட விட்டமைக்கு என் இதயங்கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த அரிய நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கியவர் பேராசிரியர் பாஸ்கன் (வயது 70) (பிறப்பு 1-3-1934) பௌதிகம் பி.எஸ்சி., பி.எஸ்சி , எம்.எஸ்சி., எம். ஃ.பில்., மற்றும் பி.டி., எம்.எட்., ஆகிய பட்டங்களைப் பெற்று கலைக் கல்லூரி கல்வியியல் கல்லூரி, பொறியியல், மருத்துவ, கால்நடைக் கல்லூரிகளில் பேராசிரியராக, முதல்வராக, பதவி உயர்வு; இறுதியாக கல்லூரிக்கல்வி இணை இயக்குநராகப் பணியாற்றி அகவை முதிர்வினால் பணியிலிருந்து விலகினார்(1992).பின்பு தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் போன்றவற்றில் பல்வேறு நிலைகளில் திருக்குறள் கருத்துகளைப் பரப்புவதில் தம் வாழ்க்கைப்

பணியாக அழைத்து தொண்டாற்றியவர். உலகப் பொதுமறையான திருக்குறளுக்காகத் தனியொரு நூலகம் (1000 ச.அடி அளவுள்ள இடத்தில்) நிறுவி, ஆண்டு விழாக்கள் கொண்டாடியும், கட்டுரைகள் எழுதியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் திருக்குறள்நெறியை மிக்க ஆர்வத்துடனும் ஈடுபாட்டுடனும் பரப்புகிறார். இத்தகைய பேரன்பரிடம் திருக்குறள் பற்றிய இந்த நூல் அணிந்துரை பெற்றது இந்நூலின் தனிச்சிறப்பும் பேறுமாகும். இராமசேதுப் பணியில் ஒரு சிறு அணில் ஆற்றிய தொண்டுபோல், தமிழ் மறைக்கருத்துகளைப் பரப்பிவரும் அடியேனின் பேறும் ஆகும் என்பது மிகையன்று. அணிந்துரை பெற்றது திருக்குறள் தொண்டருக்கு என் இதயங்கனிந்த பாராட்டுக் கள். நன்றியையும் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

குஜராத் உயர்நீதிமன்றத் தலைமைநீதியரசர் (ஓய்வு) பி.ஆர். கோகுலகிருட்டிணனை அறியாதவர்களே இரார். இவர் தம்மாணாக்கப்பருவம் முதலே தமிழார்வம் மிக்கவர். தமிழ் முனிவர் திரு.வி. கல்யாணசுந்தர முதலியார் (திரு.வி.க) மீது அளவற்ற மதிப்பும், மரியாதையும் கொண்டு மாணாக்கப் பருவத்திலேயே 'மணவழகர் மன்றம்'[2] நிறுவி அதன் ஆதரவில் இன்று வரை பல்வேறு இலக்கியக் கூட்டங்களை நடத்திவருபவர். இதனைத் தவிர பல்லாண்டுகளாக இயல், இசை, நாடக மன்றத் தலைவராகவும், பல்லாண்டுகளாக விக்டோரியா இன்சிடியூட் (பழம் பொருள் கிடைக்கும் இடம்) தலைவராகவும் பணியாற்றி வருபவர். இதனால் இவர்தம் கலையார்வத்தை நன்கு அறிய முடிகிறது.

தமிழ்ப்பற்றும் சமயச் சிந்தனையும் அவர்

2. மணம் - கல்யாணம்; அழகர் - சுந்தரர்; மன்றம் கழகம்.

மேற்கொண்டிருந்த நீதித்துறைப் பணியைச் 'சமன் செய்து சீர் தூக்கும் கோல்' போல் (குறள் -118) மனத்தூய்மையுடன் நிறைவேற்றச் செய்தவர் என்பது அடியேனின் கணிப்பு. மேலும் இவையே சென்னைப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தத்துறை, வைணவத்துறை இவற்றை நிறுவச் செய்தமைக்கு உந்து விசையைத் தந்தது. துறையொன்றுக்கு இருபது இலட்சம் ரூபாய் வீதம் நன்கொடைகள் மூலம் திரட்டி வழங்கித் துறைகளை உருவாக்கினார். இவர்தம் வழியைப் பின்பற்றியே சைனத்துறை, கிறித்துவ சமயத் துறை, கிறித்தவ இலக்கியத்துறை, அண்ணா பொதுவாழ்வியல் துறை போன்றவைகள் தோன்றின.

என் வாழ்வில் நல்லோர் இணக்கம் இறைவன் திருவருளால் ஏற்பட்டது என்பது என் துணிவு. அரசியல் அறிஞர்கள் ஓரிரு நல்லவர்களின் இணக்கத்தைத் தவிர பெரும்பாலும் நீதியரசர்களின் இணக்கமே அதிகமாக ஏற்பட்டது என் நல்லூழே காரணமாக அமைந்தது. நீதிஅரசர்களிலும் அதிகமாக இணக்கம் ஏற்பட்ட நீதி அரசர் பி. ஆர். கோகுலக் கிருஷ்ணன் அவர்கள். இவர் சென்னை நீதிமன்றத்துத் தலைமை நீதிபதியாக இருந்தபோது (1981) சோழநாட்டுத்திருப்பதிகள் (இரண்டாம் பகுதி) என்ற நூலுக்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்தார். குஜராத் நீதிமன்றத்திலிருந்து ஓய்வு பெற்றபின் (2002) 'சைவமும் தமிழும்' என்ற நூலுக்கு அணிந்துரை வழங்கிப் பாராட்டி வாழ்த்து கூறினார். வள்ளுவரின் 'நடுவுநிலைமை' தவறாது நீதித்துறையில் பணியாற்றிய இப்பெருமகனருக்கு 'வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்' என்ற என் அரிய நூலை அன்புப் படையலாக்கி உளம் பூரிப்பு அடைகின்றேன்.

இவரது ஆசியால் இந்த நூல் தமிழ் கூறு நல்லுலகம் எல்லாம் உலாப் போந்து மக்களை நல்வழியில் உய்க்கப் பணிபுரியும் என்பது என் அதிராத நம்பிக்கை.

இந்நூல் வெளிவருதற்கு முதற்காரணமாக இருந்தது சிவபரம் பொருள். அதனை நினைந்து அமைகின்றேன்.

சிறக்கத் தக்கது கருவையான்
 திருவடி நேயம்!;
மறக்கத் தக்கது மற்றுள
 சமயத்தின் மயக்கம்!;
துறக்கத் தக்கதுஇவ் உடம்பை, யான்
 என்னுறு தொடர்பு!;
பிறக்கத் தக்கது சிவானந்த
 வாரியின் பெருக்கே.[3]

- அதிவீரராம பாண்டியனார்.

'வேங்கடம்'
AD - 13, அண்ணாநகர்,
சென்னை - 600 040.
25-3-2004

அடியேன்
ந. சுப்புரெட்டியார்.

---

3. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி - 89.

காஞ்சி பிரதிவாதி பயங்கரம்
# அண்ணங்கராசாரிய சுவாமிகள்

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

இந்நூல் அனைத்து வைணவர்களாலும்,
மற்றும் தமிழர்களாலும் படித்துப் படித்து,
சுவைத்து சுவைத்து இன்புறத்தக்க
வண்ணம் இயற்றப்பெற்றுள்ளது.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939430-2-1

eBOOK ~ மின் நூல்



# நூல் முகம்

*'ஒண்மிதியில் புனலுருவி ஒருகால் நிற்ப*
*ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து*
*எண்மதியும் கடந்துஅண்ட மீது போகி,*
*இருவிசும்பி னூடுபோய் எழுந்து மேலைத்*
*தண்மதியும் கதிரவனும் தவிர ஓடித்*
*தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு*
*மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை*
*மலர்புரையும் திருவடியே வணங்கி னேனே'*[1]

\- திருமங்கையாழ்வார்

திருப்பதியில் ஏழுமலையான் திருவடிவாரத்தில் இயங்கி வரும் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் என் முயற்சியால் தமிழக அரசின் நிதி உதவியால் தொடங்கப் பெற்ற தமிழ்த் துறையின் பேராசிரியன்- துறைத் தலைவனாகப் பணியாற்றியபோது (1960-1977) 'நாலாயிரமும் நம்மாழ்வார் சமயத் தத்துவமும்' என்ற தலைப்பில் என் பிஎச்.டி. பட்டத்திற்கு ஆய்ந்தபோது, திரு. பு.ரா. புருஷோத்தம நாயுடுவின் திருவாய்மொழி - ஈட்டின் தமிழாக்கம், காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய

*1. திருநெடுந் - 5*

சுவாமிகளின் நாலாயிரம் திவ்வியார்த்த தீவிகை ஆகிய இரண்டும் துணையாக அமைந்தன. வைகுண்ட வாசியாகிய நம்பிள்ளையும் பூவுலக (காஞ்சி)வாசியாகிய பி.ப. அண்ணா சுவாமிகளும் ஏகலைவனுக்கு துரோணர் மானசீகமாக ஆசி கூறியது போல எனக்கு ஆசி கூறி உதவி வந்தனர்.

அக்காலத்தில் அண்ணா சுவாமி அவர்களை நேரில் பார்த்ததும் இல்லை; அவர்தம் திவ்வியார்த்த தீபிகையைக் கேள்வியுற்றதும் இல்லை.[2] அக்காலத்தில் திருப்பதியில் பல்கலைக்கழகக் கீழ்த்திசை ஆராய்ச்சித் துறையில் பணியாற்றி வந்த வடமொழிப் புலவர் திரு. சீநிவாசவரதன் (அண்ணா சாமியின் அணுக்கத் தொண்டர்) புருஷகாரமாக அமைந்து திவ்வியார்த்த தீபிகையின் அனைத்துப் பகுதிகளையும் என்னிடம் சேர்ப்பித்தார். (அதன் விலை ரூ.400/அவரிடம் தந்தாக நினைவு).

தீபிகையின் பக்கங்கள் 'பிழை மலிந்த சருக்கங் களாகக்' காட்சியளித்தன. வடசொற்களின் பிழையை அறிந்து கொள்ளாமல் படிக்க இயலாது. அப்போது மயிலை விவேகாநந்தர் கல்லூரியில் பணியாற்றிய திரு. வேங்கடராகவாசாரியர் என்பவர் திருப்பதியில் ஏற்படுத்தப் பெற்றுள்ள வடமொழி ஆய்வு நிறுவனத்தில் இயக்குநராகப் பணியாற்றி வந்தார். நான் ஆறு ஆண்டுகள் குடும்பமின்றி மாணியாக வாழ்ந்தது போல் அவரும் குடும்பமின்றி மாணியாகவே வாழ்ந்து வந்தார். அவர் கோவிந்தராஜ சுவாமி சந்நிதித் தெருவில் ஓர் இல்லத்தில் தங்கியிருந்தார். நான் தங்கியிருந்த அறைக்கும் அவர் இருந்த இல்லத்திற்கும் குறுக்கு வழி இருந்தது. மாலை நேரங்களில் சுமார் 8 மணி வரையில் அவர் இல்லத்தில் தான் இருப்பேன். தமிழை நன்கு அறிந்தவராதலால் என்னிடம் எழும் அனைத்து ஐயங்களையும் போக்குவார்;

2 திருவாய்மொழி பற்றிய வியாக்கியானங்களைப் பார்த்ததுண்டு. மணி பிரவாளநடையிலமைந்த அவற்றைப் படித்தும் புரிந்து கொள்ளும் ஆற்றலும் இல்லை. நெறிகாட்டக் கூடிய அறிஞர்களும் இல்லை.

தீபிகையிலுள்ள வடமொழிப் பதங்களை பிழை நீக்கி விளக்குவார்.

உவமை சொல்லும் இடங்களிலும் பிற சிக்கலான இடங்களிலும் அவ்வப்போது எழும் ஐயங்களை விளக்கு மாறு அண்ணா சாமிக்கு எழுதுவேன். மறு தபாலில் அஞ்ச லட்டையில் விளக்கம் வந்து விடும். இப்படி வந்தவை நூற்றுக்கு மேலிருக்கும். அவற்றைப் பாதுகாத்து வைக்க வில்லை.

அண்ணாசாமியின் சதாபிஷேகத்தின்போது அவருக்கு **'மலை நாட்டுத் திருப்பதிகள்'** நூலை அன்புப் படைய லாக்கி ஆசி பெற்ற பிறகு அடிக்கடிப் பார்க்கும் பேறு இருந்து வந்தது. ஒரு சமயம் அவரிடம் ''டாக்டர். உ.வே. சாமிநாத அய்யருக்கு கி.வா. ஜகந்நாதன் துணையாக அமைந்ததால் அவருடைய நூல்களில் பிழையே மருந்துக்குக் கூடக் கிடைப்பதில்லை. திவ்வியார்த்த தீபிகையின் பக்கங்கள் பிழைமலிந்த சருக்கங்களாகக் காணப்பெறுகின்றன. தாங்கள் ஒரு குத்து விளக்கு போன்ற ஒருவரைக் கூட சீடராகக் கொள்ளவில்லையே'' என்று வருத்தத்துடன் கூறினேன்.

கோவிலுக்குப் பிரசாதத்துக்காக சில வைணவ இளைஞர்கள் வருவார்கள். "வாருங்கள் ஏதாவது சொல்லுகிறேன்; தெரிந்து கொள்ளுங்கள்" என்று சொல்லலாம் என்று திரும்புவதற்கு முன்னர் 'படிக்க விரும்பாதவர்கள்' மாயமாய் மறைந்து விடுவார்கள். நீங்கள் விபூதி அணிந்து கொண்டு ஆர்வமாய் வைணவ தத்துவங்களைத் தெரிந்து கொள்ளத் துடிக்கின்றீர்கள். நீங்கள்தான் என் பிரதம சீடர்" என்று சொன்னார்கள். எனக்கு ஒரே அதிரிச்சி; உரோமங்கள் சிலிர்த்தன. கண்கள் ஆனந்தக் கண்ணீர் நிறைந்த குளங்க ளாயின. இந்த நினைவுகளுடனும் உணர்வுகளுடனும் இந்த நூல் உருவாயிற்று.

தாம் பிறந்த குலம் வடகலையாக இருந்தாலும், வடகலை தென்கலை வேற்றுமை பாராது இராமநுசர் வைணவத்தை உள்ளத்தில் பதித்து வாழ்பவர். என் நெடுநாளைய நண்பர் டாக்டர். V.K.S.N. இராகவன்; சென்னைப் பல்கலைக்கழக வைணவத்துறையில் பேராசிரிய ராகவும் துறைத் தலைவராகவும் பணியாற்றி வருபவர். 'விசிட்டாத்வைத இலக்கிய வரலாறு' என்ற இவர் தம் (பிஎச்.டி. பட்டத்திற்குரியது) ஆங்கில நூல் மிகு புகழ் பெற்றது. இது தவிர பல அரிய வைணவ ஆய்வுக் கட்டுரைகள் ஆங்கிலத்தில் வரைந்தவை - வைணவ அறிஞர்களின் பாராட்டுதலைப் பெற்றவை. இத்தகைய உழுவலன்பர் இந்த நூலுக்கு அணிந்துரை அளித்தது இந்நூலின் பேறு; என் பேறுங்கூட. அணிந்துரை அருளிய அன்பருக்கு என் இதயங் கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலின் கைப்படியைத் தமிழ்ப் பணியே தெய்வப்பணி என்ற குறிக்கோளை முன் வைத்துப் பணியாற்றிவரும் அவ்வை பதிப்பகம் அன்புடன் ஏற்று அச்சு வடிவம் பெறச் செய்து அம்பலத்திற்குக் கொணர்ந்து தமிழ்கூறு நல்லுலகம் எங்கும் நடமாட விட்ட பதிப்பக உரிமையாளர் இறையுணர்வு மிக்க திருமதி. தேவகி ராமலிங்கம் அவர்கட்கு என் அன்பு கலந்த நன்றி என்றும் நிலையானது.

இந்நூல் அச்சாகும்போது மூலப்படியுடன் பார்வைப் படிகளை ஒப்பிட்டுத் திருத்தம் செய்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர். மு.ப. சியாமளாவுக்கு என் ஆசி கலந்த நிலையான நன்றி என்றும் உரியது.

ஆசாரியப் பெருந்தகையின் திருவருள் வியக்கும் வண்ணம் அவர்தம் அன்புச் சீடராகிய அடியேன் பக்தியுடன் வரைந்த நூலை அண்ணாசாமியை உள்ளத்தில் பதித்த வண்ணம் அவர்தம் புகழ் பரப்பி வரும் ஆர்வலர் அனைவர்க்கும் பக்தி கலந்த அன்புப் படையலாக்கி மகிழ்கின்றேன்.

என் வாழ்நாளின் இறுதிக் காலப் பகுதியில் (அகவை 89ஐ கடந்த நிலை) இந்த நூல் வரைவதற்குரிய சிந்தனையும், எழுதுங்கால் நல்ல உடல், உள நலங்களையும் கூரிய கண்ணொளியையும் நல்கிவரும் என்னுள்ளே நிலையாக எழுந்தருளியிருக்கும் அல்லிக்கேணி அச்சுதனை வாழ்த்தி வேதவல்லித் தாயாரின்மூலம் எண்ணற்ற சரணா கதி வணக்கங்கள்.

*முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலை, மூவா*
*மூவுலகும் கடந்துஅப்பால் முதலாய் நின்ற*
*அளப்பரிய ஆரமுதை, அரங்கம் மேய*
*அந்தணனை, அந்தணர்தம் சிந்தை யானை*
*விளக்கொளியை, மரகதத்தைத் திருத்தண் காவில்*
*வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு*
*'வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருக!' என்று*
*மடக்கிளியைக் கைகூப்பி வணங்கி னாளே!*[3]

– திருமங்கையாழ்வார்

'வேங்கடம்'
AD-13-14, அண்ணா நகர்
சென்னை – 600 040.
31.10.2004

ந. சுப்பு ரெட்டியார்
26211583

3. திருநெடுந் - 14

# என் அமெரிக்கப் பயணம்

பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

புதுமை பூத்துக் குலுங்கும் அமெரிக்க நாடு சென்று திரும்பிய நிலையில்,
தன் கருத்தையும், கண்ணையும் கவர்ந்த அமெரிக்கக் காட்சிகளை அருவி
நடையில் அழகு ததும்ப பேராசிரியர் இந்நூலில் படம் படித்துக்
காட்டியுள்ளார். திருக்கோயிலுக்குள் நுழைந்ததுமே
பாசுரங்களும், தத்துவக்கோட்பாடுகளும் பேராசிரியர் மனதில்
பொங்கி வழிந்ததை கட்டுரைகள் படம் பிடிக்கின்றன.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939685-9-8




*eBOOK ~ மின் நூல்*

# நூல் முகம்

*சச்சிதா னந்த வடிவம்நம் வடிவம்*
*தரும்அதிப் பினம்மற் றிரண்டும்*
*பொய்ச்சிதா காசக் கற்பனை இவற்றைப்*
*போக்கியாங் கவ்வடி வாகி*
*அச்சிதா கார போதமும் அதன்மேல்*
*ஆனந்த போதமும் விடுத்தல்*
*மெய்ச்சிதாம் வீடென் றுரைத்தினை சித்தி*
*விநாய விக்கினேச் சுரனே!* [1]

*கலைபயின்ற வளத்தினுக்கும் கரும்பினைமுக்*
*கனியைஅருட் கடலை ஓங்கும்*
*நிலைபயின்ற முனிவரரும் தொழுதேத்த*
*நான்முகனார் நீண்ட நாவின்*
*தலைபயிரை மறைபயின்று மூவுலகும்*
*காக்கின்ற தாயை வாகைச்*
*சிலைபயின்ற நுதலாளைக் கலைவாணி*
*அம்மையைநாம் சிந்திப்போம்!* [2]

*'ஆற்று நீர்வழிப் படூஉம் புணைபோல்*
*முறைவழிப் படூஉம் ஆருயிர்'* [3]

என்பதற்கிணங்க என் அமெரிக்கப் பயணம் அமைகின்றது. மேலுலகம் செல்ல வேண்டிய வயதில் மேல்நாடு செல்ல வாய்ப்பு வந்தது அந்த இறைவன் திருவருள். இது வினைப் பயனுமாகின்றது.

என் அமெரிக்கப் பயணத்தால் (2002, மார்ச் 30 முதல் ஜூன் 25 வரை) இரண்டரை மாதம் நியுயார்க் மாநிலத்தில் நியூயார்க்கில் என் இளைய மகன்

---

1. திருவருட்பா– மூன்றாம், திருமுறை –சித்தி விநாயகர் பதிகம் –6
2. மேலது–மேலது–கலைமகள் வாழ்த்து–3
3. புறம் – 192

டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன் இல்லத்திலும், 12 நாட்கள் டெக்ஸாஸ் மாநிலத்தில், டாலஸ்ஸில் என் பேத்தி மிருணாளினி இல்லத்திலும் தங்கியிருந்தேன். அக்காலங்களில் அவர்கள் கூட்டிச் சென்று காட்டிய இடங்களில் கண்டு களித்து அநுபவித்த செய்திகளும் நான் கற்றுக்கொண்டு தமிழகத்திலுள்ள என் உறவினர்கள், நண்பர்கள், அறிஞர்கள் ஆகியோருக்குக் கூறவேண்டிய செய்திகளும் இந்தப் பயண நூலில் பதிவாகியுள்ளன. சுருக்கமாகக் கூறினால் வளர்ந்துவரும் நாட்டிலுள்ள ஒருவன் வளர்ந்த உச்ச நிலையில் உள்ள (இன்னும் வளர்ந்து கொண்டிருக்கும் நிலையில் இருக்கும்) நாட்டைப் பற்றிய செய்திகள் இந்நூலில் பதிவாகியுள்ளன எனலாம்.

இவற்றையே சுவையாகவும் படிப்போர் அதிசயிக்கத்தக்க நிலையிலும் சொல்லி வைக்கலாம். ‘அல்லாவுதீனும் அற்புத விளக்கும்’ என்ற கற்பனைக் கதையை நாம் எல்லோரும் அறிவோம். அதில் பூதம் ஒன்று சிறுவன் அல்லாவுதீனை பல்வேறு இடங்களுக்கு கூட்டிச்சென்று பல்வேறு வியத்தகு செயல்களையும் காட்சிகளையும் காட்டி மகிழ்வித்ததை நினைவு கூரலாம்.

நியுயார்க் விமான நிலையத்தில் இறங்கியதும் என் மகன் டாக்டர் இராமகிருஷ்ணன், மருமகள், பேரன்மார்கள் இருவர் எங்களைத் தம் காரில் அழைத்துச் சென்றபோதே ‘புதியதோர் உலகம்’ புகுந்ததை உணர்ந்தேன். பூதம் சிறுவன் அல்லாவுதீனை கற்பனை உலகத்திற்கு கூட்டிச் சென்றபோது அச்சிறுவனுக்கு ஏற்பட்ட உணர்வு எனக்கு ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.

அதன்பிறகு நியுயார்க் நகரிலிருந்தபோது என் மகன் பல இடங்கட்கு கூட்டிச் சென்றபோதும், டாலஸ்ஸில் தங்கியிருந்தபோது என் பேத்தி முதலியோர் பல இடங்கட்கு கூட்டிச்சென்றபோதும் நான் பெற்ற உணர்வுகள் பூதம் சிறுவன் அல்லாவுதீனுடன் பல இடங்களுக்கு சென்றபோது அவன் பெற்ற உணர்வுகளுடன் ஒப்பிடலாம். நான் பெற்ற உணர்வுகள் உண்மையான வியப்புணர்வுகள்; அவன் பெற்ற உணர்வுகள் கற்பனை வியப்புணர்வுகள்.

நான் இரண்டு இடங்களில் தங்கியிருந்தபோது நடைமுறையில் அவரவர்கள் வசதி-வாய்ப்புகளுக்கேற்ப பல இடங்களைச் சுற்றிப்பார்க்க நேர்ந்தாலும், செய்திகளைக் கோவைப்படுத்தி எழுதும்போது நியுயார்க் மாநிலம், ஃபிலடெல்ஃபியா மாநிலம் என்ற மாநிலங்கள் வாரியாகப் பிரித்துக் கொண்டும், மாநிலங்களில் பார்த்தவற்றை திருக்கோயில்கள், பூங்காக்கள், அருங்காட்சியகங்கள், கடைகள், உயிர்க்காட்சி சாலைகள் என்று

செய்திகளை வகைப்படுத்தியும் அமைத்துள்ளேன். ஆயினும் அவற்றில் புறப்பட்ட நாள், நேரம், திரும்பிய நேரம் முதலிய விவரங்களைக் குறிப்பிட்டுள்ளேன்.

பல்வேறு துறைகளில் தரமான நூல்களை வெளியிட்டு சேவை செய்து வரும் 'சுரா' வெளியீட்டகம் இந்த நூலின் கைப்படியையும் அன்புடன் ஏற்று அச்சிட வந்தமைக்கு அதன் அதிபர் திரு. வீ.வீ.கே. சுப்புராசு அவர்கட்கு என் இதயங்கலந்த நன்றி. இது காலத்தால் செய்த உதவியாகும்.

சிறியேன் வரைந்த இந்நூலுக்கு அணிந்துரை வழங்கி சிறப்பித்த பொள்ளாச்சி வள்ளல் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களை அறியாதார் தமிழகத்தில் ஒருவரும் இலர். நாடறிந்த தொழிலதிபர். நற்காரியமாய் வாரி வழங்கும் வள்ளல். முப்பது ஆண்டுகளுக்கு முன் நான் திருப்பதியில் பணிபுரிந்தபோது திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைக்கு 'இராமலிங்க வள்ளல் பொற்பதக்க'த்திற்கு கணிசமான தொகை வழங்கி பெருமைப்படுத்தியவர். வள்ளல் பெருமான் இராமலிங்கரின் கொள்கைகளை அமெரிக்கா போன்ற வெளிநாடுகளிலும் பரப்பிவரும் சிறப்பு இவருக்கு உரியது. இராமகிருஷ்ணருக்கு அவர் காலத்திலேயே விவேகாநந்தர் என்ற சீடர் கிடைத்து அவர் கொள்கைகளை உலகெங்கும் பரவக் காரணமாக அமைந்தது. வள்ளல் பெருமான் சோதியில் கலந்த பல ஆண்டுகட்குப் பிறகு அவர் சீடராக அமைந்த அவர்தம் கொள்கை உலகெங்கும் பரவக் காரணமாக அமைந்தது அருட்பெருஞ்சோதியின் திருவருளே என்பது என் கருத்து. கடல் கடந்து அமெரிக்கா போன்ற நாடுகள் சென்ற அநுபவமிக்க சத்துவகுணமே வடிவமான பொள்ளாச்சி வள்ளலின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு; என் பேறும் கூடத்தான். அணிந்துரை வழங்கி ஆசிகூறிய அன்பருக்கு என் இதயங்கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலை அமெரிக்காவில் நன்முறையில் பொருளீட்டி நல்வாழ்க்கை வாழ்ந்து தமிழகத்திற்கு நற்பெயர் ஈட்டும் அமெரிக்கா வாழ் தமிழன்பர்கள் அனைவர்க்கும் அன்புப் படையலாக்கிப் பெருமிதம் கொள்ளுகின்றேன்.

இந்நூல் அச்சேறுங்கால் மூலப்படியுடன் பார்வைப் படிகளை ஒப்பிட்டுச் சரிபார்த்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.ப. சியாமளாவுக்கு என் அன்பு கலந்த ஆசிகள் என்றும் உரியவை.

*இந்நூல் எழுதுவதற்கு உடல் வலிவும் மனவலிவும் நல்கி எனக்கு அருள் பாலித்த வேங்கடம் மேவிய விளக்கிற்கு புருஷாகாரபூதையான பெரியபிராட்டியாரின் மூலம் எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.*

*ஏத்திமத மெல்லாம் எதையறிந்தோம் என்னும்?எதைச்*
*சாத்திரம்நன் காய்ந்து சலிக்கும்?எதை - நாத்திகமோர்*
*சாற்றுமே ஓர்ந்திலதாச் சாதித் திடும்? அதையே*
*பற்றுவாய் நெஞ்சே வரிந்து*[4]

**- ந. சுப்பு ரெட்டியார்**

‘வேங்கடம்’
AD-13, அண்ணா நகர்
சென்னை - 600 040

4. அகலிகை வெண்பா – கடவுள் வாழ்த்து



# India
## Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).



Biswaroop Roy Chowdhury
Chief Editor
India Book of Records

Date: March 19, 2018

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*

*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*




